# பாரத வெண்பா

பதிப்பாசிரியர்
பண்டித அ. கோபாலையன்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute of Tamil Studies
இரண்டாம் முதன்மைச் சாலை, சி.ஐ.டி. வளாகம்
தரமணி, சென்னை - 600 113

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the Book | : | Baradha Venba |
| Editor | : | Panditha A. Gopalaiyan |
| Publisher | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus,<br>Chennai-600 113<br>Ph: 22542992 |
| General Editor | : | Dr. T. Mahalakshmi<br>Research Assistant<br>Dept. of Literature and Manuscriptology<br>International Institute of Tamil Studies. |
| Publication No. | : | 488 |
| Language | : | Tamil |
| Edition | : | Reprint; First Edition: 1934 |
| Year of Publication | : | 2004 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | xxii+258 |
| No. of Copies | : | 1000 |
| Price | : | Rs. 80/- (Rupees Eighty Only) |
| Printed by | : | Pavai Printers<br>142, J.J. Khan street<br>Royapettah, Chennai - 600 014. |
| Subject | : | **Poetical Tamil version of Mahabharata** |

தமிழ் வளர்ச்சி இயக்ககம் வழங்கும் அரிய நூல்களை வெளியிடும் திட்டத்தின் கீழ் நிதியுதவி பெற்று இந்நூல் வெளியிடப்படுகிறது.

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை-600 113.

# அணிந்துரை

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் செய்து வரும் தமிழ்ப் பணிகளுள் நூல் வெளியீடு என்பது முதன்மையானது. இந்நிறுவனம் பல்வேறு இலக்கிய வகைகளில் நூல்களை வெளியிட்டுள்ளது. அவ்வகையில் இப்போது வெண்பா யாப்பில் அமைந்த **பாரத வெண்பா** என்ற இந்நூல் மறுபதிப்பாக வெளிவருகிறது. வெண்பா இலக்கிய வகையில் அமைந்த முதல் நூல் எனும் சிறப்பை இது பெறுகிறது.

இந்தியப் பெருங்காப்பியங்களுள் பாரதக் கதையும் ஒன்று. இதனை அறியாதவர் எவரும் இலர் என்று கூறுதற்கியலும். இந்நூல் சமஸ்கிருதத்தில் வியாசரால் இயற்றப்பட்டது.

சங்ககாலத்து மன்னனான பெருஞ்சோற்று உதியன் சேரலாதன் என்ற பெயரிலுள்ள அடையைக் கொண்டு இப்பாரதக் கதையைத் தமிழர்கள் சங்க காலத்திலேயே அறிந்திருந்தனர் என்பர். மேலும் கடைச் சங்க காலத்துப் பெருந்தேவனார் என்ற புலவர் பாரதம் பாடியதாகக் கூறுவர். அழிந்துபட்ட அந்நூலின் எச்சங்கள் தொல்காப்பியம் முதலான சில நூல்களில் காணப்பட்டதாகவும், அவற்றைத் தொகுத்து இப்பாரத வெண்பா இயற்றப்பட்டதாகவும் இந்நூல் பதிப்பின் வழி அறிய முடிகிறது.

ஆயினும் பல்லவப் பேரரசர்களுள் ஒருவராகிய தெள்ளாறு எறிந்த இரண்டாம் நந்திவர்மன் காலத்தில் வாழ்ந்த பெருந்தேவனார் என்ற புலவர், வெண்பா யாப்பில் பாரதத்தைப் பாடியதால் **பாரத வெண்பா** என்ற பெயரினை இந்நூல் பெற்றதாக மற்றொரு குறிப்பும் இந்நூலின் முகவுரையில் காணப்படுகிறது.

பாரதத்தின் பெருமையையும், பண்பாட்டையும் பறைசாற்றும் கருவூலமான இம்மகாபாரதம் பலமொழிகளில் வெளிவந்துள்ளது. அவ்வகையில் ஒன்றுதான் தெலுங்கிலுள்ள **வேமன பாரதம்**. தமிழில் செம்மாந்த நடையில் வில்லிப் புத்தூரார் இயற்றிய பாரதம், **வில்லிப்புத்தூரார் பாரதம்** என அழைக்கப்படுகிறது. நல்லாப் பிள்ளை என்பார் உரை நடையில் வசனகாவியமாக இயற்றிய பாரதம் **நல்லாப் பிள்ளை பாரதம்** எனப்படுகிறது. எளிய நடையில் பாமரமக்களும், புரிந்து கொள்ளும் வகையில், இராஜாஜி தமிழிலும், ஆங்கிலத்திலும் **வியாசபாரதம்** என்ற பெயரில் எழுதியுள்ளார். நாட்டுப்புற இலக்கியத்தில் **பெரிய எழுத்துப் பாரதம்** என்ற பெயரில் ஒன்று கிடைக்கின்றது. இந்தியத் தத்துவங்களில் முத்தாய்ப்பாக விளங்கும் பகவத்கீதை இக்காவியத்தின் குறிப்பிடத்தக்க ஓர் அங்கமாகும்.

ஏட்டு இலக்கியத்தில் செம்மொழி இலக்கியமாக விளங்கும் இப்பாரதம் நாட்டுப்புற இலக்கியத்திலும் மிகுந்த செல்வாக்கினைப் பெற்றுள்ளது. பாரத அம்மானை, பாரதக் கதை போன்றவையும் பாரத கதைக் கூறுகளையும், கதைப் பாத்திரங்களையும் கொண்டு எழுந்துள்ள அல்லி அரசாணி மாலை, இராய சூய யாகம், விராட பருவம், அர்ச்சுனன் தபசு போன்றவையும் சுவடிகளில் கிடைப்பது இதனை மெய்ப்பிக்கும். கீசகவதம், கிருஷ்ணன் தூது, வீர அபிமன்யு, சுபத்திரை திருமணம், கடோற்கசன், அஞ்ஞானவாசம், கர்ணன் சண்டை போன்ற பாரதம் சார்ந்த கதைகள் தெருக்கூத்து நாடகங்களாக இன்றும் நடைபெற்று வருகின்றன.

வீர அபிமன்யு, கர்ணன், மகாபாரதம், கடோற்கஜன், அரக்கு மாளிகை போன்றவை ஒரு காலக்கட்டத்தில் பாரதத்தை உலுக்கிவந்த திரைப்படங்களாக விளங்கின. சாகர் நிறுவனத்தார் தயாரித்து இந்தி மொழியில் வெளிவந்த பாரதம் மக்களிடையே மிகுந்த செல்வாக்கைப் பெற்றதனால் தமிழ் மொழியிலும் இப்போது வெளியிடப்படுகிறது.

பதிப்பாக வரும் இந்நூல் முழுமையாக இல்லை. இதில் உத்தியோக பருவம், வீடும பருவம், துரோண பருவம் ஆகிய மூன்று பருவங்கள் உள்ளன. இருப்பினும் முதல் நாள் போர் தொடங்கி 13 ஆம் நாள் போர் வரை பாரதத்தின் உச்சக் கட்டமாக விளங்கும் போர்நிகழ்வுகள் இந்நூலில் தெள்ளத் தெளிவாகச் சொல்லப்பட்டுள்ளன. உரை சுருக்கமாக இருப்பினும் கதைத் தொடர்போடு செல்வது சிறப்பாக அமைகிறது. அம்மானை, விருத்தம் போன்ற இலக்கிய வகைகளில் அமைந்த பாரத படைப்புகளைப் போன்று வெண்பாவில் அமைந்த இந்நூலும் தொடர்ந்து படிப்பதற்கு ஆர்வமூட்டும் தன்மையதாக் விளங்குகிறது.

இந்நூலை மறுமதிப்பாக வெளியிட நிதியுதவி வழங்கிய தமிழ் வளர்ச்சி இயக்ககத்திற்கும் அதன் இயக்குநர் முனைவர் ம. இராசேந்திரன் அவர்களுக்கும் எங்கள் நெஞ்சார்ந்த நன்றி.

இந் நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும், ஊக்கமும் தந்து வருகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு கல்வியமைச்சர் திருமிகு செ. செம்மலை அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி பண்பாடு-மற்றும் அறநிலையத்துறைச் செயலாளர் திருமிகு பு.ஏ. இராமையா இ.ஆ.ப., அவர்களுக்கும், சிறப்புச் செயலாளர் திருமிகு தா. சந்திரசேகரன் இ.ஆ.ப., அவர்களுக்கும் என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

இந்நூலின் மறுபதிப்பாக்கத்திற்குத் துணை நின்றதோடு மெய்ப்புத் திருத்தம் செய்துதவிய இந்நிறுவன ஆய்வு உதவியாளர் முனைவர் தி. மகாலட்சுமிக்கு என் நன்றி.

இந்நூலினை ஒளியச்சுக் கோப்புச் செய்த நிறுவனக் கணிப்பொறி உதவியாளர் திருமதி பி.கௌசல்யாவிற்கும், இந்நூலினை அழகுற அச்சிட்டுத்தந்த பாவை அச்சகத்தார்க்கும் நன்றி.

**இயக்குநர்**

# PREFATORY NOTE

The work printed in the following pages is a part of the Tamil Mahabharata, usually known as Bharata Venba, from the character of the verses composing the major part of the work. Whether it was a completed work at any time is not known; the part of it available amounts to only 800 and odd stanzas on the whole and covers the portion beginning with the Udyogaparvam or the fifth book of the Mahabharata and ending with the thirteenth day of battle, in the Dronaparvam. It therefore, leaves out the first four books and the following eleven books out of a total of eighteen. It is to be hoped that the missing books, if they were ever written, would be discovered some day, and the whole version would be made available to us.

The author of this work is Perundevanar. There is one verse in the prefatory part of the poem, which seems to give us an indication of the time by mentioning a patron of his, as it seems. The patron referred to is merely described as one who conquered other kings in a battle at Tellaru. The commentary, of course, expands the hint into a Pallava king who won this victory. We know from epigraphical evidence that Nandivarman III, the grandson of Nandivarman Pallavamalla, gained a victory at Tellaru, and is usually described as Nandivarman, the Victor at Tellaru. The probability seems to be that this Perundevanar lived in the time of this particular Nandivarman, and enjoyed his patronage. The period of time, therefore, would be the middle of the 9th century. The work, therefore, may be safely ascribed to this particular period. But the problem has been unfortunately complicated by the circumstance that Tamil Literature knows of a Perundevanar "who made a poetical version of the Bharata". He also composed invocatory verses to the well-known eight Tamil Sangam collections. This position required to be considered before final judgement becomes possible.

A well attested literary tradition has come down to us through the centuries that the fugitive poems composed by Sangam celebrities, and by other contemporaries more or less, were collected and put into their present form with invocatory verses for eight of the collections by Perundevanar, who made "a poetical Tamil version of the Mahabharata". It is too readily taken for granted that the version of the Bharatam published

in this book is the version that is thus referred to, and the Perundevanar, who composed the invocatory verses to the Sangam collections, is the Perundevanar, the author of this version. There are difficulties in the way of accepting this position. Among the works for which this Perundevanar has composed invocatory verses are two of which we know some details. One of them is the work called Ahananuru. This collection consists of 400 poems composed on different occasions by different poets, the poems themselves being of different lengths. All these were collected together at the instance of a certain Pandiyan called Ugrapandiyan, by a prominent scholar called Rudrasarman, who is described as the son of Uppurikudi Kilan, resident of Madura. If Rudrasarman made the collection for the Pandiyan ruler, the verse in invocation preceding must have been made on the same occasion, and therefore, Rudrasarman, Ugrapandiyan, and Perundevanar must have been contemporaries. Another collection, Aingurunuru was made by an author, whose name is given as Kudalur Kilar, and who is said to have done it for his patron the "Chera of the elephant look". The name Kudalur Kilar is found among the 49 Sangam celebrities, and to him is also ascribed one of the stanzas in the collection of Tiruvalluva Malai, the stanzas reputed to have been composed on the occasion, when the Sangam accepted the Kural of Tiruvalluvar. If Perundevanar again composed an invocatory verse for this work, the presumption seems warranted that he was a contemporary also. It is sometimes taken for granted that the collections were made at various times, and that they were all edited at a later period by Perundevanar, who composed the invocatory verses, and that this editor, it is considered, might have been a contemporary of Nandivarman of Tellaru. It is presuming too much to say that a collection was made by authors of reputation without an invocatory verse, and the invocatory verse was felt to be necessary by a mere editor, who introduced his own composition into the edition.

We are not left to this negative criticism alone, for considering that the Perundevanar, who composed the invocatory verse, was not the contemporary of Nandivarman of Tellaru. It is improbable that an author who introduced the name of his patron with some little of gusto in the version of the Bharata before us, would not have given some kind of reference to that patron in the various collections that he has taken upon himself to edit. We have a reference to a Tamil version of the Mahabharata

in one of the copper plate charters discovered by the Epigraphical Department more than thirty years ago and which is yet to see the light of day. The charters themselves are datable sometime in the tenth century, and they give a long dynasty of Pandiyan rulers, who occupied the throne of Madura in succession after "the flood", and beginning with Kadungon Pandiyadhiraja. In the part referring to the rulers that had gone before "the flood", three incidents are given considerable prominence. They are (1) winning of a victory at Talayalanganam, (2) the establishment of the Sangam at Madura, and (3) the making of a version of Bharata in Tamil. We are not provided with any hint as to whether these were incidents ascribable to a particular reign, or whether they were incidents of different reigns. The problem, therefore, is to decide whether they are referable to the same reign, and what the probable time of that reign must have been. The question is examined in some little detail in chapter VI of my "Beginnings of South Indian History", and in an article "On the Age of Perundevanar", which appeared in the Annals of the Bhandarkar Institute, volume III. The salient features of the discussion are that we know in Tamil Literature of only on Pandiyan, victory at Talayalanganam. Poems are sung in praise of him by various poets, pre-eminently Nakkirar and Marudan Ilanagan, both of Madura. Both these literary men were among the competitors composing a commentary for the work Iraiyanar Ahapporul. According to tradition, Rudrasarman who collected the Ahananuru was appointed judge between these two and various others, who composed similar commentaries. Thus Rudrasarman must have been contemporary of Nakkirar, Marudanilanagan, and Ugrapandiyan on the one hand and of the Pandiyan, victor of Talayalanganam on the other. Therefore this last Pandiyan must have been the same as Ugrapandiyan, or that Ugrapandiyan must have been succeeded the other Pandiyan. Nakkirar, as we know, was president of the third Tamil Sangam according to accepted tradition, and Marudan Ilanagan was a member thereof; and so Kudalur Kilar of the third Sangam must have been contemporary with the Pandiyan victor at Talayalanganam.

If as was pointed out above, some of the collections happened to be made about this time, and if a Perundevanar made invocatory verses for each of the eight collections, it is not too much of an inferance to regard him as a contemporary, and the Tamil version of the Mahabharata might well be the version by that Perundevanar, who must have preceeded Nandivarman of Tellaru by centuries.

The Sinnamanur plates which give the information puts the three incidents together in the period anterior to "the flood", and from the context, the inference would seem justifiable that it was long anterior. It was pointed out elsewhere that Nilakantan of Musiri, who editied and wrote his own commentary on the Iraiyanar Ahapporul says in the introduction that Iraiyanar Ahapporul came to him by an unbroken succession from teacher to pupils through ten generations, and the Pandiyan whom he celebrates in the illustrative verses should have been a Pandiyan of the seventh century. If this is so, the first Tamil version of the Bharatam has to be looked for ten generations before the seventh century, say about 300 A.D. This conclusion merely confirms what Pandit Gopala Ayyar surmises in his introduction. He has collected a few stanzas, *46 in all, from the Mahabharata of Perundevenar quoted in Nachinarkiniyar's commentary on the Tolkappiyam, and other commentaries etc., and finds that none of these quotations is traceable in the Perundevanar's Bharatam that he publishes. The Bharata Venba that he has published is a work that must be regarded as distinct from the Tamil Bharata, which the author Perundevanar is said to have composed. There is a bare possibility that the later Perundevenar edited the Tamil Bharatam of his name sake with the verse containing the reference to Tellaru merely added which, from the known circumstances of the case, is extremely unlikely.

This work, known popularly as Bharata Venba, has been much appreciated by the Tamil reading public for more than a generation now, and has several times been prescribed for examinations, but there is no complete edition of the available portions of the work. Pandit Gopala Ayyar deserves the "gratitude of the Tamil reading public for having placed within their reach such a good edition of the well-known classic of Tamil.

University of Madras,
29 March 1925.

**S. Krishnaswami Aiyangar**

*இந்த 46-ல் 37-40 ஆகிய நான்கும் புறப்பொருள் வெண்பா மாலைப் பாட்டுக்கள். இன்னஞ்சிலவும் இப்படித் தப்பியிருக்கலாம். அவை, பின்னர் ஆராய்ந்து அடுத்த பதிப்பில் நீக்கப்பெறும்.*

# முகவுரை

ஆதியிற் பாரத மருவரைத் தீட்டிய
போதகப் பொற்பதம் புரிந்து போற்றுவாம்.

ஆதியில், பாரதம் வடமொழியிலே வியாசமாமுனிவரால் இயற்றப்பெற்ற தென்பதும், அஃதின்றளவும் அழியாது வேதத்திற்குச் சமானமாகப் போற்றப் பெற்று வருகிற தென்பதும் உலகறிந்த விஷயம். அத்தகைய பாரதத்தை முதன்முதல் தமிழிலே பாடியவர் கடைச்சங்கப் புலவர்களுள் ஒருவராகிய பெருந்தேவனார் என்பவர். அதனால், அவருக்குப் பாரதம் பாடிய பெருந்தேவனார் என்னும் பெயர் வழங்கலாயிற்று. பின்னால் யாது காரணத்தினாலோ, நமக்குத் தமிழிலக்கண முதனூலாகிய அகத்தியம் முற்றுங் கிட்டாமற் போனது போலவே அப்பாரதமுங் கிட்டாமற் போயிற்று (ஆனால், அதினின்றுஞ் சில பாடல்கள் தொல்காப்பியவுரை முதலியவற்றிலே மேற்கோளாக எடுத்தாளப்பட்டு "இது பெருந்தேவனார் பாட்டு," "இது பாரதப்பாட்டு" எனக் குறிப்பிடப் பட்டிருக்கின்றன. அப்பாட்டுக்களுள் இப்பொழுது கிடைத்தவற்றைத் திரட்டி இம்முகவுரையின் பின்னே சேர்த்திருக்கின்றேன்).

அப்பால், கி.பி. 9ஆம் நூற்றாண்டிலே *தெள்ளாற்றிற் போர் வென்ற 3-ஆம் நந்திவர்ம பல்லவன் காலத்தில் ஒரு பிரசித்த வித்துவான் தோன்றிப் பாரதத்தைப் பாட்டும் வசனமுங் கலந்ததோர் இனிய நடையிலியற்றினார். முதற் பெருந்தேவனாரைப் போலவே இவரும் பாரத முற்றும் பாடி முடித்ததனாலோ, அல்லது இயல்பாகவேயோ இவருக்கும் "பெருந்தேவனார்" என்னும் பெயர் வழங்கலாயிற்று. இவரியற்றிய பாரதம், பெரும்பாலும் வெண்பாவாலானதால் "பாரதவெண்பா" என்னப்பெற்றது. எனினும், சிற்சில அகவல்களும் விருத்தங்களும் இடையிடையே காணப்படுகின்றன.

இப்பாரதப் பாட்டுக்க ளெல்லாம், தெள்ளிய இனிய தமிழ்ச் சொற்களால் அமைந்து, படிக்குந்தோறும் இன்பம் பயப்பனவாயிருக்கின்றன. அவற்றை அறிவாளிகள் படித்தறிந்து பயன்றுய்ப்பர். பாட்டுக்களின் இடையிடையே காணப்படும் வசனங்கள்

---

* தெள்ளாறு வட ஆர்க்காடு ஜில்லா, வந்தவாசித்தாலூகாவிலுள்ள ஓரூர்.

கதைத் தொடர்ச்சிக்கு இன்றியமையாதனவாயிருத்தலின் இப்பாரதத்தை உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுள் என ஆன்றோர் வழங்கியிருந்தனர். ஆயினும், இதன்கணுள்ள வசனபாகம் செய்யுட்பாகத்தைப் போலன்றி வடமொழிப் பதங்களும் தொடர்களும் விரவின நடையில் அமைந்து கிடத்தலின், 'பாட்டுக்க ளெல்லாம் பழைய பாட்டுக்களே; வசனமட்டும் பிற்காலத்துப் புலவரொருவர் எழுதிச் சேர்த்தது" எனவும், மற்றும் பலவிதமாகவும் கூற இடந்தருகிறது. பாட்டுக்கள் பழையனவாயின், இம்முகவுரையின் பின்னே காட்டப்பட்டிருக்கும் பழைய மேற்கோட்பாட்டுக்களிலே முதலிலுள்ள "கங்கை சிறுவனும்" என்பது முதலிய சில, இப்பொழுது கிடைத்திருக்கிற பருவங்களில் அடங்கியிருத்தல் வேண்டும். அங்ஙனமின்மையின் இப்பாரதம் வேறு எனக்கொள்ளுதலே பொருத்தமாகின்றது. அக்காலத்துப் புலவர்கள் வடமொழி தென்மொழி யென்னும் இரண்டிலும் வல்லவரா யிருந்ததனாலே பாட்டுக்களை நல்ல தமிழிலும், வசனத்தை மணிப்பிரவாள நடையிலும் இயற்றி யிருத்தல் கூடும். அங்ஙனமே இப்பாரதம் ஒரு புலவரால் இயற்றப்பெற்ற தென்று கொள்ளுதல் குற்றமாகாது.

இப்பாரதம் இயற்றிய புலவரை ஆதரித்தவன் தெள்ளாற்றில் வென்ற பல்லவர் கோமான் என்பதும், அவன் பண்டிதர்களை ஆதரித்தவன் என்பதும் இவர் கூறிய பரிபாலகர் புகழினாலே அறியக்கிடக்கின்றன. இவன் விஷ்ணுபக்தன் என்பதும் (சுமார்) கி.பி. 835-ஆம் ஆண்டில் பட்டத்திற்கு வந்தவ னென்பதும் பிறவும் தஞ்சாவூர் ஸ்ரீமான் ராவ் பகதூர் K.S. ஸ்ரீநிவாஸபிள்ளையவர்க ளெழுதிய தமிழ்வரலாறு (பக். 128) முதலியவற்றி லிருந்து புலப்படுகின்றன. இந் நந்திவர்மன் காலத்திற்கு முன்பே பழைய பாரதம் வழக்கொழிந்துவிட, விஷ்ணு பக்தனும், பண்டித ராலயனு மாகிய இவன் இப்புலவரைக்கொண்டு இப்பாரதத்தை உரையிடையிட்ட பாட்டுடைச் செய்யுளாகச் செய்வித்தனன் போலும். இதுவே இப்பொழுதுள்ள வில்லிபுத்தூரர் பாரத முதலியவற்றுக் கெல்லாம் காலத்தினாலும் வாக்கினாலும் முந்தியதாகும்.

இத்துணைச் சிறப்புவாய்ந்த இப்பாரதமும், முற்றும் இப்பொழுது கிடைக்கவில்லை. இதனில், உத்தியோக பருவமும் யுத்தபருவங்களிலே பதின்மூன்று நாட்போரும் அடங்கிய சில கையெழுத்துப் பிரதிகள் 40-50 வருஷங்களுக்கு முன்னே கிடைத்தமையாலும் பாட்டுக்கள் இனிய, எளிய, அழகிய நடையில் அமைந்திருந்ததனாலும் சென்னைச் சருவகலாசாலையார் அவற்றை

வருஷந்தோறும் நூறு நூறு பாட்டாக எடுத்து மெட்ரிகுலேஷன் வகுப்புக்குப் பாடமாகக் குறிப்பிட, அப்பாகங்களைத் தக்க வித்துவான்களிற் சிலர் தனித்தனியே அச்சிட்டு உரைகளும் எழுதி வெளிப்படுத்தி வந்தனர். அவருள்ளே முக்கியமானவர்-1, கோமளபுரம் இராச கோபாலபிள்ளை யவர்களும், 2. திரு. ஸ்ரீநிவாஸ ராகவாசாரியார் 3. சு. சுப்பராயச் செட்டியாரவர்களு மாவார். அப்பால் சருவ கலாசாலையாரும் சிலவருஷம் அச்சிட்டனர். அவரெல்லாம் தத்தமக்குக் கிடைத்த சிலபிரதிகளை வைத்து ஒப்பிட்டுத் திருத்தி அச்சிட்டுதவினர். அக்காலத்திருந்த சில கையெழுத்துப் பிரதிகள் தாமும் இக்காலத்திற் காணக்கிடையாமற்போயின. அவை யெங்கெங்கே மறைந்து கிடக்கின்றனவோ! தெரியவில்லை. அவற்றுள் ஒன்று மாத்திரம் இப்பொழுது மிக்க சீரணமான நிலையிற் கிடைக்கின்றது: அது சென்னை, அரசாங்கத்துக் கையெழுத்துப் புத்தக சாலைப் பிரதியாம்.

இவற்றை யெல்லாம் நன்கு அறிந்தவரும், மதுரைத் தமிழ்ச் சங்கத்துக் கௌரவ காரியதரிசியும், பிரபல நியாயவாதியு மாகிய ஸ்ரீமான் T.C. ஸ்ரீநிவாஸ ஐயங்கார் B.A.; B.L.அவர்கள், கலிங்கத்துப் பரணியை நான் அச்சிட்டு முடித்தவுடனே இப் பாரதத்தைக் கிடைக்கு மளவும் அச்சிட வேண்டுமென்று அன்புடன் கூறினார்கள். இவ்விவரத்தைச் சென்னை அரசாங்கத்துக் கையெழுத்துப் புத்தகசாலைத் தலைவர் (கியூரேட்டர்) ஸ்ரீமான் S. குப்புஸாமி சாஸ்திரியார் M.A, I.E.S, F.M.U. அவர்களிடம் யான் தெரிவித்துக் கொண்டமாத்திரத்தில் அவர்களும் மனமுவந்து தங்கள் புத்தகசாலையிலுள்ள கையெழுத்துப் பிரதியைக் கடனாகக் கொடுத்து உதவினார்கள். அதன் பின்னர் அடியிற்கண்ட பெரியாரிடமிருந்து பழைய அச்சுப்பிரதிகள் பலவும் பெற்றேன் அவராவார்:-

1. சென்னைப் பச்சையப்பன் கலாசாலைத் தமிழாசிரியர் ஸ்ரீமான் ஆ. சிங்காரவேலு முதலியாரவர்கள்.

2. மயிலாப்பூர் ஸெண்ட் பீட்ஸ் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமான் சே. சோமசுந்தரம் பிள்ளையவர்கள்.

3. திருவல்லிக்கேணி வித்துவான் ஸ்ரீ.உ.வே., சே.கிருஷ்ணமாச் சாரியாரவர்கள்.

4. சென்னை மேரிராணியார் கல்லூரித் தமிழாசிரியர் ஸ்ரீமான் கா. நமச்சிவாய முதலியாரவர்கள்.

5. சென்னைக் கோமளேசுவரன்பேட்டை இலக்கண இலக்கிய வேதாந்த தர்க்க வித்துவான் ஸ்ரீமான் கோ.வடிவேலு செட்டியாரவர்கள்.

6. சென்னை லெக்ஸிகன் கமிட்டி- பிரதம வித்துவான் ஸ்ரீ உவே., மு. இராகவையங்காரவர்கள்.

7. சென்னை கலாரத்தினாகரம் அச்சுக்கூடத் தலைவர் ஸ்ரீமான் ஊ. கனகஸபாபதி செட்டியாரவர்கள்.

இவர்கள்பாற் பெற்றவையன்றி, சென்னைப் புத்தகப்பதிவு சாலையிலுள்ள பிரதிகளும் பரிசோதனைக்குதவியாயின. அவற்றைப் பரிசோதிக்கையில், அச்சாலையின் தலைவர் மகா- ஸ்ரீ ராவ்பகதூர் A.C. பிரணதார்த்திஹர ஐயர் B.A., I.S.O. அவர்களும், லைப்ரேரியன் ஸ்ரீ.உ.வே., சடகோபாச்சாரியாரவர்களும் வேண்டிய வுதவி செய்துகொடுத்தார்கள்.

மேற்கண்ட எல்லாப்பிரதிகளையும், என்னிடமிருந்த சில அச்சுப்பிரதிகளையும் ஒப்புநோக்கிப் பரிசோதித்தபொழுது கையெழுத்துப் பிரதியில் 518 முதல் 561 வரையுள்ள 44பாட்டுக்கள் காணப்படவில்லை; அவை புஷ்பரதச்செட்டியார் பதிப்பிலிருந்து கிடைத்தன. 374-ம் பாட்டின் பிற்பாதி கையெழுத்துப் பிரதியிலே மட்டும் 373-ம் பாட்டின் உரையோடு கலந்து கிடந்தது. 373-ம் பாட்டுரையின் பிற்பகுதியும் 374ம்பாட்டின் முற்பாதியும் கிடைக்கவேயில்லை. ஈற்றிலுள்ள 18பாட்டுக்கள் முன்னொருவராலும் அச்சிடப்படாமல் கையெழுத்துப் பிரதியிலிருந்து கிடைத்தன. இங்ஙனம் கிடைத்த எல்லாவற்றையும் சேர்த்து இயன்றவளவும் பரிசோதித்து ஆங்காங்குக் கிடைத்த பாடபேதங்களையுங் காட்டி ஒருவாறு அச்சிட்டு முடித்தேன்.

அங்ஙனம் அச்சிடுங்காலத்து வடமொழிப்பதம், தொடர் முதலியவற்றி லுண்டான சந்தேகங்களை அவ்வப்பொழுது நீக்கி யுபகரித்தவர்கள், - அடையாறு, லைப்ரரி ஸமஸ்க்ருத வித்வான்களாகிய பிரம்மஸ்ரீ தி.வே. வேங்கடராம சாஸ்திரியாரவர்களும்,

பிரம்மஸ்ரீ பநா. இராமநாத சாஸ்திரியாரவர்களும்,

பிரம்மஸ்ரீ தி.ரா. சேஷாத்திரி சர்மா அவர்களும்,

மயிலாப்பூர் இராமகிருஷ்ண மாணவரில்லக் கலாசாலை சமஸ்க்ருத பண்டிதர் சிரோமணி M.S. சேஷாத்திரியாச்சாரியர் அவர்களும் ஆவர்.

இங்ஙனம் பலவிதத்திலும் உபகரித்தருளிய பெரியாரனைவர்க்கும் என்றும் நன்றிபாராட்டுங் கடப்பாடுடையேன்.

மேற்கண்டவண்ணம் இயன்றமட்டும் ஆராய்ந்தும், சிற்சில இடங்கள் திருத்த இயலாதபடி பிழைபட்டுக் கிடக்கின்றன. வசன பாகத்தில் அப்பிழைகள் அதிகங்காணப்படும். அதற்குக் காரணம் அப்பாகத்தோடு கூடிய பிரதிகள் அதிகங் கிட்டாமையே யாம். அத்தகைய இடங்களிற் பொருள்விளங்காதவற்றைக் கையெழுத்துப் பிரதியிலிருந்தபடியேயும், அவ்வவ்விடத்திற்கு அனாவசியம் என்று தோன்றினவற்றை, () இவ்வடையாளத்திற் குட்படுத்தியும், சொல் முதலியன விடப்பட்டிருக்கும் என்று தோன்றிய இடங்களில் . . . . இவ்வடையாளமிட்டு வைத்தும் அச்சிட்டிருக்கிறேன். பாட்டுக்களிலே சிற்சில கூறியது கூறல் போலவும், இடைச்செருகல் போலவுங் காணப்படுகின்றன. இன்னுஞ்சில கையெழுத்துப்பிரதிகள் கிடைப்பின் இவையனைத்துஞ் சீர்பெறலாம்.

இவ்வேலை யனைத்திற்கும் என்னுடனிருந்து உழைத்தவன் என் மூத்த குமாரனும், மயிலாப்பூர் இராம கிருஷ்ண மாணவரில்லக் கலாசாலைத் தமிழ்ப்பண்டிதனு மாகிய சி.கோ. சேஷாத்திரி. “இத்தகைய வேலைகளைச் செய்யும்படி எம்மையும் எம்மைப் போன்றவர் பலரையும் ஆளாக்கிவிட்டு ஆதரித்து வருகின்ற மதுரைத் தமிழ்ச் சங்கமும் அதனைப் புரக்கும் பெரியாரும் நீடுவாழ்க” எனவாழ்த்தி,

அன்னதோர் தமிழச்சங்கத்தி லடியனேன் சேர்ந்து கற்று
மன்னவா தரித்த மேலோன் மகாமகோ பாத்தி யாயன்
நன்னர்வாழ் மறையோன் சாமி நாதனை நயந்தென் றென்று
முன்னிவாழ் வெய்து வேனவ் வுத்தம னருளி னாலே.

“செந்தமிழ் மந்திரம்” — இங்ஙனம்
மயிலாப்பூர் — அ. கோபாலையன்
25.3.25

# தொல்காப்பியவுரை முதலியவற்றிலிருந்து இப்பொழுது கிடைத்துள்ள பழைய பாரதப் பாட்டுக்கள்

## (தொல்காப்பியம்: புறத்திணையியல், சூ.க.எ. - நச்சினார்க்கினியருரை மேற்கோள்)

க. கங்கை சிறுவனுங் காய்கதிரோன் செம்மது
மிங்கிருவர் வேண்டா வெனவெள்ளிக்-கங்கை
சிறுவன் படைக்காவல் பூண்டான் செயிர்த்தார்
மறுவந்தார் தத்த மனம்.

இது பெருந்தேவனார் பாட்டு; குருக்கள் தமக்குப் படைத்தலை வரை வகுத்தது.

உ. ஆதி சான்ற மேதகு வேட்கையி
னாளுங் கோளு மயங்கிய ஞாட்பின்
மதியமு ஞாயிறும் பொருவது போல
வொருத்தி வேட்கையி னுடல்வயிற் றிருவர்
செருக்கூர் தண்டி னெருக்குந ரெனவு
மரவணி கொடியோற் கிளையோன் சிறுவனும்
பெருவிறவீ மற் கிளையோன் சிறுவனு
முடன்றமர் தொடங்கிய காலை யடங்கா
ருடங்குவருஞ் சீற்றத்துக் கைப்படை வழங்கி
யிழந்தவை கொடாஅர் கிடந்தன வாங்கித்
தேர்மிசைத் தமியர் தோன்றார் பார்மிசை
நின்றுசுடர் நோக்கியு மொன்றுபடத் திருகியுந்
தும்பியடி பிணங்கு மண்ணணித் தோற்றமொடு
கொடிகொடி பிணங்கி வீழ்வன போல
பொருவயின் வீழ்ந்தடு காலை
யிருபெரு வேந்தரும் பெரிதுவந் தனரே.

ங. கொல்லேறு பாய்ந்தழிந்த கோடுபோற் றண்டிறுத்து
மல்லேறு தோள்வீமன் மாமனைப்-புல்லிக்கொண்
டாறாத போர்மலைந்தா ரங்கரசர் கண்டார்த்தா
ரேறாட லாய ரென.

ச. வானவர் போரிற் றானவர்க் கடந்த
மான வேந்தன் யானையிற் றனாது
பல்படை நேரிவ தொல்லான் வீமன்
பிறக்கிடங் கொடான்றன் முகத்தெறிந் தார்த்துத்
தானெதிர் மலைந்த காலை யாங்கதன்
கோடுழக் கிழிந்த மார்பொடு நிலஞ்சேர்ந்து

போர்க்கொள் வளாகந் தேர்த்துக ளனைத்தினு
மிடைகொள வின்றிப் புடைபெயர்ந்து புரண்டு
வருந்தா வுள்ளமொடு பெயர்ந்தனன்
பெருந்தகை யாண்மையொடு பெயர்த்தலோ வரிதே.

ரு. நான்மருப் பில்லாக் காணவில் யானை
வீமன் வீழ்த்திய துடன்றெதிர்ந் தாங்கு
மாமுது மதுரை மணிநிறப் பாகனொ
டாடமர் தொலைத்த லாற்றான் றேரொடு
மைத்துனன் பணியின் வலமுறை வந்து
கைத்தலங் கதிர்முடி யேற்றி நிற்றந்
திறைஞ்சின னைவர்க் கிடையோ னதுகண்டு
மறந்தீர் மன்னனு மிறைஞ்சித் தானாது
வேழம் விலக்கி வினைமடிந் திருப்பச்
சூர்மருங் கறுத்த நெடுவேள் போல
மலைபுரை யானையுந் தலைவனுங் கரிய
வாளுகு களத்து வாள்பல வீசி
யொன்னா மன்னரு மாடினர் துவன்றி
யின்னா வின்ப மெய்தித்
தன்னமர் கேளிரு முன்னார்த் தனரே.

சா. மறங்கெழு வேந்தன் குறங்கறுத் திட்டபி
னருமறை யாசா னொருமகன் வெகுண்டு
பாண்டவர் வேர்முதல் கீண்டெறி சீற்றமோ
டிரவூ ரறியாது துவரை வேந்தொடு
மாதுலன் றன்னை வாயிலி னிரீஇக்
காவல் பூட்டி யூர்ப்புறக் காவயி
னைவகை வேந்தரொ டரும்பெறற் றம்பியைக்
கைவயிற் கொண்டு கரியோன் காத்தலிற்
றனக்குடம் பிரீஇத் துறக்க மெய்திய
தந்தையைத் தலையற வெறிந்தவ னிவனெனத்
துஞ்சிடத் தெழீஇக் குஞ்சி பற்றி
வடாது பாஞ்சால னெடுமுதற் புதல்வனைக்
கழுத்தெழத் திருகிப் பறித்த காலைக்
கோயிற் கம்பலை யூர்முழு துணர்த்தலிற்
றம்பியர் மூவரு மைம்பான் மருகரு
முடன்றமர் தொடங்கி யொருங்குகளத் தவிய
வாள்வாய்த்துப் பெயர்ந்த காலை யான்வினைக்
கின்னோ ரினிப்பிற ரில்லென வொராங்குத்
தன்முதற் றாதையொடு கோன்முத லமரர்
வியந்தனர் நயந்த விசும்பி
னியன்றலை யுலகமு மறிந்ததா லதுவே.

[ தொல். புறத். சூ. உக—ந. மேற்கோள்.]

எ. குன்று துகளாக்குங் கூர்ங்கணையான் வேலெறிந்
தன்று திருநெடுமா லாடினா-னென்றும்
பனிச்சென்று மூளாத பல்கதிரோன் சேயோ
டினிச்சென் றமர்பொரரா யென்று

அ. கலிவர லூழியின் வாழ்க்கை கடிந்து
மலிபுகழ் வேண்டு மணத்த-ரொலிகடல்சூழ்
மண்ணகலம் வேண்டாது வான்வேண்டி யீண்டினார்
புண்ணகலாப் போர்க்களத்துப் போந்து.

கூ. எம்பியை வீட்டுத லெம்மனைக்கா யான்படுதல்
வெம்பகலின் முன்விளைப்ப னென்றெழுந்தான்-றம்பி
புறவோரிற் பாணிப்பப் பொங்யெரிவாய் வீழ்ந்தா
னறவோன் மறமிருந்த வாறு.

கo. இந்திரன் மைந்த னுயிர்வேட்டி டிரந்திரவி
மைந்தனை வெல்வான் வரங்கொண்டான்-றந்தநா
ளேந்திலைவேன் மன்னனே யன்றி யிதற்குவந்த
வேந்தனும் பெற்றான் மிகை.

[ வீரசோழியவுரை மேற்கோள் ]

கக. மானாக முன்னுயர்த்தான் சேனை களமுழுதுந்
தானா வருமதனைத் தாங்கினான்-மேனா
ளருகணையா வண்ண மடற்போரின் வென்று
வருகணையான் பெற்ற மகன். *(பொருட்படலம், 15.)*

கஉ. * வீரர் களிறேற வெல்வேந்தர் தேரேறப்
போர்கெழு வச்சிலைநாண் பூட்டேற-வார்முரச
மாப்பேற வேவிளினைஞர் மாவேற வெஞ்சுடர்வாள்
கூர்ப்பேற வேறினான் குன்று. *(அலங்காரப்படலம், 10.)*

கங. மலைதகர்ந்து போகாதோ வற்றாதோ பெளவ
மலர்கதிரோன் வீழானோ வஞ்சி-நிலையெனக்குப்
பார்வேந்த ரொப்பரோ பாய்நீர்க் குருகுலத்தார்
போர்வேந்தே யான்முனிந்த போது

*(அலங்காரப்படலம்,12, 28.)*

கச. மண்ணகன்று தன்கிளையு நீங்கி வளமடைந்து
பண்ணுந் தவமுயலும் பார்த்தனார்-விண்ணிறந்து

---

* ஒன்பதாநாட்போர், பாட்டு ரு பார்க்க.

*மீதண்டர் கோன்குலையும் வெய்யோர் குலந்தொலைத்தான்*
*கோதண்ட மேதுணையாக் கொண்டு*

*(அலங்காரப்படலம், 29.)*

[ புறத்திரட்டு. ]

கரு. *உலகெலாங் காக்கு மொருவ னொருவ*
*னுலகெலாங் காலா லுழன்றும்-விலையுண்டங்*
*காராது நல்கூரு மென்றா லறம்பாவம்*
*பாராத தென்னோலிப் பார்.*

கசா. *எப்பணியா லின்புறுவர் காதலரக் காதலரை*
*யப்பணியா லப்பொழுதே யன்புறுத்தி-யொப்ப*
*மனங்குழையும் வண்ண மகிழ்விப்ப தன்றே*
*கனங்குழையார் தங்கள் கடன்.*

கஎ. *வருந்தி யொருவன்பான் மற்றொருவன் வந்தாற்*
*பொருந்தி யகமலர்ந்து போற்றி-விருந்தேன்று*
*தன்னா லியன்றளவுந் தானுதவா னாகினவற்*
*கின்னா நரகே யிடம்.*

கஅ. *மலர்ந்தமுகந் தானு மதுரமொழி யானு*
*நலந்தந் திடுவர்க ணல்லோர்-புலந்திருந்த*
*வின்னா முகத்தா னருளா திடும்பொரு*
*டன்னாற் பயனுண்டோ தான்.*

ககூ. *அற்றவுறுப் பெல்லா மறுவையி னான்மறைப்ப*
*மற்றொருவர் காணா மறையுமால்-வெற்றி*
*யறையார் கழலா யவமாய வெல்லாம்*
*பொறையான் மறைக்கமேற் போம்.*

உ0. *தன்னைச் செறாதானைக் காயந்தான் றகாக்கொலையன்*
*பின்னைக் குரவரைப் பேணாதான்-முன்னொருவ*
*னில்லாளைக் காதலித்தா னிந்நால்வர் வெந்நரகத்*
*தல்லா லழுந்தா தவர்.*

உக. *மெய்தகளி யாகப் பொறையாந் திரிக்கொளீஇ*
*நெய்தவ மாக நிறைதரப்-பெய்தாங்*
*கருளாம் விளக்கேற்றி யம்மைப்பாற் செல்ல*
*விருள்போய் வெளியாய் விடும்.*

உஉ. *வாயிற் சுவைவெஃகி மான்கொன்று மீன்கொன்று*
*நாயொத் துழல்வார்க்கு நாவளவே -போயிழிந்தா*
*வின்னா தினிதென் றறியா ரிதற்காக*
*மன்னாவூன் றின்றல் வடு.*

௨௩. இறப்ப நுமக்கடுத்த வெவ்வநோ யாவும்
பிறர்க்குமஃ தாமென்று கொண்மி-னுறக்கருதி
யெவ்வா றுமக்குறுதி யெண்ணுதிர்நீ ரெல்லார்க்கு
மவ்வாறே யெண்ண லறம்.

௨௪. ஆனை யடியு ளடங்கா தனவில்லை
யேனை யவற்றடிகள் யாவையு-மூனுயிர்
கொல்லா வறத்தின் கொழுநிழலுட் பட்டடங்கு
மெல்லா வறனு மியைந்து.

௨௫. பலதிரண்ட செல்வத்தைப் பார்க்கிற் கனாவா
மலர்திரண்டாற் போலிளமை வாடுஞ்-சிலநிகழ்ந்த்
மினனொக்கும் வாழ்நா ளிவையிற்றை மெய்யென்றிட்
டுன்னக் களிப்பா ருளர்.

௨௬. உளையச் சிலைக்கு முழுவையுந் தான்றன்
னளையிற்றீர்ந் தூரடைந்த தாக-விளிவந்
துயிரிழப்ப தென்றா லுறுமிடனித் தென்கொல்
செயிருழக்குந் தீங்கு செயல்.

௨௭. ஒன்று நரம்பென்கோ வொன்றாத வென்பென்கோ
வின்றசை தானென்கோ யாதென்கோ-மென்றொடையாழ்ப்
பண்ணோட்டு மின்சொற் பணைத்தோளாய்
சேர்ந்தவர்பாற்
கண்ணோட்ட மில்லாத கண்.

௨௮. வெண்மை கருமை விரிசெம்மை நீண்மைவனப்
பொண்மை யிவற்றொன் றொழித்தேனுங்-கண்மையினை
வையாது மாந்தர் மயில்போ லெனத்தனது
கையா லிறைவகுத்தான் கண்.

௨௯. சூதினா னாகத்தன் றோள்வலியாற் றானாக
யாதினா னாயினும்வந் தெய்துமேற்-றீதெண்ணிச்
சூழ்வாரைத் தாமுன்னஞ் சூழ்வதே மன்னராய்
வாழ்வாருக் குள்ள வழக்கு.

௩௦. செல்லுங்காற் றேயத் தியறெரிந்து சென்றக்காற்
புல்லிய சுற்றம் புணர்வறிந்து-புல்லார்
மனத்தாற் பிரித்து வலியா லுரவு
மினத்தாற் றெரிவது தூது.

௩௧. தடுமாற்ற மின்றித் தகைசான்ற சொல்லான்
வடுமாற்றம் வாய்சோரா னாகி-விடுமாற்ற
மெஞ்சாது கூறி யிகல்வேந்தன் சீறுங்கா
லஞ்சா தமைவது தூது.

௩௨. படையளவு கூறார் பெரியார்முன் மாற்றார்
படையளவிற் றென்று வியலார்-கொடைவேந்த
னீத்ததுகண் டின்புறா ரேந்திழையார் தோள்சேரார்
பார்த்திபர்தூ தாயடைந்தார் பண்பு.

௩௩. தானறிந்து கூறுந் தலைமற் றிடையது
கோனறைந்த திதென்று கூறுமாற்- றானறியா
தோலையே காட்டுங் கடையென் றொருமூன்று
மேலையோர் தூதுரைத்த வாறு.

௩௪. அன்புடைமை யாய்ந்த வறிவுடைமை யிற்பிறப்பு
நன்குடைமை நல்ல நயனுடைமை-நன்கமைந்த
சுற்ற முடைமை வடிவுடைமை சொல்வன்மை
கற்றடங்க றூதின் கடன்.

௩௫. பிறன்றாரம் வேட்டல் பிழைப்பில்லார்ச் சீற
லறன்கேட னாயமே சூழ்தன்-மறந்தேயுந்
தீநிலத்தார் சொற்கேட்ட றீச்சூ திவைகண்டாய்
மேனிலத்தார் கேட்டுக்கு வித்து.

௩௬. முன்னர் விளையாடி முட்டுவார் முட்டினாற்
றன்மை திரிந்து சலந்தோன் றும்-பின்னர்
மிகாதோ வெகுளி வெகுண்டாலச் சூது
தகாதோ தகுவதோ தான்.

௩௭. உறுசுடர் வாளொ டொருங்கா விலங்கிற்
சிறுசுடர்முற் பேரிருளாங் கண்டா-யெறிசுடர்வேற்
றேங்குலாம் பூந்தெரியற் றேர்வேந்தே நின்னொடு
பாங்கலா மன்னர் படை

௩௮. துன்னருந் துப்பிற் றெழுகலார் சூழ்ந்திருப்பத்
தன்னருளான் வாளென்கைத் தந்தானம்-மன்னற்கு
மண்ணகமோ வைநின் று மாலை நெடுங்குடைக்கீழ்
விண்ணகமும் வேண்டுங்கொல் வேந்து.

௩௯. இன்ன ரெனவேண்டா வென்னொ டெதிர்சீறி
முன்னர் வருக முரணகல-முன்னர்ப்
பருந்தார் படையமருட் பல்லார் புகழ
விருந்தா யடைகுறுவார் விண்.

௪௦. கான்படு தீயிற் கலவார்தன் மேல்வரினுந்
தான்படை தீண்டாத் தறுகண்ணன்-வான்படர்தல்
கண்ணிய பின்னர்க் கறுத்தார் மறந்தொலைத
லெண்ணியபி னொக்குமோ வெஃகு.

௪௧. நல்வான. . . .கணம்மை யமரகத்து
வெல்வான் விரும்பிய வேல்வேந்தைக் - கொல்லா
னுனக்கே யுரிமை யுளதெனினு மிப்போ
ரெனக்கே தருவா னிறை.

௪௨. கைபொருத வோசையாற் கண்ணுமிழ்ந்த செந்தீயான்
மெய்பொருது தோய்ந்தெழுந்த வெம்புகையா-னையோ
வெதிர்வெங் கடுங்கானம் போன்றதே வெம்போ
ரெதிர்வேந்தர் செய்த விடம்.

௪௩. தீயாலோ நீராலோ தேர்வேந்தர் தம்மாலோ
மாயாத தெவ்வர் வகையாலோ-யாதாலோ
விப்பொருள்போய் மாய்கின்ற தென்றுபொருள் வைத்தார்க
ளெப்பொழுது நீங்கா ரிடர்.

௪௪. அற்றங்கள் பார்த்தல் கடைத்திருந்து சொல்வானுங்
குற்றம்போய் கோவுக் குரைப்பானுஞ் செற்றத்தே
நின்றானுஞ் செய்ந்நன்றி நீத்தானு மந்தணரைக்
கொன்றாரோ டொப்பர் குறித்து.

௪௫. இந்நோய் நமக்குண்டென் றெண்ணாதே யெவ்வுயிரு
முன்னோவக் கொன்றுண்ணு மூர்க்கர்தா- மெந்நோவும்
பண்ணப் படுநரகிற் பாவிகளிற் பாவிகளென்
றெண்ணப் படுவா ரிசைந்து.

௪௬. கொன்றான் கொலச்சொன்னான் கூசவறுத் தானட்டான்
தின்றான் விலக்கிடான் சென்றொன்று-கொன்றவனைக்
குட்டவன்க ணிட்டெரிக்க வெந்துகொடு வெந்நரகிற்
பட்டழுன்று வீழ்வார் பதைத்து.

குறிப்பு:- ஸ்ரீ வாசுதேவன் றூது ௬௪-ம் பாட்டுப் புறத்திரட்டிலும், எட்டாநாட்போர் ௧௯-ம் பாட்டு வீரசோழிய வுரையிலும் (பொருட்படலம், 16) சில பாடபேதங்களுடன் காணப்படுகின்றன.

# பொருளடக்கம்

# பெருந்தேவனார் பாரதம்

## கடவுள் வணக்கம்

### [விநாயகர் துதி]

1. ஓத வினையகலு மோங்கு புகழ் [1]பெருகுங்
காதற் பொருளனைத்துங் [2]கைகூடுஞ்-சீதப்
பனிக்கோட்டு மால்வரைமேற் பாரதப்போர் தீட்டுந்
தனிக்கோட்டு வாரணத்தின் றாள்.

### [கலைமகள் துதி]

2. புத்தகமு ஞானத்து முத்திரையும் பொற்பளிங்கும்
வைத்த கமண்டலமும் வன்னிகையு-முத்து
வடங்கொண்ட பூண்முலையாள் வந்தென் மனத்தே
யிடங்கொண்டா ணீங்கிற் றிடர்.

## உத்தியோக பருவம்

### [திருமால் துதி]

3. மாலென்ப தாம்பின்னை மால்வரையான் மால்விசும்பின்
மாலின் புயல்காத்த மால்வண்ணன்-மாலரவப்
பேரோத மேனியான் பேரோத நீர்கடைந்தான்
பேரோத மேனியான் பேர். (க)

*என்பது-ஆதிவேதமும், மகாலோகமும், அண்டரண்டமும், அவனி தலமும், வேத வியாகரண முள்ளிட்ட நான்கு கலைகளும் நான்முகனொடுந் தனது திருநாபிக் கமலத்தே பிறப்பித்த பதுமநாபன், பவித்திரமூர்த்தி, பக்தவற்சலன், ஆதிமூர்த்தி, அநந்தசயனன், விக்கிரமமாயன், சக்கரபாணி, தேவதேவன், நாராயணசுவாமி-ஸ்ரீ பாதங்களை நமஸ்கரித்தோ மென்றவாறு.*

---

*(பாட பேதம்)* 1. பெருக்கும். 2. கைகூட்டும்.

## [பரிபாலகர் புகழ்]

4. வண்மையாற் கல்வியான் மாபலத்தா லாள்வினையா
லுண்மையாற் பாரா ளுரிமையாற்-றிண்மையாற்
றேர்வேந்தர் வானேறத் தெள்ளாற்றில் வென்றானோ
[1]டியார்வேந்த ரேற்பா ரெதிர் (உ)

*எ-து.- எல்லையி னிறைந்த எண்டிசை யுலகத்து மலையு மலையும் உள்ளிட்ட மண்மிசை முழுதும் மறையது வளர்க்க அல்லிபீடத் தரிவைக்குத் தன் னழகமர் தோளே ஆலயமாக்கிய பல்லவர்கோமான் பண்டிதராலயனைப் பரவினேம்; இனி, ஈண்டிய தொல்புகழ் எழு மணி வரைத்தோட் பாண்டவர் நிலைமை யாதாயிற்றோ வெனில்:-*

# தௌமியன் றூது

5. அரவுயர்த்தோன் சொன்ன வவதியாண் டெல்லாம்
புரவுயர்த்தோன் கானத்து ணீக்கி-முரசுயர்த்த
வேல்வேந்தன் வந்து வெளிப்பட்டான் மற்றிளைய
கோல்வேந்த ரோடுங் குறித்து. (ங)

*எ-து.- தருமபுத்திரனும் தம்பிமாரும் துரியோதனனுடன் சபா மண்டபத்தி லிசைந்தபடியே பன்னிரண்டு சம்வற்சரம் காடுறைந்து ஓராண்டு கரந்துறைந்து தங்கள் சுற்றக்குழாத்தோடும் வந்து விராடபுரத்து வெளிப்பட்டார் என்றவாறு.*

6. ஓட்டிய பன்னீராண்[2] டோராண்டு காடுறைந்து
விட்டிலங்கு தண்டார் விறல்வீரர்-வட்டப்
பணியகலப் பார்விளங்கப் பைந்தார் விராட
னணிநகருள் வீற்றிருந்தா ராங்கு (ச)

*அன்றியும்,*

7. ஆண்டிரண்டு பத்தும்போ யாரணியத் துள்ளுறைந்து
மீண்டிரண்டு பத்து வியன்றிங்க-ளீண்டி
யொளிப்பட் டிருந்தங் குயர்நிரையை மீட்டு
வெளிப்பட் [3]டிருந்தார் வியந்து (ரு)

*இவ்வகை விராடபுரத்து வெளிப்பட்டிருந்து யாது செய்தான் தருமபுத்திரன்:-*

*(பா-ம்.) 1. ஏர்வேந்தர். 2. ஓராண்டுங். 3. இருந்தார்கள் வேந்து.*

8. தங்கள் வெளிப்பாடு சொல்லித் தமக்கினிய
வெங்கதிர்வேல் வேந்தர்க்கு வெவ்வேறு-[1]சங்கம்
பொருமுகப்ப வந்து புனனாடன் விட்டான்
றிருமுகமுந் தூதுஞ் செல. (சா)

*அன்றியும்,*

9. மற்றுள்ள மன்னவர்க்கும் [2]வாழ்வேந்தர் வாய்ப்புடைய
சுற்றத்தார் தங்கட்குந் தோழர்க்கும்-வெற்றித்
திருமா றனக்குந் திறற்குருநா டாளும்
பெருமானும் விட்டான் பெயர்ந்து (எ)

*எ-து.- ஸ்ரீ வாசுதேவ னுள்ளிட்ட யாதவ விருஷ்ணி போசராசத் தொடக்கத்தாரிடைக்கும், குந்திபோச ராசனிடைக்கும், பாஞ்சால ராசனிடைக்கும், பாண்டிய ராசனிடைக்கும், திரிகர்த்த ராசனிடைக்கும், 3 கேகய ராசனிடைக்கும், சேதிப ராசனிடைக்கும், சம்பந்திகளுள்ளாரிடைக்கும் தீதின்மையும் வெளிப்பாடுஞ் சொல்லித் திருமுகமும் தூதும் போக்கினான். அது யாங்ஙனமோ வெனில்:-*

10. அன்று சபையு ளரவுயர்த்தோ னொட்டியநாள்
சென்று கழிந்தன தீதின்மை-யொன்றியநம்
பேராழி வைகும் பெருமாற்குச் சென்றிதனைச்
சோராமற் சொல்லென்றான் றூது. (அ)

*என்று இவ்வகை சொல்லித் தூதரைப் போக்கிச் செல்லாநின்ற நாளகத்து ஒருநாள் யாது செய்தார் தூதுவர்:-*

11. குன்றுங் குரைகடலுங் கொய்பொழிலுந் தான்கடந்து
சென்றங் கெழிற்றுவரை சேர்ந்ததற்பின்-வென்றி
முரசுயர்த்தான் றூதன் விரைந்தணைந்தான் வானோ
ரரசுயர்த்த வேந்தன்பா லாங்கு. (கூ)

*இவ்வகை தூதனும் போய்த் துவாரகாபதி சென்று புக்குத் தேவ தேவன் கோயில்வாசற்கண் நின்று துவாரபாலகரைக் கண்டு தன் வரவு அறிவிப்ப, மற்றவரும் உள்புகுந்து தேவதேவனான ஆதிமூர்த்திக்கு விண்ணப்பஞ்செய்ய, அருட்பாடெனக் கேட்டுத் தூதனும் புகுந்து ஸ்ரீவாசுதேவனைக் கண்டு களிகூர்ந்து தண்டன் பண்ணி, நமஸ்கரிக்க, நின்ற தூதனை நோக்கி யாதருளிச் செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-*

---

*(பா-ம்.) 1. சங்கு. 2. வாள்வேந்தர். 3. கைகய.*

12. எங்குநின் றெம்மிடைக்கு வந்தா யெனவுரைத்த
கொங்கலர்தார் மாயனுக்குக் கூறுவான்-அங்குப்
பொருபடையில் வாய்வைக்கும் போர்வேந்தர் நின்பால்
வரவிடுத்தார் யான்வந்த வாறு (கo)

*அன்றியும்,*

13. எம்பெருமா னின்மாமி யீன்றெடுத்த பஞ்சவர்கள்
வம்பவிழ்தார்ச் சோதி மணிவண்ணா-தங்கள்
வரவறிக வென்றுரைத்தார் வானரத்தா லன்றங்
கரணிலங்கை செற்றா யறி. (கக)

*எனக் கேட்டு மகாப்பிரியஸ்தனாய், மற்று அவனுக்குச் சிறப்புச் செய்து, யாதவ விருஷ்ணி போசராசத் தொடக்கத்தாரோடும் யாங்ஙனம் படை யெழுந்தான் ஸ்ரீவாசுதேவன்:-*

14. அச்சஞ்சூழ் சாப மரசழிய வந்தவன்றண்
மச்சஞ்சூழ் நாடன் மகனோடும்-பிச்சஞ்சூழ்
மாச்சுற்றத் தேர்சுற்ற மாலவன்றான் வந்தான்றன்
கோச்சுற்ற மத்தனையுங் கொண்டு (கஉ)

*இவ்வகையே சுவேதனோடும், அபிமன்னுவினோடும், துருபத ராசனோடும், சாத்தகியுள்ளிட்ட தம்பிமாரோடும், சாம்பன் பிரத்யும்நனுள்ளிட்ட பிரதான புத்திரரோடும் ஸ்ரீவாசுதேவர் ஸ்ரீபலதேவர் வந்துகாண மனமகிழ்ந்து இனி திருந்தவிடத்துச் சுவேதனைக் கொண்டு சென்று மச்சராசனுக்குக் காட்ட அவன் எத்தன்மையனாய் யாது செய்தானோ வெனில்:-*

15. செல்வனைப் புல்கித் திருநெடுங்கண் ணீர்சோர
வெல்ல விருந்த வினையேனை-யல்லற்
படவேந்தா யென்றும் படர்ந்தனையோ வென்றுந்
தடவந்தான் றன்மகனைத் தான். (கா)

*இவ்வகை, தன் செம்மலர்க்கண் ணீரருவி சோர விம்மி விம்மி, வெய்துயிர்த்துச் சுவேதனைத் தழுவிக்கொண்டு சாலப்பொழுது சிந்தித்திருந்து ஸ்ரீவாசுதேவனை நோக்கி யாது சொன்னான் விராடராசன்:-*

16. வாழி திருவடியாய் மண்ணுலகை மூவடியா
லேழுலகுங் கொண்ட விணையடியாய்-சூழொளிசேர்
பொங்கிருந்தார் வேணி புனையுந் திருவடியா
யெங்கிருந்தான் சொல்லா யிவன். (கச)

*அன்றியும்,*

17. எங்குத் தலைப்பட்டா யெங்கிவன்போய்த் தான்பயின்றா
னங்கிவனை யுற்றனவு மாழியா-யிங்கிவனை
யானிழந்து காரணமு மெல்லா மெமக்கறிய
வேனமாய் நின்றா யியம்பு. (கரு)

*எனக் கேட்டு யாதருளிச்செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-*

18. செற்றவனைக் காய்ந்த திறமுஞ் சிவேதன்போய்
நற்றவங்க ணாடினது நன்றாக-மற்றவன்றான்
தங்கட் குதவினதுந் தார்வேந்தற் குற்றுரைத்தான்
வெங்கட் கடாயானை வேந்து (கசு)

*எ-து.- 'இவன் பண்டு சுவர்க்கவாசியாய் வாழுங்காலத்து, அஷ்ட வசுக்கள் இவனை ஒரு காரணத்தினாற் சபிப்ப, அச்சாபம் இவன் பேரெழுதியதோர் பகழியினால் ஏவுண்ட மயிலுருவாய் நின்னருகு வீழ்தலும், நீ அஃதுணராது முனிய ஒரு பரிசினால் உய்ந்து போந்து பரமேசுவரனை நோக்கிப் பலகாலந் தபசு பண்ணி ஆங்கு அவன் பிரசாதத்தினால் திவ்யமான கவசமும் அக்ஷயமான ஆவநாழியும் பெற்றுப்போந்து சுவர்க்க சமானமாகிய ஸ்ரீமத் துவாரகாபதியில். . . சூரரோடு எங்கட்கு அமர்விளைந்த விடத்துப் பதினாறாயிரம் சூரரையும் அரனது வரத்தின் திவ்யசரத்தினாலே கொன்று வீழ்த்து, யாதவர்க்குள்ள பகைகெடுத்துக் கொடுத்து வீற்றிருந்த விடத்துக் குருபதி தருமபுத்திரன் வெள்பாடு கேட்டு இங்கு வருகின்ற என்னோடும் வந்தான்' எனக்கேட்டு மகாப்பிரியஸ்தனாய் இளவரசியற்ற நாள்வரைக வென்று இரத்தினாபரணமும் இராசபரிசின்னமும் வஸ்திரராசியும் மனமகிழ்ந்தருளி அளவளாவி இனிதாங்குச் செல்லாநின்ற நாளகத்து ஒரு நாள் மத்திரராசன் சல்லியன் யாது செய்தான்:-*

19. மத்திரத்தார் கோமான் மருமகன்றன் பாலணைய
வித்திரத்து மேல்வந்தா னென்றென்று-சித்திரத்து
மானாக முன்னுயர்த்த மன்னன் வழிவிருந்து
தானாகச் செய்தான் சமைத்து. (கஎ)

*இவ்வகை மருமக்கள் வெளிப்பாடு கேட்டு வருகின்ற சல்லியனைத் துரியோதனன் கண்டு, 'இவன் மகா பலபராக்கிரமன்; சத்திய வாதி இங்கு இவன் போவதன் முன்னம் அங்கீகாரம் பண்ணவேண்டும்' என்று மற்று அவனுக்கும் மகாசேனைக்கும் தருமபுத்திரன் விருந்து செய்தானாகத் (கொற்றவனும்) தன் இராச்சியம் முற்றும் விருந்து செய்வித்துச் செல்லா நிற்ப, அக்கணத்துச் சல்லியனும் அஃதறியாமல் விருந்தருந்தி யிருந்தவிடத்து, கதுமெனத் துரியோதனன் வெளிப்பட்டு, தன் குறைவெறுப்பும் தன்சோறு உண்டமையுஞ் சொல்லித் தனக்குப் படைத்துணை செய்வானாக மற்று அவன் கைப்பிடித்து யாது சொன்னான்: துரியோதனன்-*

20. முன்னொருவன் செய்யு முபகார மூவுலகந்
தன்னைக் கொடுத்தாலுஞ் சாருமோ-வென்னே
யுயிர்க்குறுதி யாக வொருவர்சோ றுண்டார்
பிறர்க்குரிய ராவரோ பேசு. (௧௯)

*எ-து.- என் சோறுண்டு என்னுடன் இனிதுரைத்துப் புறமன்னர்க்குப் படைத்துணையாமது யுத்தவீரர்க்கு யோக்கியமன்று கண்டாய் என வேண்டிக்கொண்டு பேதிக்கப் பேதப்பட்டுத் துரியோதனனுக்கு உடன்பட்டுப் பின்னை யாது செய்தான் சல்லியன்:-*

21. அரவுயர்த்தோன் சல்லியனக் காங்குவரி தன்னில்
விரவுதரு மன்விருந் தென்று-கரவினிடுஞ்
சோற்றின் வலியாற் றுவக்குண்டா னீதன்றோ
மாற்றரசர் வஞ்சித்த வாறு. (௧௯)

*இவ்வகை துரியோதனன் வஞ்சனையாற் சல்லியன் துவக்குண்டு மற்று அவனுடன் அஸ்திநபுரம் நோக்கிப் போகின்ற எல்லைக்கண், துரியோதனனை நோக்கிச் சல்லியன் சொல்லுவான்,- 'தருமபுத்திரனைக் கண்டு மற்று அவன் சந்தொழியாதவாறு சொல்லிவருவேன்' என்றானைத் தகைந்து 'நீ யங்குப் பேதகப்படாமல் வருவாயாக' எனக் கேட்டு யாது சொன்னான் சல்லியன்:-*

22. தஞ்ச மெனவொருவர் சோறுண்ட தாளாண்மை
வெஞ்சமரி லன்றி விளிவரோ-தஞ்ச
மவர்க்காக வந்தே னரவுயர்த்தாய் மீட்டா
யெமக்காமா நீதோ வியம்பு. (௨0)

*என்றிவ்வகை [1]சொல்லிப் பின் யாது செய்தான் சல்லியன்:-*

23. அத்திப் பதிக்கே யடிப்படையைத் தானேவி
மத்தக் களிறனையான் வந்தணைந்தான்-மொய்த்தமணிச்
சென்னியான் முன்வணங்கத் தேர்வேந்தர் மாமானும்
பன்னினா னெல்லாம் பரிந்து (௨௧)

*இவ்வகை தன் பெரும்படையைத் துரியோதனனுடன் அஸ்திநபுரத்தேறப் போகவிட்டு உபலாவிய நகரம் புகுந்து தருமபுத்திரனைக் கண்டு யாது சொன்னான் சல்லியன்:-*

24. அரவுயர்த்தோன் செய்தவினை யாங்குவழி தன்னின்
முரசுயர்த்தோன் மூண்டவிருந் தென்றே-சுரவினிடுஞ்

(பா-ம்.) *1. துரியோதனன் கேட்கச் சொல்லி யாது.*

சோற்றின் வலியாற் றுவக்குண்டேன் கண்டாயே
மாற்றரசர் வஞ்சனைக்கே வந்து. (உ௪)

*என்றிவ்வகை நீதிமார்க்கத்துட னின்ற மத்திரராசனாகிய சல்லியனை நோக்கி யாது சொன்னான் தருமபுத்திரன்:-*

25. எங்க டுணையா யெமக்கா யவர்க்கானாய்
கங்கைசூழ் நாட்டவர்தங் காவலனே-துங்கப்
படைக்கடைமுன் னீநிற்கப் பாரதப்போர் வெல்லக்
கடைப்படுமோ வென்றான் கலந்து. (உ௫)

*எ—து.- நின்னைப் பிரமாணித்துத் துரியோதனன் எங்கள் இராச்சியந் தாராதளவில் யுத்தம் பண்ணியாகிலும் கொள்ளக்கடவோ மென்றிருக்க, எமக்குத் துணையாகாதபடி வஞ்சனையால் துரியோதனன் சோறுண்டு மற்று அவனாற் பேதப்பட்டு வந்தாயாகின், மற்று அவனுக்கு நீ துணையாய் நிற்க அவனை யாவராலும் வெல்ல வரிது; அல்லால் நின்னை வெல்லும் பிரகார மாகிலும் பிரசாதிப்பாயாகெனக் கேட்டுக் கதுமென உடன்பட்டு யாது சொன்னான் சல்லியன்:-*

26. முன்னை வினையான் முரசுயர்த்தாய் நின்னுடைய
கையி னெடுஞ்சரத்தாற் கால்சாய்வே-னென்னைக்
கொலப்படுவா யென்றுசொல்லிக் கூறினான் மாற்றார்
வெலற்கரிய சல்லியன்றான் மீட்டு, (உ௬)

*இவ்வகை மத்திரராச சல்லியன் விதியாலுள்ள பகையினால் விருத்தாந்த முரைத்துச் சமரபூமியில் நின்னால் நான் கொலப்படுவே னென்று குறித்துப் பேசி விடைவேண்டுகின்ற சல்லியனை நோக்கி யாது சொன்னான் தருமபுத்திரன்:-*

27. என்னே விதியின் வலியிருந்த வாறென்று
பொன்னேர் முகம்வாடிப் பொங்கழலான்-முன்னேபோய்
மற்றேதுஞ் சொல்லி மறித்திரா தாங்கவற்குக்
குற்றேவல் செய்நீ குறித்து (உ௭)

*என்றிவ்வகை தருமபுத்திரன் சொல்லி விடைகொடுப்ப யாதுசெய்தான் சல்லியன்:-*

28. இன்னனவுங் கூறி யெறிபுனல்வாய் மத்திரத்தார்
மன்னவனு மீண்டு வழிக்கொண்டான்-பின்னைப்
பொருந்தாத மன்னவரைப் போர்வெல்ல [1]வென்றிங்
கிருந்தா னிமையோர்க் கிறை. (உ௮)

*(பா—ம்.) 1. என்றே யிருந்தான்.*

*இவ்வகை சல்லியன் மீண்டுபோகத் தருமபுத்திரன் சோகிதனாய் வழிவிடா நின்றதனை ஸ்ரீ வாசுதேவன் கண்டு முறுவலித்தருளி இனிது அங்குச் செல்லாநின்ற நாளகத்து ஒருநாள் யாது நிகழ்ந்ததோ வெனில்:-*

29. அங்க ணிருமருங்கு மன்ன ரயலார
வெங்கு மிடமின்றி யீண்டிற்றே-பொங்கொளிமான்
றேர்வேந்த ரைவரையுந் தீதின்மை கேட்டுவந்த
பார்வேந்தர் மன்னர் படை, (உஎ)

*இவ்வகை பரராஷ்ட்ரத்து க்ஷத்திரியரும் மித்திர பாந்தவத்தாரும் வந்து எல்லாத் திசையு நிறைய [1]ஈண்டி யினிதிருந்தான் தருமபுத்திரன் என்றவாறு. அப்பொழுது விராடராசன் ஏது செய்தான்:-*

30. வின்மருவுந் திண்டோள் விசயன் றிருமகற்குத்
தன்மக ளுத்தரையைத் தான்கொடுத்தா-னன்மகிழ
நல்லியாணர் நாடி நகரங் களிகூரக்
கல்லியாணஞ் செய்தான் கலந்து, (உஅ)

*இவ்வகை உத்தரையை அபிமன்னுவுக்குக் கொடுத்து உலகமகிழக் கல்லியாணஞ்செய்து பாண்டவரும் மனமகிழ்ந்திருந்து அங்குச் செல்லா நின்ற நாளகத்து, ஒருநாள், தருமபுத்திரனையும் மித்திர பாந்தவத்தாரையுங் கொண்டுசென்று உபலாவிய மென்னும் நகரம் நண்ணி உத்தரநாள் அமைக்கப்பட்ட பாடி வீடுகளில் பார்வேந்தரை இருப்பாராக்கிச் செல்லா நின்ற நாளகத்து, ஒருநாள், தருமபுத்திரன் க்ஷத்திரியர் புடைசூழக் கண்கவருங் கழிவனப்பிற் கருங்குழலியர் வெண்சாமரை யிரட்டச் சிங்காதனத்துமிசை யிருந்த பொழுது, பதுமநாபன் முகம்நோக்கி யாது விண்ணப்பஞ் செய்தான் யக்கியசேனன்:-*

31. பட்ட நுதல்யானைப் பாண்டவரோ டாடவர்க
ளொட்டிய நாளே யுறைந்தார்கள்-விட்ட
நறுமா மலர்ப்படப்பை நன்னாட்டிற் றாயம்
பெறுமா றுலகளந்தாய் பேசு, (உகூ)

*எ-து,-'அஸ்திநபுரத்துச் சூதாடிய ஞான்று துரியோதனனுடன் ஒட்டிய பரிசே பதின்மூன்று சம்வற்சரமும் உறையப்பட்டது; இனி இவர்கள் இராச்சியம் பெறுமாறு நிரமித்துச் சொல்' என்ன, யாதருளிச் செய்தான் ஸ்ரீ வாசுதேவன்:-*

32. ஆண்டு பதின்மூன்றுஞ் சென்றன வென்றுரிமை
வேண்டி விடுக விறல்வேந்தீர் - வேண்டினாற்

(பா-ம்.) 1. ஈண்டினிது.

பார்காட்டித் தந்தானேற் றந்தானாந் தாராநேற்
போர்காட்டிற் றன்றோ பொர, (௩௦)

*எ-து.- சத்திய வாக்கியம் வழுவாமல் அஸ்திநபுரத்து ஒட்டிய பரிசே பதின்மூன்று சம்வற்சரமும் காடுறைந்து வந்தார்; இனித் தருமபுத்திரன் இராச்சியம் பெறுமாறு எது? என்று பீஷ்மர் துரோணர் விதுரரையும் சாக்ஷியாக வைத்துத் துரியோதனனை இராச்சியம் வேண்டத் தாரானாகில் யுத்தஞ் செய்தாகிலும் உரிமை கொள்ளக்கடவோ மென்று ஸ்ரீ வாசுதேவன் அருளிச்செய்யக் கேட்டு அருகிருந்த ஸ்ரீ பலதேவன் யாதருளிச் செய்தான்:-*

33 அவனு முடிக்குரியான் றோன்ற லவனுக்
கிவனு மிடுகவற்றாற் றோற்றா-னவனு
மரசிழவா வண்ண மறிந்துரைமி னென்றான்
வரைகெழுதோண் மன்னன் மதித்து. (௩௧)

*எ-து.- இக்குலத்து ஜ்யேஷ்டனாயினான் மகனாதலிற் துரியோதனன் தருமபுத்திரனை நிக்கிரகித்துக் கொண்டானுமல்லன்; ஸ்ரீ பீஷ்மர் துரோணன் விதுரரைச் சாக்ஷியாக வைத்துத் தோற்றது என்றும், தொல்லுரிமை யென்றும் இவ்விரண்டுஞ் சிந்தித்துத் தருமபுத்திரனுக்கும் துரியோதனனுக்கும் சந்தாகுமாறும் இதமாமாறும் எண்ணித் துணிவீராமின் என்று ஸ்ரீ பலதேவன் சொல்லக் கேட்டு யாது சொன்னான் சாத்தகி:-*

34. மான மணிவரைத்தோள் வாம்வேந்தீர் மற்றிவன்றன்
மேனியிற் காட்டி வெளுத்ததே-தானோ
ரறத்தினா லன்றியே யன்பொருபா லோடி
மறத்தினாற் கட்டுரைத்த வாக்கு, (௩௨)

*எ-து.- சத்திய விரதன் தருமபுத்திரன் யக்கியஞ் செய்ததற்குச் சமியாது க்ஷத்திரிய தருமந் துறந்து குருவசனம் விலங்கி. . . விட்டுக் கூவிக்கொண்டு சகுனி வல்ல மாயச்சூதினாற் சபாமண்டபத்து வஞ்சித்துச் சூதாடி வஸ்துராசியும் வாகனமும் வளநாடும் வரையூர் பதியையும் கொண்டானை நீதிமார்க்கஞ் செய்தானென்று துரியோதனனைப் பக்ஷபாதித்து இராச சபையின்கட் பேசுகின்றாய்; உருவ னகத்தே யுணர்வென்பது ஸ்ரீ பலதேவனிடைக்கே காணப்பட்ட தென்று சாத்தகி முனிந்துரைப்ப, மற்று அவனைக் கைகவித்து யாதருளிச்செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-*

35. மூத்தா னிருக்க விளையா னரசாடல்
கோத்தரும மென்கின்றாய் கொற்றவனே-மாத்தன்

**செறிகுன்றத் தெள்ளருவி சேயலைக்கு நாடா**
**நெறிகுன்றச் சொல்லுவதோ நீ.** (௩௩)

*எ-து.- குருவசனம் பரிகாரமாகக்கொண்டு சுவாமியா யிருந்துள்ள தருமபுத்திரனை யிகழ்ந்து வஞ்சித்துச் சூதாடி மண்கொண்டது இராசதரும மன்றுகாண் என்று, விவஸ்தையழிந்து பின்னும் இராச்சியங் கொடாமலிருப்பது கேட்டார்க்கு வழக்கன்றே யென்றும் ஸ்ரீ பலதேவனை நோக்கி யுரைத்து, பின்னும் தருமபுத்திரனை நோக்கி, 'ஈண்டள வுங்கள் உரிமை வேண்டிப் புத்திமானாயிருப்பா னொரு புராகிதனை யழைத்துத் துரியோதனனிடைக்குப் போகவிடுத்து இராச்சியம்வேண்டி மற்று அவன்தன் இருதயமறிந்து, தாரானாகில் எமக்கு அறிவிப்பீராமின்' என்று அருளிச்செய்து, கதுமென மற்று அவரை விட்டு நீங்கி யாதுசெய்தான் ஸ்ரீ வாசுதேவன்:-*

36. **முன்னை முதற்பொருளாய் மூவுலகுந் தானாகிப்**
**பின்னை யமரர்களாம் பெற்றியான்-றன்னையே**
**யெண்ணினா ருள்ளத் திடரகற்ற வல்லானு**
**நண்ணினா னத்துவரை நன்கு.** (௩௪)

*எ-து.- தருமபுத்திராதிகளுக்கு விடைகொடுத்து உபலாவிய நகரம் விட்டு நீங்கிச் சத்திய சாத்தகியையும் திட்டத்துய்மனையும் மற்றும் சுவேதனை யொழிந்த இராசகுமாரரையும் விருஷ்ணிவீர ருள்ளிட்ட ஸ்ரீநாராயண கோபாலரையும் உடன்கொண்டு தவளசத்திரம் மேல் நிழற்ற, கருடக்கொடி விசும்பணுவ, எம்மருங்கும் எழின்மணிக் கவரி அருகிரட்ட எழுந்தருளி ஸ்ரீமத் துவாரகாபதி புகுநதருளினான் தேவதேவன் ஸ்ரீவாசுதேவன் என்றவாறு, இப்பால், சிறிது பொழுது கழித்துத் தருமபுத்திரனும் விராட ராசனும் ஒரு தனியிருந்து செய்யத்தக்கன குறித்து வீற்றிருந்தவிடத்து, தருமபுத்திரனை நோக்கி யாது சொன்னான் பாஞ்சாலராசன்:-*

37. **உரிமைதனை வேண்டி யொருவனைநாம் விட்டாற்**
**பெருமையர வக்கொடியோன் பேசில்-வெருவச்**
**செருவிளைத்துப் பார்கொள்ளச் செங்கணெடு மாற**
**னருவரைத்தோ என்றோ வரண்.** (௩௫)

*எ-து.-* சாதுசனங்கள் துணையாவது முன்பு சென்று வேண்டினார்க் கன்றோ என்றும், துரியோதனன் இராச்சியந் தாரானாகில் பின்னை யுத்தம் பண்ணியாகிலும் பூமி பரிக்கிரகிக்க வேண்டுமென்றும், புத்திபூர்வமாக ஸ்ரீ வாசுதேவன் அருளிச் செய்தபடியைக் குருவசனமாகக் கொண்டு துணிந்து, நமக்கு யுத்த பூமியில் வந்து துணைசெய்வார்க்கும் தரணிபாலர்க்கும் உங்கள் வெளிப்பாடும் தீதின்மையும் பண்ணிய விவஸ்தையழியாமல் வந்து

இராச்சியம் வேண்டி விடுவதாகத் துணிந்தவாறும், பேசி, ஈண்டன் விடுப்பாயாக என்று பாஞ்சாலராசன் சொல்லக் கேட்டு, பல்வேறு வகைப்பட்ட தூதரையும் பராஷ்ட்ரங்களுக்குப் போக்கி, துரியோதனனிடைக்குப் போவார் யாவரோ வெனத் தெரிந்து, தம்முடைய புராகிதனாகிய தௌமியனை யழைத்து யாது சொல்லி விடுத்தான் தருமபுத்திரன்:-

38. தந்தைக் குரியதுவுந் தானாள நானாள
வெந்தைக் குரியதொன் றீயுமே-வந்து
புனத்திினைக்கே மான்புகுதும் பொன்வரைசூழ் நாடன்
மனத்தினைக்கண் டாய்வை யறிந்து. (௩௯)

எ-து.- நீ சென்று அஸ்திநபுரம் புக்குத் திருதராஷ்டிரனை முன்னங்கண்டு எங்கள் தீதின்மையும் வெளிப்பாடும் பேசி, மற்றவனை அனைவோரும் பண்ணிய நமஸ்காரமும் விண்ணப்பஞ் செய்து, அவன் பிரசாதத்தினால் பீஷ்மர் துரோணர் கிருபர் அசுவத்தாமா வுள்ளிட்ட மித்திர பாந்தவத்தாரைச் சாக்ஷியாக வைத்துத் துரியோதனனைக் கண்ட, முன்னம் ஒட்டிய காலம் கழிந்த பட்டாங்கு முரைத்து இராச்சியம் வேண்டினால், தாரானாகில் அர்த்தராச்சியந் தரினுங் கொண்டு போதுக என்று புரோகிதனை விடுப்ப, அவனும் விடைகொண்டு புறப்பட்டு இரண்டு திவசம் வழியிற் றங்கி மூன்றாந் திவசம் அஸ்திநபுரம் புகுந்து, திருதராஷ்டிரனைக் கண்டு தருமபுத்திராதிகள் வெளிப்பாடும் தீதின்மையும் மற்றவர் நமஸ்காரமும் விண்ணப்பஞ்செய்து, ஆங்கவனை விட்டு நீங்கித் துங்கக் கருவிக் கடாக் களிற்றுத் துரியோதனனைக் காண்பானாகப் புரோகிதன் சென்ற எல்லைக் கண் இராசராசன் துரியோதனனிருந்த இராசப்பிரதாபம் யாங்ஙனமோ வெனில்:-

39. சுற்றத் தவர்சூழத் தொல்லரசர் போற்றிசெய்யக்
கற்றை மணிக்கவரி காலசைப்ப-முற்றும்
பொருந்தாத பஞ்சவரைப் பொய்சூதில் வென்றா
னிருந்தா னெழிலா சனத்து. (௩௭)

இவ்வகை யிருந்த துரியோதனனைப் புரோகிதனுஞ் சென்று கண்டு ஸ்வாகதஞ்சொல்லி நிற்ப, மற்றந்தப் பார்வேந்தனும் ஆசனமு மடைக்காயுங் கொடுத்து அளவளாவி இனிதிருந்த எல்லைக்கண், இராசராசனாகிய துரியோதனனை நோக்கி யாது சொன்னான் புரோகிதன்:-

40 காடுறையு மாண்டுங் கரந்துரையு மாண்டும்போய்
நாடுறையும் பாண்டவர்நா ணண்ணியவா-வீடுறையிற்

பூவேந்து வாவிப் புனலேந்து நன்னாடா
கோவேந்தே [1]யாதுன் குறிப்பு, (௩அ)

*எ-து.- தருமபுத்திரனுக்கு நீ செய்த விவஸ்தைநாள் சமாத்தியாயிற்று; இனி உன் கருத்து என்கொலோ? எனப் பேசிப் புரோகிதன் கேட்ப, யாது சொன்னான் துரியோதனன்:-*

41. நற்றேர் விராட னகரத் திருந்தவற்குக்
குற்றேவல் செய்த [2]குறைந்தாரேன்-மற்றினியோர்
நன்னாடு மன்னவனு நாடுகபோய்க் காலத்தா
லென்னாடு கைவிடேன் யான், (௩௯)

*எனக்கேட்டு யாது சொன்னான் புரோகிதன்:-*

42. தன்றாதை தன்னுரிமை தானாள நானாள
வென்றாதை யென்னுரிமை யீயுமே-முன்றாதில்
வண்டிரங்குந் தாரான் மனமறிந்து மற்றிதனைக்
கண்டுரைத்து வாவென்றான் காண். (௪0)

*எ-து.- முன்னம் ஒட்டியபரிசே காடுறைந்து விராடபுரத்து வெளிப்பட்டிருந்தமையால், இனித் தந்தைக்குரியது தானாள, எந்தைக்குரியது யானாள விடுவதுவே இராசதருமமென்று உரைத்தான் தருமபுத்திரன் என்று புரோகிதன் சொல்லக்கேட்டு யாது சொன்னான் துரியோதனன்:-*

43. எந்தைக் குரிய தெனதே யிடுகவற்றாற்
றந்தைக் குரியதுமுன் றான்றேற்றான்முந்தி
வலனா ணெடுங்கொடிமேன் மாமுரசங் கொண்டா
னிகறாய மென்னோ வினி. (௪௧)

*இவ்வகை நீதிமார்க்க மழியப் பேசக்கேட்டுத் துரியோதனனை நோக்கி யாது சொன்னான் விதுரன்:-*

44. காடுறைந்த பின்னைக் கரந்துறைந்தா லுங்கட்கு
நாடுதரு வேனென்ற நாப்புரண்டாற்-கோடுதியே
கொள்ளா துலகங் குறுகா டிருநம்மை
நல்கார் பெருந்தக்கோர் நன்கு. (௪௨)

*எ-து.- 'பன்னிரண்டு சம்வற்சரம் காடுறைந்து ஓராண்டு கரந்துறைந்து பின்பு வந்து உங்கள் இராச்சியங் கொள்ளக்கடவீரென்று விவஸ்தை செய்த நாண்முதல், தருமபுத்திரன் தம்பிமாரோடும் போய்ப்*

---

(பா-ம்.) 1. என்னுன். 2. வெறுத்தாரேல்.

பலகாலங் காயக்கிலேசப்பட்டு வந்து தம்முரிமைவேண்டக் கொடாயாகில், உனக்கும் உன் மித்திர பாந்தவத்தார்க்கும் மரணமே நிச்சயங் கண்டாய்' என்று விதுரன் சொல்லக்கேட்டும் உடன்படாதிருந்த துரியோதனனையும் திருதராஷ்ரனையும் முகநோக்கி யாது சொன்னான் விதுரன்:-

45. அன்றுன் சிறுவன் றுணிந்தனவு மவ்வவனே
யின்றென்சொற் கோளாத வேழைமையு-நன்றென்றே
ஞாலக்கோ ளாயுள்ள நல்வேந்த ரெல்லோர்க்குங்
காலக்கோ ளாகக் கருது. (சரு)

எ-து.- 'துரியோதனன் முன்னம் துச்சாசனனை விடுத்துத் துரோபதியைக் கேசக்கிரகணஞ் செய்த ஞான்று தருமபுத்திரன் க்ஷமித்ததனை எதுவென்று கருதுகின்றீர்? அவர்க்கு இராச்சியங் கொடுத்து அகற்றுவீராகில், அன்று நீர் செய்த அநாசாரமெல்லாம் ஆசாரமாங் கண்டீர்' என்று விதுரன் சொல்லக்கேட்டும் உடன்படாதிருந்த திருதராஷ்டிரனையும் துரியோதனனையும் முகநோக்கி யாது சொன்னான் ஸ்ரீ பீஷ்மன்:-

46. ஏற்ற செருக்களத்தி லெல்லோமை யுங்குறித்த
கூற்ற மிரண்டினையுங் கோள்விலக்கி-யேற்றங்
குருநாடு பாகமே கொள்கிற்பார் கண்டா
யொருநாடு வேந்தர்க் குரை. (சச)

என்று பின்னுஞ் சொல்லும் ஸ்ரீ பீஷ்மன்:-

47. மண்டபத்துக் கூவுவித்து மாமடிதன் வஞ்சனையாற்
கொண்டதனிப் பாகங் கொடாயாகி-லண்டர்
குலவேந்தர் தாங்களே கொள்விப்பார் கண்டாய்
நலவேந்தர் வேந்தாதந் நாடு. (சரு)

எ-து.- 'வீமசேனன் தண்டாயுதம் பிடித்துக் காலாளாய்வந்து இழியுமாகிலும், அருச்சுனன் காண்டீவங் கைப்பிடித்து அடல் நெடுந்தேரேறிவரு மாகிலும்-தேவராசன் ஸ்ரீ வாசுதேவனை முன்னீடாகக் கொண்டு திரிலோகங்கள் கூடிவரினும், காலன் தானே பாசம் பிடித்துத் தும்பை சூடி வந்து நிற்குமாகிலும் மற்று அவரை யுத்தபூமியில் வெற்றிகொள்ள யாவர்க்கும் அரிதுகண்டாய்; ஆதலால், அவருடனே யெதிருமாகில் எரிசுடர் விளக்கில் விட்டில் பறந்தாற்போல வீமார்ச்சுனர் நோபாக்கினியில் இத்தனைவோமும் புக்கு அவியினல்லது மற்று அவரை யுத்தபூமியில் வெற்றிகொள்ள அரிது கண்டாய்' என்று ஸ்ரீ பீஷ்மன் சொல்லக் கேட்டு யாதுசொன்னான் கன்னன்:-

48. அழித்தழித்தென் கண்முகப்பே யர்ச்சுனன்ற னாண்மை
யிழித்தவரை நல்லாட்க ளென்றோய்-சுழித்தரங்கஞ்
சிந்தியோ டும்பழனச் சேணாடா பாண்டவர்க்கா
வந்தியோ கங்கை மகன். (சஅ)

*எ-து.- 'ஸ்ரீ பீஷ்மன் சூதமாகதரைப்போலப் பாண்டவரைத் துதித்து வாழ்கின்றான்;அபத்தமாயிற்றோர் சொல்லைப் பொறுத்துக் கொண்டு வாழ்கின்றோ மற்றல்ல; வேயொன்று எரிபரப்ப மூங்கிற்காடு கொளுத்தினாற் போல மற்றிவன் நிற்கவன்றோ நமக்கும் நம் மகாசேனைக்கும் விதனம் வருகிறது' என்று கன்னன் சொல்லக்கேட்டு மற்றிவனைக் கைகவித்துத் துரியோதனனை நோக்கி யாது சொன்னான் ஸ்ரீ பீஷ்மன்:-*

49. தையல் சுயம்வரத்துஞ் சாய்த்துன்னை யீர்த்தமரர்
பொய்கைக் கரைப்பிணித்த போதகத்து-மையா
நிரைதுரந்த வஞ்ஞான்று நின்னோடே யன்றோ
வரைதிரண்ட தோளாண் மகன். (சஎ)

*இவ்வகை அங்கராசன் அபசயங்களைக் கங்காசுதன் சொல்லக் கேட்டு மிகவும் வெய்துயிர்த்து யாது சொன்னான் கன்னன்:-*

50. மூதாதை தன்னை முகநோக்கித் தான்முனிந்து
போதாருஞ் சோலைப் புனனாட-னீதானும்/
வாயறியாய் மன்னர் வலியறியாய் வன்செருவிற்
போயறியா யென்னோ புகன்று. (சஅ)

*எ-து.- இவன் விருத்தனாகையாலும் யுத்தயோக்கிய னல்ல வாகையாலும் குருவசனமே பரிகாரமாகக் கொண்டு கணமல்லாதன கூறுகின்றா னென்று பின்னும் சொல்லுங் கன்னன்:-*

51. அத்திரங்க ளீந்தானை யம்பை பொருட்டாக
வித்தகத்தாற் பண்டொருகால் வென்றான்போ-லித்தனையே
கல்லாத புல்லறிவிற் காங்கேயன் றான்செய்த
வல்லாண்மை சொல்லுதிரோ மற்று. (சகூ)

*எ-து.- வித்தைகளும் திவ்வியாஸ்திரங்களும் வேண்டினார்க்கே தானம் பண்ணி நிராயுதனாயிருந்த பரசுராமனை அவன் கொடுத்த திவ்வியாஸ்திரத்தினால் (மற்று அவனை) வென்றதல்லது, மற்றிவனாற் செய்யப்பட்ட பராக்கிர மங்க ளுளவாகில் இன்னதென்று க்ஷத்திரியர்கள் சொல்லுவீராமின் என்று கன்னன் சொல்லக்கேட்டு யாதுசொன்னான் ஸ்ரீ பீஷ்மன்:-*

52. காளையர்கள் வாழ்வுங் கதித்தவர்கள் வில்வலியு
நாளை யறியலா நல்வேந்தே-வாளை

**மடைத்தலையிற் பாயும் வளநாடர் கோவே**
**முடித்தலைகண் முன்னுருளும் போது.** (ருo)

*இவ்வகை பேசிப் பாண்டவர்க்கு இராச்சியங் கொடாதளவில் மற்றவருடன் மகாயுத்தம் உண்டாதலான், அஞ்ஞான்று அருச்சுனன் தன் அணிநெடுந் தேரேறி ஆவநாழியிற் கைவைத்தவிடத்து அதிரதருள்ளாரையும் யுத்த வீரரானாரையும் அவ்விடத்துக் காண்பேம்; மூலைக்குளிருந்து ஆள்வலியும் பராக்கிரமங்களும் பேசவேண்டுமோ? என்று பின்னுஞ் சொல்லும் ஸ்ரீ பீஷ்மன்:-*

53. **சித்திரனார் வந்துன்றன் றிண்டோ ளுறப்பிணித்து**
**வித்தகவான் போகவே வில்விசய-னொத்தங்**
**கணிநெடுந்தே ரேறி யவனுடனே வென்றுன்**
**மிணியணிதோட் கட்டறுத்தான் வந்து.** (ருக)

*சித்திரசேனன் என்னுங் கந்தருவராசன் நின்னைக் கட்டிக் கொண்டு போகின்ற ஞான்று இந்தக் காளைமன்னரும் படைவேந்தரும் புற கிட்டோட, அப்பொழுது அருச்சுனன் ஒருவனும் வந்து சித்திரசேனனை வெற்றிகொண்டு, உன் பெருவரை யகலத்துக் கட்டறுத்து விடுவித்து மற்றந்தக் கயிறு கொண்டுபோய்த் தன் அடு சரங்களுக்குத் தூக்கிட்டு வைக்கானாதலால் மற்றதனைச் சென்று பாருங்க ளென்று, பின்னுஞ் சொல்லும் ஸ்ரீ பீஷ்மன்:-*

54. பாலூன்று நீணிரையும் பார்கொளப்போய்ப் பார்வேந்தீர்
வேனூன்றி நின்றீர் விராடனகர்-மாலூன்றும்
வாயம்பால் வாழ்விசயன் மற்றும்மை வென்றிலனோ
காயம்பா லாரக் கடிது. (ருஉ)

*அன்றியும்,*

55. சரந்துரந்து பார்த்தன் றனித்தேரை [1]யோட்டி
னிரந்தொருவர் நேர்வாரு மின்றிக்-குரங்கின்
கொடித்தேரைக் காணக் குழாஞ்சிதறி யோடும்
படித்தேரை யன்றோ படை. (ருங)

*என்று பின்னுஞ் சொல்லும் ஸ்ரீ பீஷ்மன்:-*

56. நாடறிய நாட்டார் சபையகத்தே பாஞ்சாலி
நாடறியத் தூசுரிந்த நாசகத்தா-னாடறியத்

---

*(பா-ம்.) 1. ஓட்டி நிறைந்து.*

தன்னெவ்வந் தீர்க்கத் தழற்பூங் குழல்விரித்த
பெண்ணேயவ் வன்ன மகள். (ருச)

*அன்றியும்,*

57. கங்கை தரித்தா னுடன்மலைந்த கட்டாண்மை
யங்கவன்ற னெஞ்சகமே யாங்கறியும்-பொங்கி
யரவானி லேறி யசுரரைமுன் கொன்ற
செருபூமி காணீர் செயித்து. (ருரு)

*இவ்வகை கன்னனையும் மற்றிருந்த அரசரையும் நோக்கி அபசயங் கூறிப் பின்னும் நீதிமார்க்கம் வழுவாமல் துரியோதனனை நோக்கி யாது சொன்னான் ஸ்ரீ பீஷ்மன்:-*

58. பாண்டவர்கள் காடுறைந்து பார்வேண்டப் பார்வேந்தே
யீண்ட னவர்க்குரிமை யீயாயேன்-மூண்டவர்கள்
தெய்வமே பற்றாச் செருவென் றுரிமையினான்
மெய்வழியாகக் கொள்வார் விரைந்து. (ருசா)

*இவ்வகை சொன்ன ஸ்ரீ பீஷ்மனையும், அங்கிருந்த க்ஷத்திரியர்கள் சமூகத்தையும் நோக்கி நகைசெய்து துரியோதனன் சொல்லுவான்:-*

*'உன்னாலும், துரோணாசாரியனாலும், விதுரனாலும், கன்னனாலும் பரராஷ்டிரத்துச் சர்வ க்ஷத்திரியாலும் மற்று முள்ள இராச குமாரராலும் எண்ணிறந்த [1]கச துரங்க பலத்தோர்டுங் காக்கப்படுவேனை வீமார்ச்சுனராலே சாதிக்கப்படுமென்றாய்; அதனால் பாண்டவர்க்கே பக்ஷபாதஞ் சொன்னாய் மூதாதை' என முனிந்து (துரியோதனன்) உரைப்பக் கேட்டும் யாது சொன்னான் ஸ்ரீ பீஷ்மன்:-*

59. வலிமிக்க வாள்வீமன் வாளமரிற் சீறிச்
சலிமிக்க தண்டேந்திச் சார்ந்தாற்-புலிபுக்க
வாடு படுவது போனாம் படுவமுன்ன
நாடு விடுவதே நன்று. (ருஎ)

*என்றிவ்வகை யுரைத்து நீதிமார்க்கம் வழுவப் பேசுகின்றானை விட்டு நீங்கித் தன் கோயினோக்கிப் போனான் ஸ்ரீ பீஷ்மன்,. இப்பால், மற்றங்கிருந்த க்ஷத்திரியரில், துரோணாசாரியன் துரியோதனனை நோக்கி யாது சொன்னான்:-*

60. உன்னுடைய பாக முனக்கே நிலையாக
வன்னவர்கள் பாக மவர்க்காகப்-பன்னலையேன்

---

*(பா-ம்.) 1. சதுரங்க.*

மண்ணோடு கைவிட்டு வாள்வீமன் றேள்வலியால்
விண்ணொடு வாழ்வீர் விரைந்து. (ருஅ)

*இவ்வகை நீதிமார்க்கம் பேசிய துரோணாசாரியனைப் பேசுவதொன்றின்றி யிருந்த பார்வேந்தனை நோக்கி அவ்விடத்திருந்த கிருபாசாரியன் யாது சொன்னான்:-*

61. தம்பியர்க டற்சூழத் தார்வேந்தர் போற்றிசைப்ப
வம்பவிழ்தார் [1]மன்னா மகிழ்ந்திருந்தாய்-வெம்பியிட
விந்நாடு கைவிட்டிங் கேதிலரா லேவுண்டு
பொன்னொடு வாழ்வீர் புகுந்து. (ருகூ)

*அன்றியும்,*

62. சொன்ன சவுதாயஞ் சோராமற் றூயவனே
மன்னவர்கள் பாகம் வழங்குதியே-லொன்னலரை
வென்றாயு மாதி விறல்வீமன் றோள்வலியைக்
கொன்றாயு மாதி கொடு. (சுo)

*இவ்வகை கிருபாசாரியன் சொல்லக் கேட்டு முடிதுளக்கித் தானும் இருந்த் ஆசனம் விட்டு நீங்கி இராசசமூகத்தார்க்கு விடைகொடுத்து, மற்று ஆங்குநின்ற பாண்டவதூதன் புரோகிதனுக்கும் வெவ்வுரையால் விடை கொடுத்துத் தன்கோயில் புக்கான் இராசராசன் துரியோதன னென்றவாறு, இப்பால்,-*

63. மன்றலந்தார் மன்னவனு மாக்கோயிற் புக்கதற்பின்
சென்றரசு வேண்டுந் திருமுனியு-நன்றிவர்தங்
கோத்தரும மென்னாக் குருமணிசேர் பூணாரு
மாத்தருமன் பாலணைந்தான் மற்று. (சுக)

*துரியோதனன் உடன்படாம லுரைத்த வெகுவசனமுங் கேட்டுப் புரோகிதனு மீண்டு போந்து உபலாவியநகரம் புகுந்து தருமபுத்திரனைக் கண்டு யாது சொன்னான்: புரோகிதன்-*

64. வேந்தன் மறுப்ப விதுர னுரைத்தனவுங்
காந்தாரி கங்கைமகன் கட்டுரையுஞ்-சேர்ந்த
வடிமலர்க்கா லங்கர்கோன் வாக்கு முரைத்தான்
முடிமலர்த்தார் வேந்தற்கு முன். (சுஉ)

*இவ்வகை துரியோதனனிடையிற் போய் இராச்சியம் வேண்டினவாறும், அவன் பேசிய வெகுவசனமும், கன்னன்பேசிய*

---

*(பா-ம்.) 1. மார்ப.*

கட்டாண்மையும், பீஷ்மர் துரோணர் விதுரர் உரைத்த நீதிமார்க்கமும் வழுவாமல் எல்லாம் உரைத்து நின்ற புரோகிதனை நோக்கி யாது சொன்னான் தருமபுத்திரன்:-

65. மன்னன் மறுத்தனவு மற்றோ ருரைத்தனவுங்
கன்ன னுரைத்தனவுங் கட்டுரைத்து-மன்னவனு
நிந்தித்துச் சொன்ன நெறியெல்லா மாயனுக்குச்
சந்தித் துரைத்துவா தான்.. (சுரு)

எ-து.- துரியோதனனிடையிற் பேசிய நீதிமார்க்கங்களும், அதனை மறுத்துரைத்த மன்னருடைய பல வாக்கியங்களும் பீஷ்மர் துரோணர் விதுரர் உரைத்த நீதிமார்க்கங்களும், அவ்விடத்துக் கன்னன் பேசிய கட்டாண்மையும் வழுவாமல், யாவரும் அறியாதுபோய்ஸ்ரீமத் துவாரகாபதி புகுந்து தேவதேவன் ஸ்ரீவாசுதேவனுக்கு விண்ணப்பஞ்செய்து மற்று அவன் அருளினபடி கொண்டு ஈண்டு வருவாயாக வென்று தருமபுத்திரன் விடைகொடுப்ப விடைகொண்டு யாது செய்தான் புரோகிதன்:-

66. தூய புரோகிதனும் போந்துதுவ ராபதியின்
மாயன் மலரடியில் வந்திறைஞ்சித்-தாயங்
கொடேனென்றான் வேந்தனக் கோவேந்த ரெல்லா
மடாதென்றா ராழியா யாங்கு. (சுசு)

புரோகிதனும் போய் இரண்டு திவசம் வழியிற்றங்கி மூன்றாநாள் ஸ்ரீமத் துவாரகாபதி புகுந்து ஸ்ரீவாசுதேவனைக் கண்டு திருவடி தொழுது துரியோதனனிடையிற் றருமபுத்திரன் இராச்சியம் வேண்டி விடுத்தவாறும், மற்று அவன் மறுத்தவாறும், ஸ்ரீபீஷ்மர் துரோணர் விதுரர் உரைத்த நீதிமார்க்கமும் மற்றும் உற்ற வார்த்தையெல்லாம் விண்ணப்பஞ் செய்து நின்ற புரோகிதனை நோக்கி யாதருளிச் செய்தான் ஸ்ரீ வாசுதேவன்:-

67. காடுறைந்த பாண்டவர்தங் கட்டுரிமை வேண்டிவிட
நாடுவிடே னென்றோ னலவேந்த-னீடுமினி
யர்ச்சுனனைக் கொண்டாங் கரசு தரக்கடவோ
மற்றுனக்கு வேண்டா மதி. (சுஎ)

எ-து.- முன்னம் பேசிய விவஸ்தை வழுவாமற் காடுறைந்து வந்து தன் உரிமை வேண்டினாற் கொடானாகில், தருமபுத்திரன் சாபல்லியத்தாலும், உங்கள் உரிமையாலும் இராச்சியமுற்றும் நீங்களே கொள்ளத் தக்கன சாமர்த்திய முண்டா மாதலால், பாதிநாடு தரவொட்டுமோ விவனி டையிற் பஞ்சபூதம்? எனப் பேசி, அதற்குக் காரணமாக அருச்சுனனை என் பக்கல் வரவிடுவாயாக வென்று பின்னும் யாதருளிச்செய்தான் ஸ்ரீ வாசுதேவன்:-

68. வண்டுவரை மன்னவனா [1]மாயவனைத் தானணைந்து
கண்டு வணங்கக் களிகூர்ந்து -தண்டார்
விரவித்தேன் மொய்க்கும் விசயனையென் பானீ
வருவிக்க வேகென்றான் மால். (சாசு)

*என்று இவ்வகை யருளிச்செய்து, பின்னும் யாதருளிச் செய்தான் ஸ்ரீ வாசுதேவன்:-*

*அகவல்*

69. பன்மணித் துத்திப் பகுவாய் மன்னிய
பொன்னணி நெடுமுடிப் பொருந்தேர் மன்னவன்
வஞ்சக மில்லா வனப்புறும் வாய்மையர்
பஞ்சவர் தமக்குப் பார்கொடா தென்னையுங்.
*காதிக் கடுத்து வருகின்றா னாதலிற்*
*பீடார் கமலப் பெரியோ னருளினால்*
*வாடாக் கற்பின் வலியொடு வந்த*
*விருபது தடக்கை யொருபது முடியோ*
*னாழ்கடல் சூழ்ந்த வணிமதி ளிலங்கையைச்*
*சீர்கலி மாநகர்ச் செறிபொழி லகத்துத்*
*தோரணப் போரிடை யதிர்த்துப் பின்னை*
*நெருப்பு வாலா னிமிர்வாய் சிவப்ப*
*வெரிகொளுத் தியற்றியவ் விலங்கையைச் சட்ட*
*வீரக் குரங்குதேர் மேலுயர்த்த காளையைக்*
கோல மொவ்வாக் குருகுலக் குரிசிலை
*யூன்கொண் மொய்ம்பி னொன்னார் முடிகளை*
*யரன்கொல் வாளி யல்குமாண் மையனைக்*
*காண்டிபத் தடக்கைப் பூணியன் மார்பினல்*
*வேந்தனை யழைத்து விரைகென விடுத்தனன்*
*பாந்தளிற் பாற்கடற் பள்ளிகொண் டானே.* (சாஎ)

70. முன்ன மறையவனான் மூவா முடியானைச்
சொன்ன வரவுடனே சோர்வின்றி-யின்னேபோய்ப்
பார்த்தனையென் பக்கற் பதறிவரச் சொல்லென்றா
னார்த்தரவிற் பள்ளிகொண்டா னாங்கு. (சாஅ)

*இவ்வகை ஸ்ரீ வாசுதேவனும் புரோகிதனுக் கருளிச்செய்து விடை கொடுப்ப விடைகொண்டு போந்து உபலாவிய நகரம் புக்குத்*

---

*(பா—ம்.) 1. மாதவனை.*

தருமபுத்திரனைக் கண்டான் புரோகிதனென்றவாறு. இப்பால் துரியோதனன் நிலைமை யாதாயிற்றோ வெனில்:-

### தௌமியன்றூது முற்றும்

## ஸ்ரீ வாசுதேவனைப் படைத்துணை யழைத்தது

71. கஞ்சனைக் காய்ந்த கடல்வண்ணன் பாற்சொன்று
வெஞ்சமத்து வேண்டுந் துணையாகச்-செஞ்சொலுடன்
சேராத பஞ்சவர்கள் சென்றிறைஞ்சு முன்னமே
சீராரு மன்னவனே செப்பு. (கு)

எ-து.- துரியோதனனை நோக்கித் திருதராஷ்டிரன் சொல்லுவான்:- தருமபுத்திரன் முன்னம் போய்த் தங்கள் தீதின்மையும் வெளிப்பாடு முரைத்து ஸ்ரீ வாசுதேவனைத் தங்களுக்குத் துணையாக்கிக் கொள்வதன் முன்னம் நீ போய் ஸ்ரீ வாசுதேவனைக் கண்டு உற்றவார்த்தை யுரைத்து, உனக்கு மற்றவனைப் படைத்துணை செய்வானாக வேண்டிக்கொண்டு வருவாயாக என்று சொல்லக் கேட்டு அளவளாவி இது ஒக்குமெனத் துணிந்து யாது செய்தான் துரியோதனன்:-

72. தாமரையான் கோனைத் தனக்குத் துணைவேண்டிக்
கோமறுகக் கோணாக மேந்தினான்-மாமகரம்
வண்டுவரைக் கேதவழ மாலோத மூடாடுந்
தண்டுவரைக் கேகினான் றான். (உ)

எ-து.- ஆதிமூர்த்தி அநந்தசயனன் மருவி யுறையும் ஸ்ரீமத் துவாரகாபதி நோக்கிப் போயினான் துரியோதனன். அது முன்னறிந்த, தன் கோயில் வாயில் காக்கும் துவாரபாலரை யழைத்துவிட்டு யாதருளிச் செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-

73. மின்னு மணி [1]நாக வெல்கொடிமேற் றானுயர்த்த
பொன்னங் கழற்காற் புரவலனை-முன்னே
வரவுணர்த்தா தென்பால் வரவிடுமி னென்றாள்
கரவுசெய்யுங் கையான் கலந்து. (ந)

(எனக்கேட்டு) துரியோதனன் வந்தால் என்னை யறிவியாமல் வரவிடுவீராமின் என்று துவாரபாலர்க் கருளிச்செய்து பின்னை யாது செய்தான் ஸ்ரீ வாசுதேவன்:-

---

(பா-ம்.) 1. நாகம் வெல்கொடி

74. சீரணிந்த செம்பொற்கா னாட்டித் திகழ்ந்திலங்கும்
பேரமளி தன்னிற் பிறழ்ந்திலங்கப்-போரியலும்
வெஞ்சினமால் யானை விசயன் வருமளவும்
வஞ்சனையாற் கண்வளர்ந்தான் மால். (ச)

*அன்றியும்,*

75. வண்டுமரை மன்னன் மதுரேச னாகவணை
யொண்டியொளி ராசனத்தி னொன்றன்மே-லண்டர்தொழ
மின்னனைய நுண்ணிடையார் மெல்லடிக டாம்வருட
மன்னவனுங் கண்டுயின்றான் மற்று. (ரு)

*இவ்வகை ஒரு தனி மண்டபமெய்தித் துரியோதனன் வரவு கேட்டு, அருச்சுனனையும் அழைத்துவிட்டுத் திருமுடிப் பக்கத்தே ஒருசெம்பொற் பீடமும் இடுவித்துத் தானும் பள்ளிகொண்டருளப் புக்கான் தேவதேவன் ஸ்ரீவாசுதேவ னென்றவாறு. அவ்விடத்துத் துரியோதனனும் வந்தெய்தி மணி நெடுங்கோயிற் புகுந்து, பள்ளிகொண்டருளாநின்ற பரமயோகியைக் கண்டளவளாவ யாது செய்தான் துரியோதனன்-*

76. அஞ்சன வண்ண னறிந்து துயிலுகக்க
வஞ்சனையோ னான மணிமுடியா-னஞ்ச
வெழுந்தவிள நாக மெழிற்கொடிமேற் கொண்டான்
செழுந்தவிசின் மேலிருந்தான் சென்று. (சூ)

*எ-து.- பள்ளிகொண்டருளா நின்ற பரமபுருஷ னபிப்பிராய மொன்றுங் கருதாது தன் ராசமோகத்துடன் வந்து, சக்கரபாணி தாமோதரன் திருமுடிப் பக்கத்திட்ட செம்பொற் பீடத் திருந்தான் இராசராசன் துரியோதன னென்றவாறு. இப்பால்-ஸ்ரீவாசுதேவனை முன்னம் விடைகொண்டு போன புரோகிதனும் போய்த் தருமபுத்திரனைக் கண்டு உற்றவார்த்தை யெல்லா முரைத்துப் பின்னும் அருச்சுனனை நோக்கி யாது சொன்னான் புரோகிதன்-*

77. பாராளும் வேந்தன் பழிபாவ மென்றிவையொன்
றோரா துரைப்பானு முற்றெழுந்தான்-சீராரும்
பாண்டவர்தங் கோவேகேள் பாம்பணையான் றானழைத்தா
னீண்டனுடன் போதா யிசைந்து. (எ)

*எனக்கேட்டு அருச்சுனனும் மகாப்பிரிய மெய்திக் கதுமெனத் தரும புத்திரனைப் பணிந்து யாது விண்ணப்பஞ்செய்தான் அருச்சுனன்-*

78. என்ன குறையுடையே மெற்றைக்கு மெம்பெருமான்
றுன்னுந் துணைவனுமாய்த் தோழனுமாய்-முன்னிற்ப

தெல்லா மருளி யிடர்தீர்க்க வல்லான்பாற்
செல்லவோ வென்றான் றெளிந்து. (அ)

எ-து.- பத்தவற்சலன் ஸ்ரீவாசுதேவ னருளிப்பாடு கேட்க வேண்டாவா? என்று அருச்சுனன் விண்ணப்பஞ்செய்யக் கேட்டு யாது சொன்னான் தருமபுத்திரன்:-

79. எம்பெருமான் கேட்டா லிகல்வேந்த ரெண்ணமெலாந்
தம்பிநீ சென்றாற் றகவுரைத்து-வெம்பியிடில்
விண்ணவர்தங் கோமானை வெற்றித் துணையாக
[1]மண்ணவர்கண் முன்னே மதி. (கூ)

எ-து.- ஸ்ரீ வாசுதேவன் பக்கல் போனால், அவன் திருவுளமறிந்து உனக்குத் துணை செய்வானாக வேண்டிக்கொண்டு, மற்று அவன் முன் வெகு வசன முரையாடாதிருந்து மண்கொடா மறவேந்தன் கருத்து முற்று மறிந்து, மற்றவ்விடத்து அத் துரியோதனன் போராளக் கருதிப் புகன்றுரைக்குமாகிற் சீராரு மாண்மையால் ஸ்ரீவாசுதேவனை உனக்குப் படைத்துணை செய்வானாக வேண்டிக்கொண்டு, மற்று அவன் பிரசாத பலத்துடன் வருவாயாகென்று பேசித் தருமபுத்திரன் விடை கொடுப்ப விடை கொண்டு போய் வீமசேனனைக் கண்டு யாது விண்ணப்பஞ்செய்தான் அருச்சுனன்:-

80. கூராழி தானுடைய கோமா னமக்கிந்தப்
பேராழி வையம் பெரிதளிக்கச்-சீராருந்
தூதுவரக் காட்டினான் [2]செல்லுமதோ வென்றுரைத்தான்
போதலர்தார் வேந்தன் புகழ்ந்து. (கo)

எனக்கேட்டு யாது சொன்னான் வீமசேனன்:-

81. வில்லா லிலங்கை விறல்வேந்தை வேரறுத்த
வல்லாளன் முன்னே மறமுரைக்கி-லெல்லார்முன்
பாராளும் வேந்தனுடன் பாரதப்போர் யாஞ்செய்யும்
பேராண்மை நீகுறித்துப் பேசு. (கக)

எ-து.- ஸ்ரீவாசுதேவன் பக்கற் போனான் துரியோதன னிருக்குமாகில், அவ்விடத்து இராச்சியங் கொடாது ஆள்வலியும் பராக்கிரமங்களும் பேசிப் போர்செய்யக் கருதுமாகில், ஸ்ரீவாசுதேவன் கேட்ப மற்று அவன் முன் யான் சமரபூமியில் செய்த பிரதிக்கினைகளையும் ஒழியாம லுரைத்துக் கதுமென வருவாயாகென்று

(பா-ம்.) 1. மன்னவர். 2. சொல்லுமதோ.

*வீமசேனன் விடை கொடுப்ப, விடைகொண்டு யாதுசெய்தான் அருச்சுனன்:-*

82. நாரணன்றன் பரத நினைந்தெழுந்து நல்வேந்தன்
காரணங்க ளாகப்போர் கண்டுகப்ப-போரணிந்த
வெஞ்சினமால் யானை விசயனுந்தான் போந்தந்த
மஞ்சனையா னூர்புகுந்தான் வந்து. (௯௨)

*இவ்வகை அர்ச்சுனன் உபலாவிய நகரத்தினின்று புறப்பட்டு ஸ்ரீ வாசு தேவன் பாத பதுமங்களை நினைந்துகொண்டு கடும் மலையுங் கடந்து ஸ்ரீமத் துவாரகாபதி புகுந்து ஸ்ரீ வாசுதேவன் கோயில்வாயிற்கட்கு ஒழிந்து யாது செய்தான் அருச்சுனன்-*

83. தொக்கிலங்கு துத்திச் சுடர்நாக மேந்திநான்
புக்கிருந்த வெல்லைக்கண் புக்கான்போய்-மிக்குயர்ந்த
வெம்மாப் பரிபூண்ட வெல்லுந்தேர் முன்னாலோர்
திண்மாக் குரங்குயர்த்த சேய். (௯௩)

*இவ்வகை ஸ்ரீவாசுதேவன் கோயிலுட் புகுந்து பள்ளிகொண்டருளா நின்ற பத்தவற்சலன் ஸ்ரீவாசுதேவனைக் கண்டு களிகூர்ந்து கண்களாலும் மனத்தாலும் ஸ்ரீபாதத்தைத் தியானித்துக்கொண்டு ஸ்ரீபாதத்தருகிருந்தான் அருச்சுனனாகக் கருதுவது. அப்பொழுது,-*

84. கள்ளமரு வீசுங் கழற்றா மரைமலர்க்கண்
வள்ளல் வரவறியக் காட்டிற்றே-கள்ளத்
துயிலெழுந்தான் வென்றி தொடர்ந்துலக முண்டா
னயிலெழுந்த வாழியா னாங்கு. (௯௪)

*அன்றியும்,*

85. பொய்யுறக்கங் கொண்டபிரான் போர்விசயன் றன்னுடைய
செய்ய திருவடிகள் சேர்தலுமே-மெய்யடிமை
தெள்ளியுணர்ந் தாரவர்கள் சிந்தையுள்ளே வீற்றிருப்பான்
பள்ளியுணர்ந் தானவனைப் பார்த்து. (௯௫)

*எ-து.- அருச்சுனன் வந்து -வாதத்தருகிருந்தமையும் மற்று அவன் மனக்கருத்து மறிந்தருளிச் சிறிதுபொழுது கழிந்தபின்பு பள்ளி யுணர்ந்து பார்த்தருளுமளவில், முன்னிருந்த அருச்சுனனைக் காணாதுபோலக் கண்டருளிப் புரிந்து பார்த்துத் துரியோதனனையுங் கண்டு வினவி, மகாப்பிரியஸ்தனாய்க் கதுமென வெழுந்தருளியிருந்து யாதருளிச் செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-*

86. செருவீரர்-யானைத் திருநெடுந்தோண் மன்ன
ரிருவீரு மெப்பொழுது வந்தீ-ரிருவீரு
மென்போந்த வாறென் றுரைத்தா னெழுசுடரின்
மின்போந்த வாழியான் மீட்டு. (கசு)

*எ-து.- நீங்கள் இருவரும் எப்பொழுது வந்தீர் என்றும், உங்களில் நீங்கள் விபரீதம் பண்ணாமல் என்பக்கல் வந்தது எனக்கு மிகவும் பிரியஞ் சொல்லாநின்றது என்றும், இனி என்பக்கல் வந்ததென்கொலோ என்றும் இவ்வகை ஸ்ரீவாசுதேவன் அருளிச்செய்யக் கேட்டு விண்ணப்பஞ் செய்யப் புகுந்த அருச்சுனனை விலக்கி 'முன்னம் வந்தேன் யான்' எனப் பேசி, யாது சொன்னான் துரியோதனன்:-*

87. என்னீ வினவுதியே யெம்வரவு நீயறியச்
சொன்னாலுஞ் சொல்லிழப்ப தாகாதே-யுன்னைச்
செருமுனைக்கு வேண்டித் திருமாலே யென்றான்
பொருமுனைக்கு வேண்டிப் புகுந்து. (கஎ)

*என்றிவ்வகை சொல்லிப் பின்னும் யாதுசொன்னான் துரியோதனன்:-*

88. பாராளு மாசையாற் பாண்டவர்க ளெம்மோடு
போராளு மாறே புரிந்தார்கள்-[1]சீராளுஞ்
செங்கமல மங்கை திருமாலே [2]நீயெமக்காய்ப்
பொங்கமர்செய் யென்றான் புரிந்து. (கஅ)

*அன்றியும்,*

89. முன்னே புகுந்தேன் முகில்வண்ணா வென்குறையுஞ்
சொன்னே னினி [3]யோர் சொலவுண்டோ-வென்னொடு
போர்புரிந்த பாண்டவர்கள் போராழிப் போர்க்களத்தென்
றேர்புரிந்து நில்லென்றான் சென்று. (கசு)

*எ-து.- முன்னமே யான் வந்தமையால் எனக்கு யுத்தமண்டலத்துள் தேராளாகிப் படைத்துணை செய்யவேணு மென்று துரியோதனன் சொல்லக் கேட்டு மற்றவனைக் கைகவித்து அருச்சுனனை வினைவுதலில், யாது விண்ணப்பஞ் செய்தான் அருச்சுனன்:-*

90. என்வரவு நீயறைதி யென்றாலு நீயதனை
முன்னுணர்தி கண்டாய் முகில்வண்ணா-நின்னைச்
செருவிற் படைத் [4]துணையா வேண்டியான் வந்தேன்
றிருவிற்கு நாயகனே செப்பு. (உ0)

*(பா-ம்.) 1. சீராரும் 2. நீயெமக்காப். 3. யான்சொல 4. துணையே.*

*என்று பின்னும்யாது விண்ணப்பஞ் செய்தான் அருச்சுனன்:-*

91. னாக்கினாற் சொன்னான் மலரடிக்கீழ் யான்பணிந்து
நோக்கினாற் சொன்னவுரை நொய்தாமோ-தாக்கமருட்
போர்செய்வாய் நீயெமக்காய்ப் பூமகடன் னாயகனே
யார்செய்வார் மற்றிங் கமர். (௯௧)

*எ-து.- சகுனி வல்ல மாயச்சூதினால் வஞ்சித்துக் கொண்ட மண்ணுரி மையிற் பாதி தாராமல் வல்லபம் பேசி மற்றவர் போராளக் கருதுவாராகில், நின்னுடைய பிரசாதபலம் உண்டாக எனக்கு நீ படைத்துணை செய்யவேணுமென்ற அருச்சுனனைக் கைகவித்து, துரியோதனனை நோக்கி யாதருளிச் செய்தான் ஸ்ரீ வாசுதேவன்:-*

92. முன்னம் விசயனையான் கண்டனானா னின்னிருக்கை
பின்னை யறிந்தனனாற் பெய்கழலாய்-முன்னமே
நோக்கினாற் றன்கருமஞ் சொன்னா னதன்பின்னை
வாக்கினாற் சொன்னாய்நீ மற்று. (௯௨)

*எ-து.- இவன் பின்பு வந்தானாகிலும் முன்னம் என்னாற் காணப்பட்டது இவனை யாதலால், அருச்சுனனுக்கு யான் படைத்துணை செய்ய வேண்டியிருக்கும்; நீயும் மற்றென்னால் வேண்டப்பட்டு என்னை வேண்டிக் கொள்வாய்; இது யோக்கியம் எனக்கேட்டுச் சிறிது வியாகுலப்பட்டுப் பின்னை யாது வேண்டிக்கொண்டான் துரியோதனன்:-*

93. யானு மிவனு மெதிரம்பு கோத்ததெங்கள்
சேனை கலந்த செருக்களத்து-மானக்
குடையேந்து [1]வேந்தர் குலவேந்தே கொற்றப்
படையேந்த லென்றான் [2]பரிந்து.. (௯௩)

*எ-து.- அருச்சுனனுக்குப் படைத்துணை செய்வையாகில் இரண்டு திறத்தோர்க்கும் யுத்தம் விளைந்தவிடத்து நின்னுடைய திவ்வியாயுதம் பிடியாதொழிவையாகவென்றும், நின்னை யொழிந்தா ரனைவரும் எனக்குப் படைத்துணை விடுவிப்பாயாக வென்றும் வேண்டிக்கொண்ட துரியோதனனுக்கு நினைவின்படி கொடுப்பானாக உடன்பட்டுப் பின்னை அருச்சுனனை நோக்கி யாதருளிச்செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-*

94. கூருகிரும் வாளெயிறுந் தானிழந்த கோளரிபோ
லாரமரு ளாயுதமொன் [3]றின்றியே-போர்மருவிப்
பொன்செய்த மாவிலங்கற் போர்விசயா யானுனக்கின்
றென்செய்வேன் சொல்லா யினி. (௯௪)

*(பா-ம்.) 1. வேந்தர்க்கு வேந்தே நீ கொற்றப். 2. பணிந்து 3. அன்றியே.*

*எ-து.- உகிரும் எயிறும் இழந்த சிங்கம்போல, அதிபல பராக்கிரமங்களுடைய யுத்தவீரர் முன்பு சமர பூமியில் ஆயுதம் பிடியாது நிராயுதனாகி, என் கண்ணே போன்ற பதினாறாயிரம் நாராயண கோபாலரையும் மற்று அவற்குப் படைத்துணையாகக் கொடுத்து, ஸ்வயமே நின்று உனக்கு யான் செய்யுஞ்சையமுண்டோ? என்று தேவதேவன் ஸ்ரீவாசுதேவன் அருளிச்செய்யக் கேட்டு, யாது விண்ணப்பஞ்செய்தான் அருச்சுனன்:-*

95. இமைப்பளவின் மூன்றுலகுங் கொள்வதென் கையி
லமைத்தனுவின் சந்தமையுங் கண்டாய்-சமைத்த
திருநெடுந்தேர் பூட்டழித்த சேவடியாய் [1]நீயென்
பெருநெடுந்தே ரூரப் பெறின். (௨௫)

*அன்றியும்,*

96. உறுதேர்மே லுன்னை யுளனாகி நிற்பப்
பெறுவனேல் யானும் பெறுவேன்-மறுசூது
விஞ்சவே தான்பொருத வேல்வேந்தர் தாமறிய
வஞ்சனையா லன்றிழந்த மண். (௨௬)

*எ-து.- எம்பெருமான் எனக்குச் சாரதியாகி யென் றேர்மேல் எழுந்தருளி நிற்குமாகில், இமைப்பளவிற் சத்துரு சய முடித்துத் திரிலோக்கியங்களுங் கொள்வதற்கு என் கையிலுண்டாகிய காண்டீவமே அமையுமென்று அருச்சுனன் சொன்ன பிரமாணங் கேட்டு யாதருளிச் செய்தான் ஸ்ரீ வாசுதேவன்:-*

97. முப்பொழுதாய் ஞான முனிவர்தந் நாயகமா
யெப்பொழுதுங் கோயிலிடங் கொண்டான்போ-யிப்பொழுதே
தேர்கொண்டு வாவென்று சிந்தித் துடன்பட்டான்
போர்கொண்ட [2]வேந்தற்கப் போது.. (௨௭)

*எ-து.- அருச்சுனன் பெரிய பரிவுந் துணிவுங் கண்டு மற்றந்த அருச்சுனனுக்கே சாரதியாக மற்றவன் றேர் கொண்டுவரச் சொல்லித் தேர் தொட்டு வேறு மொழி பேசிப் பின்னைத் துரியோதனனை நோக்கி யாத ருளிச்செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-*

98. என்னைப் படைத்துணைமை [3]வேண்டிப் பெறாவிட்டான்
மன்னு புகழுக்கோர் மாசுண்டே-யுன்னி
யொருபதினா றாயிரவ ரென்மக்க டம்மைப்
பொருபடையாத் தந்தேன் புகழ்ந்து. (௨௮)

---

*(பா-ம்.) 1. என்றன். 2. வேந்தர்க்கப். 3. வேண்டப்.*

*எ—து.— என்னைப் படைத்துணை வேண்டி இருவரும் உடன் வந்து ஒருவர் பெறாது போமது கேட்டார்க்குத் தன்மமல்ல வென்றும், சாதுசனங்கள் பிரமாணியா ரென்றும், பக்ஷபாதஞ் செய்தன னென்றும் கருதப்படுமாதலால், யான் தரும் படைத்துணையைக் கொண்டு போவாயாக என்ன, துரியோதனனும் உடன்பட்டமையால், அவ்விடத்து அண்டர்மாமுனி வழி முதலாகிய எண்டிசை நிறைந்த வருமரபில் விருஷ்ணிவீர ருள்ளிட்ட பதினாறாயிரம் நாராயண கோபாலரையும் அருளிப்பாடென, அவரும் வந்து அடிபணிந்து சேவைபண்ண, கண்டு மன மகிழ்ந்து மற்று அவரைத் துரியோதனனுக்குக் காட்டி யாதருளிச்செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-*

**99. திருடக் கொடிகொண்ட திண்புயத்தோன் செய்ய**
**கருடக் கொடிகாவ லாக்கி—மருடீ**
**ரடற்றுணையா மன்னவரோ டாடமரு ணீர்போய்ப்**
**படைத்துணையா கென்றான் பரிந்து.** **(௨௯)**

*எ—து.— என் கண்ணே போன்றவர் பதினாறாயிரவரையும் எனக்குக் கைம்மாறாக உனக்குத் துணைசெய்வதாகத் தந்தேன் என்று கொடுத்து, அப்பதினாறாயிரவர்க்கும் தக்க வரம் பிரசாதித்துக் கருடத்துவசமுஞ் சந்திர சாமரமு மளித்து மற்றும் வேண்டத்தக்கனவுங் கொடுத்துப் பின்னை யாது செய்தான் ஸ்ரீ வாசுதேவன்:-*

**100. ஒப்பரிய கோபால ரோர்பதினா றாயிரவர்**
**சொற்பெரிய வுற்றார் கொடிசுழற்ற—வப்போர்ப்**
**படைகொடுத்துப் பாராளும் பாரதற்கு மாங்கே**
**விடைகொடுத்து வீற்றிருந்தான் வேறு.** **(௩௦)**

*இவ்வகை இராசராசன் துரியோதனனுக்கும், மற்று அவனுக்குப் படைத்துணையான பதினாறாயிரவர் நாராயண கோபாலருக்கும், மற்று அவருள்ளிட்ட சர்வ பரிகரத்தார்க்கும் விடைகொடுப்ப, சதுரங்கபலத்தோடும் ஓரக்குரோணி படை பெற்றுப் போய், யாது செய்தான் துரியோதனன்:-*

**101. பார்மன்னன் மீண்டு பலதேவ னைக்கண்டு**
**கார்வண்ணன் செய்தியெல்லாங் கட்டுரைத்து—போரிற்**
**புறங்கொடா மன்னரொடும் போயினா னாங்கே**
**யறங்கொடா வேந்த னவன்.** **(௩௧)**

*இவ்வகை துரியோதனனும் போய் ஸ்ரீபலதேவனைக் கண்டு மற்று அவனுக்கு உற்றதுரைத்து, வ்ருஷ்ணிவீரன் கிருதவர்மாவினையும் ஓர் அக்குரோணி பலத்தினோடும் ஆங்கு அவனாற் படைத்துணை பெற்றுப் போய் அஸ்திநபுரம் புகுந்து திருதராஷ்டிரனைக் கண்டு அடிபணிந்து யாது சொன்னான் துரியோதனன்:-*

102. தந்தை யடிபணிந்து தண்டுளப வோன்செய்தி
சிந்தையுற வெல்லாந் தெரிந்துரைத்தான்-புந்தி
யசைந்தா னசைந்தவனு மண்டர்தொழு வான்றன்
மனந்தானங் கேதறியான் மற்று. (௩௨)

*எ-து.- ஸ்ரீவாசுதேவனும் பாண்டவர்க்காகப் பண்ணின பக்ஷபாதமும், அருச்சுனனுக்குத் தான் சாரத்தியம் பண்ணக் கடவதாகச் சொன்னபடியும், அதுகண்டு ஸ்ரீவாசுதேவன்முன் அவன் பேசிய வீரியமும், மற்றும் உற்ற வார்த்தையெல்லாம் உரைப்பக் கேட்டு மிகவும் பயமும் பரித்திராசமும் எய்திப் பாண்டவர் பலத்தினாலும் ஸ்ரீ வாசுதேவன் சகாயத்தினாலும் இது கேவலமன்றே யென வுணர்ந்து, துரியோதனாதிகளுக்குப் பழிபாவம் வருமென் றெண்ணிச் சிந்தாகுலத்தனாயிருந்தான் திருதராஷ்டிர னென்றவாறு. இப்பால் அருச்சுனன் நிலைமை யாதாயிற்றோ வெனில்:-*

103. ஆயனுடன் பார்த்த னணிநெடுந்தேர் மேற்கொண்டு
தூய தருமன்றன் றொன்னகர்க்குப்-போயலருங்
கானாறுங் குன்றுகளுங் கைகடந்து சென்றடைந்தார்
வானாறு மாமுகில்போன் மற்று. (௩௩)

*ஸ்ரீமத் துவாரகாபதி விட்டு நீங்கி ஸ்ரீவாசுதேவனும் அருச்சுனனும் உபலாவிய நகரம் நோக்கிப் போந்து மற்றந்த எல்லை குறுகுமளவில், அருச்சுனனுடன் தேவராசன் சாரத்தியமாகத் துணிந்து வருகின்றமை தருமபுத்திரனும் பிராதாக்களுங் கேட்டு, குந்திபோசன் பாஞ்சாலராசன் விராடராச னுள்ளிட்டார் எதிர்வந்து காண மனமகிழ்ந்து தன்னருகு நின்ற க்ஷத்திரியரை நோக்கித் தேவராசன் வரவுகண்டு எலலையில்லாததோர் பிரிய மெய்தி யாது சொன்னான் தருமபுத்திரன்:-*

104. எம்பி விசயனுட னெம்பெருமா னிங்குளனால்
வெம்பகைஞர் தஞ்சேனை விண்ணுலகா-மம்புவிமேற்
சீரார் குருநாடுஞ் செங்கோலுஞ் செம்மையுடன்
பாராள்வேன் கண்டீர் பரிந்து. (௩௪)

*எ-து.- ஸ்ரீ வாசுதேவன் சாரதியாகத் துணிந்து அருச்சுனனை யிரட்சிக்கும் பொருட்டாக வெழுந்தருளினமையாலே, துரியோதனனும் அவன் மகாசேனையும் விண்ணுலக மாள வீமார்ச்சுனர் பிரதிக்கினையும் முற்றுவித்துக் குருநாடுமுழுதுங் குற்றமில்லாமற் காட்சிக்குடைநிழல் கவிப்பச் செற்றந் தீர்ந்து செங்கோலோச்சுதற்கும் மற்றினி யெமக்கு வருத்தமில்லெனக் கொற்ற வேந்தன் குருகுலராசன் தருமபுத்திரன் மனமகிழ்ந்துரைத்து, தேவதேவன் ஸ்ரீவாசுதேவன் எழுந்தருளக்கண்டு களிகூர்ந்து சருவக்ஷத்திரி யருஞ் சேவை பண்ணத்*

*தவளச்சத்திரம் மேல்நிழற்றக் கருடத்துவசம் விசும்பளாவ எம்மருங்கும் எழின் மணிக் கவரி யருகிரட்டச் சங்கு பேரி முதலாகிய இசைக்கலன்கள் பஞ்ச மகாசத்தம் முழங்கப் போந்து உபலாவிய நகரம் புகுந்து தருமபுத்திரன் கோயிற் சென்றெய்தி ஆங்கு ஒரு தனி மண்டபத்துத் தருமபுத்திராதிகளும் பாஞ்சாலராசனும் விராடராசனுங், குந்திபோசராசனும் மற்றுமுள்ளிட்டாரும் புடைசூழ வீரசிங்காதனத்து மிசை வீற்றிருந்தான் ஸ்ரீவாசுதேவ னென்றவாறு. இவ்வகையிருந்த ஸ்ரீ வாசுதேவன் பாண்டவரை நோக்கி யாதருளிச்செய்தான்:-*

## ஸ்ரீ வாசுதேவனைப் படைத்துணை யழைத்தது முற்றும்

# ஸ்ரீ வாசுதேவன் றூது

105. போர்வீரர் தம்மோடும் போந்தரசு கொள்வீரோ
பார்வீர [1]ரென்றும் பரிசயத்தா-லோர்வீர்நீ
ருய்வீராய் முன்னடைந்த வெங்கானம் போவீரோ
வைவீருஞ் சொல்லீ ரமர்ந்து (கு)

*எ-து.- துரியோதனனுடன் யுத்தம் பண்ணி இராச்சியங் கொள்வீரோ வென்றும், மற்று அது முடியாதாகில் முன்பு திரிந்த வனவாசம் போவீரோ வென்று மருளிச்செய்து, நீங்கள் அந்த மறமன்னன் துரியோதனனுடன் வெகுண்டெழுந்தகாலத்து மற்று அதற்கு யாம் செய்யத்தக்கனவும் விசாரித்து ஈண்டு நமக்குரைத்து யுத்தத்துக்கு ஆகும்படி யொருப்பட்டு மற்று அதற்கு உச்சாகமுடையாரையும் அழைத்து வேண்டுவன துணிவீராமின் எனக்கேட்டுத் தருமபுத்திரன் சொல்லுவான்: ஸ்ரீ பீஷ்மனும், விதுரனும், கன்னனும், ஈசுவரமூர்த்தி அசுவத்தாமாவும் முதலாகிய அதிரதர் மகாரதரான மற்றவரை நம்மால் வெல்லக் கூடுமோ? அதற்கு என்னோ காரணம் எனில்:-*

106. வெற்றி விதுரன்கை வில்லிருக்க மேதினியின்
மற்றவனை வெற்றிகொள்ளு மாறுண்டோ-பெற்றத்
தனிமுரசங் காத்தருளுந் தாமரையாள் கோனே
யினியவரை வெல்லாரை யெண்ணு. (உ)

*அதுகேட்டு யாதருளிச்செய்தான் ஸ்ரீ வாசுதேவன்:-*

107. நகுலன் பரியேறி னாலொன்று மூன்று
புவனங்க ளேழும் புடைபோ-யிகலு
மவனுடைய வில்லு மதிரதரு மெல்லா
மிவனுடைய முன் [2]னில்லா ரீங்கு. (௩)

*(பா-ம்.) 1. என்று பரசியக்கா-லோரீர்நீர். 2. நில்லா வீங்கு.*

*அதுகேட்டு யாது சொன்னான் தருமபுத்திரன்:-*

108. ஆசா ரியன்புதல்வ னச்சுவத்தார் கோமாற்குச்
சேனா பதிப்பட்டஞ் சேர்த்தினான்-மீதவனை
வெல்லப்போர் செய்வகைக்கு வெண்டலையி லூணுகந்த
செல்வதற்குந் தானரிதே செப்பு. (சு)

*இவ்வகை ஈசுவரமூர்த்தி அசுவத்தாமாவைச் சேனாப்பத்தியங் கட்டினால் மற்று அவனை வெல்லுவது பரமேசுவரனுக்கு மரிதாதலால் ஆங்கவனை வெல்லுமாறு அருளிச்செய்வாயாகெனக் கேட்டு யாதருளிச்செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-*

109. சாதா ரணஞ்செய்யுஞ் [1]சாதேவக் கோமானைச்
சேனா பதிப்பட்டஞ் சேர்த்தினான்-மீதோடி
யச்சுவத்தார் கோமா னடர்த்துவரும் வெம்போரைச்
சித்திரத்தே [2]ரோட்டிச் செயித்து. (ரு)

110. உய்ய வுடன்பிறந்த வொண்கவசங் கன்னனுடன்
செய்யுஞ் செருவிற் சிதைக்கவல்லா-னையனே
யிந்திரனே யன்றி யிணையாரு மில்லையே
வந்துபோர் செய்வார்கண் மற்று. (சா)

*இவ்வகை தருமபுத்திரன் சொல்லக் கேட்டு யாதருளிச்செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-*

111. கொற்ற வரவுயர்த்த கோமான் றனித்துணைவன்
பெற்ற கவசம் பிளப்பதற்கு-வெற்றிகொள்ளு
மிந்திரனே யன்றி யினையா னபிமன்கை
மந்திரவில் லேயதற்கு மாறு. (எ)

*அது கேட்டுப் பின்னை யாது சொன்னான் தருமபுத்திரன்:-*

112. மூதாதை கையின் முனிந்துவருஞ் சக்கரத்தை
வேதா திபனே விலக்குதற்கு-யார்தானு
மற்றுமொரு வீர ருளரோவிம் மண்ணுலகில்
[3]வெற்றிகொள்வார் தம்மை விளம்பு. (அ)

*எ-து.- ஆதிதேவன் அநந்தசயனன் லோகநாதன் காலசக்கிரம் ஸ்ரீ வீஷ்மன்கையிற் சக்கிரம் வந்தால் யாவராலுந் தாங்கரிது; மற்றதற்குச் செயற்பாலது என்கோலோ? என்று சொல்லக் கேட்டு யாதருளிச்செய் தான் ஸ்ரீவாசுதேவன்:-*

---

*(பா-ம்.) 1. சாதேவர் கோமானைச். 2. ஓட்டுஞ். 3. வெற்றி செய்வார்.*

113. வந்தவா காண்குமது மன்னவனே மற்றுநீ
சிந்தைமீ தூர்ந்து சிதையாதே-யுந்தை
பொரும்போது போர்க்களத்திற் போர்விசயன் றேரி
விருந்தோமுக் கன்றோ வியல்பு. (கூ)

*எனக்கேட்டுத் தருமபுத்திரன் சொல்லுவான்: எம்பெருமானே! மகாரதரை யெல்லாம் வெல்லுமாறு அருளிச்செய்தாலும் நின் திருவுள்ளக் கருத்தை யாவராலும் வெல்லவொண்ணா தென்று பின்னும் யாது சொன்னான் தருமபுத்திரன்-*

114. தந்தையா வானுந் தருமம் வளர்ப்பானு
மெந்தையா வானுநீ யெங்களுக்கு-முந்திலங்கை
[1]யூரறுத்த வெந்தை யுரைத்தவர்க டம்முயிரை
வேரறுக்க லாமோ விளம்பு. (க0)

*எ-து.- தேவராசனே! முன்னம் நீ முனிந்த விடங்கள் நின்னாற் செய்யப்பட்ட பராக்கிரமங்கள் எல்லாம் என்காயம்விட்டு நீங்காது; அதுவுமன்றி நின்னோ டெதிர் மலைந்த மாபதியர் மாளும்படிக்கு மதிமயக்கிட்ட சர்வ மாயைவல்லானே! ஈதொரு தன்மங் கேட்பாயாக என்று ஸ்ரீவாசுதேவனை நோக்கி யாது சொன்னான் தருமபுத்திரன்:-*

115. நின்னைச் செலவிட்டா னீர்நாடு தாரானேற்
பின்னைப் பொருகை பிழையன்றே-யுன்னைக்காண்
மாதவனே மாயவனே மாலவனே மற்றெமக்கோர்
தூதுவனே [2]யாக்கத் துணி. (கக)

*எ-து.- மற்றாங்கு முரைத்து வாழ்கின்ற மன்னவ னுள்ளிட்ட குரு குலத்தோரில் எங்கட்கு அன்னியமாவாரு மில்லை; தாய் தந்தை சுவாமி யாவாரும் மித்திரபாந்தவத் தொடக்கத்தாரும் அவரே கண்டாய்; ஆதலால் எத்தனையும் வெகுளியெய்தாது குருக்ஷேத்திரங் குன்றாமல் எங்கட்கு ஒரு தூதாமாறு துணிந்து துரியோதனனளவும் எம்பெருமானே எழுந்தருளி அர்த்த ராச்சியம் பெறினும் வேண்டிக்கொண்டு போதுவாயாக என்று ஸ்ரீ வாசுதேவனை விடுக்கலுற்ற பொழுது, தருமபுத்திரனை நோக்கி யாதுசொன்னான் வீமசேனன்:-*

116. மன்னவையுட் பட்ட மறந்தனையோ மாதேவி
மின்னவிரு நுண்ணியடைவாண் மென்கூந்தல்-பின்னி
யிருக்கவோ மண்ணாள வெண்ணியோ சொல்லாய்
குருக்களே றன்னார் குணம் (கஉ)

*(பா-ம்.) 1. ஊரறுக்க வந்தாய். 2. ஆகத்துணி.*

எ-து.- துச்சாதனன், துரோபதியைச் சபையகத்துக் கேசக்கிரகணஞ் செய்த ஞான்று துரியோதனன் சொன்ன புருஷவாக்கியம் நின் சித்தபுத்தியில் வைக்கத்தக்கதில்லை; நின் முன்னாகப் படாதனபட்ட படைநெடுங்கட் பாஞ்சாலியும் சாந்தும் மணிப்பூணுந் துறந்து ஏகவேணியோடு அவளிருப்ப, எம்பெருமானைத் தூதுவிடுவது கேட்டார்க்கு நகையன்றோ? என்று, பின்னுஞ் சொல்லும் வீமசேனன்

117. ஈன்றார்க்கோர் மாதுன்ப மின்னார்க்கோ ரின்னாச்சொல்
சான்றோர்கட் கெல்லாந் தலையிறக்கந்-தோன்றுங்
கொடுவிலாள் வாட்டானைக் கொற்றவனே பார்மேல்
வடுவிலாள் பட்ட வடு. (கக)

அன்றியும்,

118. ஆற்றுவரேற் றோள்வலியாற் கொள்வதுவு மாற்றாரேற்
றோற்பதுவும் வேந்தர்க்குச் சொல்லியதே-மேற்றானோர்
மன்னவரை மன்னவர்கண் மண்ணிரந்தா ரில்லைகா
ணென்னவர சாள்கை யிது.. (கச)

எ-து.- நீ பிறந்த இராச்சியத்தினை மாயச்சூதினால் வஞ்சித்துக் கொண்டு விவஸ்தையழிந்து அர்த்தராச்சியம் வேண்டிவிடவும் தாராதானை வாகுவீரியத்தினாற் கொள்வதன்றி யுத்தத்தின்கண் பலவீரைப் போல மற்று அவனிடைக்கு மண்ணிரந்து போகவிடுதல் க்ஷத்திரிய தருமமன்று கண்டாய்; ஒருநாழிகை நின் கருணையொழிந்து இராசதன்மந் தலைநின்று போர்க்களத்தில் என் உச்சிராயத்தினை நோக்கியருளப் பெறுவேனாகில், தன்னனென்னும் பெயர்கெடுத்துக் காந்தாரபதியைக் கட்டழித்துச் சல்லியனை யமர்தொலைத்துச் சயத்திரதனைத் தலைப்படுத்தி வெற்றிகொள்வே னென்ற வீமசேனனை நோக்கி யாதுசொன்னான் தருமபுத்திரன்:-

119. உற்றாரை யெல்லா முடன்கொண் டரசாளப்
பெற்றா லதின்மிக்க பேறுண்டோ-வெற்பார்
பனிமருவும் பூந்தொங்கற் பாழியந்தோள் வீமா
தனிமரமுந் தோப்பாமோ தான். (கரு)

என்றிவ்வகை தருமபுத்திரன் சொல்லக் கேட்டுப் பின்னும் யாது சொன்னான் வீமசேனன்:-

120. சூழ்சபையிற் சூளுற்ற சூளுறவு மஞ்ஞான்றென்
பாழியந்தோள் பட்ட பரிபவமும்-வாழியாய்

நின்னோடே தோற்றுதற்கு நோற்றேனே பாவியே
[1]னென்னோ டெழுத்தோ விது. (கசா)

*எ-து.- சத்துருக்களாற் செய்யப்பட்ட வஞ்சனை பரிபாவங்களை யுணராது நீ தருமமே விரும்புகின்றாய்; நின் கருணை யொழிந்து நிற்பையாகில் என் வாகுபலங்களாற் சத்துருநாசம் பண்ணி என் மனக்கருத்து முடிப்பேன்; அது இல்லையென, அதி பல பராக்கிரமங்களும், உடைய ஆயுத சிக்ஷைகளும், மற்றதனுடனே விளங்கி நின்ற என வாகுபலங்களும் அப சயப்பட்டு உலந்து அஸ்தியாகின்றதென் றுங் கருதுகின்றிலை; நின்னோடே சனித்தேனே மகா பாவியேன்! எனக் கழறித் தான் பிடித்த தண்டாயுதத்தைப் பூமியின்மே லெறிந்து வெகுளாநின்ற துங்கக் கருவிக் கடாக் களிற்றான் வீங்கெழிற் றோள் வீமசேனன் அபிமானம் சினங் கன்றக் கண்டு மற்றவனைக் கைகவித்து யாது சொன்னான் தருமபுத்திரன்:-*

121. தாமானங் கூறப் பெறுவரே தம்பிமார்
தீமானஞ் செய்ததனாற் றீங்குண்டோ-வாமாகி
லாமளவு [2]நட்புகத்த லன்றாகி னின்றதே
தேமருவு தாரோய் செரு.. (கஎ)

*இவ்வகை சொல்லி ஸ்ரீவாசுதேவன் சாக்ஷியாகத் துரியோதனன்பாற் போய் அவன் மனக்கருத் தறிந்து வருமளவும் அபிமானம் பேசவேண்டா மென்று வீமசேனனை விலக்கி ஸ்ரீவாசுதேவனை நோக்கி யாது சொன்னான் தருமபுத்திரன்:-*

122. கார்தோற்றுப் போகத் தொடுக்குங் கரத்தானே [3]வேண்ட
பார்வேண்டிற் பாம்புயர்த்தோன் றான்மறுத்தா-லூர்
லாங்கவையுந் தான்மறுத்தா லைந்துமனை தாம்வேண்டிப்
[4]பாங்குடனே போதாய் பரிந்து. (கஅ)

*அன்றியும்,*

123. மன்னவர்க ளெல்லாருந் தாமறியப் பார்வேண்டி
லன்னவனு மைந்தின் மறுத்தானேற்-பின்னைப்
பொருபடைக்கை மாலேநீ போர்வேண்டிப் போதா
யரவுயர்த்தோன் றன்பா லகன்று. (கசா)

*எ-து.- துரியோதனன் பக்கற் போனால் ஊக்கமுடையானுட னிருந்து, நீதிமார்க்கங்களும் விவஸ்தைபழியாமல் நின்றமையுந் தெளிய வுரைத்துப் பின்னு மிராச்சியம் வேண்டிற் றாரானாகில் அர்த்த ராச்சியந்*

---

*(பா-ம்.) 1. என்னோட்டெழுத்தோவிவை. 2. நட்புகந்தால்; நட்புகந்து. 3. வேண்டி, லாங்கதுவிந் தான். 4. பாங்குடனீ.*

தரினுங் கொண்டுபோதுக, அதுவுந் தாரானாகில், குசஸ்தலமும் மிருகஸ்தலமும் வருணாபதியும் வரசந்தியுஞ் சயசந்தியும் என்பன பஞ்ச கிராமந் தரினுங் கொண்டு போதுக; அதுவுந் தாரானாகிற் பஞ்ச கிராமந் தரினுங் கொண்டு போதுக; அதுவுந் தாரானாகிற் பஞ்ச கிருகந் தரினுங் கொண்டு போதுக; அதுவுந் தாரானாகில் யுத்தஞ் செய்தாகிலுங் கொள்ளக் கடவ தென்று மற்றவ னருகிருந்த பீஷ்மர் துரோணர் விதுரரையுஞ் சாக்ஷியாக வைத்து மற்றவன் பிரதிஜ்ஞை யழிந்தமையும் அறியவுரைத்துப் பரராஷ்டிரத்து ஸர்வக்ஷத்திரியரு மறிய நாள் வரைந்து, தூண்பரித்தேர் மன்னா! ஈண்ட னெழுந்தருளி வருவாயாகென்ன, ஸ்ரீவாசுதேவனுந் தூதாக வுடன் பட்டவிடத்துத் தருமபுத்திரனையும் ஸ்ரீ வாசுதேவனையும் நோக்கி யாது சொன்னான் அருச்சுனன்:-

124. பரமன் றிருவருளாற் பாசுபதத் தோடு
விரவுதனுக் கொண்டியா னிருக்கக்-குருபதிக்கு
நாமிரந்து போனா னகையரசர் செய்யாரோ
தாமிருந்து வாழுந் தலத்து. (உ0)

அன்றியும்,

125. ஆரமருட் டேராழி யார்த்து வடிக்கயிறு
போர்மருவு [1]மாமேன்மால் பூட்டுவனேற்-கூரம்பாற்
கூடலார் மன்னவரைக் கூற்றின் பகுவாயின்
பாடியிலே யுய்க்கும் படி. (உக)

எ-து.- ஸ்ரீவாசுதேவன் எம்பெருமான் தேர்மிசை நின்று வடிக்கயிறும் முட்கோலும் பிடித்துப் பாங்கினுடன் சுவேதாசுவங்களைத் தூண்டுமாகில், என்கையிற் காண்டீபம் நாணேற்றி ஆவநாழியிற் கைவைத்த விடத்துத் துரியோதனனையும் பார்மன்னரையும் அவண் எண்ணப்படாத சதுரங்க பலத்தோடுஞ் சர்வ க்ஷத்திரியரையும் நொடிவரையிற் பட மலைந்து யமலோகங் குடியேற்றவல்ல நான் சிலையுடனிருக்கக் குருராஷ்டிரபதி தரும புத்திரனுக்கு இரந்து சென்றால் பரராஷ்டிரத்து க்ஷத்திரியர் நகையாரோ என்று, பின்னுஞ் சொல்லுவான் அருச்சுனன்:-

126. ஊழிமுதற் காலத் [2]துருத்தெழுந்த தீப்போல
வாழும்வினை கொண்டாடி மற்றெம்மைத்-தீயி
லழுத்துவிக்கு மன்னவரை யாடமருள் வீழ்த்து
[3]முழுக்குவிப்பன் செங்குருதி முன். (உஉ)

எ-து.- வருணாபதியில் அரக்குமாளிகையில் அனலெழுப்பிய மன்னவனையும் பிராதாக்களையுங் கடுங்கணை பாய்ச்சி நடுங்கமருள்

(பா-ம்.) 1. மாவின்மேற் பூட்டுவையேற். 2. உற்றெழுந்த.
3. முழுத்துவிப்பன்.

*வீழ்த்துக் குருதிப் புனலிற் குளிப்பித்துக் கன்னனையுங் காண்டிபத்துக் கிரையாக்கிப் பரராஷ்டிரத்து க்ஷத்திரியர் காணச் சத்துருசய முடிப்பேனென்று அருச்சுனன் பேசக்கேட்டு மற்றவனைக் கைகவித்துப் போகின்ற ஸ்ரீவாசுதேவனை நோக்கி யாது சொன்னான் நகுலன்:-*

127. இந்திரன்சேய் போக வினிய விரட்டையரிற்
புந்தி நகுலன் புகன்றெழுந்து-வந்தித்தே
யந்நாண் முதலா வரிவைகுழல் கூடாமை
மன்னா மறந்தனையோ மற்று. (உரு)

*அன்றியும்,*

128. வேண்டி விடுப்ப வெறுத்த வெகுளியர்பாற்
[1]பூண்ட செருவேண்டிப் போகாமன்-மீண்டுமினி
நாடாள வெண்ணுவதோ நல்வேந்தே யென்றுரைத்தான்
றாதாடு மார்பன் றளர்ந்து. (உசு)

*என்று இவ்வகை சொல்லி வெகுண்டுரைத்த நகுலனைக் கைகவித்துப் போக வொருப்படுகின்ற ஸ்ரீவாசுதேவனை நோக்கி யாது சொன்னான் சகதேவன்:-*

129. மாயா மணிவண்ணா மண்ணுலகம் விண்ணுலகுந்
தாயாகி [2]நின்றதொரு தற்பரமே-நீயேகுங்
காரணங்க ளெல்லா மறிந்தேனே கஞ்சமலர்
வாரணங்காத் துய்த்தாய் மகிழ்ந்து. (உரு)

*எ-து.- தேவதேவனே! நீ அஸ்திநபுரத்துக்குப் போகின்ற காரணமும் காரணத்தின் குறிப்புகளும், நீ செய்யத்தக்கனவுஞ் செய்துமுடிக்கத் தக்கனவும், நின் மகாமாயையும் மாயத்தின் சூழ்ச்சிகளும், நின் திருக்குறிப்பும் நின் திருவுள்ளத்தி னினைவுகளும் மற்றுமுள்ளிட்ட மகா விஷ்ணுமாயை யெல்லாம் எம்பெருமானே! என்னா லறியப்பட்ட தாதலால் இனி அதனாற் பிரயோசன மென்னென்றும், நின் திருவுள்ளக் கருத்தே முற்றுவிப்பாயாக என்றுஞ் சொல்லுகின்ற சகதேவனை நோக்கி யாதருளிச்செய்தான் ஸ்ரீ வாசுதேவன்:-*

130. தூதாகப் போவேனைச் சொன்ன தகவின்மை
வேதா திபனே விளம்பிக்கா-ணேதோதான்
மன்னற்கு நேரிளைய மன்னவனே யென்னினைவை
யின்னதே யென்றுரையா யீங்கு. (உஎ)

*(பா-ம்.) 1. பூண்டு. 2. நின்றவொரு.*

எ-து.- நான் உங்களுக்குத் தூதாளாகத் துரியோதனன் பக்கல் இராச்சியம் வேண்டிப் போவேனை ஈங்கொரு தகவின்மை யுரைத்தா யாதலால் மற்று அது ஏதோவென்று ஸ்ரீவாசுதேவன் அருளிச்செய்யக் கேட்டு யாது சொன்னான் சகதேவன்:-

131. அந்தமற் மன்னவர்க ளோடே யடியோமைச்
சிந்தப் புடைத்துத் திசையெங்கும்-வந்து
படைபொருத மன்னரையும் பாரதத்தாற் கொல்ல
வடைவுடனே தானினைந்தா யாங்கு. (உஎ)

எ-து.- மகாமாயம் வல்லானே! நின்திருவுள்ளக் கருத்து நினைவுகளை யான் சொல்லக் கேட்பாயாகில், துரியோதனன் இராச்சியந் தாராதபோது மற்று அவனுடனே யுத்தம் விளைந்த விபத்து மற்று அவரையும் எங்களையும் மடிவித்து, எங்களுக்காக யுத்தம் பண்ணவந்த க்ஷத்திரியரையும் மற்றுமுள்ள சதுரங்க பலத்தையும் தரைப்படுத்திப் பூமிதேவிக்குப் பொறைதீர்த்து நீயும் ஏகரூபியாக நிற்கவே யெண்ணினாய் என்று சகாதேவன் சொல்லக் கேட்டு அதிசயித்த திருவுள்ளத்தனாய் யாதருளிச்செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-

132. ஆயிரக்கா றனுடைய மண்டபத்தில் யாம்புகுந்
தாயிரக்கா றன்னி லமருவோ-நீயெந்தஞ்
சத்திதா னிற்குந் தனித்தூ [1]ணறிந்தாயேற்
சத்தியவா னாக தலத்து. (உஅ)

எ-து.- நாம் போகின்ற காரியங்களும், செய்துமுடிக்குஞ் செயல்களும் நீ 'அறிவோம்' என்றாயாதலால், நீ யறிவையாகில் நாம் இந்த மண்டபத்திற் புகுந்து ஆயிரந்தூணிலும் மறைந்து நிற்போம்; நின்றக்கால் நம்முடைய சக்தி நிற்குந் தூணை யறிந்தாயாகில் நாம் விசாரித்திருக்கின்ற காரியங்களும் அறிவை யென்றும், இந்தப் பூமண்டலத்துக்குச் சத்தியவான் என்றும் ஸ்ரீவாசுதேவனும் அருளிச் செய்யக் கேட்டுச் சகாதேவனும் உடன்பட அப்பொழுது யாதருளினான் ஸ்ரீவாசுதேவன்:-

133. சகாதேவ னோடுந் தருக்கித் துடனெழுந்து
[2]மாதேவன் மண்டபத்தி லேபுகுந்து-சகாதேவன்
றானறியா வண்ணந் தனித்தனிதூ ணாயிரத்திற்
போயறியத் தானொளித்தான் புக்கு. (உகூ)

இவ்வகை சகாதேவனுடன் தர்க்கித்து ஸ்ரீவாசுதேவனும் அந்த மணி மண்டபத்துட் புகுந்து மணித்தூண்கள் ஆயிரத்திலுந் தன் சுரூபத்தைக் கரந்துகொண் டெழுந்தருளி நின்றான். அவ்விடத்துச்

(பா-ம்.) 1. அறிந்தாயாய்ச். 2. மாதேவ.

சகாதேவனும் அந்த மண்டபத்திற் புகுந்து ஸ்ரீவாசுதேவன் சக்தி எழுந்தருளியிருக்குந் தூணைச் சேர்ந்து புட்பாஞ்சலி பண்ணி நமஸ்கரித்து யாதுவிண்ணப்பஞ் செய்தான் சகாதேவன்-

134. அன்றங் கிரணியனைக் கொல்லவே யத்தூணி
னின்றுபுறப் பட்ட நெடியோனே-யின்றென்முன்
போதாய்நீ யென்று புகழ்ந்தேத்தி நின்றானே
சகாதேவ னாருந் தலத்து. (௬௦)

என்றிவ்வகை விண்ணப்பஞ் செய்யக் கேட்டு ஸ்ரீவாசுதேவனும் பிரியப்பட்ட திருவுள்ளத்தனாய்த் தன் விசுவரூபத்தை வெளிப்படுத்தி நின்றானைக் கண்டு பிரியப்பட்ட மனத்தனாகித் தண்டன் பண்ணி நமஸ்கரித்துப் பின்னும் யாது விண்ணப்பஞ் செய்தான் சகாதேவன்:-

135. காற்றுங் கனலு மிடியும் கதிரோனுந்
தோற்றுஞ் சுடருஞ் சுருதியுமாய்-நாற்றிசையோ
டெல்லா வுயிருமாய் [1]நின்றா யெனக்குறிப்பைச்
சொல்லாயென் றானே [2]தொகுத்து. (௬௧)

*எ-து.*- நீ சர்வலோகங்களுக்கும் சர்வகர்த்தாவாய்த் திரிகால ஞானியாய்ச் சர்வப் பிராணிகளுக்கும் சிருஷ்டி ஸ்திதி சங்காரனும் நீயேயாய்ப் பின்னும் இரக்ஷிப்பானாய் மாயை பண்ணுகின்ற நீ நீதிமார்க்கங்களால் சயத்தினை வேண்டினும் வேண்டுக; சந்தினை வேண்டினும் வேண்டுக; செயற்படு காலமும் விசயமும் வெகுளியுங் கூறவல்லார் யாவரோ; என்றும் நின் திருவுள்ளமல்ல திலை யெனப் பேசிய சகாதேவனைச் சந்தோஷித்து மகாப்பிரியஞ் செய்து மற்றவனைத் திரிகால ஞானியெனக் குறித்துத் தன்னருகணைத்து, உனக்கு வேண்டுவன வுளவாகில் வேண்டிக்கொள்வாயாகெனக் கேட்டு யாது விண்ணப்பஞ் செய்தான் சகாதேவன்:-

136. அரவுயர்த்தோன் றன்னா லருங்கான மெய்தி
முரசுயர்த்தோன் பட்டதுயர் தீர-வரவணைமேற்
கண்வளர்ந்தாய் நாங்கண்மிகக் காசினியை யாள்வதற்கு
மண்ணளந்தாய் நல்காய் வரம். (௬௨)

*எ-து.*- துரியோதனன் மாயச்சூதாடி மண்தோற்று வனவாசமெய்தித் தருமபுத்திரன் பட்ட கிலேசங்களும், நாங்கள் பட்ட கிலேசங்களும், திரௌபதி பட்ட பரிசிரமமும் எல்லாம் எம்பெருமானே யறிந்தருளுமாதலால், அது வொழிந்து முன்னம்

---

*(பா-ம்.)* 1. நின்றாயே நின்னறிவைச். 2. தொழுது.

*பாலியகாலத்தில் நாங்கள் மாதாவோடு பட்ட அவஸ்தைகளும் அறிந்தருளுமாதலால் இங்கிவையெல்லாந் (தீரத்) துரியோதனனையும் பிராதாக்களையுங் கொன்று நாங்களுஞ் சிறிதுகாலம் இராச்சியம் ஆளும்படிக்குத் திருவுள்ளம் பற்றி யருள்வாயாக எனக் கேட்டுப் பிரியப்பட்ட திருவுள்ளத்தனாய் யாதருளிச்செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-*

137. பாராளு [1]மன்னவனை யாமும்போய்ச் சந்தித்தா
னேராக நாடு விடானாகிற்-சீராருங்
கொற்றக் கடையுங் குருநாடுங் கூடவருள்
வெற்றிட னாந்தருவோ மிக்கு. (௩௩)

*எ-து.- துரியோதனன் பக்கல் யாம் போய் மற்று அவன் கருத்தறிந்து உங்கள் உரிமை வேண்டத் தாரானாகில் யுத்தம் பண்ணியாயினும் உங்கட்கு இராச்சியந் தரக்கடவோம்; இதற்குச் சந்தேக மில என்று சகாதேவனுடன் ஸ்ரீவாசுதேவன் அருளிச்செய்யு மிடத்துத் திரௌபதி வந்து அடி பணிந்து யாது சொன்னாள்:-*

138. பங்கயக்கண் மாய னடிபணிந்து பாஞ்சாலி
செங்கயற்கண் முத்தந் திகழ்ந்தலைப்பச்-சங்க
வளைநிரைக்கை யாலெடுத்து வாசக் குழலைத்
துளைநிரைக்கைக் காட்டினாள் சோர்ந்து. (௩௪)

*அன்றியும்,*

139. நீயேயோ தூதுக் கெழுந்தருள்வா யாங்கவதற்கு
நீயேயோ சந்தாய் நெறிநிற்பாய்-நீயாகின்
முற்றுவிப்பான் றானோதா னஞ்சிடுவான் றந்தையோ
விற்றடக்கை மாலே விளம்பு. (௩௫)

*எ-து.- பாஞ்சாலி பேசிய நீதிமார்க்கங்களும், துரியோதனனிடையிற் பட்ட தீங்குகளினால் வீமன் பட்டு உலர்கின்றவாறும், தனக்கும் குழல் நெருங்கிய வேணியுங் காட்டி நீலநெடுங்கண் நீரருவி சோர விம்மிவிம்மி வெய்துயிர்த்து நின்றமையுந் தன் பிரதிக்கினையும் விண்ணப்பஞ் செய்து நின்றாளைக் கண்டு கைகவித்து யாதருளிச் செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-*

140. உன்கருத்தே முற்றுவிப்பே னொண்ணுதலா யொண்டிறலான்
றன்கருத்தை யான்சென்று சந்தித்தாற்-பின்சடையா
மிக்குழலை நீமுடிக்க வேந்தெழிலான் றேவிமா
ரக்குழல்க டாம்விரிப்பா ராங்கு. (௩௬)

---

*(பா-ம்.) 1. மன்னவன்றன் பால்யாம்போய்ச் சந்துரைத்தும்.*

*எ-து.- துரியோதனாதிகளைச் சென்று கண்டு அவன் மனக்கருத்தறிந் துன்கழல் முடிப்பித்தலும் மற்றந்தப் பார்வேந்தர் மகிழ்ந்த மதர்விழியார் கூந்தல் விரிப்பாரென்றும், உன் கருமமன்றோ முற்றுவிப்பேனென்றும் இவ்வகை யருளிச்செய்து நின்றவிடத்து ஸ்ரீவாசுதேவன் நோக்கி யாது விண்ணப்பஞ் செய்தான் தருமபுத்திரன்:-*

141. பெண்டுகளும் பிள்ளைகளும் பித்தர்களு மென்னறிவா
ரண்டர்தொழ நின்றருளு மச்சுதனே-மண்ட
வெழுந்தவின நாகக் கொடியோன்பா [1]லீண்ட
னெழுந்தருளா யென்றா னெடுத்து. (௩௭)

*எ-து.- தருமபுத்திரன் ஸ்ரீவாசுதேவனைப்பார்த்து ஈண்டனெழுந்தருளி மற்று அவன் கருத்தறிந்து வருவாயா கெனக் கேட்டு அஸ்திநபுரம் நோக்கிப் போகின்ற ஸ்ரீவாசுதேவனை நோக்கிப் பின்னும் யாது விண்ணப்பஞ் செய்தாள் திரௌபதி:-*

142. வெற்றிப் புகழ்த்தருமன் வீம [2]னருச்சுனற்கா
யத்திப் பதிக்கே யருள்செய்வோய்-மெத்த
வழல்புனையும் வாய்மை [3]யரசனைக்கண் டாலென்
குழனினைவா யென்றாள் குறித்து. (௩௮)

*என்றிவ்வகை திரௌபதி விண்ணப்பஞ் செய்யக் கேட்டு மற்றதுவே திருவுள்ளத்திற் கொண்டு, ஆங்கு அவர்களுக்கு விடைகொடுத்துப் பின்னை யாது செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-*

143. தூதுக் குடன்பட்டுச் சுற்றக் குழாத்தோடு
மேதுக்கள் பேசியே யேகினான்-சேதித்து
[4]மானாக மேந்தினான் மாநகர்க்கு வந்தானே
[5]கேனா கணைக்கிடந்த கோ. (௩௯)

*அன்றியும்,*

144. முரசொலியுஞ் சங்கொலியு மூரித்தேர்த் தானை
திரைசெய் கருங்கடல்போற் செல்ல- [6]வுரையோடு
மாணாமன் மண்வேண்டி மண்முழுது முண்டபிரான்
போனான் புவிமேற் புரிந்து. (௪௦)

*அன்றியும்,*

*(பா-ம்.) 1. ஈண்ட, வெழுந். 2. அருச்சுனற்கா, வத்திப். 3. ரசனைநீகண்டாற். 4. மாநாகம் ; மாணாகம். 5. கோநாகணைக் ; கோணாகணைக். 6. உரையோடும், வாடாமன்.*

145. வாம மலர்பொழிய மண்ணோர் தொழுதேத்த
ஞான முனிவரெல்லா நாவார-வேனை
மறைப்பொருளா னாற்றிசையும் வாழ்த்தினா ராங்கே
யிறைப்பொழுதுந் தாழா தெடுத்து. (சக)

*அன்றியும்,*

146. மன்னர் கழறொழுது மீளத்தன் மாபூண்ட
மின்னு மணிநெடுந்தேர் மேற்கொண்டான்-முன்னின்
றெழுந்தனவே மாமுரச மார்த்தனவே சங்கம்
பொழிந்தனவே பூமாரி தான். (சஉ)

*எ-து.- தனது திவ்ய மணி நெடுந்தேர்மீ தேறிச் சர்வாபரண பூஷித னாய்த் தன் சுற்றக் குழாத்தோடுஞ் சர்வ ஞானிகள் புடைசூழ உற்றவார்த்தை யுரைத்துச் சர்வகீதங்கள் ஆர்ப்பெடுப்பர் சத்தசாகரமெனச் சங்கு பேரிகை முதலான [1] இசைக்கலன்கள் பஞ்ச மகா சத்தம் முழங்கக் கருடதவசம் விசும்பணுவச் சத்திரசாமரம் புடைதயங்க எழின் மணிக்கவரி யருகிரட்டத் தவளச்சத்திரம் மேல் நிழற்ற ஆகாயத்திடையே அஷ்டவசுக்களும் அருகணைந்துவர வானோர் சேனையும் ஏகாந்தமாக வீரஸ்ரீ பொலிந்து சேவை பண்ணிப் புஷ்பவர்ஷம் பொழிய இனி துடனெழுந்தருளிப் பாண்டவர்க்குத் தூதாகிப் பார்வேண்டிப் பார்மிசைத் தூண்டு பரித் தேர் தாண்டத் துரியோதனன்பாற் போயினான்ஸ்ரீவாசுதேவனாகக் கருதுவது. அது யாங்ஙனமோ வெனில்:-*

147. காடு மலையுங் கடும்புனல்சே ராறுகளு
நாடும் பலபொழிலு கண்ணிப்போய்-பீடுடைய
முத்துநகை செய்யு முகில்வண்ணன் மூன்றாநா
ளத்திநக ரெய்தினா னாங்கு. (சங)

*இவ்வகை யெழுந்தருளிக் காடும் மலையுங் கடந்து இரண்டு திவசம் வழியிற் றங்கி மூன்றாந்திவசம் அஸ்தினபுரம் புகுந்தான் ஸ்ரீவாசுதேவனென்றவாறு. அப்பொழுது, மற்றவன் வரவு கேட்டு யாது செய்தான் துரியோதனன்:-*

148. தன்னகரி கோடித்துத் தண்டலைக ளெண்டிசையும்
பொன்னகரி போலப் பொலிந்திலங்கக்-கொன்னவிலுங்
கூராழி வேந்தனுக்குக் கோயி லடங்குறித்தான்
பாராளு மன்னன் பரிந்து. (சச)

---

*(பா-ம்.) 1. அணிகலன்கள்.*

எ-து.- ஸ்ரீவாசுதேவன் எழுந்தருள்வது கேட்டு மகாப்பிரியஸ்தனாய் வீதிகடோறும் பூவும் நீரும் பொழிந்து மாட மண்டபந்தோறும் வண்ணத் துகிலும் மணிமாலையும் அணிந்து, கொண்டல் பொருந் தண்டலைக ளெண்டிசையும் நிறைத்துத் தீபதூபங்களா லலங்கரித்து, இரவிகிரணங்களை மறைத்து ஆடரங்கும் மாடவீதியும் பட்டுத்துகில் பொதிந்து ஆடலொலி பரப்பிச் செப்பங் கூர்ந்த மண்டபத்தே தேவராசன் ஸ்ரீவாசுதேவனுக்கான கோயிலிடம் பண்ணி, அஞ்சனத்தா லழகுசெய்து, பஞ்சனையும் மஞ்சனமும் பாரித்து, மற்றும் வேண்டினவெல்லாம் விளைப்பித்துத் தானுஞ் சர்வாபரண பூஷிதனாய்ப் பரராஷ்டிரத்துச் சர்வ க்ஷத்திரியரும் புடைசூழ, ஆனை தேர்குதிரை கருவி காலாட்களோடு எம்மருங்கும் புடைசூழ, எழின் மணிக் கவரி யருகிரட்டத், தவளச்சத்திரம் மேனிழற்ற, தனிவெண்கவரி புடை தயங்க, நாகக்கொடி விசும்பணுவ, சர்வ சாகர மெனச் சங்கு பேரிகை முதலாயுள்ள இசைக்கலன்கள் பஞ்சமகாசத்தம் முழங்க, வீஷ்மர் துரோணர் விதுரர் கிருபர் கன்னன் அசுவத்தாமா வுள்ளிட்ட குருகுலவேந்தர் கூட்டமுடன் போந்து தேவதேவன் ஸ்ரீவாசுதேவனை யெதிர்கொண்டு வரப்போகாநின்ற இராசராசன் துரியோதனனைத் தகைந்து யாது சொன்னான் சகுனி:-

149. ஆயனை மாலென் றறியார்போ [1]லாங்கவனுந்
தூய தருமன்றன் றூதுவனாய்த்-தாயங்
கொடுப்பிக்க வந்தானைக் கோவேநீ காண
[2]வடுக்கமோ வென்றா னழித்து. (சரு)

எ-து.- பாண்டவர்க்குத் தூதனாகி உரிமை வேண்டுதற்குக் காரணனாய் வருகின்ற கோபாலனை நீ பரிவினாற் சென்று கண்டாயானால், பயத்தினாற் சென்று கண்டானென்று சதுரங்க பலத்தாரும் சர்வ க்ஷத்தியருங் கருதப்படு மாதலால், நீ ஸ்ரீவாசுதேவனை யெதிர்கொள்ளக்கடவை யல்ல வென்று சகுனி சொல்லக் கேட்டு மிகவும் அளவளாவி யுடன்பட்டு வியாகுலத்தோடு சுதுமென மீண்டுபோய்த் தன்கோயில் புக்கான் துரியோதனனாகக் கருதுவது. அப்பொழுது, ஸ்ரீவாசுதேவனை யெதிர்கொள்ளாமலிருப்பது யாவர்க்கும் இரக்ஷையல்ல வெனக்கருதி, பீஷ்மர் துரோணர் விதுரர் கிருபர் கன்னன் அசுவத்தாமா வுள்ளிட்ட சர்வ க்ஷத்திரியரும் தம்மொடு தாம் புலம்பி எதிர்கொள்வாராகப் போயினார். அப்பொழுது,-

150. காங்கேய னுள்ளிட்ட காவலர்க டற்சூழ
வாங்கெதிர் கொண்ட வரசர்களைத்- [3]தேங்கொளுநீர்
மல்லமருந் தோளானை மன்னுவது நாளையென்று
வில்விதுரன் வீடணைந்தான் வேறு. (சசா)

(பா-ம்.) 1. ஆங்கவனைத். 2. அடுப்பதோ. 3. தேங்கொலிநீர்.

எ-து.- தேவராசன் ஸ்ரீவாசுதேவனை, பீஷ்மர் துரோணர் விதுரர் தொடக்கத்தா ருள்ளிட்ட சர்வ க்ஷத்திரியருஞ் சென் றெதிர்கொண்டு அடி பணிந்து எம்மருங்குஞ் சூழ்ந்து சேவைபண்ண, எழின்மணிக்கவரி யருகிரட்டத் தவளச்சத்திரம் மேனிழற்றக் கருடத்துவசம் விசும்பணுவச் சங்கு பேரிகை முதலாயுள்ள இசைக்கலன்கள் பஞ்சமகாசத்தம் முழங்க எழுந்தருளி அஸ்திநபுரம் புகுந்து பார்வேந்தனைக் காண்பதற்குத் திவசங் குறித்து நாடி விதுரன் கோயி லிடங் கொண்டான் ஸ்ரீ வாசுதேவ னென்றவா று. அப்பொழுது,-

151. தீப்பிறக்குஞ் சக்கரக்கைச் செங்கண்மா லென்னுடைய
நாய்குடிலி லேநுழைந்தா [1]னானுயர்ந்தேன்-வாய்த்தபிறப்பைக்
கழித்தேன் பெரும்பதம்பெற் றேனென்
றிறப்பைப் பிரித்தா னெழுந்து. (சஎ)

அன்றியும்,

152 திருமா றுரியோ தனனிடைக்குத் தூது
வருமாறு கண்டு மகிழ்ந்தே-பிரியா
வெளிமலர்த் தாரான்றன் மெய்ம்மறந் தாங்கே
குறை [2]பிரித்தா னுள்ளங் குளிர்ந்து. (சஅ)

எ-து.- தேவதேவன் யாவர்க்குங் காண்டற்கரியான் ஸ்ரீவாசுதேவன் தருமபுத்திரன் பொருட்டுத் தூதாக மற்றிங் கெழுந்தருளினது அடியேன் நாய்கொட்டில் என்ன புண்ணியம் பண்ணிற்றோ! என் றும், சன்மாந்தரத்துப் பண்ணின பாக்கியத்தினால் இப்பொழுது என் கொட்டில் கோயிலாகப் பெற்றதென் றும், யான் இனித் திருவுளத்தினால் இம்மை மறுமை யிரண்டும் அறப்பெற்றேனென் றும் இவ்வகை விண்ணப்பஞ் செய்து திருவடி தொழுது செய்வதொன் றறியாது பிரியஸ்தனாய் நவரத்தினங்களா லணிந்த தன்னிறப்பையும் பிறப்பையும் பிரித்து ஸ்ரீ பாதங்களை நோக்கிப் புட்பார்ச்சனை பண்ணி மகாப் பிரியஞ்செய்தான் சர்வஞானி விதுரனாகக் கருதுவது. அது கண்டு ஸ்ரீவாசுதேவனுந் திருப்புன்முறுவல் கொண்டு மற்று அவனை நோக்கி யாதருளிச்செய்தான்:-

153. இவ்வீ டுனதெனதே யென்றருளிப் போய்விதுரன்
மெய்வீட்டி லுண்ண மிகவிரும்பிப்-பொய்வீ
டினதுசெயும் பாண்டவர்க்கா யெம் [3]பெருமா னாங்கே
யமுதுசெய்த கண்வர்ந்தா னாங்கு. (சகூ)

அன்றியும்,

(பா-ம்., 1. நானுய்ந்தேன். 2. பிரிந்தான். 3. பெருமாளாங்கே.

154. விதுரனுடன் மேவி விருந்தமுது செய்து
மதுர மொழிபயின்றான் மாலோ-னதிபற்
கெதிரோ னிருந்தவிட மேந்தெழிலான் செல்லக்
கதிரோனுந் தோற்றினான் காய்ந்து. (ருo)

*இவ்வகை விதுரன் வீட்டி லெழுந்தருளி மதுரமொழி பயின்று மற்றங் கமுதுசெய்து பள்ளிகொண்டருளி அர்த்தராத்திரியிற் கண்ணகற்றி மற்றை நாள் துரியோதனனிடைக்குப் போவானாக நினைந்தருளு மெல்லைக்கண், குணதிரையில் ஆதித்தன் தோன்றக் கண்டு ஸ்ரீவாசுதேவன் எழுந்தருளுவானாக விதுரனை யழைத்துத் தேர்கொண்டுவா வென்ன, யாது செய்தான் விதுரன்:-*

155. ஒற்றை மணித்துகிறா னொன்றுரிய வொன்றுதவிக்
கொற்றவேற் பாஞ்சாலன் கோமகளை-யற்ற
[1]மறைத்தவனே மாவலிபான் மண்ணெல்லாம் வாங்கிச்
சிறைத்தவனே போந்தேறு தேர். (ருக)

*இவ்வகை விதுரன் விண்ணப்பஞ் செய்யக் கேட்டு யாது செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-*

156. என்றான் விதுர னெழிற்றேரின் மீதேறிக்
குன்றாங்கு கோயிற் கறுகினான்-நின்றார்போய்
மன்றார்தார் மன்னனுக்கு மாயன் வரவுரைப்பக்
குன்றா தணியிருந்தான் கோ. (ருஉ)

*அன்றியும்,*

157. வெற்றிப் பறவைக் கரசன் விரைந்தென்பா
லுற்ற வளவி லொளிர்வேலீர்-மற்றவனைக்
கைதொழுது வாழ்த்தக் கடவீரேற் காசினிமே
லெய்துமிழி வென்றா னெடுத்து. (ருங)

*அன்றியும்,*

158. கோபால னிங்குக் குறுகி வருதலுமே
மேபால ரேத்தி வினவுதிரேற்-பூபாலீ
ரும்முடைய மாநிதியங் கொள்வே னெனச்சொன்னான்
செம்முகம தாகச் சிவந்து. (ருச)

*அன்றியும்,*

*(பா-ம்.) 1. மறுத்தவனே மாவலிபான் மண்ணனைத்தும் வாங்கச், சிறுத்தவனே.*

159. ஒலிகடலு மொவ்வா வுயர்முழக்கஞ் செய்யும்
புலிதிரண்ட மன்னர்பொருங் கூடம்-வலிய
விரும்பிழுக்குங் காந்தமென வெண்ணா மனங்கள்
விரும்புகைக்குச் சென்றார் விரைந்து. (ருரு)

*எ-து.- ஸ்ரீவாசுதேவன் என் பக்கல் வந்தால் நீங்க ளவனைக்கண்டு ஆசாரம் பண்ணுதல் தொழுதல் செய்வீராகில், பாண்டவர்க்குத் தூதனாய் வந்தானை என்னருகிருந்தா ரங்கீகாரம் பண்ணுமது பயபக்தியினாற் செய்வித்தே னென்று பரராஷ்டிரத்தார் கருதி யிகழப்படுங்கண்டீ ரென்று பலபகர்ந்து மற்றந்த இராச சமூகத்தைக் கையமர்த்தி யிவ்வகை பேசி யினிதிருந்த விடத்து, ஸ்ரீவாசுதேவனை வரவிடச்சொல்லி வாசற்காவலரைப் போக விடுத்துத் தானும் இராச சமூகத்தாரும் யாங்ஙனம் வீற்றிருந்தாரோ வெனில்:-*

160. வெள்ளிக் குடைநிழற்ற வெண்சா மரமிரட்ட
வெள்ளிலைவேல் வேந்தருடன் வீற்றிருந்தான்-கள்ளக்
கவற்றால்வென் றுண்ணாடு கைக்கொண்டு பின்னுங்
குவற்றா னிரைகவர்ந்த கோ. (ருசா)

*எ-து.- ஸ்ரீவாசுதேவ னெழுந்தருளி வருகின்றமை யறிந்து, பரராஷ்டிரத்து க்ஷத்திரியருஞ் சூழ்ந்து சேவைபண்ண வீஷ்மர், துரோணர், விதுரர், கிருபர், கன்னன், அசுவத்தாமா வுள்ளிட்டாரும் சகுனியும், விருஷசேனனும், பூரி பூரிசிரவாவும், சோமதத்தன் முதலாயுள்ள அதிரதரும் துச்சாதனன் முதலாயுள்ள தொண்ணூற்றொன்பது தம்பிமாரும் புடைசூழ, எம்மருங்கும் எழின்மணிக்கவரி யருகிரட்ட, தவளச்சத்திரம் மேல்நிழற்ற, வேல்வேந்தர் தொழுதிறைஞ்சத் தானும் சர்வாபரண பூஷிதனாய் நகைமுகமாக வீரசிங்காதனத்துமிசை வீரசிங்கம் போலப் பொலிந்து தோன்றி வீற்றிருந்தான் இராச ராசன் துரியோதன னென்றவாறு. அது யாங்ஙனமோ வெனில்:-*

161. அந்தணர்க ளுள்ளார்க ளாசிசொல்லி யேகொடுத்த
கந்தமலர்த் தாளிக் கறுகம்புல்-பந்திநிலை
யையா யிரங்குதிரைக் கற்றைப் படியாகும்
பையா டரவுயர்த்தோன் பால். (ருஎ)

*எ-து.- நாள்தோறுங் காலத்தே பிராமணர் வந்து, மந்திரரக்ஷையிட்டுக் கொடுக்குந் தாளிப்புல் துரியோதனன் வாகனமாகி நற்பரிகள் ஐயாயிரத்துக்கும் அற்றைப் படியாம்படி கொடுத்து விப்பிர சமூகம் விளங்கித் தோன்றத் துரியோதன னிருந்த சபையகத்துச் சென்று ஸ்ரீவாசுதேவனும் யாது செய்தானோ வெனில்:-*

162. விண்ணவர்கோன் றானென்ன் வீற்றிருந்த வேந்தன்பான்
மண்ணிரந்து மாயவனும் வந்திருந்தான்-வண்ணாங்
கரியானைக் கண்டு கடன்கழியா வேந்த
னரியா சனமளித்தா னாங்கு. (ருஅ)

இவ்வகை * ஸ்ரீவாசுதேவன் எழுந்தருளிச் சபாமண்டபஞ் சென்றெய்தக் கண்டு துரியோதனனு மெதிர்கொள்ளாது திவ்வியமான சிங்காதனங் கொடுத்துச் சுவாகதஞ் சொல்ல, இன்சொலுடன் சபையகத்து வீற்றிருந்தான் தேவதேவன் ஸ்ரீவாசுதேவனாகக் கருதுவது. அப்பொழுது பார்மன்ன ரருகிருப்ப, இராச சமூகம் ஸ்ரீவாசுதேவனைக் கண்டு யாது செய்தாரோ வெனில்:-

163. கங்கைமக னுங்கலச யோனியுமே கைமுகிழ்த்தா
ரங்கைவேல் வேந்த ரடிதொழுதார்-பொங்குகுடைக்
கன்னன் கவிழ்ந்திருந்தான் காற்சகுனி கைமறித்தான்
மன்ன னிடைபுகுந்தான் மால். (ருகூ)

எ-து.- ஸ்ரீவாசுதேவன் எழுந்தருளிப் புகுதக் கண்டு ஸ்ரீ வீஷ்மன் துரோணாசாரிய னுள்ளிட்ட சர்வ க்ஷத்திரியரும் நமஸ்காரம் பண்ண, சகுனியுங் கன்னனும் துச்சாசன னுள்ளிட்ட தம்பிமாருங் கண்டுங் காணாதாரைப் போல உதாசீனம் பண்ணி யிருந்தாராகக் கருதுவது. இவ்வகை யிருந்தாரையும் ஸர்வ ஞானங்களாற் கழல் பணிந்தாரையும், கண்களாலு மனங்களாலும் நமஸ்காரம் பண்ணியிருந்தாரையும் அடைவு குலையாமற் கண்டருளி, மற்று அவர் செய்தியெல்லாம் தன் திருவுள்ளக்கருத்தே கொண்டு இனிதுரைத் திருந்தான் ஸ்ரீ வாசுதேவ னென்றவாறு. இவ்வகை யிருந்தவிடத்து ஸ்ரீவாசுதேவனை நோக்கி யாது சொன்னான் துரியோதனன்:-

164. தொன்னகர்க்கு நின்வரவு கேட்டுச் சுவையமுத
மென்னகத்தி லேசமைக்க வென்கொலோ-வின்னகத்து
வானகங்கைக் கொண்ட வளரொளியாய் மற்றகத்துப்
போனகங்கைக் கொண்ட பொருள். (சூO)

எ-து.- எம்பெருமான் நீ யிங்கெழுந்தருளுமது கேட்டு என்னகத்திலே நினக்கான போசனஞ் சமைக்க, என்கொலோ விதுரனகத்தி லமுது செய்தது? என்று துரியோதனன் கேட்க, யாதருளிச்செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-

165. ஒருவ ரகத்தொருவ ருண்டுடுத்துத் தம்மின்
மருவி மனமகிழ்வா ராகிற்-செருமுனையின்

* ஸ்ரீவாசுதேவன் எழுந்தருளக் கண்டு துரியோதனனும் எதிர்கொண்டு சபாமண்டபஞ் சென்றெய்தித் திவ்வியமான சிங்காதனங்

மன்னப்போர் செய்யு மழகளிற்றாய் மாநிலத்துப்
[1]பின்னர்ப்போர் தக்கதோ பேசு. (சுகு)

அன்றியும்,

166. அன்பி னிடுஞ்சோறு மாபத் திடுஞ்சோறு
மின்ப முடன் [2]சோ றிரண்டுண்டே-யன்பினிலை
யில்லாத வுன்னகத்தியா னுண்ணுமா றெங்ஙனே
மல்லார்தோண் மன்னா மதித்து. (சுஉ)

எ-து.- நீங்கள் இராசதன்மமே விரும்பி வெகு மதராய்ச் சாதுக்களையும் சம்பந்திகளையும் இகழ்ந்து வாழ்கையாலும், முன்னாள் வஞ்சனையாய்ச் சூதாடி ஞான்று தருமபுத்திரனுக்குப் பன்னிரண்டு வருஷங் காடுறைந்து ஒரு வருஷங் கரந்துறைந்து பதின்மூன்றுங் கழித்தால் உங்க ளிராச்சியம் வாங்கிக்கொள்ளக் கடவீ ரென்று பேசியபடியே தருமபுத்திரனும் பிராதாக்களும் அருங்கானமுறைந்து அதி கிலேசப்பட்டுச் சமயவிரோதஞ் செய்யாமல் ஒட்டின நாள் கழிந்து வந்து வெளிப்பட்டுத் தங்களுரிமை வேண்டக் கொடாது விவஸ்தை யொழிந்து நீதிமார்க்கங் கெடப் பேசுகையாலும், உங்களகத்து உண்ணுமது தருமமன்று கண்டாய்; (ஆதலால்) விதுரனாவான் சருவ ஞானியுமாய்ச் சாதுமார்க்கம் வழுவாமல் சருவப் பிராணிகளையு மிகழாமல் இல்வாழ்க்கையும் இராச தருமமும் உடையவனா யிருப்பானாகையாலும், தருமபுத்திராதிகளுக்குத் தூதாய் உன்பக்கல் பூமி வேண்டி வருகையாலும், வந்த கருமம் முற்றாமையாலும், விதுரராசன் உங்கட்கும் மற்றவர்க்கும் சமனான பிதாவாகையாலும், அவன் கிருகத்திலே போனகங் கொள்ளுமது கேட்டார்க்கும் யோக்கியமாங்கண்டாய்; அதல்லால், அங்கும் உன்ன தன்றோ அடிசில் என்று இவ்வகை ஸ்ரீவாசுதேவன் அருளிச்செய்யக் கேட்டுப் பின்னும் யாது சொன்னான் துரியோதனன்:-

167. ஆயனே யச்சுதனே யற்புதனே தற்பரனே
மாயனே வையகத்து மன்னுயிர்க்குத்-தாயனே
யென்போந்த வாறென் றுரைத்தா னெழிலுருவு
மின்போந்த வேலான் விரைந்து. (சுங)

என்றிவ்வகை துரியோதனன் சொல்லக் கேட்டு யாதருளிச் செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-

168. ஒட்டிய காலங் கழிந்தனகாண் காவலன்ற
னொட்டிய வாட்ட மொழியீரேற்-கட்ட

(பா-ம்.) 1. பிள்ளைப்போர்; பின்னப்போர். 2. சோறுமிரண்டு.

**கரும்பழிசா றாலை கமழ்நாடா கேட்டாற்**
**பெரும்பழிதா னாகாதோ பேசு.** (கச)

*எ–து.– விவஸ்தை யொழியாமல் சமயவிரோதஞ் செய்யாமல் முன்னம் பேசிய பரிசே ஆரணிய முறைந்து அதி கிலேசப்பட்டு வந்து தம்முரிமை வேண்டிய தருமபுத்திரனுக்கு இராச்சியங் கொடாமல் மறுத்துரைக்குமது கேட்டார்க்கு நீதிமார்க்க மாகாது; அது நிற்க, அர்த்த ராச்சியமாயினுங் கொடுத்து உன் பிராதாக்களான தருமபுத்திராதியரை யழைத்துக்கொள்வாயாக எனக்கேட்டு உடன்படாது கதுமென யாது சொன்னான் துரியோதனன்:-*

169. **கழிந்திடுக வாண்டெல்லாங் கட்டவதி யொட்ட**
**வொழிந்திடுக வாளமரே யாக-வொழிந்து**
**மயிர்முனைக்கு மண்கொடேன் மன்னவனே யென்றான்**
**செயிர்முனைக்க ணிற்பான் செயிர்த்து.** (கரு)

*என்று, பின்னுஞ் சொல்லுவான் துரியோதனன்:-*

170. **பொருள்கொடுப்ப ரேனும் புகுமிடம தாக**
**மருவலர்க்கு மண்கொடுப்பா ரில்லை-யொருகுடைக்கீழ்ப்**
**பாராளு மன்னர் பணிகின்ற பைங்கழலா**
**யோராது சொன்னா யுது.** (கசு)

*இவ்வகை வெகுளியெய்தி, மற்று அவர்க்கு இராச்சியங் கொடுப்பதற் கொன்றுங் கருதாது நீ யுரைத்தமையால் யான் அவர்க்கு மயிர்முனைக்கும் மண்கொடேன் என்று பார்வேந்தன் சொல்லக் கேட்டு யாதருளிச் செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-*

171. **தன்னுரிமை யெல்லாந்தன் சிற்றவ்வை தான்பயந்த**
**மன்னவனுக் கீந்தானிவ் வாள்வேந்தன்-றன்னோ**
**டொருகுலத்திற் றோன்றினா னல்லனோ சொல்லாய்**
**குருகுலத்தார் கோவேநீ கூறு.** (கஎ)

*எ–து.– திருதராஷ்டிரனை நோக்கி ஸ்ரீவாசுதேவன் சொல்லுவான்: நின்வங்கிசத்து ஜ்யேஷ்டனாயினா னாதலால், அவனுரிமை முன்னம் பேசிய பரிசே பெறுமாறு நின்புத்திரனுக்குச் சொல்வி நின்தம்பி மகன் தருமபுத்திராதிகள் நீயுமுண்டாயிருக்க இராச்சியம் பெறாது போகாமல் அவனுரிமை பெறுமாறு மன்னவனே! சொல்லுவாயாக என்றும், தன் சிறியதாய் மகனுக்குக் குரு வங்கிசம் உல்லங்கியாமல் இராச்சிய முழுவதுங் கொடுத்துப் பிரமசாரியாய் வாழ்கின்ற ஸ்ரீ பீஷ்ம வங்கிசத் துள்ளாயிருந்து தருமபுத்தி ராதிகளுக்குத் தம்முரிமை கொடாது மறுத்துரைத்தால் உன் புத்திரர்களுக்கும் மித்திர பாந்தவத்தார்க்கும் நிச்சயமே வீமார்ச்சுனர் பிரதிக்கினையாலும்*

தருமபுத்திரன் பொறையினாலும் பழிபாவம் விளையுங் கண்டாய் என்றும் தேவராசன் அருளிச்செய்யக் கேட்டுப் பேசுவதொன் றில்லா திருந்த திருதராஷ்டிரனையும் ஸ்ரீவாசுதேவனையும் நோக்கி யாதுசொன்னான் துரியோதனன்:-

172. உரிமை யிருவர்க்கு மொக்குநா டொன்றை
....... ....... ....... ....... .......
வலியார் வலியாராய் மண்ணாள்வ தென்றா
னொலியார்நன் னாட னுடன்று. (௬௮)

எ-து.- இரண்டு திறத்தோர்க்கும் முன்னுரிமை ஒக்கும்; அதனில், தருமபுத்திர னுரிமை சூதாடித் தோற்ற ஞான்று தந்தான்; அது வேண்டுமிடத்து யுத்தம் பண்ணிக் கொள்ளக் கடவது என்று துரியோதனன் சொல்லக் கேட்டு யாதருளிச்செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-

173. முழுதுடையான் பாகம் பெறானாகின் முற்று
மொழிய வுகந்தனையே யாகிற்-பழுதி
லடிப்பாடு பைங்கழற்கா லைவர்க்கு மைந்து
குடிக்காடு நல்குதியோ கூறு. (௬௯)

எ-து.- இராச்சிய முற்றும் ஆளவுரியானுக்குத் தன்னுரிமையிற் பாதி கொடாயாகில், குசஸ்தலமும் மிருகஸ்தலமும் வருணாபதியும் வரசந்தியும் சய சந்தியும் என்பன பஞ்ச கிராம மாயினுங் கொடுத்து, மற்றுன் பிரதாக்களை யழைத்து நின்னாற் செய்யத்தக்கன வெல்லாம் பொறுத்தி எனப் பேசி மனமகிழ்ந் துரைத்து, மற்று அவரையும் உடன் கொண்டு சேவை பண்ணுங் கருத்துண்டோ பார்வேந்தே யுனக்கு? என்று ஸ்ரீ வாசுதேவன் அருளிச் செய்யக் கேட்டு உடன்படாது வேறு பேசிய துரியோதனனை நோக்கி யாது அருளிச்செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-

174. ஐவர்க்கு மைந்தூர் கொடுத்தாங் கவரொருமை
மெய்பெற்ற தாகின் மிகவினிதாம்-வையகத்தின்
மாறா மெனக்கருதின் மன்னவனே மற்றவருங்
கூறாள்வார் கண்டாய் கொடு. (௭௦)

என்று சொல்லக் கேட்டு யாது சொன்னான் துரியோதனன்:-

175. மாயவனே கேட்டருளாய் மற்றவர்க ளெம்மோடு
தாயங்கொண் டாடத் தரமல்லர்-தூய
மடலவிழுந் தாராய் மறுத்துரைக்கி லின்றெம்
மடலரசர் கண்டா யவர். (௭௧)

இவ்வகை மறுத்ததுரைத்த துரியோதனனை நோக்கிப் பின்னும் யாதருளிச்செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-

176. மன்னர் சபையகத்து மற்றவர்க்கைந் தூர்வேண்டப்
பின்னுங் கொடாமைபல் பேசினையே-நின்னிலைமை
மையறவே செய்து மறுத்தமையால் வாளமர்க்கட்
கையறமா மன்றோ கருத்து. (எஉ)

எ-து.- நீதிமார்க்கம் வழுவ வுரைத்தமையால் உனக்கும் உன் வாயிலுரை பொ. . . . ற் பாதகமாங் கண்டாய்; உன் வங்கிசத்தார்க்கும் உனக்கும் நிச்சயமே பழிபாவம் விளையுங் கண்டாய் என்று ஸ்ரீவாசுதேவன் அருளிச்செய்யக் கேட்டு யாது செய்தான் துரியோதனன்:-

177. கொற்றப் படைமன்னர் சூழக் கொதித்தெழுந்து
வெற்றிமணித் தூணை வெகுண்டடித்தான்-வெற்றிக்குப்
பூணா ரலங்கல் புனையும் பெருந்தேரிற்
கோணாக முன்னுயர்த்த கோ. (எங)

அன்றியும்,

178. தன்னை யறிந்திலான் றன்பிறப்புத் தானறியா
னென்னை யறிந்திலனே கற்றாயன்-பின்னைத்தன்
மெய்யறியா தென்னோ மிகைத்தெழுந்து தானென்னைக்
கையறமா மென்றான் கறுத்து. (எச)

இவ்வகை தூஷித்துப் பேசுகின்றானை நோக்கி யாதருளிச் செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-

179. தானே யரசாள்வான் றானே யெனக்குநேர்
தானே யெனைப்பழிக்குந் தன்மையான்-மானக்
கரைகள்வாய் மீனுகளுங் கங்கைத் திருநாட்
டிருகரையு மாள்வா னினி. (எரு)

இவ்வகை யருளிச்செய்து, துரியோதனன் பேசிய உதாசீன மூர்க்கங் கண்டு மற்றவனுடன் கோபித்துப் பின்னும் அருளிச் செய்வான்: உனக்கு இதுவே கருத்தாகில், எங்களுக்குக் குருக்ஷேத்திர வெளியிலே யுத்தம் ஒழியாமற் செய்யப்பெறும்; யுத்தங்களுக்கு வேண்டும் விவஸ்தை யெல்லாஞ் செய்துகொண்டு சபா மண்டபம் விட்டு நீங்கி ஒரு தனிமண்டபத்து வீற்றிருந்தான் ஸ்ரீவாசுதேவனாகக் கருதுவது. அவ்விடத்து விதுரனை நோக்கி யாது சொன்னான் துரியோதனன்: என்

சோற்றை யிவனுண்டு என் பகைவர்க்கே பக்ஷபாதஞ் செய்து சத்துரு பக்ஷத்தார் தூதனுக்குத் தன் சோறுபோல இன்னடிசில் சமைத்து அவற் கினிமை செய்து வஞ்சித்து வாழ்கின்றான், வேசியர் புத்திரனாவதற்கே தக்கான் என்று இராச சமூகத்தார் முன் புருஷ வாக்கியஞ் சொல்லக் கேட்டு மிகவும் அபிமானஞ் சினங்கன்றிப் புகையெழ விம்மி விழித்து உருமேறென்ன வுடன்றெழுந்து துரியோதனனை நோக்கி யாது சொன்னான் விதுரன்:-

**180. மூத்தான் மகனை முனிந்திளையான் கொன்றானென்**
**றேத்தா வடுவுக் குலோவினேன்-பூத்தாமஞ்**
**செய்தபோர் வேத்தலையுட் டோர்வேந்தே நீயென்னை**
**வைதும் புகுமோ மறித்து. (எசா)**

எ-து.-திருதராஷ்டிரன் மகனை விதுரன் கொன்றானென்றும், அவன் சோறுண்டு அவனை வெகுளியினாற் கொன்றானென்றும் பரராஷ்டிரத்து ஸர்வ க்ஷத்திரியர்க்கும் கேட்டார்க்கும் நீதிமார்க்க மறுத்தமை யாதலால் அது தருமமன்று; அதுவுமன்றி, வீமார்ச்சுனர்க்குப் பிரதிக்கினை பங்கமாய வாக்குப் பரி கொடுக்க வழக்குடையே னாகேன் என்றிவ்வகை வெகுண்டுரைத்து இராச சமுகத்தார்க்கும் பொருந்தவுரைத்து மற்றிவன் சபையின்கட் புகுதேன் என்று பின்னுந் தன் கடவுட் சிலையினை யாது செய்தான் விதுரன்:-

**181. கண்ணுதலான் றன்சிலைக்குங் காகுத்தன் றன்சிலைக்கு**
**மெண்ணுங்கா னேரோ மெழிற்சிலையை-நண்ணி**
**வெறுத்தாங் குரைத்தான்முன் வெவ்வுரையே பேசி**
**யிறுத்தான் விதுரன்கை வில். (எக)**

அன்றியும்,

**182. இன்னாச்சொல் வந்து செவிசுடலும் வேர்த்தெழுந்து**
**மன்னாட் டவரெனக்கு மாறிலா-ரென்னாத்தன்**
**போர்க்களத்து விற்பிடியே னென்றாங் கிறுத்திட்டான்**
**கார்க்குமுதந் தானிடித்தாற் போன்று. (எஉ)**

எ-து.- (இப்படிக் கொத்த திவ்வியமான சிலையினைத்) துரியோதனன் முன்னிருந்த இராசாக்க ளனைவரும் காண வெகுளி பொங்கித் தன் கடவுட் சிலையினை முறித்து இரண்டு துண்டம்பட வெட்டி 'யான் இனி யுத்த பூமியிற் புகுதேன்' என்று பிரதிக்கினை பண்ணி மற்று அவனிருந்த சபாமண்டபம் விட்டு நீங்கித் தன்கோயில் நோக்கிப் போயினான் விதுரன் என்றவாறு. அப்பொழுது ஆங்கிருந்த ராசாக்களில் ஸ்ரீ பீஷ்மன் துரியோதனனை நோக்கி யாது சொன்னான்

183. வில்லை யிறுத்து விதுரன்போய்த் தன்னுடைய
வில்லம் புகக்கண் டிருந்தமையால்-வில்லி
வெறுத்தால் விசயனுடன் வெல்லாரை நீதி
மறுத்தா யுரையாய் மதி. (எகூ)

*எனக்கேட்டு ஸ்ரீ பீஷ்மனை நோக்கி யாது சொன்னான் துரியோதனன்:-*

184. கொன்னவிலுங் கூர்வேற் குருநாடர் தம்பதிக்கு
மன்னவனே யின்றென் மனங்கேட்கி-லுன்னி
யுருத்தெழுந்து சீறு முயர்களிற்றா யீண்டென்
செருத்தருவே னென்றான் செயிர்த்து. (அ0)

*எனக் கேட்டுப் பார்வேந்தனை நோக்கி யாது சொன்னான் ஸ்ரீ பீஷ்மன்:-*

185. நன்றுதீ தெண்ணாதே நாக வரவுயர்த்தோய்
கன்றி யுரைக்கக் கடவையோ-வென்றி
விதுரன்கை வில்லிறுத்தான் வெல்விசயன் றன்னோ
டெதிரம்பு கோப்பா ரெவர். (அக)

*எ-து.- அதிரதரில் முன்றோன்றலான விதுரன் தன் திவ்வியமான வில்லை யிறுத்துப் பின்னையும் யுத்த பூமியிற் புகுதேனென்று பிரதிக்கினை பண்ணிப் போயினான்; இனி, அர்ச்சுனனை இன்று யுத்த பூமியில் வெற்றி கொள்ள வல்லார் யார்? என்று ஸ்ரீ பீஷ்மன் சொல்லக்கேட்டு யாது சொன்னான் துரியோதனன்:-*

186. விதுர னளவேயோ வில்லாட்கண் மற்றிங்
கதிரதரு மாரதரு மாவார்-விதுரன்றன்
வில்வலியோ தோள்வலியோ வேந்தர் சபைநடுங்கச்
சொல்வலியே தென்றான் சுளித்து. (அஉ)

*இவ்வகை வேந்தனுரைப்பக் கேட்டு யாது சொன்னான் வீஷ்மன்:-*

187. சிலைத்தொழிலான் வெஞ்சமத்துச் செஞ்சரங்க ளூன்றிக்
கொலைத்தண்டு வீமன்கைக் கொண்டான்-மலைத்தவரைத்
தாங்கு கணையுடையார் யாரோ தணிவரைபோல்
வீங்கும்பொற் றோளாய் விளம்பு. (அங)

*எ-து.- வீமார்ச்சுன ரென்கிற அதிரதர் வெகுண்டு வந்த காலத்து ஆரோ? என்று ஸ்ரீ வீஷ்மன்*

188. தன்னை நயந்தொருவன் றான்செய் கருமங்க
ளென்ன பயந்தனவோ வென்றாதாய்-தன்னை
மதியா தவரோடு வாழ்வ தென் பின்னும்
விதியாகி லெய்தும் வினை. (அஅ)

*என்றிவ்வகை சொல்லிப் பின்னும் யாது சொன்னான் துரியோதனன்:-*

189. கார்புரியும் வண்மையான் கன்னன் றனித்தேர்முன்
போர்புரியும் வெஞ்சிலைக்குப் போதுமோ-சோர்கமலை
யஞ்சவரால் பாயு மணிவயல்சூழ் நன்னாடா
பஞ்சவரா லாய பகை. (அகூ)

*இவ்வகை கன்னன் கரத்தில் தனுவிருக்க, காண்டீவத்துக்கும் அருச்சுனனுக்கும் வேறு மாறுதேடவேண்டுமோ என்று பேசிய துரியோதனனையும் இருந்த இராசாக்களையும் ஸ்ரீ வீஷ்மனையும் நோக்கி யாது சொன்னான் கன்னன்:-*

190. மண்ணரச ரெண்ண வரிசிலையின் வட்டத்து
நண்ணிப் பொருதகலு நல்லோரை-யெண்ணி
லொருவர்சோ றுண்டங் கொருவர்க்காய்ப் பேசித்
திரிகுவரோ சொல்லாய் தெளிந்து. (அசு)

*அன்றியும்,*

191. யானொருவ னிற்க வெழில்விசயன் றன்னோடு
மாநெடும்போர் செய்து மலைவாரைத்-தானிருந்து
தேடுமா றெங்ஙனே தேர்வேந்தீர் மற்றவனை
நாடுமா றெண்ணீர் நயந்து. (அஎ)

*எ-து.- துரியோதனனையும் ஸ்ரீ வீஷ்மனையும் நோக்கி, கன்னனென்று யானிருக்க அருச்சுனனுக்கு மாறு தேடுவதோ? என்று தேனிருக்கு மலர்த்தாரான் கன்னன் தன் னங்கையோ டங்கை தாக்கித் துங்கமாமுடி துளக்கி நகையரும்பக் கண்டு, துரியோதனனுக்கு மகாப்பிரியஞ் செல்லக் கேட்டு யாது சொன்னான் ஸ்ரீ பீஷ்மன்:-*

192. தானோ விசய னெதிர்நிற்பான் றன்னாண்மை
யான்போ லறியே னியலவேந்தீர்-வான்போர்
பொருதவுணர் சேனையெல்லாம் பொன்றுவித்தான் றன்னோ
டெதிர்பொருவா னீயோ வியம்பு. (அஅ)

*இவ்வகை கன்னன் சொல்லிய கட்டாண்மையுஞ் சாமர்த்தியமும் அது கண்டு துரியோதனன் மகிழ்ந்திருப்ப நீதிமார்க்கம் மறுத்துரைக்கின்றதுங் கண்டு தரியாது சபாமண்டபம் விட்டு நீங்கித்*

தன் கோயில் நோக்கிப் போயினான் ஸ்ரீ பீஷ்மன் என்றவாறு. இவ்வகை ஸ்ரீ பீஷ்மன் உரைத்தது பொறாது போயினானையும், வில்லை முறித்துப் போயின விதுரனையுங் கண்டு, மற்றிங் கினிப் பிரயோசன மில்லை யென்று யாது செய்தான் ஸ்ரீ வாசுதேவன்:-

193. அங்கர்கோன் சொல்ல வரவுயர்த்தோ னுண்மகிழ்ந்து
பொங்கிருந்தார் வேந்தர் புடைசூழச்-செங்கண்மா
றாதாவா யுள்ள தருமன் றனைப்பெற்ற
மாதாவின் பாலணைந்தான் வந்து. (அகூல)

இவ்வகை தேவதேவனும் எழுந்தருளிக் குந்திதேவி யிருந்த கோயிற் புகுந்தானாகக் கருதுவது. இப்பால் ஸ்ரீவாசுதேவன் (குந்திதேவி கோயிற் புகுந்து) மற்றவனை வேறு கொண்டிருந்து யாதருளிச்செய்தான்: ஸ்ரீ வாசுதேவன்-

194. கொற்ற வரவுயர்த்தோன் கோயிற்க ணின்றுபோய்
வெற்றித்தேர் வேந்தன் மகளோடு-முற்றவெல்லா
மல்லாடுந் தோளானம் மாதினுக்கு மற்றதனை
யெல்லா முரைத்தா னெடுத்து. (கூ௦)

எ-து.- துரியோதனனிடைக்குத் தான் தூதனாய் வந்தபடியும், தரும புத்திரன் சொற்படி வழுவாமல் பாதிநாடு வேண்டிப் பெறாதவாறும், பஞ்ச கிராமம் வேண்டத் தராததும், மயிர்முனை குத்த மண் கொடே னென்றவாறும், அவன் வன்மையினாற் சிறுதாதையைப் பரிபவம் பண்ண முனிந்து போய் அவன் மூரிவில்லை முறித்தவாறும், கன்னன் பேசிய கட்டாண்மையும், மற்றும் உற்ற வார்த்தையெல்லாம் உரைத்துப் பின்னும் யாதருளிச் செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-

195. எரிகதிரோ னல்கு மிளங்காத னின்னாற்
பொருபுனலாற் போக்குண்டான் கண்டாய்-குருபதிக்கு
வெற்றியுமாய்த் தோழனுமாய் வீமற்கும் பார்த்தற்குந்
தெற்றியுமாய் நின்றான் றெரிந்து. (கூக)

எ-து.- நீ கன்னியாயிருந்த காலத்து ஆதித்தியபகவானாற் றரப்பட்ட புத்திரனை வடுவென் றஞ்சி அர்த்தராத்திரியிற் பேராற்றிடை மிதவைப் பேழையினிட்டு ஒழுக்கின இளங் குமாரனும் போய்க் கங்காசலம் புகுமளவில், திருதராஷ்டிரன் றேர்ப்பாகன் ப்ரீதிகாமயன் எடுத்து வளர்த்து நாம கரணந் தரிக்கையில், ஆதித்தியபகவான் இட்ட புத்திரனாகையால் அசரீரியாகத் தோன்றிக் கூறியபடி கன்னன் என்றுறு நாமகரணந் தரித்து வளர்கின்ற நாளகத்து, பரசுராமனால் ஆயுதசிக்ஷை பயிற்றித் திவ்வியாஸ்திரங்கள் வல்லவாறும், அது கண்டு துரியோதனன் தனக்குத் தோழனாக்கிக்கொண்டு அபிஷேகம் பண்ணி அங்கவளநாடு கொடுத்து அங்கராசனென்று அபிஷேக மானவாறும்,

துரியோதனனுக்கு மிகவும் அந்தரங்கனாய்ப் பெருந்தே ராட்களில் முன்றோன்றலாய்ப் பாண்டவர்குப் பழிபாபம் விளைக்கின்றான் கண்டா யென்றும், சொல்லி, அவனை நீ அன்னியனென்று கருதாது நின்புத்திர னென்னுமது மிகத் தெளிந்து மற்று அவன்பாற் போய்ப் பேசி, 'தம்பிமாருடன் கூடித் தரணிதனை யாள்வதற்கு வம்பவிழ்தார் மன்னா வா' என்று அழைத்துக்கொண்டு போது; வந்திலனாகில் இங்ஙனஞ் சொல்லுவாயாக என்று பின்னும் யாதருளிச்செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-

196. ஆர்த்தபுக ழுங்கர்கோன் றான்வளர்த்த மாநாகம்
பார்த்தன்மேற் பட்டாற் பரிசழிக்கும்-போய்த்தனையே
லெச்சிற் கணையென் றிரண்டாவ தெய்யாம
விச்சித்து வேண்டான்றா னிங்கு. (சூ௬)

எ-து.-அவனை யழைக்க வந்திலனாகில், நினக்கொரு வரந்தருவாயா கென்று வேண்டிக் கொள்வாய்; வரமாவது: அருச்சுனன் பாண்டவனத்தை யெரிமூட்டிய ஞான்று தன் சரீரம் அறுப்புண்டு வல்லவாறு பிழைத்துப் போந்து கன்னன்றன் பக்கற் சென்றடைந்து மற்றவனை யாசிரயித்து அருச்சுனனுக்குப் பகையாக வாழ்கின்ற தசுவசேன னென்னும் மாநாகத்தினை இமையவராலும் வெல்லவரிது; மற்றதனை அருச்சுனன் மேல் இரண்டாவது எச்சிற் கணையாகத் தொடானாக வேண்டிக்கொண்டு வருவாயாக என்று ஸ்ரீ வாசுதேவன் அருளிச்செய்யக் கேட்டு வேல்நெடுங்கண் அருவிசோர விம்மிவிம்மி லெய்துயிர்த்து யாது சொல்லி யாது செய்தாள் குந்திதேவி:-

197. மாயனீ செய்திட்ட வஞ்சனையின் மாயத்தை
யேதோ வறியே னெனக்குழைந்தாள்-சேயாறு
தேக்குந்திச் சந்திடறிச் சேயணைக்குந் தண்பணைசூழ்
மாக்குந்திக் கோமான் மகள். (சூஎ)

அன்றியும்,

198. என்னை யறிந்தாயே யென்மக னாமாறு
முன்.. முணராதே மூடினாய்-மன்னுங்
கடலைவல மாக்கடைந்த காரணனே யென்மு
னுடலவலஞ் சொல்லா தொழி. (சூஅ)

என்றிவ்வகை சொல்லிப் பின்னும் யாது சொல்லிப் பிரலாபித்தாள் குந்திதேவி:-

199. வைய மறியாமே மந்திரத்தின் வாய்ப்புக்கண்
டையா வுனைப்பெற்ற வப்பொழுதே-பையவே

பேழையி னுட்செறித்துப் பேராற்றிற் போக்கினேன்
வாழுங் குடிபழுதா மென்று. (கூரு)

*அன்றியும்,*

200. பொங்குமுலைப் பாலூட்டிப் பூந்தடங்கண் மையெழுதி
மங்கையர்பா ராட்ட வளராதே-யெங்குநின்
பானாறு மின்சொற் பவளவன்ன வாய்முத்தை
யானாரப் பெற்றிலே னாங்கு. (கூசு)

*என்றிவ்வகை சொல்லிப் பிரலாபித்துப் பின்னும் ஸ்ரீ வாசுதேவனை நோக்கிச் சொல்லுவாள்: இந்நெடுநாளும் என்னையு மவனையும் மாதா, மகன் என்று அறிந்த நீ முன்னம் உரையாது இன்று உரைத்தாய்; எம்பெருமான்! இனி அவன்பால் யான் போய் அவனை வேண்டிக்கொண்டு அசுவசேனனை விலக்கினால் அவன் படுமாதலால் எனக்கு அவனும் மகனன்றோ எனச் சொல்லி நின்றாளை நோக்கி யாதருளிச்செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-*

201. ஐவர்க்கு மோருயிரே யைந்துறுப்பா மாதலா
லைவருஞ் சாகை யழகிதோ-வைவே
லொருவனுமே சாகை யழகன்றோ வென்றான்
றிருமகள்சேர் மார்பன் சிறந்து. (கூள)

*எ-து.- அருச்சுனனைக் கொலையில் ஐவருயிரும் நாசமாமாதலால் இவர்கட்குச் சத்துருவாகிச் சமைகின்ற கன்னனொருவனுமே சாகை நன்று என்றருளிச் செய்யக் கேட்டும் நின்றவனை முகநோக்கி யீண்டன் கன்னன் பாற் போவாயாக என்று தெருட்டி மற்று அவள்பால் விட்டு நீங்கி யாது செய்தான் ஸ்ரீ வாசுதேவன்:-*

202. கொண்ட ஸிறக்கோமான் குந்திக் குரைத்தருளி
விண்டவரைவெல்வி துரன்வீடணைந்தா-னெண்டிறல்சேர்
மையாரு நெஞ்சத்து வாளரவ முன்னுயர்த்தோன்
பொய்யா சனமிடவே போந்து. (கூஅ)

*இவ்வகை குந்திதேவிகோயில் விட்டு விதுரன்கோயிற் புகுந்தான் ஸ்ரீ வாசுதேவ னென்றவாறு, இப்பால்,-*

203. வைய மிருள்பரந்து மாகதிரோன் போய்வீழ்ந்து
வெய்ய வொளிபோய் விளங்கொளியாய்த்-துய்யவரை
மின்னார்ந்த பைம்பூண் விறல்வேந்தர் தாஞ்சூழ
வின்னாங் கிருந்தா னிசைந்து. (கூகூ)

எ-து.- அர்த்த ராத்திரியின்க ணிறையோலக்க மிருந்து ஸர்வ க்ஷத்திரியர்க்கும் விடைகொடுத்துத் துரியோதனனும் துச்சாதனனும் கன்னனும் சகுனியுந் தம்மிற் கூடியிருந்து யாது சிந்தித்தாரோ வெனில்:-

204. மதித்த வரக்கரையு மல்லரையு முள்ளாற்
பதித்த படுகுழியிற் பாய்ச்சிக்-கொதித்தார்
குலங்கோடல் வல்லானைக் குங்குமத்தோள் பற்றி
[1]விலங்கிடவே யெண்ணினான் வேந்து. (௧௦௦)

எ-து.- ஸ்ரீ வாசுதேவனை நிலவறையிலே வீழ்த்து வஞ்சனையால் வலைப்படுத்திப் பலகீனம் பண்ணிச் சிறையில் வைத்தாற் பாண்டவர்க்கு வேறொரு களைகண் இல்லை யென்றும், இராச்சியம் நமதாகைக்குச் சந்தேகமில்லை யென்றும், பாண்டவரைக் கொன்றாற் பின்பு ஸ்ரீ வாசுதேவனை விடுத்துப் போக்குமது கருமமென்றும், இதுவே காரிய மென்றுந் துணிந்து, அர்த்த ராத்திரியில் யாவருமறியாமற் சபாமண்டபத்தி லொரு நிலவறை பறித்து, பதுமநாபனை வீழ விடுத்து விழுந்த பொழுதே எழுந்திராமல் வேண்டும் இராக்கதரையும் அதனுள் நிறுத்தி, மண்டப முழுதும் அழகுறச் செய்து, ஸ்ரீ வாசுதேவனை யழைத்து வருவதாகச் சஞ்சயனைப் போக்கி விடுப்ப, மற்று அவனும் விடைகொண்டு செல்ல, இராத்திரி சேஷங் கழியுங் காலத்து யாது செய்தான் ஸ்ரீ வாசுதேவன்:-

205 பொங்கொலிநீர் வண்ணனுமே போதவான் பொற்படைமு
னெங்கு மெழுச்சிப் பணைமுழங்கச்-செங்கதிரோன்
பொன்னெடுந்தே ரேறாமுன் போந்தருளச் செங்கண்மா
றன்னெடுந்தே ரேறினான் றான். (௧௦௧)

எ-து.- ஸ்ரீவாசுதேவன் பாண்டவரிடத்துக்குப் போவானாக ஆதித்திய பகவா னுதயகாலத்துக்கு முன்னமே தன் அணி நெடுந்தே ரேறி யெழுந்தருளு மளவில், சஞ்சயன் வந்து திருவடி தொழுது யாது விண்ணப்பஞ் செய்தான்:-

206 வென்றி மதயானை வேல்வேந்தன் றூதனா
னென்று தொழுதா னெதிரேசென்-றன்றுலகை
[2]மூவடியாக் கொண்டளந்து மூவுலகு முண்டுமிழ்ந்த
சேவடியான் பொற்பாதஞ் சேர்ந்து. (௧௦௨)

இவ்வகையே சென்று பணிந்து பின்னும் யாது விண்ணப்பஞ் செய்தான் சஞ்சயன்:-

---

(பா-ம்.) 1. ஷிலங்கோட லெண்ணினான். 2. மூவடியாற் கொண்டு.

207. மன்னனுரைத்தபடி மாயனே நீ முனியாய்
முன்ன முரைத்த மொழிவழியே-சொன்னதொரு
காரியமே செய்யக் கருதி யெனைவிடுத்தான்
காரியமே தென்றறியேன் காண். (௨௦௭)

*அன்றியும்,*

208. எம்பெருமான் பேசுமதோர் காரியமுண் டென்றரசர்
தம்பெருமா னென்னைத் தனிவிடுத்தா-னென்றுசொல
மன்னாகத் தண்டார் மணிவண்ணன் றன்றேரைப்
பின்னாக விட்டான் பெயர்ந்து. (௨௦௮)

*இவ்வகை தேவராசனும் மனமகிழ்ந்து மற்றவன் கருத்தறிந்து போவானாக வியாகுல வேந்தனாய்த் துரியோதனனிடைக் கெழுந்தருளக் கண்டு, பார்வேந்தன் துரியோதனன் யாங்ஙன மிருந்தானோவெனில்:-*

209. பாம்புயர்த்த வெல்கொடியான் பக்கம் பலநூறு
காம்புயர்த்த வெண்கவரி காலசைப்பப்-பூம்புயத்துத்
தெட்டரசர் வட்டந் திறைகொணர வீற்றிருந்தான்
கட்டரசர் வட்டங் கலந்து. (௨௦௯)

*எ-து.- குருகுல வேந்தருங் கோவீரருள்ளாரும் புடைசூழ்ந்து சேவை பண்ண, திசாமுகந் தோறுங்கற்றை மணிக்கவரி காலசைப்ப, வெற்றியுடன் சகுனியும் துச்சாதனனுள்ளிட்ட தொண்ணூற்றொன்பது தம்பிமாரும் கன்னனும் சிந்துநாடனும் மனமகிழ்ந்து வஞ்சனைத் தொழில் கருதியிருப்ப வீரசிங்காதனத்து வீற்றிருந்தான் இராசராசன் துரியோதன னென்றவாறு; அவ்வகை யிருந்த துரியோதனன் ஸ்ரீ வாசுதேவ னெழுந்தருளக் கண்டு யாது செய்தான்:-*

210. தூண்டுபரித் தேரான் றுவரா பதிக்கிறைவன்
மீண்டு மொருகால் விரும்பிவர-மூண்டவினை
மையா சனத்தேரில் வாளரவ முன்னுயர்த்தோன்
பொய்யா சனமிட்டான் போந்து. (௨௧௦)

*எ-து.- நிறை சபையின்கண் ஸ்ரீவாசுதேவ னெழுந்தருளக்கண்டு வஞ்சிப்பான் வேண்டி முதிர்வினைச் சூழ்ச்சியி விட்ட முதலரியாசன மெடுத்து நிலவறை மிசை மேலிட்டு ஸ்வஸ்தி வசனஞ் சொல்லி யினிதுசெய்யக் கண்டு ஸ்ரீவாசுதேவனும் அறிந் தெழுந்தருளி (யிருக்குமளவில்) வந்த கரும முற்றுமளவும் பூவில் வண்டுறைந்தாற் போலத் தன் திவ்விய சக்தியினை மேலொடுக்கி மற்றவ னிட்ட பொய்யாசனத்திடை யெழுந்தருளி யிருக்குமளவில், இருந்த ஆசனம் கீழே தாழ்ந்து நிறநிறென நிலனெளியப் புகுதல் கண்டு திருப் புன்முறுவல் செய்து யாது செய்தான் ஸ்ரீவாசுதேவன்-*

211. வஞ்சனை யென்று மணியா சனந்தன்னை
யஞ்சன வண்ண னறிந்தருளிச்-செஞ்சுடரைப்
பூண்டான் பொறிபிதிரப் பொன்முடிபோ யண்டமுற
நீண்டான் விழித்தா னெருப்பு. (௧௦௭)

## (விசுவரூப வருணனை : அகவல்)

212. வஞ்சனை யறிந்து செஞ்சறி வுற்ற
வூழியிற் காயெரி யுடன்றது கருங்கட
லோதமும் விசும்பு முடனுற நிமிர்ந்தது
வானுந் திசையு மாயிருள் பரந்தது
நீல மேனி நிமிர்ந்தெழுந் ததுவே
மறைத்தவ ணிருத்திய மல்லரு மரக்கரு
மார்த்தபொற் பாத மெய்தலு மதனொடு
வியன்பா தலத்து வீழ்ந்தனர் பலரே
யருகணைந் துலகத்
தொல்பகை யழியப் பல்வகைப் பொருதிறற்
பரவைநீர் கெடுத்துப் பணிந்தனர் பலரே
பொடித்தன மயிரே பொங்கின புகையே
கடித்தன வெயிறே மடித்தன வாயே
நிமிர்ந்தன புருவ மலர்ந்தன நாட்ட
நெற்றித் தனிக்க ணெருப்பொடு பிறங்கிற்று
மற்றைச் செங்கண் மயங்கெரி யுமிழ்ந்தன
பாயிரு ணீக்கும் பல்கதிர்த் திரளென
வாயிரந் தடக்கை
திசைமுகம் பொதியச் செறிந்தன வவைதாந்
திண்சிலை குனிப்பன செஞ்சரந் தெரிவன
வெங்கணைத் தூணி வீக்குவன வெஞ்சுடர்
வாளுறை கழிப்பன கேடக மலைப்பன
சூல மேந்துவ தோமரஞ் சுழற்றுவ
கணிச்சி கொள்வன கப்பண மெடுப்பன
வணிச்சுடர் நெடுவா ளொடுவே லடுப்பன
மழுவொடு தண்டு வகைபெற நிமிர்ப்பன
சத்தி யோச்சுவ சங்கந் தொனிப்பன
பிண்டி பாலம் பெயர்ப்பன
வொண்டொ ழிற்கணை யோட்டி யதிர்ப்பன
வடிநுதிக் குந்தம் வலமிடம் வாங்குவ
முரண்வலி முன்கை
வளைய மோச்சுவ வச்சிர மெடுப்பன

திரளிருப் புலக்கை திண்ணென வோச்சுவ
சுடரொளி [1]யாழி சுழற்றுவ வடன்முழங்கு
வலம்புரி யார்ப்பன வன்பிடி முழக்குவ
பொலங்கழல் விரிப்பன பொன்முடி திருத்துவ
வசையெழப் புகைப்பன புகையெழப் பிசைவன
பூங்கச்சு வரிப்பன பூங்கழ லெடுப்பன
தூங்கெழின் மணிவிரற் சுட்டிக் காட்டுவ
பூங்கழ [2]லடிகொடு புரள மிதிப்பன
பிடிக்கலுற் றடர்ப்பன புடைக்கலுற் றோச்சுவ
தோளொடுதோள் கொட்டுவ தாளொடு [3]தா ளடிப்பன
வளைய வாங்கிய வாயிரந் தடக்கையும்
விண்கெழு படையொடு விசும்படைந் தனவே

காள மாமுகி விலங்கி மற்றவன்
றோளு மாகமுஞ் சூழ்ந்துநின் றனவே
நீலச் சோதி நிலையுற நிமிர்தலிற்
பகலொளி யிழந்தது பரிதிமண் டிலமே
முதலொரு விசும்பி னந்தரர் மயங்கிப்
புகலிட மிலையெனப் புலம்பிநின் றனரே
தோண்மிசை வீழ்ந்த சூறை மாருத
மீமிசை விசும்பின் மிசையெடுத் ததுவே
முடுகலிற் றாரகை கழன்றுதா மெரிந்தன
வானக் கங்கைநீர் சுழிதெரிந் ததுவே
தேவர் கோமான் மாமுகிற் பொன்னகர்க்
கற்பகச் சோலை பொற்பழிந் [4]தனவே
பாதாள மஞ்சித் துண்ணென்று துளங்க
நாகந் துளக்குற
விசும்பிற் றேவருந் திகைப்ப
மேனிலை யழிந [5]பண்பெயர்ந் ததுவே
உம்ப ரிருக்கு முலகு மயங்கப்
பம்பரம் போல வவனி நடுங்க
ஊழியி னிறுதி யுடன்றது போலு
மதனப் புத்தேள் பொடிபட விழித்த

*(பா—ம்.) 1. ஆழி வட்டஞ் சுற்றுவ, வடலது முழங்க. 2. அடிக்கொடு. 3. தாண்டிப்பன். 4. தனவியன். 5. மண்பெயர்ந்.*

[1]நுதல்பெறு நாயனத் தொருபெருங் கடவுளு
நான்முகத் தொருவனும் வானகத் தரசனு
மறுமுகத் தொருவன முறுசுடர்ப் பரிதியுங்
குளிர்மதிச் செல்வனு மிருநிதிக் குபேரனும்
வானுறை தேவருங் காயெரிக் கடவுளு
மியமனும் வருணனு மெண்வகை வசுக்களும்
வீரப் பெண்மயின் மெல்லிய லெழுவரும்
போர்விறற் சிலைக்கைப் பொருகயற் கண்ணியு
மோடியு மக்களு மூவகை முனிவரும்
வானோ ரீட்டமு மன்னிய கின்னர
ரேனோர் விஞ்சையர் தம்முட னஞ்சலி
யவணரு மரக்கரு மதிர்ந்த வுயர்நிலை
யண்ட கோளகை நிறையவந் தீண்டி
மாதவா முனியேன் மாயா முனியேன்
மூவகை யுலகின் முதல்வா முனியே
யிமையவர் மகிழ வீரடி தம்மான்
மூன்றுலகுஞ் சுருக்கிய முதல்வா முனியேன்
மூவா மருந்து வானோர்க்கருளிய
தேவா முனியே நிருமான் முனியே
லென்றெத் திசையும் வணங்குமெல் லைக்கட்
பொருந்தா மன்னனோ டிருந்த வேந்தரிற்
கங்கை மகனு மம்பிகை சிறுவனு
மங்க நாடனு மடுபோர் விதுரனுந்
துரோணனு மகனுந் தோன்றன் மாமனுஞ்
சிந்து நாடனுந் திரிகத்த ராசனுங்
குருகுலக் கேண்மை கொண்டோர் கூட்டமு
முயர்நிலத் தரசர் வந்தோ ரீட்டமும்
வாட்ட முற்ற மனத்தின ராக
நாட்ட மில்லா நலமிகு வேந்த
னயைனை யழகனை யாயிரம் பெயரனைக்
கைகுவித் திறைஞ்சிக் காதன்மிக் குரைப்பான்
சேண்பரந் துயர்ந்தநின் றிருவுரு வடிவைக்
காண்புறு வண்ணங் கண்ணிணை யருளென
வாதி நாயகன் பேரரு ளாளக்
கதுமென விரித்தது காவலன் கண்ணே

---

*(பா—ம்.) 1. நுதற்பெரு நயனத்.*

மாதிர நெருக்கி வான்முக டுரிஞ்சிப்
பூதல நெருக்கிப் பொலிந்த மேனியைப்
பார்க்கும் பணியும் பரவச மாகி
வேர்க்குங் கண்ணீர் வீழ்த்துந் தானே
பாடு மன்னரைப் பரிவுடன் றழுவும்

வேந்தருந் தானும் வேதியர் குழாமுந்
தனித்தனி யெழுந்து தடக்கை கூப்பித்
தொழுத கையினர் துளங்கிய நெஞ்சினர்
முழுமெயுஞ் சிலிர்த்து முழுதாண் மயிரினர்
தலைமிசை யேறிய கையின ராகி

வளங்கெழு மாசனந் துளங்க வெழுந்துநின்
றெந்தாய் போற்றி யிறைவா போற்றி
மன்னா போற்றி மணாளா போற்றி
யஞ்சன வண்ணத் தரியே போற்றி
குஞ்சரங் காத்த கோவே போற்றி

கஞ்சனை யடர்த்த கண்ணா போற்றி
கருங்கடற் றுயின்ற காரே போற்றி
யாயிரந் தோளுடை யடுபோர் வாணனை
நேமியிற் றுணித்த நெடியாய் போற்றி
பேய்முலை யுண்ட பிரானே போற்றி

பேருல களந்த மாலே போற்றி
மருதிடைத் தவழ்ந்த மாயா போற்றி
மாக்கடல் கடைந்த மகேசா போற்றி
பெருவரை யெடுத்த பிரானே போற்றி
சங்கொடு சக்கரந் தரித்தாய் போற்றி

[1]தண்டொடு சார்ங்கமுந் தனிநாந் தகமும்
பிண்டி பாலமும் பெருவச் சிரமு
மெண்டிசை நிறைந்த வெம்மான் போற்றி
யண்டமும் விசும்பு மகலிட மெல்லா
முண்டுமிழ்ந் தவனே யொருவா போற்றி

திருமறு[2] மார்பத் திருமால் போற்றி
தீவினை கெடுக்குஞ் செல்வா போற்றி
யருமறை [3]தேடு மடியாய் போற்றி

*(பா-ம்.) 1. தண்தொடு மழுவ தெடுத்தாய் போற்றி.*
*2. மார்ப திருமால். 3. தேடுமிணை யடியாய்.*

யடியவர் வினைகெட வருள்வாய் போற்றி
சென்றொரு தூணிடை நின்றாய் போற்றி
சிறுவனை யுகந்த செல்வா போற்றி
யாயனொடு தேவர்க் கரியாய் போற்றி
மலர்மகள் புணர்ந்த மணாளா போற்றி
நிலமக ளிடந்த நெடியாய் போற்றி
திருவரு டருவாய் திருவடி போற்றி
தேவ னாவதுந் திருமா லாவது
மூவுல களந்த முதல்வ னாவதுஞ்
சிறுகுறி யாள னறியாது செய்தன
பொறுகுறி [1]யன்றோ பொறுத்தரு ளென்றென்
றெத்திசை யமரரு மினத்துட னேத்திப்
[2]போற்றியே புகழச் சீற்றமு மாறி
யண்டமும் விசும்பு மகிலமு மனைத்தும்
போக்கற நிமிர்ந்த வாக்கையைச் சுருக்கினன்
முரணியல் பெருவலி யிரணியன் றனது
கேழ்கிள ராகங் கிழியக்
கூருகிர் வாய்ந்த கொடுந்தொழி லோனே. (கOஅ)

213. கண்மூன்றுந் தீப்பிறக்கக் கைகளோ ராயிரமாய்
விண்ணார வெய்யோ னொளிமறைக்க-மண்வேண்டித்
தூதுவனாய்ப் போந்து துரியோ தனனிடைக்கே
மாதவனார் தாஞ்செய்த வாறு. (கOகூ)

*அன்றியும்,*

214. நெருப்பெழுந்து நீறாக நின்றமரந் தீந்து
பொருப்பிடிந்து பார்பிளந்து பொங்கித்-திருப்பிரியாக்
கார்வண்ணன் சீறக் கனைகடலுங் கார்விசும்பு
நீர்வண்ண மற்றனவே நின்று. (ககO)

*இவ்வகை துரியோதனனிடத்து ஸ்ரீவாசுதேவன் வஞ்சனை யாசனங் கண்டு மறுத்தெழுந்து நின்ற விசுவரூபங் கண்டு விண்ணவருந் தொழுத கையினர் துளங்கிய நெஞ்சினராய் அதிசயித்துத் தீப்பிறக்கக் கண்டருளி, தருமபுத்திரன் பிரதிக்கினை வழுவாமலும் மற்றவ ரேத்திய மகிழ்ச்சியும் சிறிது கருணைதோன்றி, திருமேனியிற் சீற்றத்தோ டெய்திய கூற்றமுஞ் சீற்றமு மாறித் தரணிபாலனாய் மானிடவேஷத்தனாய் வீற்றிருந்தான் தேவ தேவன் ஸ்ரீவாசுதேவ னென்றவாறு. அப்பொழுது ஸ்ரீ வாசுதேவனை நோக்கி யாது சொன்னான் திருதராட்டிரன்:-*

*(பா-ம்.) 1. என்று. 2. போற்றிப் புகழச் சீற்ற மாறி.*

215. உற்றொன் றறியே னுனதொளி கண்டகண்
மற்றொன்றுங் காணாமல் வாங்கென்னக்-கொற்றவனும்
பாவொன்று நீண்ட பரஞ்சுடரோன் பார்த்தருளி
வரவென்று கொண்டான் மகிழ்ந்து. (௧௧௬)

*இவ்வகை விண்ணப்பஞ்செய்த திருதராட்டிரனுக்குத் திருஷ்டிபோக அருளிச்செய்து நின்றான் ஸ்ரீவாசுதேவன். அப்பொழுது துரியோதன னிலைமை யாதாயிற்றோ வெனில்:-*

216. பேர்ந்தில னாசனத்துப் பேசிய பேராண்மை
சோர்ந்திலன் கையாற் றொழுதிலன்-வாய்ந்த
மதுவொன்று மாலை மணிநீண் [1]முடியா
னிதுவன்றோ வீரமா மாறு. (௧௧௭)

*எ-து.- ஸ்ரீவாசுதேவன் விசுவரூபங் கண்டு சிறிதும் மனந்துளங்காது விளங்காசனத்துத் துரியோதனன் யாது சொன்னானோ வெனில்:-*

217. அண்ட முறநிமிர்ந்த வாயன் றிருமேனி
கண்டு வயவேந்தன் கைமறியா-வெண்டயிர்க
டோய்ந்திருந்த வாறே துவக்குண்டாற் கிம்மாய
மேய்ந்திருந்த தென்றோ னெடுத்து. (௧௧௮)

*இவ்வகை உதாசீனம் பண்ணி வேறு பேசியிருந்தான் துரியோதனன்.*

218. தோளாண்மைப் பாண்டவர்கள் சூளுற்ற சூளுறவு
வாளா தொழிகை வழக்கன்றோ-கோளி
லெழுக்களைப்போ லேந்தியதோ ளெல்லீரை யும்யான்
புழுக்களைப்போற் றேய்த்த பொழுது. (௧௧௯)

*எ-து.-பாண்டவருடன் முன்னம் பேசிய ஞான்று, துரியோதனனுடன் இராச்சியம் வேண்டினால் அவனால் வரும் அனாசார முற்றும் எமக்காகப் பொறுத்தருள்வாயாக என்று வரங் கொண்டபடியாலும் இவ்விடத்து நிகழ்ந்தனவெல்லாம் பொறுத்தது என்றிவ்வகை யருளிச்செய்து துன்மார்க்கன் துரியோதன னிருந்த சபாமண்டபம் விட்டு நீங்கிப் போதுமிடத்துப் பின் வந்த பரராஷ்டிரத்து க்ஷத்திரியர்க்கும் விடைகொடுத்துக் கன்னனையும் அசுவத்தாமாவினையுங் கைப்பிடித்துச் சிறிதிடம் போந்து கன்னனைத் தனிக்கொண்டிருந்து யாதருளிச்செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-*

---

*(பா-ம்.) 1. முடியாற் கிதுவன்றோ.*

219. முன்னமற் றந்த முழுதுடையான் றன்பாகம்
பின்னுமவை யான்வேண்டப் பெற்றிலன்கா-ணன்னதிறந்
தாரா தொழிந்ததற்குச் சான்றுநீ யென்றுரைத்தான்
காராரும் வண்ணன் கறுத்து. (௧௧௫)

*என்றிவ்வகை சொல்லிப் பின்னுந் துரியோதனன் சொன்னது பாராமற் பலவுஞ் சொல்லி, பின்பு உனக்கோர் வாக்கியஞ் சொல்லக் கேட்பாயாக என்று யாதருளிச்செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-*

220. பௌவத் தொளிவிரிவான் றன்மகற்குப் பாண்டவர்க
ளைவர்க்கு முன்றோன்ற [1]லாமாறு-பௌவத்தைச்
சேறாக நீர்கலக்கித் தெள்ளமுதங் கொண்டபிரான்
வேறாகச் சொன்னான் விரைந்து. (௧௧௬)

*எ-து.- கன்னியாய் வளர்கின்ற காலத்து ஒரு காரணத்தினால் துர்வாச மகரிஷி ஆங்கு வந்தவாறும், அவனை அவள் பூசித்தவாறும், அவன் பிரிய மெய்தியவன் ஞானத்தினாலே குந்திதேவியை நோக்கிச் சொல்லுவான்-'பாண்டு மகாராசனுக்குத் தேவியாக விதியுண்டு; யானுனக்குப் பஞ்சமந்திரம் உபதேசித்து விடுகிறேன்; நீ நினைந்தபொழுது ஐந்து தேவதைகள் சான்னித்தியமாம்' என்றறைந்து மந்திரம் பிரசாதித்து, 'இந்த மந்திரத்திலே ஒரு மந்திரத்தை ஆதித்த பகவானை நோக்கி உச்சரிப்ப அவனும் பிரத்தியக்ஷனாய் உனக்கு வரப்பிரசாதந் தரும்' என்று மகா முனி போனவாறும் கூறிப் பின்னும் அருளிச்செய்வான்: மகாமுனி சொன்ன வசனம் பிழையாது மந்திரத்தின் சத்தி காண்பாளாகிக் குந்திதேவியும் ஆதித்த பகவானை நோக்கி வேண்டிக்கொள்ள, யாது செய்தானோ வெனில்:-*

221. மாமறையோன் றானுரைத்த மந்திரத்தின் வாய்ப்பறிய
மாமறையோன் வாய்மை வழுவாதே-மாமறையோன்
சொல்வழியே சிந்தித்தா [2]ளப்பொழுதே சூரியனார்
நல்வழியாய்த் தோன்றினார் நன்கு. (௧௧௭)

*அன்றியும்,*

222. குந்தி வளநாடர் கோமான் குலப்பாவை
முந்தியுனைப் பெற்று முகம்வாடி-வந்தங்கோர்
பேழையி னுட்செறித்துப் பேராற்றிற் போக்கினா
ளேழை வடுவுக் கிளைத்து. (௧௧௮)

*இவ்வகை ஆதித்திய பகவான் பிரசன்னனாய்த் தன்னை யொப்பதொரு தேசுடைய புத்திரனைக் கொடுப்பக் கண்டு மற்று*

*(பா-ம்.) 1. ஆமாறும். 2. சூரியனா ரப்பொழுதே.*

அவளும் திவ்வியத்துடன் பிரசாதம் பெற்றுக் கன்னபாகத்தாற் பிறக்கப் புத்திரனைப்போலக் கொண்ட வெல்லைக்கண், 'கன்னியளவாயிருக்க இது ஆகாது' என்று கூறிக் குந்தி போச னுள்ளிட்டார் வந்து, நம்மைக் குருவங்கிசத்தார் தூஷிப்ப வங்கிசவீன மெனத் தெரிந்து, மற்று இந்தப் புத்திரனை ஒரு மிதவைப் பேழையிற் பெயர்த்திப் பிரளயமாகப் பெருகாநின்ற ஆற்றிடை மந்திரத்துப் போக்கினார். அதுவும் போய் ஆதித்திய பகவானால் வரம்பெற்றுப் பிரமாதப்படாமல் அலைகளான் மோதுண்டு கங்காசலத்துப் புகுமதனைக் கண்டு திருதராட்டிரன் சூதன் கதுமென அதனைப் பிடித்துக் குழவியெனத் தெளிந்து தனக்குப் புத்திரனாக வளர்த்தவாறும், பின் நாமகரணந்தரிக்கு நாளகத்து ஆதித்திய பகவான் அசரீரியாய்க் கன்னனென்று நாமகரணந் தரித்தமையும், பின்பு பரசிராமனால் ஆயுத தீக்ஷை பண்ணியவாறும், அது கண்டு துரியோதனன் தோழமை கொண்டு அங்கவள நாட்டுக்கு அபிஷேகம் பண்ணியவாறும் அது கொண்டு பூர்வமானவை யுரைத்து, இனி உன் பிராதாக்கள் ஐவரையும் ஈண்டன் போய்க் காண்பாயாக என்றும், உன் மாதா குந்திதேவியும் நின்னை வேஷமறியாது வளவளாவி அநேகங் காலம் புத்திரசோகமா யிருக்கின்றாளென்றும் உணர்த்தி, நின் கண்ணாகிய தருமபுத்திராதிகளை ஈண்டன் போய்க் கண்டு மற்று அவரைச் சேவை பண்ணுவித்துக் கொள்வாயாக என்று ஸ்ரீ வாசுதேவன் அருளிச்செய்யக் கேட்டு யாது சொன்னான் கன்னன்:-

223. இன்று பிறப்பறிந்தே னென்னாம் பிறந்தார்பாற்
சென்று தெரியிற் பிழையன்றோ-வென்றிபுனை
தோழற்கே யென்னுயிரைத் தோற்பேன் செருக் [1]களத்தே
யாழித்தேர் வித்தகனே யான். (கககூ)

அன்றியும்,

224. யான்பிறந்து வந்து வளர்ந்தபி னெஞ்ஞான்றுந்
தேன்பிறங்குந் தாரான்சோ றுண்டறியே-னூன்பிறங்க
வெல்லாருஞ் சொல்லுஞ்சொ லென்செவியுங் கேட்குமோ
மல்லாடுந் திண்டோளாய் மற்று. (கஉ0)

அன்றியும்,

225. என்னை யறிந்ததற்பி னின்றெனக்குச் செய்தவற்றை
மன்னவனே மற்றறியா தாரில்லை-யென்னையோ
வென்பிறவி நீயுரைத்தா லேகுவனோ வென்னுடலைச்
சின்புலங்க டின்னுமோ தேர்ந்து. (கஉக)

(பா-ம்.) 1. களத்தில்.

எ-து.- துரியோதனன் எனக்குச் செய்த வுபகாரத்துக்குப் பிரதியுபகாரஞ் செய்து ஆற்ற வொண்ணாது; ஈங்கு என் பிராணனைக் கொடுக்க வேணு மென்று சொல்லி ஸ்ரீ வாசுதேவனை விட்டு நீங்கி யளவிறந்த சந்தாபத்தோடுந் தன்கோயில் நோக்கிப் போயினான் கன்னன் என்றவாறு. இப்பால் அசுவத்தாமாவை யொரு தனிமண்டபங் கொண்டிருந்து யாது அருளிச்செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-

226. முன்பிறந்தான் பாகம் பெறானாக முன்பிரக்கப்
பின்பிறந்தா னைந்தூர் கொடாததுவு-நன்பிறங்க
னேராக விட்டதுவு நீயறிய வென்றுரைத்தான்
காராரும் வண்ணன் கறுத்து. (கூ௨ ௯)

இவ்வகை துரியோதனன் நீதிமார்க்கம் கெடப் பேசியதும் தருமபுத்திரன் இராச்சியம் பெறாதவாறும் உரைத்து இதற்கு நீயே சாட்சியெனப் பேசிப் பின்னும் யாதருளிச் செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-

227. இறைவர் திருமூர்த்தி யெங்கட்கு வந்த
பொறைகள் பொறுப்பாய்நீ வேண்டி-யிறைவன்
படைத்தலைமை தானே பணிக்குமாற் கேண்மன்
படைத்தலைநீ கொள்ளேல் பரிந்து. (கூ௨ ௬)

எ-து.- துரியோதனன் படைக்கு நின்னைச் சேனாபத்தியம் தானே யழைத்துக் கட்டுமாகிற் பணியினல்லது நீதானே சேனாபத்தியம் விரும்பா தொழி என்றும், விரும்புவையாகில் நின் பராக்கிரமங்களுக்கு யோக்கிய மன்று என்றும், தருமபுத்திராதிகள் வியவஸ்தையும் குருவசனமே துணையாக வார்கின்றவாறும் மற்றையர் சாபலியமும் அறியென்றும் இவ்வகை அசுவத்தாமாவைப் பேதித்துப் பின்னும் யாது செய்தான் ஸ்ரீ வாசுதேவன்:-

228. ஆழி தனைவீழ்த்தி யாழியா னப்பொழுதே
மீள விசும்பதனை மேனோக்கி-வாழி
பரிவோட [1]மிட்டதுகொல் பாரென்று காட்டத்
திருவாழி நீட்டினான் சென்று. (கூ௨ ௭)

எ-து.- ஸ்ரீவாசுதேவனும் ஒருப்பட்டு மீண்டு மெழுந்தருள்வானாகத் தன் திருத்தேர் மேற்கொண்ட விடத்து, தன் ஸ்ரீ ஹஸ்ததலத்தில் மருவியிலங்கு மணியாழியைக் கழற்றி யாவருமறியாது அசுவத்தாமாவின் முன்னே போட்டு அசுவத்தாமாவை நோக்கி ஆழிவீழ்ந்ததனை யெடுத்துத்தாவென்று, ஆதித்திய பகவான் றன்னைப் பரிவேடமிட்டது நீ பாராயென்றும் இது உற்பாதமாவது

(பா-ம்.) 1. இட்டதுகா ணென்றெடுத்துக் காட்ட

கண்டாயென்றும் அருளிச்செய்த அசுவத்தாமாவும் மாயை யென்றுணராது திருவாழி யெடுத்துக் கொடுக்குமளவில் ஆதித்திய பகவானையும் நோக்குதலின், அவ்வளவில் ஸ்ரீ வாசுதேவன் அசுவத்தாமாவின் கையிலே மணியாழியுடன் மற்றவன் கைப்பிடித்துப் பகவானை நோக்கிப் பரிவேஷத்தினைக் காணாயென்று மருட்டி (கைப்பிடித்து) நீ சேனாபத்தியங் கொள்ளாதொழி யென் றருளிச்செய்து மற்றவனை வரங்கொண்டு மணியாழியினை வாங்கி அசுவத்தாமாவினுக்கும் மற்றுமுள்ள சர்வ க்ஷத்திரியர்க்கும் விடைகொடுத்துத் தானும் யாதுசெய்தான்: ஸ்ரீவாசுதேவன்-

229. பார்வேண்டிச் சென்று பதயுகத்தாற் பண்பழிந்து
போர்வேண்டிப் பூமா மகள்வேண்டித்-தேர்தூண்டி
மண்ணாடர் போற்ற மறைபோற்ற வேகினான்
விண்ணாடர் போற்ற விரைந்து. (௬உ௫)

இவ்வகை ஸ்ரீ வாசுதேவன் துரியோதனனையும் மற்றவராற் சூழப்பட்ட ராசசமுகத்தாரையும் விட்டு நீங்கிச் சாதுசனங்களும் நீதிமார்க்கமு மறுத்தா னென் றிகழ்ந்து பூமாதேவியும் பொறையாற்றாது புலம்ப, பூமா மகளும் சத்தியபுருஷ னல்லனெனப் பரிந்து புயல்வண்ணனுடன் போதப் போந்து துரியோதன னெல்லை கடந்து விதுரராச னெல்லை புகுந்து, மற்றாங்கோர் பூங்காவனத் திருந்து, தேவேந்திரனை யழைத்தருளி வீற்றிருந்தான் ஸ்ரீ வாசுதேவனாகக் கருதுவது. இப்பால், துரியோதனனிடையிற் போய் ஸ்ரீவாசுதேவனை விடைகொண்ட க்ஷத்திரியர் யாது சொன்னாரோ வெனில்:-

230. ஆழி யதுவீழ்த்த வந்தரத்தேர் வல்லானுஞ்
சூழுஞ் சபையறியச் சூளுற்றான்-வாழி
யினியரசர்க் குய்யுநா ளில்லையே யென்றார்
தனியரச ரெல்லாந் தளர்ந்து. (௬உ௬)

எ-து.- அசுவத்தாமா ஸ்ரீ வாசுதேவனுடன் அந்தரங்கனாய இரகசியம் பலபகர்ந்து பின்னும் ஸ்ரீவாசுதேவன் மணியாழி பிடித்து ஆதித்திய பகவானை நோக்கிச் சூளுற்றுக் கொடுத்தான்; அது யாங்ஙனமோ அறியோம் என்று பார்வேந்தர் சொல்லக் கேட்டு அசுவத்தாமாவை முனிந்து, வீஷ்மர், துரோணர், கிருபன், விதுரன், கன்னனுள்ளிட்ட இராசாக்களை நோக்கி யாது சொன்னான் துரியோதனன்:-

231. மறையோன்சேய் சென்றந்த வஞ்சனையி னாலே
முறையாழி தொட்டுச்சூ ளுற்றா-னிறையோனைத்
தேறுமா றெங்ஙனே தேர்வேந்தீ ரென்றுரைத்தான்
சீறுமால் யானையான் றேர்ந்து. (௬உ௭)

எ–து.– மாற்றலருடன் வஞ்சனைத் தொழில் புரிந்து அசுவத்தாமா மற்று அதற்குத் தக்கன பேசிப் பிரத்தாபம் பண்ணினானென வுரைத்து முனிவுற்று, துரோணாசாரியனை யினித் தேறுமா றேதென்று வியாகுலப் பட்டு, க்ஷத்தியர்க்குச் சாக்ஷிபண்ணி அசுவத்தாமாவை முனிந்து, கன்னனைக் கைப்பிடித்துக் காட்டி, சருவக்ஷத்திரியரையும் நோக்கி யாது சொன்னான் துரியோதனன்:-

**232. இவனொழிய வேறொருவ ரில்லையோ வங்கற்**
**கிவனு மிவனுமிங் கொவ்வா–ரிவனையினி**
**யின்றியே யாளு மரசுதனைப் பாரீர்போர்**
**வென்றியே தென்றான் வெகுண்டு. (கஉ௲அ)**

இவ்வகை இராசராசன் துரியோதனன் வெகுண்டு அசுவத்தாமாவைக் கொண்டு இதற்குமுன் பெற்ற இராச்சிய மில்லை என்றும், இவனாற் செய்யப்பட்ட பராக்கிரம மேதோ என்றும், கன்னனொருவனுமே யெமக்குத் துணையாவான் என்றும், இவனுக்குப் பரராஷ்டிரத்து க்ஷத்திரிய ரனைவோரு மொவ்வார் என்றும் இவ்வகையே வெகுண்டுரைப்பக் கேட்டு மற்றங்குச் சேவை பண்ணியிருந்தார். அவ்விடத்துத் துரியோதனனை நோக்கி யாது சொன்னான் அசுவத்தாமா:-

**233. ஒருவர்சோ றுண்டங் கொருவர்க்காய் நிற்பா**
**ரிருநரகில் வீழ்வார்போ யின்றே–திருவருளான்**
**மண்ணின்மேல் வீழ்ந்த மணியாழி தாவென்றா**
**னெண்ணியவா றென்றறியேன் யான். (கஉ௲கூ)**

எ–து.– யாவராயினும், ஒருவன் சோற்றை யுண்டு மற்று அவனை வஞ்சிப்பானும், யாவ னொருவனுடன் பேசிய விவஸ்தை வழுவுவானும், சமர்முகத்துத் தன்னரசனை விட்டுத்தன்னுயிரோம்பப் போவானும், வஞ்சனைத் தொழில்க ளியற்றுவானும் யாவராலுந் தடுப்பரிய நரகமனுபவிப்பார் கண்டாய்; அது நிற்க, யான் ஸ்ரீ வாசுதேவனை விடைகொள்ளுமிடத்து, 'மணியாழி வீழ்ந்ததனை எடுத்து நீட்டுவாயாக' என்ன, யானெடுத்துக் கொடுக்கு மெல்லைக்கண், 'பாற்கரனைப் பரிவேஷித்தபடி பாராய்' எனவருளிச்செய்த பின்னுந் தன் மணியாழி கொடுப்ப வாங்கிக்கொண்டு விடைதந்தமையன்றி, மற்றவனாற் செய்யப்பட்ட மகாமாயம் மற் றென்னாலறியப்பட்டதில்லை என்றும், இது யாவரும் காணும் என்றும் இவ்வகை பேசித் தன்னுயிரைத் துறக்கப்புகுந்த அசுவத்தாமாவை நோக்கிக் கைகவித்து முனிவு நீக்கி, மற்றவனுக்கும் சருவக்ஷத்திரியர்க்கும் விடைகொடுத்துத் தானுந் தன்கோயிற் புகுந்தான் இராசராசன் துரியோதனன் என்றவாறு. இப்பால், கன்னனுந் தன் கோயிற் புகுந்து ஒருதனி மண்டபத்திருந்து, ஸ்ரீ வாசுதேவன் விதுரன் வீட்டி லுண்டமையும் விதுரனை

*வில்லுமுறிப்பித்தமையும் அதன் பின்பு அசுவத்தாமாவைச் சேனாபத்தியம் விலக்கினமையும் தன்னுடன் பேசிய பூர்வங்களுமுணர்ந்து, ஸ்ரீ வாசுதேவன் வஞ்சனையால் இனி மிகவும் பரி பாவமும் விளையத்தகுமென நினைந்து, யாமும் இனி யுத்தபூமியிற் படக்கடவோமென்றும், அருச்சுனனைக் கொல்லக்கடவனல்லனென்றும் சருவதானம் பண்ணத் தொடங்கினான். அது யாங்ஙனமோ வெனில்:-*

**234. கற்றார்க்கு நான்மறைநூல் வல்லார்க்குங் கையலந்தொன்**
**றற்றார்க்கு மில்லா திரப்பவர்க்கும்-பொற்றாழ்**
**நிறைகூவித் தான்கொடுப்ப நீள்கதிரோன் மைந்த**
**னறைகூவித் தானளித்தா னாங்கு** **(௩௩௦)**

*இவ்வகை கோதானம் பூதானம் முதலாயுள்ள மகா தானமெல்லாம் பண்ணிப் பின்னும் யாது செய்தான் கன்னன்:-*

**235. ஆறுநூ றாயிரம்பேர்க் காறுநூ றாயிரம்பொன்**
**வேறுவே றாக விரைந்தீந்து-மாறிலா**
**மாநிதியம் வேண்டி வருவார்க்கு மற்றோர்க்குந்**
**தாநிதிய மீகின்றான் றான்.** **(௩௩௧)**

*அன்றியும்,*

**236. மின்பயிலு மாமணிப்பூண் வேல்வேந்தர் தந்திறையை**
**முன்பொழுதே யந்தணர்க்கு முற்றுவித்துப்-பின்பொழுது**
**நேரிழையா டன்னோடு நேயமுடன் மெய்ச்சூதின்**
**போரடையத் தானடைந்தான் புக்கு.** **(௩௩௨)**

*எ-து.- எழின் மணிமுடிவேந்த ரிடுதிறை யெல்லாம் முன்பொழுதிற்றானம் பண்ணிப் பின்பொழுதில் 'அபராண்ணிய தரித்திரன்' என்னும் பேரெய்தித் தன் நேரிழையாளோடும் சூது பொருதுகின்ற கன்னன் விவஸ்தை யறிந்து யாது செய்தான் ஸ்ரீ வாசுதேவன்:-*

**237. வெற்றி விறல்விசயன் வெஞ்சமரில் வீழாம**
**லற்றவர்கட் கெல்லா மருநிதிய-முற்றுதவுங்**
**கன்னன் றிறலழிக்கக் கண்ணா யிரமுடைய**
**மன்னன் றனையழைத்தான் மால்.** **(௩௩௩)**

*இரகசியமாக எழுந்தருளியிருந்து தேவேந்திரனை நினைந்தருள, அப்பொழுதே வியாகுலத்தோடும் வந்து 'அருளப்பாடு' என்று அடி பணிந்து 'அருளிச் செய்வாயாக' என்னத் தேவேந்திரனைக் கண்டு யாதருளிச் செய்தான் ஸ்ரீ வாசுதேவன்:-*

238. இந்திரனே யுன்மகனை வெல்விப்பான் வேண்டுதியே
லந்தணனா யங்கர்கோன் பாலணுகி-முந்தவதற்குச்
சுந்தரமாய்க் கொண்டிலங்குந் தொல்கவச குண்டலங்கண்
மந்தரத்தா னீவேண்டி வா. (௩௩_௪)

*அன்றியும்,*

239. வெலற்கரிய வங்கர்கோன் வில்விசயன் றன்னாற்
கொலற்கெளிய னாம்பரிசு கூறின்-மலர்க்கமல
மண்டலத்தி லேமலரு மாக்கதிரோன் மாமகன்றன்
குண்டலத்தை வாங்காய் குறித்து. (௩௩_௫)

*அன்றியும்,*

240. மண்டலத்தின் மன்னரெல்லாம் வந்து மலைந்தாலுங்
குண்டலமுண் டாகக் கொலப்படான்-விண்டலத்து
ளாதியாய் நீயலையே லாங்கதனை வாங்குதற்கு
[1]நீதியாய் போதுவாய் நின்று. (௩௩_௬)

*எனக் கேட்டு யாது சொன்னான் தேவேந்திரன்:-*

241. துன்றுபுகழ்ப் பாண்டவர்கள் சொல்லழியச் சூதழிந்த
வன்றொருகா லென்னை நினையாது-மன்றலந்தார்
மன்னர் படுந்துயரங் காண்பதற்கோ மாயவனே
யென்னை நினைந்ததுதா னின்று. (௩௩_௭)

*இவ்வகை விண்ணப்பஞ் செய்து நின்ற தேவேந்திரனை நோக்கி ஸ்ரீ வாசுதேவன் அருளிச்செய்வான் : கன்னன்றன் காதிலுள்ள கவசகுண்டலங்களை நின்னை யொழிய யாவராயினுங் காண்பதற்கும் வாங்குவதற்கும் வல்ல பேரில்லை; அதன் சக்தியினால் அவனைத் திரிமூர்த்திகளாலும் வெலற்கரிது; ஆதலால், உன்மக னருச்சுனனை வெல்விக்க வேண்டுமாகில் ஈண்டன் போய்க் கன்னன்றனைக் கண்டு மற்றவன் கருத்தறிந்து தக்கவார்த்தை பேசி நின்னால் வல்ல சாத்திரங்களாலும் பேதித்து எவ்வகையாலுங் கவச குண்டலங்களைத் தானமாக வேண்டி வாங்கிக்கொண்டு வருவாயாக என்று விடை கொடுப்பத் தேவேந்திரன் பணிமறாமலும் புத்திரன் சோபத்தினாலும் உடன்பட்டுத் தன்னுடைய தேவரூபம் மாறி யாது செய்தான் : இந்திரன்-*

242. மூப்பும் பெரிதாகி முன்னின்றார் தாமஞ்சப்
பாப்புப் பெருக்கம் பலபூண்டு-கோப்பமைந்த
கொற்றவே லந்தரர்தங் கோமானோ ரந்தணனா
யுற்றடைந்தா னங்கர்கோ னூர். (௩௩_௮)

*(பா-ம்.) 1. நீதியார் போதுவார்.*

*அன்றியும்,*

243. இந்திரன் றன்மகனை வெல்விப்பான் காரணமா
வங்கர்கோ மான்பா லணைவதற்கு-வந்தங்கோர்
வேதியனாய் வஞ்சித்து வேண்டுநிதி கொள்வானோ
ராதுலனாய் வந்தா னடைந்து. (௩௩௯)

*எ—து.— வில்லென வளைந்து மேனியுமாய்ப் புரிசடையுமாய்க் கோலு மூன்றி மெல்லென நடந்து (செல்லாநின்றவிடத்து) எதிர்வருகின்ற பிராமணரைக் கண்டு இன்சொற் கொடுத்து வழியின் வருகின்ற பிராமணன் யாது சிந்தித்தானோ வெனில்:-*

244. முன்போ திரவலருக் கீந்து முரசொலிப்பப்
பின்போ திலநாடன் போயினபின்-கண்போதின்
மற்றளிக்க வில்லை மணிக்கவச குண்டலங்க
ளுற்றளிப்ப னென்றே யுகந்து. (௩௪0)

*அன்றியும்,*

245. அப்பொழுதே யான்சென்றா லங்கர்கோன் றானளிக்கு
மிப்பொழுதே யான்வேண்டிற் றீவனா-லெப்பொழுது
முன்னவன்றான் செய்ததெல்லா முற்ற வகையுரைப்பே
னென்னவுடன் சென்றா னெழுந்து. (௩௪௧)

*எ—து.— முன்பொழுது உள்ள திரவியம் இரவலர்க்குத் தானம் பண்ணிப் பின்போதில் ஒன்றற்றுத் தரித்திரனா யிருக்கின்ற கன்னன்றன் விவஸ்தையறிந்து, மற்று அவனுக்குக் கவசகுண்டலங்களை யொழிய வேறில்லை யெனக் கருதி, கவசகுண்டலங்கள் வாங்குவானாக விரைந்து சென்று கோயில் வாயில் குறுகியாது செய்தான் இந்திரன்:-*

246. விண்ணவர்கோன் றன்மகனை வீடாமற் காப்பதற்கு
விண்ணகத்தை யூடறுத்து வந்திழிந்து-மண்ணகத்தி
லங்கர்கோன் வாய்த லபிதா வெனவிட்டான்
பொங்கொளியோ னந்தணனாய்ப் போந்து. (௩௪௨)

*எ—து.— பிராமணனும் கன்னன்றன் கோயில் வாயிற் சென்று 'அபிதா' எனக்கூறி வாசற்காவலரை நோக்கி 'அதிதூரத்தினின்றும் வந்தேனென்று விரைந்து அவற்கு அறிவிப்பீராமின்' என்று (பிராமணன்) சொல்லக்கேட்டு வாசற்காவலரும் கதுமெனப்போய் அங்கராசனைக் கண்டு யாது சொன்னாரோ வெனில்:-*

247. குடையொன்று கைப்பிடித்துக் கொற்றவனே வாயிற்
கடைவந் தடைந்தான்காண் கண்டாய்-குடைநிழற்கீழ்ப்

போதிலுயர் தண்டார் பொலிமுடியாய் காண்பதற்கோர்
வேதியனாய் நின்றான் விரைந்து. (கசங)

*மூப்பிலே வளைந்த மேனியுமாய் முதுமையுடன் சிறந்த ஞானமுமாய்ப் பரப்பினாலே மிக்க வேதமுமாய்ப் பரிணாமத்தாற் றிகழ் மேனியுடையா னொரு பிராமணனுமாய் மணிவாசலில் வந்து நின்றா னென்று கடைகாவலர் சொல்லக் கேட்டுக் காவல் வேந்தனுங் கதுமெனச் சிங்காதனத்திலு மெழுந்திருந்து மறையவனை வரவிடுமினென்று பின்னும் யாது சொன்னான் கன்னன்-*

248. வந்தடைந்த வேதியனை வாய்மை யதுகேட்கச்
சுந்தரத்தோண் மன்னவனுஞ் சொல்லுவான்-முந்தச்
செருவடுதோ ளங்கர்கோன் சென்றவனை யீண்டு
வரவிடுமி னென்றான் மகிழ்ந்து. (கசச)

*எனக்கேட்டுக் காவலருங் கதுமெனச் சென்று பிராமணனை நோக்கி யாது சொன்னார்:-*

249. வேதியனே யுன்றன் வரவுரைப்ப வேல்வேந்த
னீதியாற் கேட்டு நினையழைத்தான்-சோதிச்
செழுந்தரள வெண்குடையான் றேர்வேந்தன் றன்பா
லெழுந்தருளா யென்றா ரிசைந்து. (கசரு)

*இவ்வகை காவலர் சொல்லக்கேட்டு மிகவும் பிரியப்பட்டுக் கதுமெனக் கோயிலுட் புகுந்து வில்லென வளைந்து விரிகுடையுங் கோலும் ஊன்றி மெல்லெனச் சென்ற பிராமணனைக் கண்டு கன்னன் எதிர்சென்று அர்க்கிய பாத்தியங் கொடுத்துப் பிராமண ரூபத்தைக் கண்டு மிகவும் பிரியப்பட்டு இன்சொலுடன் ஆசனங் கொடுத்து, பிராமணன் வேதத்துடன் வியந்துரைப்பக் கண்டு சருவ புராணங்கள் பல கேட்டுக் கேவல நல்லனெனக் குறித்து மற்றவனை நோக்கி யாது சொன்னான் கன்னன்-*

250. வாயிலபி தாவிட்ட மாமறையோ னைத்தனியே
யேய மறைநூ லதுகேட்டு-நேயமுட
னீவேண்டி வந்தபொரு ணீயுரைக்க வென்றுரைத்தான்
கார்வேண்டுங் கையான் கலந்து. (கசசா)

*எனக்கேட்டு யாது சொன்னான் பிராமணன்:-*

251. வண்மை யுடையாய் மறாயென்பார் வையகத்தோ
ருண்மை யறியயான் வந்துற்றே-னன்மையின்கண்

[1]மேக்கயர்ந்த வெண்குடையாய் மிக்கா யெனவுரைத்தான்
[2]மீக்குடைய வெண்குடையான் மீண்டு. (கசஎ)

*அன்றியும்,*

252. நல்லார்க ளெல்லாரு நன்கறிந்து வேண்டுவன
சொல்லாது கொண்டார்கள் சொன்னாலே-னெல்லா
மறநெறியே வந்திறைஞ்சு மங்கநாட் டேறே
முறைமுறையே தானீ முயன்று. (கசஅ)

*எ-து.- நீ தாதாவென்றும் தரணிதலத்து வேண்டிற்று மறாயென்றும் பரராஷ்டிரத்துப் பிரகாசமான சத்திய விரதங் கேட்டு அதிதூரத்தினின்று வருகின்றேன்; விருத்தனாகையாலும் நடக்க மாட்டாமையாலும் முன் பொழுதில் வரப்பெற்றிலேன் ; இனி அபராண்ணிய மாயிற்று ; இப்பொழுது யான் வேண்டிய வரம் தரவல்லையோ? என்று கேட்க, கன்னனும் முறுவலித்து யாது சொன்னானோ வெனில்:-*

253. இன்றேயிம் மாற்ற முரைத்தா யிருபிறப்பா
[3]யின்றே யுயிர்தா னிறந்திடினு-நன்றேநீ
யேதேனும் வேண்டிற்றுப் பெற்றா யெனவுரைத்தான்
மாதான மன்னன் மகிழ்ந்து. (கசகூ)

*இவ்வகை வேண்டிற்றுத் தரவல்லையோவெனப் பிராமணன் சொன்ன வசனங் கேட்டு, இன்றிற் பின்னை யிந்தவுரை கேட்டிலேன், இதுவும் நீ சொல்லக் கேட்டமையன்றி; யாதாயினும் நீ வேண்டினால் வேண்டிற்றுப் பெற்றா யென்று கன்னன் சொல்லக் கேட்டு யாது சொன்னான் பிராமணன்:-*

254. திருவுடைய வுள்ளத்தாய் தேய்ந்த பொருளை
யுருவுடைய [4]வந்தணற்கென் றீந்தாற்-பெருமை
யழியாது நல்கென்றா னாயிரங்கண் மன்னன்
வழிகாதற் பார்த்தற்கா வந்து. (கரு0)

*அன்றியும்,*

255. முன்னீந்த தெல்லா முழுப்பகைகாண் மொய்தாரா
யென்னீந்த தொன்றுமுனக் காயிரங்காண்-மன்னுபுக
ழீண்டிவரு மன்னவனே யான்மகிழ வின்றெனக்கு
வேண்டுவதா நீயாய் விரைந்து. (கருக)

*(பா-ம்.) 1. மிக்குயர்ந்த. 2. மிக்குடைய. 3. இன்றெ னுயிர்.*
*4. அந்தணற்கொன்று.*

*எ-து.-* வேதியரால் விரும்பின தொன்றும் வேல்வேந்தற்காக மனம் பேதியாமற் றருதியாகில் உன் பெருமைக்குப் பிழையில்லை யென்று சொல்லக்கேட்டுக் கன்னனுஞ் சொல்லுவான்- நீ யாதொன்று வேண்டினுந் தருவனிப்போது என்ன, வேதியனும் மனமகிழ்ந்து யாது சொன்னானோ வெனில்:-

256. ஈங்கென் மனக்கருத்தை யெல்லா மியம்புவனா
னோங்கு புகழா யுடன்பட்டாற்-கோங்கு
சுரும்பவிழுந் தொங்கலாய் தொல்லுலகு தன்னிற்
பெரும்புகழீ தென்றான் பெயர்ந்து. (ருஉ)

*எ-து.-* யான் வேண்டப் புகுகின்ற துன்னால் வரைதரலாவதொன் றன்று கண்டாய்; பெறாது போவெனில் கடிதாக [1] வுரையறும் ; யானுன்னை விசுவதித் துரைசெய்ய எனக்கொரு பிரதிக்கினை செய்வாயாக எனக்கேட்டு யாது சொன்னான் கன்னன்:-

257. அழகியதே சொன்னாய்நீ யந்தணனே புந்தி
பழகியதே சொல்லின்மறுப் பேனோ-தழுவியபோர்த்
தன்னா யகன்படவே தான்சாவுக் கஞ்சிப்போ
மன்னாக வெண்ணாய் மதித்து. (ருங)

*அன்றியும்,*

258. மன்றில் வலிந்தோனு மாதவரைச் செற்றோனு
நன்றி மறந்தோனு நானிலத்து-என்றியுந்தான்
பெற்றவரைத் தானிகழும் பேதையு மென்றிவர்க
ளுற்றவிட மெய்துவனா னுற்று. (ருச)

*அன்றியும்,*

259. ஆண்டவனை விட்டமரு ளாடவர்கள் பின்றொடர
நாண்டுறந்து போனவனு நல்லோர்கள்-வேண்டியதொன்
றீயா தவனு மியானாக விந்நிலத்து
நீயா தரித்துக்கொ ளின்று. (ருரு)

*என்றிவ்வகை கன்னன் பிரதிக்கினை செய்யக் கேட்டப் பிராமணனும் பிரியத்துடன் யாது வேண்டிக்கொண்டானோ வெனில்:-*

260. மற்றேதும் வேண்டேனின் வண்மை யழியாமற்
[2]பெற்றே னெனின்யானும் பெற்றியா-னுற்ற

*(பா-ம்.) 1. உரைவற்றும். 2. பெற்றே னறிந்தேனுன்.*

பிறர்க்குரைப்ப னுற்றவெற்குப் பெய்கழலாய் [1]பானு
நிறக்கவச குண்டலங்க ணேர். (கருசு)

*எ—து.— நின் பிராபல்லியமும் தியாகப் பிரியமும் வேண்டியது மறாமையும் கேட்டு வந்தேன்; மற்றொன்றிலும் அபேக்ஷையில்லை; மன்னவனே! எனக்குன்னுடன் மெத்தச் சினேகமாயிருந்தது; நின்பாற் றிகழ்ந் திலங்காநின்ற கவசகுண்டலங்களைத் தருவாயாக எனக்கேட்டு யாதுசொன்னான் கன்னன்:-*

261. என்னா ருடற்பிறந்த குண்டலங்க ணீதியா
னின்னாற் கொளப்படா நீண்மறையோய்-மின்னாரப்
பூண்டமைந்த பொன்னும் புனைநீண்ட மாமுடியும்
வேண்டினவுங் கொண்ணீ விரைந்து. (கருஎ)

*இவ்வகை யென்னுடன் பிறந்தமையால் யாவர்க்கும் வாங்க வொண்ணா தாதலால், மணிமுடியும் நவரத்தினமும் வேண்டுவன வெல்லாங் கொண்டு போவாயாக எனக்கேட்டு யாது சொன்னான் பிராமணன்:-*

262. அணிகலனும் வேண்டே னருநிதியும் வேண்டேன்
புனைவதொரு பொன்முடியும் வேண்டே-னினையுங்காற்
கோதனமும் வேண்டேன் கொலைக்களிறும் [2]யான்வேண்டேன்
காதணிசேர் குண்டலத்தைக் காட்டு (கருஅ)

*அன்றியும்,*

263. சொன்ன விவையெல்லாம் வேண்டேன் சுடரொளிப்பூண்
மன்னவனே நீதருவை யாமாகி லுனனுடைய
காதணிந்த குண்டலங்கள் காதலித்தேன் றாவவற்றைப்
போதணிந்த தோளாய் புரிந்து. (கருகூ)

*என்றிவ்வகை யுரைத்து நின்ற பிராமண னபேக்ஷையை யிரக்ஷிப்பான் வேண்டித் தருமத்தினைத் தெளிந்து யாது சொன்னான் கன்னன்:-*

264. வாணாடா வென்றாலும் வேண்டின் மறுப்பனோ
பேணா மறைமுனியே பேசுங்கா-னாணாது
கொண்டிடுதி யென்றான் குறையிரந்து சொன்றார்க்கு
மொண்டிடுபொற் கையான் முயன்று. (கசாO)

*(பா—ம்.) 1. நின்பொன், விறற்கவச குண்டலங்க ணல்கு.*
*2. வேண்டேனின்.*

இவ்வகை பிராமணா நீ வேண்டினது தந்தேன்; இந்தக் கவசகுண்டலங் கிடப்ப அஸ்திர சஸ்திரம் என்மே லுருவ மாட்டாது-என்று அதன் பலஞ் சொல்லுகின்ற கன்னனை நோக்கி யாது சொன்னான் பிராமணன்:-

265. **உன்னாற் றரவெளிதா யுன்னிடையி லுள்ளதனை**
**மன்னா மறுத்தானீ வள்ளலோ-முன்னே**
**மறாச்சபதங் கூறியவோர் மன்னவனே யீண்ட**
**வறாக்கவசந் தாராய் நயந்து.** (கசாரு)

எனக்கேட்டு யாது சொன்னான் கன்னன்:-

266. **உய்ய வுடன்பிறந்த குண்டலங்கண் மண்டலத்தார்**
**செய்தனவு மல்ல திருத் [1]தேரா-மெய்யே**
**மறுத்திட்டே னென்று மயங்காதே காதை**
**யறுத்திட்டுக் கொண்ணீ யமர்ந்து.** (கருசு)

எனக்கேட்டு, நின்னுடைய கமலக்கையாலே வாங்கி நின்கை மேற்பட என்கை கீழ்ப்பட யான் ஏற்கத் தருவாயாக என்ற பிராமணனை நோக்கி யாது சொன்னான் கன்னன்:-

267. **வாங்கப் படாதனகாண் மாமறையோய் மற்றவற்றைத்**
**தேங்காதே நீயறுத்துக் கொள்ளென்ன-வாங்கவனு**
**மெய்நீட்டிச் சென்று விரைந்தவன்றன் காதருகு**
**கைநீட்டி னா[2]னவற்றைக் கண்டு.** (கசாஎ)

எ-து.- 'ஒருவராலுஞ் செய்யப்படாத [3]தொன்று கண்டாய்; ஆதித்திய பகவான் பிரசாதத்தினால் உய்ய வுடன்பிறந்த குண்டலங்களை உயர் வேதியனே! வாங்கவொன்றாது; ஆதலால் நீயே அதனை வலித்து அறுத்துக் கொள்வாயாக' எனக்கேட்டு, பிராமணனும் அவன் மகாநுபாவங் கண்டு, 'இவ னுதாரசக்தி யிருந்தபடி யென்!' என்று கன்னன் காதருகு கை நீட்டு மளவில், ஆங்கு ஆதித்தியன் அண்டயோனி சண்டகிரணன் பணியினா லாகா சத்தே வந்து ஓரசரீரி அங்கராசனை நோக்கி யாது சொல்லிற்றோ வெனில்:-

268. **[4]பார்த்தற்கா மாயன் பணியினா லப்பார்த்தன்**
**போர்த்தொழிலில் வெல்லும் பொருட்டாக-வேற்கின்றா**
**னிந்திரன்கா ணையா விவைகொடே லென்றுரைத்த**
**[5]தந்தரத்தே யோரசதி யாங்கு.** (கசாஅ)

---

(பா-ம்.) 1. தேராய். 2. அவனைக். 3. ஒன்றல்ல கண்டாய். 4. பார்த்தற்காய் மாய்ன் பணியாலும் பார்த்தனுக்குப், போர்த்தொழிலை வெல்லும் பொருட்டாலும். 5. அந்தரமேல்.

*அன்றியும்,*

269. மருவிய வன்கவச குண்டலங்கண் மன்னா
வருவியலு மாருயிரே கண்டாய்-செருவி
லடையார் [1]புரங்கெடுக்கு மங்கவள நாட்டை
யுடையாய் கொடுக்கை யொழி. (௬௯)

*அன்றியும்,*

270. வசையின் மணிக்கவச குண்டலங்கண் மற்று
மிசைவினொடுங் கொள்ள விருந்தான்-விசயன்றன்
றந்தையா மிந்திரன்கா ணுன்னைத் தடுக்கின்றே
[2]னுந்தையா னென்றா னுகந்து. (௬௰)

*எ-து.- 'மகாவிஷ்ணுவின் பணியினா லருச்சுனனுக்குச் சயமாக வேணுமென்று கவசகுண்டலங்கள் தானமாக வாங்குதற்கு மாயை பண்ணி விருத்தப் பிராமணனாக வந்து வேண்டுகின்றவன் 'தேவேந்திரன் கண்டாய்; நீ அவனுக்குக் கவசகுண்டலங் கொடுக்கில், உன் பிராணனைக் கொடுக்கின்றாய்' என்று சொன்ன அசரீரி வாக்கியத்தை நோக்கி யாது சொன்னான் கன்னன்:-*

271. தேவேந் திரன்வந்து தேகியெனக் கையேற்றால்
[3]யாவேனும் யான்கொடுக்க மாட்டேனோ-வாய்மை
மறுத்துரைக்கு மன்னோநா னென்னாவண் காதை
யறுத்திட் டவணளிப்பா னாங்கு. (௬௭)

*எ-து.- சர்வப் பிராணிகட்குஞ் சாவதானம் பண்ணி இன்னாரென்னாமல் மாறாது தானம் பண்ணுகின்ற என்பால் தேவராசனாயுள்ள தேவேந்திரன் வந்து தேகி யென்று என் கைத்தலம் மேற்படச் செம்மலர்க்கை கீழ்ப்பட ஏற்குமாகில் எனக் கிதுவொப்ப இரட்சை யுண்டோ என்று, பின்னும் யாது சொன்னான் கன்னன்:-*

272. நில்லா வுயிர்கொடுத்து நின்ற புகழ்படைக்கை
நல்லார் [4]கடனென்ற நன்குணத்தார்-செல்லார
முந்தியா னாகின்றேன் மூவாத குண்டலத்தை
யெந்தை கொடுக்கின்றே னின்று. (௬௮)

*எ-து.- அநித்தியமாகிய பிராணனை யொழிந்து புகழ்படைக்கை பூமியிலுள்ளார்க்குச் சாதாரணமா மாதலால்*

---

*(பா-ம்.) 1. புறங்கொடுக்கும். 2. உந்தைகா ணென்றானுவந்து. 3. வாழ்வேந்தீர் யான். 4. கடனென்றே நன்குணத்தாற்-சொல்வாருண், முந்தியா மாகின்றேம்.*

அவனுக்கென் கவசகுண்டலங்கள் கொடுக்க அருளிச்செய்வாயாக என்ற அங்கராசன் முகநோக்கி அசரீரி யாது சொல்லிற்றோ வெனில்:-

273. குன்றாத வாய்மை கொடுந்தொழிலின் மேற்கொள்ளா
நின்றாய் நினைத்ததுவே செய்யென்று-சென்றான்
[1]மணியுருளித் திண்டேர்மேல் வந்திருளை மாற்றி
யணியருளுஞ் சோதி யவன். (௧௬௯)

இவ்வகை பேசிய அசரீரியாய ஆதித்திய பகவானும் அந்தர்த்தானஞ் செய்த பின்பு கன்னனுடைய தியாக சத்தியின் மகாநுபாவங் கண்டு தேவசாதிகளு மாச்சரியப்பட்டுப் புஷ்ப வருஷம் பொழிந்தார்; அப்பொழுது, பிராமணனும் எல்லையில்லாததோர் பிரிய மெய்தி யிருந்தவிடத்துக் கன்னன் தன் காதிற்கவசகுண்டலங்களைத் தானே வாங்கு மளவில், தெய்விகத்தினா லவை குழை ஒெகிழ, வாங்கித் தேவேந்திரன் ஸ்ரீ ஹஸ்தங் கீழ்ப்படத் தன் கை மேற்பட அகமலர்ந்த தின்சொலுடன் கொடுப்பத் தேவேந்திரனும் வாங்கி மகாப் பிரியஸ்தனாய் 'நின்னையொக்குந் தியாகபர ரில்லை' என்று சொல்லிச் சுவாகதஞ் சொல்லி, மற்றந்தக் கன்னனை விட்டு நீங்கி மீண்டு போந்து, சார்ங்கபாணி சக்கரமேந்தி பஞ்சாயுதன் பவித்திரமூர்த்தி ஸ்ரீ வாசுதேவன் பக்கல் போய்த் திருவடி தொழுது கவசகுண்டலங் காட்டி, கன்னனைக் கண்டவாறுங் கவசகுண்டலங் கொண்டவாறும் விண்ணப்பஞ் செய்து, தேவலோகத்துக்குப் போவானாக விடை வேண்டினானைத் தடுத்துப் பின்னும் யாதருளிச்செய்தான் ஸ்ரீ வாசுதேவன்:-

274. தேவர்கோ னாலென் பலத்தான் முடியாத
காவலர்கோன் றேழன் கதிர்மணியைப்-பாவலரோர்
நூலோதும் வேதியனாய்ச் சென்றிரந்து [2]கொண்டாண்ட
னீளாது வாவென்றா னீங்கு. (௧௭0)

அன்றியும்,

275. வெலற்கரிய வங்கர்கோன் வில்விசயன் றன்னாற்
கொலற்கெளிய னாம்பரிசு கூறின்-மலர்க் [3]கமலம்
பூமலரப் பொன்னுதயஞ் செய்வரன்றன் புத்திரன்பான்
மாமணியுங் கொண்டிண்டன் வா. (௧௭௧)

எ-து.- உன்மக னருச்சுனனை வெல்வித்தல் காரணமாக முன்னமே கவசகுண்டலங்கள் வாங்கி வந்தாய்; அதுவோ டொப்பதில்லை; இன்னமுஞ் சென்று அவன் வலக்கையி லிருக்குஞ்

---

(பா-ம்.) 1. பணியருளிக். 2. கொண்டிண்ட னில்லாது. 3. கமலப், பூமகடன் பொன்.

சிகாமணியையும் வேண்டி ஒரு பிராமண ரூபந் தரித்துப் போய் வாங்குவாயாக எனக்கேட்டு யாது விண்ணப்பஞ் செய்தான் தேவேந்திரன்:-

276. குருக்கை மதவேழக் கொம்பொசித்த மாலே
யரக்கர்குல மெல்லா மடர்த்தாய்-நிரைத்த
கனவயிரக் குண்டலங்கள் காதரிந்து போந்தேற்
கெனவருளிச் செய்தா யிது. (௩௭உ)

எ-து.- அவனுடன் பிறந்த கவசகுண்டலங்கள் அவனாருயிரானவை வாங்கி அவனுயிர் பறித்தாற்போலக் கொண்டு வந்தேன்; இனி யவன்பாற் சென்று தரிசித்துச் சிகாமணி வேண்டுமது பெருந்திற லுலகத்துக்குத் தக்க தன் றென்று மறுத்துரைத்து, மற்றது தருமமல்ல வென்கின்ற இந்திரனை நோக்கி யாதருளிச்செய்தான் ஸ்ரீ வாசுதேவன்:-

277. அருந்தவங்கள் செய்வா ரருநிதிய மீவார்
பெருந்தவங்கண் மேற்கொண்டு நிற்பார்-திருந்தியநன்
மக்கட் [1]பெறுவார் வருந்துயரந் தாந்தீர்ப்பார்
மக்கட் பெறும்பேறு மன். (௩௭௩)

எ-து.- புத்திரரைப் பெறுவார்க்கும், அரியதொரு தபசு பண்ணுவார்க்கும், தியாக பரராய்த் தருமம் பண்ணுவார்க்கும் கோலாகலத்தின்படி இவையிற்றுக் கொரு விதனம் வந்துவிடத்து அசத்தியஞ் சொல்லியாயினும் இரட்சிக்கக் கடவ ரென்று வேத சாத்திரங்களால் விளம்பப்பட்டது; அது உன்னளவே யல்லவென்று இவ்வகை உன் புத்திரனை யிரட்சிக்கும் பொருட்டாக வஞ்சித்தாயினும் சிகாமணி வாங்க ஒருப்படுவாயாக என்று ஸ்ரீ வாசுதேவ னருளிச்செய்யக் கேட்டு யாது விண்ணப்பஞ் செய்தான் தேவேந்திரன்:-

278. நின்னருளை யான்[2]மறுத்தே னீதியா லென்றவன்றன்
பொன்னடியில் வீழ்ந்து பொறுவென்று-முன்னமே
மண்ணுலகோர் காணவே மாமறையோன் வேடமாய்
விண்ணவர்கோன் போனான் விரைந்து. (௩௭௪)

அன்றியும்,

279. மறாவண்ண மேற்கொண்டு மாநிதிய மீயுந்
தராதலத்தி லங்கர்கோன் றன்பாற்-சிகாமணியை

(பா-ம்.) 1. பெறுவாரே வான்றுயரந் தான்றீர்ப்பார், மக்கள் பெறும் பேறு மண். 2. மறுக்கே னீதியாய்.

வேண்டிக்கொண் [1]டீண்டிவரப்போயினான் விண்ணவர்கோன்
மீண்டுமொரு வேதியனாய் மீட்டு. (௩௭௯)

இப்பால்,

280. சாமரைகள் வீசத் தழைத்தொங்கன் முன்னிரட்டப்
பூமருவுங் கண்ணார் புடைசூழ-[2]வாமப்
பணிக்கோயி லான்பணியாற் பாராளும் வேந்தன்
மணிக்கோயி லேகினான் மற்று. (௩௮௰)

இவ்வகை தேவேந்திரனும் இரண்டாவது மொரு பிராமணனாக அங்கராசன் பாற் சென்று மற்றவன் மணிக்கோயில் புகுந்து சிங்காதனத்து வீற்றிருந்த கன்னனைக் கண்டு ஆசிர்வாதம் சொல்லி நின்ற பிராமணனைக் கண்டு கதுமென எழுந்திருந்து அங்கிகாரம் பண்ணிப் பிராமணனுக் காசனங் கொடுத்து 'வந்த கரும மென்கொலோ' என்று வினவ, சொல்லுவான்- பரராஷ்டிரத்து நின்னுடைய ஔதாரியங் கேட்டு வந்தேன் என்று பின்னும் யாது சொன்னான் பிராமணன்-

281. முன்னை யிரவலர்கட் [3]கீந்ததெலா முன்னினஃ
தென்ன பயனண் டிருநிலத்தி-லொன்னலரை
யாகந் துணைத்தவடி வேலா யெனக்களித்தான்
மாகந் தனைப்பெறலாம் வந்து. (௩௮௧)

அன்றியும்,

282. கொற்றவனே நின்னுடைய கோலமணிக் குண்டலத்தா
லற்றபலன் பெற்றேனுக் கொன்றுகறை-யிற்றையதுன்
சிந்தைமகிழ்ந் தன்புடனே செங்கைச் சிகாமணியைத்
தந்தருளா யென்றான் றளர்ந்து. (௩௮௨)

எ-து.- முன்பு நீ பண்ணின தானத்துக்குப் பதிற்றிரு மடங்கு பல முண்டு எனக்குத் தருவையாயின்; ஆதலா லுன் வலக்கையிற் கிடக்குஞ் சிகாமணியைத் தருவாயாக எனக் கேட்பக் கன்னனும் மகிழ்ந்து கது மெனச் சிகாமணியை வாங்கிக் கொடுப்பக் கொள்ளாது தவிர்ந்து யாது சொன்னான் பிராமணன்:-

283. [4]தூவு மலைக ளலைக்கும் புனற்கங்கைக்
காவலனே கண்கழுவி வாய்பூசி-மேவிநீ

(பா-ம்.) 1. ஈண்டன்வரப். 2. வாரிப். 3. ஈந்தவெல்லா நின்பின்ன, வென்ன. 4. தூமலைகள் சிந்தி யலைக்கும்.

யின்னடிசி லுண்டாங் கியல்புடனே தாவென்றான்
மன்னுமறை வேதியன்றான் மற்று. (௲௭௯)

*எ-து.- உன் அனுஷ்டானம் முதலான சுத்தி பண்ணி அமுது செய்த புட்கலனா யிருந்து அகமலர்ந்த சொல்லுடன் தருவாயாக எனக்கேட்டு யாதுசொன்னான் கன்னன்:-*

284. நினைவுக்கும் வாய்மைக் குயிர்க்குநிலை யில்லை
மனுவுக்கும் வாழ்வுக்கு மற்றே-நினைவிற்
கொடுத்தபோ தேகொண்டு கோதின் மறையோய்
[1]கடத்தியே யென்றா னயந்து. (௧௮௦)

*என்றிவ்வகை நினைவுக்கும் வார்த்தைக்கும் ஆயுவுக்கும் இராசர்களுக்கும் ஐசுவரியத்துக்கும் நிலையில்லை கண்டாய்; பிராமணா! ஆதலால் யான் தந்தபொழுதே தானம்வாங்கிக்கொண்டு போவாயாக வென்று கொடுப்பப் பிராமணனும் பிரியத்துடன் வாங்கிக்கொண்டு நின்று யாது சொன்னான்:-*

285. [2]தேவ ருலகத்துங் கண்டறியோந் திண்டிறலா
யாவரு நின்போ லறம்புனைவார்-பூவிரிய
வண்டலம்பு தாராய் மணிமுடியாய் நீமகிழ்ந்து
தந்தருளா யென்றான் [3]றகைந்து. (௧௮௧)

*என்றிவ்வகை சொல்லிப் போகவென்று புறப்பட்டுச் சிறிதிடஞ் சென்றளவில் பிரமகத்தி (பாபஞ்) செய்து போகின்றா னென்று (பிரமகத்தி) பாவம் பின்றொடர்ந்து சென்று இருள் கூர்ந்து மறைத்திடுதலும், அது கண்டு தேவேந்திரனும் நடுங்கி மீண்டும் போந்து கன்னனைக் கண்டு பிரியப்பட்டு 'நீ என்பக்க லொரு திவ்வியாஸ்திரம் வாங்கிக் கொள்வாயாக' என்று கொடுக்கலுற்ற பிராமணனைக் கண்டு (கன்னன்) முனிந்து சொல்லுவான்- 'உன் பக்கல் பிரதி தானம் ஏற்பேனோ' என்று மறுத்திடுகின்ற கன்னனைக் கண்டு அதிக பிரியத்துடன் திவ்விய ரூபங் காட்டிப் பின்னும் யாது சொன்னான் தேவேந்திரன்:-*

286. உன்னா ருயிரா மொளிர்கவச குண்டலமு
மன்னா மணியு மகிழ்ந்தீந்தா-யொன்னார்
கடறுணிக்கும் வேலதனைக் கொள்ளுநீ யென்றா
னடல்வேந்தே யென்பா லணைந்து. (௧௮௨)

*(பா-ம்.) 1. நடத்தியே யென்றான். 2. மணி குண்டலங்கள். 3. அன்றி யமர்க்.*

எ-து.- யான் தேவேந்திரனே கண்டாய்; நின்னுடைய சத்தியத்தினையும் தயாவினையு மறிய உன்பக்கல் வந்தேனாதலால் உன் சரீரத்தையுரித்துக் கவசகுண்டலமுஞ் சிகாமணியும் வாங்கிக்கொண்டு போகப் பிரமகத்தி ஒட்டாது; ஆதலின் என்பக்கல் ஓரஸ்திரம் வாங்குவாயாக என்று, பின்னும் யாது சொன்னான் தேவேந்திரன்:-

287. இந்தவேல் கொள்ளுநீ யாவரே யாயிடினு
முய்ந்தொழியா வண்ண முயிர்கொள்ளு-மந்தமில்சீ
ரங்கத்தார் கோவே யமரர்கோ னானுனக்குத்
தந்தவேல் கொள்ளாய் சமைந்து. (கஅஎ)

எ-து.- உபகாரத்தினோடுந் தருகின்ற வேல் கொள்வாயாகில், இந்த வேல் திரிமூர்த்திகளாலும் வெல்ல வொண்ணாது; யாவராயினும் எதிர்ந்தா ரொருவர் மேல் விட்டால் அவருயி ருண்டல்லது மீளாது; ஆதலால் இந்த வேலை மறாது கொள்வாயாக வெனக் கேட்டு யாது சொன்னான் கன்னன்:-

288. என்னைக் கொலப்படா தென்றுநீ யென்கரத்தின்
மன்னு [1]மணியணியும் வாங்கினையே-யுன்னாற்
றரப்படுவ துண்டாகிற் றார்வேந்தே யென்பால்
வரப்படுமோ வென்றான் மகிழ்ந்து. (கஅஅ)

என்னை யாவராலும் யுத்தகளத்து வெற்றிகொள்வ தரிதென்றெண்ணி என் காதிற் கவசகுண்டலமுங் கையிற் சிகாமணியும் வஞ்சித்து வாங்கி அருச்சுனனை ரக்ஷிப்பான் வேண்டி வந்தாய்; அப்படிக்குக் குறித்தாரைக் கொன்று தருவதொரு வேலுண்டாகில், இதனை அருச்சுனனுக்குக் கொடுத்து அவனைக்கொண் டென்மேல் விடத்தகாதோ? இவ்வகை திவ்வியமான சக்தி யுண்டாகில், நீ யென்பால் வந்து இரவலனாய்த் தான மேற்கப்படுமோ? என்று அங்கையோடங்கை தாக்கி இராச சமுகத்தை நோக்கிப் பல பகர்ந்து நகையரும்பி மறுத்துரைத்த கன்னனை நோக்கி யாது சொன்னான் தேவேந்திரன்:-

289. உற்ற விடத்துதவு முண்மை யொளிநெடுவேற்
கொற்றவனே கொண்ணீ யெனக்கொடுத்தான்-வெற்றிமிகு
தானவரை வென்றடக்குந் தண்டார் மதக்களிற்று
வானவர்கோ னுள்ள மகிழ்ந்து. (கஅகூ)

எ-து.- இந்த வேலின் திவ்விய சத்தியினைச் சமர பூமியிற் கண்டு கொள்வாயாக என, யாவராலுந் தடுக்க வரிதுகண்டா யென்று குறித்துப் பேசிப் பின்னும் யாது சொன்னான் தேவேந்திரன்:-

---

(பா-ம்.) 1. மணி குண்டலங்கள்.

290. [1]மன்ற வமர்களத்துண் மாற்றார் தனக்கஞ்சக்
கொன்ற தருமிதனைக் கொள்ளென்று-வென்றிபுனை
யங்கர்கோன் றன்கைக் கொடுத்தானே யாங்கவனும்
வெங்கணெடு வெள்வேல் விரைந்து. (கஅசு)

*என்றிவ்வகை பல பரிசினாலுந் தெருட்டிப் பிரியத்துடன் பேசி, மறுத்துரைத்த கன்னனுக்குத் தன் திவ்வியமான ரூபங் காட்டித் திருமேனி பிரபை செய்ய ஆயிரங் கண்ணுங் குவளைக்காடுபோல மலர்ந்து தோன்றி (கன்னனுக்கு)த் திவ்வியமான வேல் கொடுப்ப, அவனும் அங்கீகாரம் பண்ணி அவன் பணி தலைமேற்கொண் டுடன்பட்டு (க்கன்னன்) யாது சொல்லி வாங்கத் தேவேந்திரன் யாது சொல்லிக் கொடுத்தானோ வெனில்:-*

291. [2]பார்த்தன்மேற் பட்டுருவப் பாம்பா மெனமதியாய்
மூர்த்தி யிதுவொப்ப தில்லையென்றான்-பேர்த்து
[3]விடுகின்ற வேதியனும் வீமன்மகன் றன்மேற்
படுகென்று கைவிட்டான் பார்த்து. (கஅஎ)

*அன்றியும்,*

292. வண்டமர்தார் வானவர்கோ னங்கர்கோன் றன்னுடைய
குண்டலங்கைக் கொண்டவன்கை வேல்கொடுத்தே-யிண்ட
னொருவரைக் கொல்லென் [4]றுரைத்துரைத்துப் போனா
னிருவிசும்பிற் றேவர்கோ னேர்ந்து.. (கஅஅ)

*இவ்வகை பீமசேனன் புத்திரனாகிய கடோற்கசனைக் கொன்று வருவாயாக வென்று கன்னனுக்குக் கொடுத்து, ஆங்கவனை விட்டுக் கதுமென மீண்டு தேவேந்திரன் ஸ்ரீவாசுதேவனைத் திருவடி தொழுது சிகாமணியுங் கொடுத்துத் தேவலோகம் நோக்கிப் போயினான் என்றவாறு. இப்பால்,-*

293. இந்திரன் போக வெழிற்குந் தியையழைத்துச்
சுந்தரத்தோண் மாயோனுஞ் சொல்லுவான்-மைந்தனெனு
மங்கர்கோன் பாற்சென் றரவிருகா லெய்யாமன்
மங்கைநீ வேண்டாய் வரம். (கஅசு)

*இவ்வகை ஸ்ரீ வாசுதேவன் அருளிச்செய்யக் கேட்டு யாதுசெய்தாள் குந்திதேவி:-*

---

*(பா-ம்.) 1. அன்றி மார்க். 2. பார்த்தனைப் பட்டுருவப் பாராதே நன்மதியோய். 3. விடுகின்ற , விடுகென்ற. 4. உணர்ந்துணர்ந்து.*

294. விண்ணவர்கோன் வேல்கொடுத்துப் போக வியன்குந்தி
மண்ணகத்தை யாள்வான் வரம்வேண்டித்-[1]திண்ணம்
வரங்கொள்வா னங்கர்கோன் மாளிகைவாய்ச் சென்றா
டருங்கண்ணீர் முன்சோரத் தான். (௩௯௦)

எ-து.- குந்திதேவியும் உடன்பட்டு ஸ்ரீ வாசுதேவன் பணியினால் விடைகொண்டு, புத்திரனெனும் வார்த்தை கேட்டுப் பொருக்கெனச் சந்திதோஷித்துத் தளர்ந்த சிந்தையளாய்ப் போய் அங்கராசன் கன்னன் கோயில் வாயிற் குறுகி, வாயிற் காவலரை நோக்கி யாது சொன்னாள் குந்திதேவி-

295. அண்டத் தலர்கதிரோன் புத்திரனா யாடரவத்
துண்டத் துகிற்கொடியோன் றோழனுமா-யெண்டிசையும்
வண்மையான் மிக்குயர்ந்த மன்னவனுக் கென்வரவு
[2]திண்மையாற் சென்றறியச் செப்பு. (௩௯௧)

என்று இவ்வகை குந்திதேவி சொல்லக் கேட்டுக் கதுமெனக் கோயில் வாயிற் காவலருங் கோயிலுட் புகுந்து, குலவேந்தன் அங்கராசனைக் கண்டு யாது சொன்னாரோ வெனில்:-

296. கண்டத்தி விட்ட [3]கலிங்கத்தாள் கால்வருந்த
மண்ட நடந்து மனம்வாடிக்-கொண்டனிகர்
கையானே யுன்றன் கடைத்தலைநின் றாளென்றார்
மெய்யானைக் கண்டு விரைந்து. (௩௯௨)

அன்றியும்,

297. சந்தார் திரடோட் டருமற்குந் தம்பியர்க்குங்
கொந்தார் விசயற்குங் கோமாதா-வந்தா
டிருமக டான்புல்குந் திண்ணியபொற் றோளாய்
வருமாறு செப்பாய் மகிழ்ந்து. (௩௯௩)

எ-து.- தருமபுத்திராதிகள் மாதா எழுந்தருளி வாயிற் கடையின்கண் நின்றாள்; மற்று அவள் வருவ தென்கொலோ? என வாயிற் காவலர் சொல்லக் கேட்டுக் கதுமென எழுந்திருந்து ஆசனம் விட்டு நீங்கி யாது சொன்னான் கன்னன்:-

298. [4]மன்னர் குருநாடர் மாதாவின் றெண்பக்க
லென்ன வெழுந்தருளி [5]வந்தாராற்-சென்னி

(பா-ம்.) 1. திண்ணெனன். 2. திண்மையாச் சென்று. 3. களங்கத்தாள். 4. மன்னு குருநாடர் மாதா வெனதுபக்கல். 5. வந்தாரேற்.

செருப்படு [1]தோ ளார்பணிந்த சேவடியைக் காண
வொருப்படுவோ மென்றா னெழுந்து. (கஉசு)

இவ்வகை கன்னன் குந்திதேவி வரவு கேட்டுச் சந்தோஷித்துப் பாண்டவர்கள் மாதா எமக்கு மவர்க்கு மூலகமாதா வன்றோ?' என்று உலகியல்பு கூறி, எதிர் சென்று காண்பானாகச் சிறிதிடஞ் சென்று, ஒரு தனி மண்டப மெய்தி இனிதிருந்து, வாயிற் காவலரை நோக்கி யாது சொன்னான் கன்னன்-

299. வருக வரவிடுமின் வந்தென்னைக் காண
[2]பொருதனிக்கோ யிற்புறத்தே யென்று-திருவணையக்
குந்திதனைக் காண வெதிரெழுந்து கைதொழுதான்
முந்தியவள் காண்பதற்கு முன். (கஉரு)

எ-து.- கடிதாக எழுந்தருள விடும் எனக் காவலரைப் போக்கித் தானும் எதிர் செல்லுமளவில், சத்திய விரதராய்ச் சகலங்களையும் சர்வாயுதங்களுக்கே உரித்தாயுள்ள ஐவரையும் மற்று அங்கராசனையும் புத்திரராகப் பெற்ற உலக மாதா குந்திதேவியை எதிர்வரக் கண்டு கருணைகூர்ந்து அங்கீகாரம் பண்ணி எதிர் செல்லு மெல்லைக்கண் யாது நிகழ்ந்ததோவெனில்:-

300. [3]குறைந்தாழ்ந்த சிந்தையளாய்க் குந்திசென் றெய்த
விறைஞ்சா முடியா னிறைஞ்சச்-சிறந்த
முலைக்கண்கள் பாலரும்ப நின்றாண் முகத்து
மலர்க்கண்க ணீரரும்ப வந்து. (கஉசா)

இவ்வகை புத்திரனைக் கண்டு புத்திரசோக மெய்தி மனந்தளர்ந்து கண்ணீர் பாய வணங்குகின்ற சரீரத்தோடும் முலைக்கண்கள் பால் பாயச் சோகித்து நின்றாளைக் கண்டு, கன்னனும் நமஸ்கரித்து (மாதாவை)த் தன் கோயிலுட் கொண்டுபோய் மணியாசனத் திருத்தி, ஆல்வட்டம் புடை யிரட்டப் பாதசுத்தம் பண்ணி, அரிவையரால் பாததலம்வருடுவித்து வழி வருத்தந் தீர்த்துச் சறிதுபொழுது சிந்தித்திருந்து பின்னை யாது சொன்னான் கன்னன்-

301. செம்மையான் மண்ணாண்ட தேர்வேந்தன் மாதேவி
வண்மை யுடைத்தருமன் மாதாவே-யம்மே
திருந்தியநின் [4]பொற்கமலச் சேவடிக ணோவ
வருந்திமிக வந்தவா மற்று. (கஉஎ)

அன்றியும்,

(பா-ம்.) 1. தோளாற் பயந்தார். 2. ஒருதனியிற் கோயிற் புறத்துத்-திருவணைய. 3. குறைதாழ்ந்த. 4. பொற்பான வேசடிகள்.

302. சீரடிக ணோவச் சிவந்து மிகத்துவண்டு
போரடருஞ் சோலைப் புனனாடர்-மாதாவே
[1]யென்னடந்த வாறின் றெனக்குரைமி னென்றுரைத்தான்
மின்னடைந்த வேலான் வியந்து. (௩௯௮)

அன்றியும்,

303. ஆராத வன்பி னடிக ளடியேன்பால்
வாராதீர் வந்தவா றென்கொலோ-சீராரும்
பாண்டவர்க ளேவலோ பாரளந்தா னேவலோ
வாண்டகை [2]யாய்ப் போந்த தருகு. (௩௯௯)

இவ்வகை யேத்தி இன்சொற் பல கொடுத்து, 'எம்பெருமாட்டி! நீர் என்பக்கல் எழுந்தருளியறியாதீர் இன்று எழுந்தருளிய காரணம் என்?' என்று பலபடியாலுங் கன்னன் வினவக் கண்டு, விம்மி விம்மி வெய்துயிர்த்து யாது சொன்னாள் குந்திதேவி:-

304. ஒற்றைத் திகிரி யொளியோற்குத் தான்பயந்த
கொற்றக் [3]குமரனிவ னாமாறு-மற்றவடான்
மாலுரைத்த வண்ணமெலா மைந்தற் கெடுத்துரைத்தாள்
பாலுரைத்த சொல்லாள் பரிந்து. (௪00)

எ-து.- தான் கன்னியா யிருக்கின்ற காலத்துத் துருவாச மகரிஷி வந்தவாறும், அவனைத் தான் பூசித்தவாறும், அவன் பிரியப்பட்டு ஐந்து மந்திரங் கொடுத்தவாறும், அந்த மந்திரத்தின் சக்தி காண்பதற்கு ஆதித்திய பகவானை நோக்கி மந்திரம் உச்சரித்த வாறும், 'அவன் அப்படியே பிரத்தியக்ஷமாய்த தன்னையொக்குந் தேசுடையா னொரு புத்திரனைக் கவசகுண்டலங்களோடு தந்தவாறும், தான்மறித்து நின்றவாறு கண்டு குந்திபோசத் தொடக்கத்தார்க்கு வடுவாமென்று தன் மாதாபிதாக்கள் இகழ்ந்து 'வங்கிசகீனம் இது; கன்னியாயிருந்த காலத்துக்கு இது ஏலாது' என்று தூஷித் துரைக்கையில் ஒரு மிதவைப் பேழையினும் செறித்து மத்தியயாமத் திடையில் பேராற்றிடை ஒழுங்குவித்தவாறும், இவ்வகை பூர்வ காலத்து நிகழ்ந்தன வெல்லாம் எடுத்துரைத்துப் பின்னும் யாது சொன்னாள் குந்திதேவி:-

305. உன்னை வருவித் துணரா வகைதெரிந்திட்
டின்ன பிறப் [4]புணர்தி யேந்திழையா-யென்ன
விதுவெலா மாய னெனக்குரைத்தான கண்டாய்
மதுவுலாந் தாரினாய் வந்து. (௪0௧)

(பா-ம்.) 1. என்ன டைந்த. 2. யாய் போந்தது. 3. குருக்குமர னாமாறு. 4. உணர்த்தி.

*என்றிவ்வகை குந்திதேவி கூறக் கேட்டக் கன்னனும் சந்தோஷித்து முறுவலித்து யாது சொன்னானோ வெனில்:-*

306. பொய்யுரைத்தே னல்லேன் புவிபுரந்த பாண்டுவின்றன்
செய்ய திருத்தேவி செப்பக்கே-ளைவர்
தமக்குத்தா யானாற் றடங்கண்ணாய் மற்று
மெமக்குத்தாய் வேறுண்டோ வின்று. (உ0உ)

*அன்றியும்,*

307. அன்னையென வந்தென்னை யைவர்க்கு முன்றோன்ற
லென்னுமிது மெய்யாக வெண்ணுவரோ-மின்னுந்
துடியிடையாய் வேண்டுவது சொல்லிக்கே ளென்றான்
படிபுகழு மங்கர்கோன் பார்த்து. (உ0௩)

*எ-து.- பாண்டவர் ஐவர்க்கும் மாதாவானது, எமக்கும் எல்லோர்க்கும் உலக மாதா வன்றோ? இது அசத்தியமல்ல; சத்தியமே சொன்னேன். இதுவன்றி எமக்கு மாதா வென்று பேசி இன்று வந்து சொன்னால், இது மெய்யாக யானும் விசாரியேன்; கேட்டார்க்கும் யோக்கியமன்று; ஆதலால், மாதா வென்ன வேண்டுவதில்லை; யாதாயினும் வேண்டுவது வேண்டிக் கொண்டு போவீராமின் என்று கன்னன் சொன்ன கடுமொழி கேட்டுக் கதுமெனக் கண்ணீர் பாயக் குந்திதேவியும் அவனை நோக்கி 'யான் உன் மாதா; நீ என் புத்திரன்; இது சத்தியம்' என்று கூறக் கேட்டு, யாது சொன்னான் கன்னன்:-*

308. என்னுடைய தாய்மா ரெனச்சொல்லி வந்தவர்க
டம்மெலும்பு தாங்கினார் தாமில்லை-யெம்முடைய
தாயே படாம்போர்க்கின் மற்றென்னைப் பெற்றெடுத்த
தாயே யெனவுரைத்தான் றான்.. (உ0௪)

*எ-து.- இந்தப் படாம் தேவர்களாலே பூசிக்கப்பட்டது; இது அசத்தியமல்ல; சத்தியமே கண்டாய்; இங்குக் கிடக்கப்பட்ட வெள்ளெலும் பெல்லாம் முன்னம் எனக்குத் தாய்மாரென்று வந்தமாதர்கள் பலர்க்கும் இந்தப் படாம் போர்த்து வெளிப்பட்டு அறிவிப்பீராமென்று படாம் கொடுப்ப, அவரும் இப் படாத்தின் சக்தி யறியாது போர்த்துக்கொள்ள, அதுவும் தகித்துச் சரீரமிழந்து வெள்ளெலும்பானார்கள்; ஆதலால், அவர்களைப்போல நீரும் படாம் போர்த்து உம்முடைய திவ்விய சக்தியினால் பின்பு சரீரம் பெற்றீராகில், எமக்கு மாதாவென்று (கன்னன்) சொல்லிக் கதுமெனப் படாம் கொண்டுவாவென்று கையில் வாங்கிக் கொண்டு, பின்னும் யாது சொன்னான் கன்னன்:-*

309. இக்கிடந்த மாதரைப் போ னீரு மிதுபோர்த்துத்
தொக்க வுடம்பிழந்து சோராதே-மிக்கதுதான்
வேண்டிக்கொண் டும்முடைய [1]வீடே நடவுமென்றான்
றூண்டித்தேர் வல்லான் றொடர்ந்து. (உ0ரு)

இவ்வகை இந்தப் படாம் போர்த்த மாதர்கள் பலரும் தம் உயிர்கொண்டு தம் பதி புக்காரில்லை; நீரும் இது செய்யாமல் வேண்டும் நிறையாபரணமும், நிறைமாநிதியும், நவரத்தினமும் ஈண்டன் வாங்கிக்கொண்டு எழுந்தருளுமின் எனக்கேட்டுத் தெய்வப் படாத்தை யெடுத்துக்கொண்டு யாது சொல்லி யாது செய்தாள் குந்திதேவி:-

310. பெற்றவுடம் பன்றாகி லென்னுடலைத் [2]தின்னீயென்
றுற்ற படாத்துக் குறவுரைத்து-மற்றதனைச்
சென்றெடுத்துப் போர்த்திருந்தா டேர்வேந்தன் றன்முன்னே
நன்றெடுத்த சொல்லா ணயந்து. (உ0சு)

எ-து.- நான் ஆதித்திய பகவானாற் பெற்ற புத்திரனல்லாதபொழுது என்னுடம்பை அரிந்து தின்னென்று படாத்துடன் சத்திய வாக்கியம் பேசிப் படாம் போர்த்துச் சங்கற்பத்தாலுள்ள மூன்றே முக்கால் நாழிகையும் பொறுத்து நாலா நாழிகையிற் படாம் நீக்கிப் பார்வேந்தன் முன்பாகப் பத்துப்படியாலும் உருகோடிய பொன்போலும், ஆதித்திய கிரணம் போலவும் ஒளிவிட்டெறிந்து விளங்காநின்ற குந்திதேவியைக் கண்டு, அதிசயப்பட்டுத் தன் அருகிருந்த சர்வ க்ஷத்திரியரும் தானும் எழுந்திருந்து நின்று, எல்லையில்லாததோர் பிரியமெய்தி யாது செய்தான் கன்னன்:-

311. தன்னுடைய முன்னே படாம்போர்க்கத் தார்வேந்த
னென்னுடைய மாதா விவளென்னா-நன்னுதலாள்
பொன்னடிமேல் வீழ்ந்தானைப் பொற்றடக்கை யாற்றழுவித்
தன்மடிமேல் வைத்தா டளர்ந்து. (உ0எ)

இவ்வகை கண்டு எலலையில்லாததோர் பிரியமெய்திப் புட்பாஞ்சனை பண்ணி நமஸ்கரித்தது கண்டு கருத்துற்றுத் தன் ஸ்ரீ ஹஸ்தங்களால் தழுவிக்கொண்டு மடிமிசை வைத்து உச்சிமோந்து, தன் செம்மலர்க் கண் நீர் பாய விம்மி விம்மி வெய்துயிர்த்து, மிக்க ஞானத்தாலும் வேல்வேந்தர் காண வெளிப்படக் கண்டு பிறப்புணர்ந்த பிரியத்தாலும் விருப்பமுடன் வீற்றிருந்த கன்னனை நோக்கி யாது சொன்னாள் குந்திதேவி:-

312. உனக்கினிய தம்பிமா ரைவரையு மொன்றி
வணக்கிரிசூழ் மண்ணாள வெண்ணி-யுனக்கிதனைச்

(பா-ம்.) 1. வீடு நடவும். 2. தின்னுகவென்று.

**சொல்லுவான் வந்தேன் சுடர்வேலாய் போதென்றாள்**
**வில்லுலாம் வாணுதலாண் மீட்டு.** (௨௦அ)

*அன்றியும்,*

313. **மண்ணெலாங் காத்தளித்து மன்னரெலாம் வந்திறைஞ்சக்**
**கண்ணெலாங் காதற் களிகூரப்-பண்ணுலாம்**
**பொற்றேரிற் போந்தேறிப் போர்வேந்த ரைவரையுங்**
**குற்றேவல் கொள்ளாய் குறித்து.** (௨௦௯)

*எ-து.-மண் [1]மக்கள் மகிழ்ந்துரைப்ப, என் கண்ணெல்லாம் களிகூர, நின் இளங் குமரரை யேவல்கொண்டு, விளங்கு மணியாசனத்துத் துளங்கா முடிவேந்தனாய் வீற்றிருப்பதற்கு நின்னை வேண்டிக்கொண்டு போக வந்தே னென்று குந்திதேவி கூறக்கேட்டு, முடிவில்லாததோர் சந்தோஷத்துடன் யாது சொன்னான் கன்னன்:-*

314. **ஆவி யனையார்க ளைவர்க்கு முன்றோன்றன்**
**மேவி யனைய வினையேனைப்-பாவியேன்**
**முன்செய்த தீவினையான் முன்புரையா தின்றுரைத்தீ**
**ரென்செய்வேன் சொல்லீ ரினி.** (௨௧௦)

*எ-து.- பாண்டவர்க்கு முன்றோன்றலாய்ப் பாண்டு புத்திர னென்னும்படி ஆண்டகையாயது அறிந்திலேன்; என்பால் அருவினை நின்று அகற்றுகையால் நீயும்முன்னமே அறிவித்திலை; முடிவிற் காலத்தறிய வுரைத்தனை; இதற்கு என்ன வண்ணஞ் செய்வே னென்று இருநிலத்து மிசை மயங்கி வீழ்ந்து, பின்னும் யாது சொன்னான் கன்னன்:-*

315. **இன்னா னெனவறியா வென்னை முடிகவித்து**
**மன்னர் வணங்க வரசியற்றிப்-பின்னையுந்**
**தன்னெச்சி லுண்ணாத் தகைமையான் றானுண்டா**
**னென்னெச்சி லென்னோ டினிது.** (௨௧௧)

*அன்றியும்,*

316. **கொன்னவிலுந் தேர்ப்பாக னென்று குலம்பேசி**
**யென்னைப் பலரு மிகழ்ந்துரைப்பப்-பின்னையுந்தா**
**னென்னெச்சி லென்னோடு முண்டானை யெங்ஙனே**
**[2]யுன்னச் சிழப்பே னுரை.** (௨௧௨)

*எ-து.- தேர்ப்பாகன் மகனென்று என்னை மன்னர் பலரும் இகழ்ந்துரைப்ப, மற்று அவரை முனிந்து என்னுடன் இன்னடிசில்*

---

*(பா-ம்.) 1. மகளிர். 2. உன்னச்சிறப்பேன் ; உன்னிச் சிறப்பேன்.*

உண்டு என்னை மன்னர் வணங்க முடிகவித்த ராசராசனை எங்ஙனை நான் விடுவேன் என்று பின்னுஞ் சொல்லுவான் கன்னன்:-

317. மருவார்வண் டாரான் மணிமுடியான் செய்த
வருடா னறியாதா ரில்லை-தெருளா
வழிகொடா வாறே யடு [1]களிற்றாற் காகிற்
பழிகடரஞ் சாலப் பல. (உகரு)

என்று பின்னுஞ் சொல்லுவான் கன்னன்:-

318. மதமா மழகளிற்றான் மற்றெனக்குச் செய்த
வுதவி யுலகறியு மன்றே-யுதவிதனை
நன்றுசெய்தோர் தங்களுக்கு நானிலத்தி னல்லோர்கள்
குன்றுவதோ செய்ந்நன்றி கூறு. (உகச)

என்றிவ்வகை சொல்லிப் பின்னுஞ் சொல்லுவான் கன்னன்:-

319. பன்மணிகள் சிந்திப் பரந்து கிடந்ததுகண்
டின்மணிக் கென்புகுந்த தென்னாம-னன்மணியைக்
கோக்கோ [2]பொறுக்கவோ வென்றானுக் கென்னுயிரைப்
போக்கா தொழிவேனோ புக்கு. (உகரு)

அன்றியும்,

320. மைத்தடங்கண் மாதேவி வார்துகிலை யான்பிடிக்க
வற்று விழுந்த வருமணிகண்-மற்றவற்றைக்
கோக்கேனோ வென்றுரைத்த கொற்றவற்கெ னாருயிரைப்
போக்கேனோ வெஞ்சமத்துப் புக்கு. (உகசா)

எ-து.- இராசராசன் தேவி லக்ஷணையும் நானும் ஒரு தனி மண்டபத்து இருந்து சூதாடி நிற்ப, இராசராசன் துரியோதனன் மிருகவேட்டை போய்க் கதுமென வந்தது கண்டு மற்று அவளும் போகவென்று எழுந்திருப்ப, போகாமல் தடுக்கவென்று அவள் பூந்துகிலைப் பற்றி யான் பிடித்திட, மேகலாபரணம் அற்று நவரத்தினங்கள் நாற்றிசையும் சிந்தியிட்ட வெல்லைக்கண், அடல். வேந்தனும் வந்து என்னை அருகு அணைந்து மற்று இதற்குக் காரணம் என் என்னாது கருணையுடன் முகமலர்ந்து நகையரும்பி யானும் கோப்பேனோ பொறுக்கவேனோ வென்ற வேந்தனுக்கு என் நல்லுயிரை யுத்தமண்டலத்துத் துறப்பே னென்று பின்னுஞ் சொல்லுவான் கன்னன்:-

321. உந்தமது புத்திரர்க்கா நல்லீராய் வந்தீர்நீ
ரின்றென்மே லாசை யிலையுமக்-கன்று

(பா-ம்.) 1. களிற்றார்க்கு. 2. பொறுக்குமோ.

**வடுவஞ்சிப் போவிட்டீர் மாண்டேனே லின்று**
**நடவென்பீ ராரை நயந்து.** **(உகஎ)**

*எ–து.–* *உம்முடைய புத்திரர்க்கு நல்லீராய் ஒரு காரணத்தினாற் போந்தீரல்லது, மற்று எனக்கு நல்லீராகில் முனனமே வந்து என்பால் மருவீரோ என்னுமது நிற்க, அன்று குழவிக் காலத்தே வடுவஞ்சிப் பேராற்றிடை யொழுக்கிய ஞான்று புத்திரனென்று உணராது மித்திர பாந்தவத்தை நோக்கினீர்; அன்று மற்று அந்த ஆற்றிடையின் மாண்டவனன்றோ யான்? (அது) சன்மசங்கற்பத்தால் வாழ்வேந்தன் திருதராட்டிரன் சூதன் எடுத்து இனிதுடன் வளர்க்க, வண்மையுடன் ராசராசன் துரியோதனனும் தோழனாகக் கொண்டு அங்கவளநாட்டுக்கு அபிஷேகம் பண்ணிப் பரராஷ்டிரத்து க்ஷத்திரியரும் வணங்கப் பண்ணி என்னையும் இவ்வகை பிரகாசிப் பித்தா னில்லையாகில், நீரும் வந்து அழைப்பீர் ஆரை என்று எடுத்துரைத்துப் பின்னும் சொல்லுவான் கன்னன்:-*

**322. நன்றாக மன்ன னெனக்கிந்த நாடறியக்**
**குன்றாத நன்மை பலகொடுத்தா[1]னென்றாலு**
**மீண்டவன் செய்த வுதவியினை யான்மறந்தாற்**
**றீண்டுவளோ தாமரையாள் சேர்ந்து.** **(உகஅ)**

*எ–து.–* *இராசராசன் துரியோதனன் என்னை இன்னானென்று அறியாதே இன்னடிசில் உடனூட்டி, மன்னர் இகழாது நிற்க அங்கராசன் என்று அபிஷேகம்பண்ணி அங்கதேசம் எனக்கு அளித்துத் தன் பிராதாக்கள் தொண்ணூற்றொன்பதின்மரும் சர்வ க்ஷத்திரியரும் தொழுது இறைஞ்சிக் கீழிருப்பதற்குத் தொலைவிலாத ஆசனமளித்து, ஏகாந்தத்துடன் இரு சரீரமும் ஒரு சரீரமாய் இனிதிருந்தோனுக்கு, எப்படியாயினும் பழிபாவம் விளையாமல் காத்த இராச்சியம் பண்ணிக்கொடுத்துப் பின்பு வந்து பாண்டவரைப் பிராதாக்களெனக் காண்பேன்;(ஆதலால்) அதுவன்றி, துரியோதனனுக்கு ஆபத்து விளைந்தவிடத்து மற்று அவனால் முன்னம் செய்யப்பட்ட உபகாரத்துக்கு யானும் சிறிது பிரதியுபகாரமாக அவனுக்குப் போர்விளைந்த யுத்தமண்டலத்து நிகழப்பட்ட கசதுரங்க பதாதிகளோடும் சர்வாயுதங்களோடு மவன்மேல் வரப்பட்ட வினைகளையும் விநாசஞ்செய்து, என் சர்வசக்தியெல்லாம் வஞ்சியாமற் காத்துக்கொண்டு, இரணமுகத்திலுள்ள சத்துருபக்ஷத்தாரும் பரராஷ்டிரத்துச் சர்வ க்ஷத்திரியருங் காணப் போர்மலைந்து, யுத்த பூமி விட்டு நீங்காது துரியோதனன் கண்டு களிகூரச் சர்வாயுதங்களாற் சலிப்புண்டு குருதிப்புனற் குளித்து, யானைக்கோடுகளாற் குத்துண்டு,*

---

*(பா–ம்.) 1. என்னாலும்.*

வீரசுவர்க்கம் பெறுவதன்றி, மற்று என்னாற் பேசத்தக்க தில்லை யென்று அநேகஞ் சொல்லிக் குந்திதேவியை நோக்கி நமஸ்கரித்து, உனக்கு வேண்டுவன வேண்டி என்பக்கல் வாங்கிக்கொண்டு ஈண்டன் எழுந்தருள்வாயாக என்று கன்னன் சொல்லக் கேட்டுப் பொறியற்ற கருவிபோல அறிவற்று மயங்கிக் கண்ணீர் மல்கி யாது சொன்னாள் குந்திதேவி:-

323. [1]உம்பரிக லேறுபோ லுற்றெழுந்த வஞ்ஞான்று
தம்பியரைக் கொல்கை தவிரென்றா-ணம்பி
யியலாரும் வே [2]லங்க நீணாடன் றன்னைக்
குயிலாரு மென்மொழியாள் கூர்ந்து. (௨௧௯)

எ—து.— நீ உற்றெழுந்த சமர பூமியில் வெற்றிகொள்ளு மிடத்து மற்று உன் பிரதாக்கள் ஐவரையும் இரட்சித்துக்கொள்வாயாக வென்று குந்திதேவி கூறக் கேட்டு, யாது சொன்னான் கன்னன்:-

324. பார்த்தனையான் கோற லவன்கைப் படுதலெனும்
வார்த்தை யுரைசெய்தேன் *மன்மகிழ-வேற்கும்
பொருவெஞ் சமர்தன்னிற் போந்தெதிர்ந்தான் மற்றாங்
கொருவருந்தா மில்லை யெதிர். (௨௨௦)

என்றிவ்வகை அருச்சுனனை யான் கொல்லல், மற்று அவன் கையில் யான் படுதல்-இரண்டில் ஒன்று ஆமென்று பரராஷ்டிரத்து க்ஷத்திரியர் பலருங் கேட்கச் சொன்னேன் ; இது தவிராது ; யானும் அவனு மொழியத் தீங்கு ஒருவர்க்கும் செய்யே னென்று சொல்ல, பொறியற்ற பாவைபோல் அறிவற்று அகங்குழைந்து யாது வேண்டிக்கொண்டாள் குந்திதேவி:-

325. வெஞ்சரங்கோத் தெய்து விறலழிக்கு நன்மகனே
பஞ்சவரிற் பார்த்த னுடன்மலைந்தா-லஞ்சுதலை
நாக மிருகாற் றோடாதொழிக வென்றுரைத்தா
ளாக முறத்தழுவி யாங்கு. (௨௨௧)

அன்றியும்,

326. வம்பழிதார் மன்னா மணிநெடுந்தேர் மேலேறி
யும்பியரைக் கொண்டுநீ நில்லாயே-லம்பொன்
றிருகாற் றோடாயாக வேண்டுவெனா னென்றாள்
செருகாற் றடங்கண்ணா டோர்ந்து. (௨௨௨)

அன்றியும்,

(பா—ம்.) 1. உம்பரிகல் போலநீ யுற்றெதிர்ந்த. 2. அங்கர் நீணாடன்.
• 'மனமகிழ்' என்றும் படிக்கலாம்.

327. என்மக்க ளைவர்க்கு மூத்தா யெழிலுறையு
மின்னொக்கும் பைம்பூண் விறல்வீரா-வன்மைக்கண்
வெந்திறன்மா நாக மிரண்டாவ [1]தெய்யாதி
யிந்தவரம் வெண்டுவெனா னின்று. (உஉ௩)

*அசுவசேன னென்னும் மகாநாகம் யுத்தபூமியில் அருச்சுனன்மேல் இரண்டாவது எச்சிற் கணையாகத் தொடாதொழிவாயாக என்று வேண்டிக்கொள்ளக் கேட்டு வியாகுலமெய்திப் பின்னும் யாது சொன்னான் கன்னன்:-*

328. இரவலர்க்கு மந்தணர்க்கும் வேண்டுவ [2]தீவே
னரவிருகா லெய்யாமை வேண்டிற்-குரவர்
பணிமாறு [3]கொள்வேனோ கோவேந்தன் பாரி
தணியாது சொல்லென்றான் றான். (உஉ௪)

*அன்றியும்,*

329. நாக மிருகாற் றொடாதொழிய வேண்டுமென்
[4]றாக வுரைத்தீ ரதுகேண்மின்-[5]வேக
மொருகாற் றொடுத்தா லுதுபிழைத்தாற் பின்னை
யிருகாற் றொடா [6]தொழிந்தேன் யான். (உஉ௫)

*எ-து.- அருச்சுனன்மேல் இரண்டாவது நாகபாசம் தொடாது உனக்காகத் தவிர்ந்தேன் மாதாவே யெனக் கேட்டுப் பிரியப்பட்டுப் பின்னும் யாது வேண்டிக்கொண்டாள் குந்திதேவி:-*

330. தருமனொடு வீமன் றனஞ்சயனு மல்லா
லிருவரும்வந் தாங்குன்னோ டென்று-பொருகளத்து
[7]முட்டிநேர் வந்தாலும் புத்திரனே கொல்லேனென்
[8]றொட்டியான் வேண்டுவெனா லுற்று. (உஉ௬)

*எ-து.- தருமன் வீமன் நகுல சகாதேவர் வந்து சமரபூமியில் எதிர்த்தாலும் அவரைக் கொல்லாமல் ஒரு வரந் தருவாயாக என்று குந்திதேவி கூறக் கேட்டு, நகையரும்பி யாது சொன்னான் கன்னன்:-*

331. பொன்னே யெனைப்பயந்த பொற்கொடியே யின்றுனக்கு
மின்னே ரிடையாய் மறுப்பெனோ-பொன்னாய்முன்
பெற்றதாய் வேண்ட மறுத்தா னெனும்வார்த்தை
[9]யுற்றறியாய் நிற்கு முலகு. (உஉ௭)

*அன்றியும்,*

---

(பா-ம்.) 1. எய்யாமை. 2. ஈவோன். 3. கொள்வனோ. 4. ஆகமுரைத்தீர். 5. வேகத், தொரு. 6. ஒழிவேன். 7. பூட்டிநேர். 8. ஓட்டியான். 9. உற்றழியா ; உற்றுழியாய்.

332. பெற்ற வுனக்கரிதோ பேராழி ஸ்வயகத்து
மற்றொருவர் வேண்ட மறாதநான்-கொற்றக்
குடையா□லுலகாண்ட கொற்றவன்றன் றேவி
படையான போதின்கட் பார். (௨௨அ)

அன்றியும்,

333. மற்றவர்க் கெல்லா மறாதென்னை வாய்த்தவரம்
பெற்றாய் பெறப்பேசல் வேண்டுமோ-நற்றபோர்
வெல்லுங் கணையொருகாற் றொட்டாலு நால்வரையுங்
கொல்லேன் படியொருகாற் கூர்ந்து. (௨௨௬)

என்றிவ்வகை யெல்லாம் வேண்ட வரங்கொடுத்துக் குந்திதேவியை நோக்கி யாது சொன்னான் கன்னன்:-

334. அம்மேநீர் [1]வேண்டிற்றுப் பெற்றீ ரதுவீந்தே
னும்மைநான் வேண்டுவதிங் கொன்றுண்டு-செம்மை
யலர்கதிர்வேற் கையா னருச்சுனன்கைப் பட்டான்
முலைதருவீர் பல்லரசர் முன். (௨௩௦)

அன்றியும்,

335. தார்ப்பொலியுந் தோளான் றடஞ்சிலைக்கைப் பார்த்தனாற்
போர்க்களத்தில் யான்மாண்ட போதகத்துத்-தாக்கமருட்
டோர்வேந்தர் காணச் செருக்களத்தே [2]நீர்பருவந்
தார முலைதருவீ ராங்கு. (௨௩௧)

அன்றியும்,

336. போர்க்களத்தில் யான்பொருது பொன்றினா லெம்பியரா
னீர்க்கடனுந் தீக்கடனுஞ் செய்விப்பீர்-[3]சேர்க்கு
மருமலருந் தாரார் மணி [4]முடியார் காண
வுரிமையுடன் செய்ம்மி னுகந்து (௨௩௨)

என்றிவ்வகை பேசி, முற்றிய போரில் அர்ச்சுனன் கையிற் பட்டேனாகில் பரராஷ்டிரத்துச் சர்வ க்ஷத்திரியரும் தானை மன்னரும் என்னை முன்னஞ் சொல்லும் தேர்ப்பாகன் மகனென்று சிதைய உரையாமல் செருக்களத்து வந்து என்னை யெடுத்துன் றிருமடியில் வைத்துப் பார்வேந்தரும் படைமன்னருங் காணப் பரிந்து உன் பொங்கு

(பா-ம்.) 1. வேண்டுற்றுப். 2. நீர்வந்து. 3. பார்க்குள். 4. முடியார்க் காண, வுரிமையுடன் சேரவுகந்து.

முலைப்பா லூட்டி உன் பூந்தடங் கையால் தழுவி யணைத்திருந்து உன் மக்கள் இளங்குமரரால் கடன் கழித்துப் பிறந்த நாளிற் செய்யாதவை யெல்லாம் இறந்தநாளில் யான் பெற்றேனாக வேண்டுமென்று மற்று அந்த மாதாவை மறாது வரங்கொண்டு மனமகிழ்ந்த அங்கராசனை நோக்கி அகங் குழைந்து சந்தோஷித்து நின்ற குந்திதேவியை நோக்கி மன்றலந்தார் மன்னவன் (கன்னன்) பின்னையுமொரு வரம் யாது வேண்டினானோ வெனில்:-

337. உன்னுடைய மைந்தர்க்கிவ் வுண்மை தனையுரைக்கி
[1]லன்னவர்கள் பாக மெனக்களிப்பர்-பின்னதனை
யீங்கெனது தோழற்கே யான்கொடுப்பே னாதலா
லாங்கவர்கட் கில்லை யரசு. (உ௩௯)

என்று இவ்வகை நீ இந்த உண்மையெல்லாம் தருமபுத்திரனுக்கு உரைத்தால், அவர் அறிந்தால் பலர் அறியும்; பலர் அறிந்தால் துரியோதனன் அறிவன்; அவன் உரிமை பிறந்தால் எனக்கு அளிப்பன்; அதனை யான் அவனுக்குக் கொடுப்பேன்; ஆதலால், அவர்க்குப் பின்னை இராச்சியம் இல்லை; இது ஸ்ரீ வாசுதேவன் கேட்டாலும் (இது) உனக்கு நன்மை யன்று என்றும் உரைத்து, மற்று இது அறிவிக்கும்பொழுது யான் பட்டால் அறிவித்துப் பட்டனவெல்லாம் உரைப்பாயாக என்றும் விண்ணப்பஞ்செய்து வரப்பிரசாதம்பெற்று மாதாவினைத் திருவடிதொழுது விடைகொண்டு, மற்று அவள் வாய்மை தலைமேற்கொண்டு போமளவில் புத்திரசோக மெய்தி அகங்குழைந்து கன்னனை நோக்கி யாது சொன்னாள் குந்திதேவி:-

338. முன்செய்த பாவத்தான் [2]மூத்தா யுனைப்பிரித்தே
னென்செய்தா விப்பிழைதான் நீருமெனப்-பொன்செய்த
மட்டவிழுந் தாரானை மார்புறவே தானணைத்து
விட்டவளு மீண்டாள் விரைந்து. (உ௩௪)

இவ்வகை யுரைத்துத் தன் புத்திரனைத் தழுவிக்கொண்டு விட்ட பின்பு பின்னும் யாது சொன்னாள் குந்தி தேவி:-

339. பாராளும் பாண்டவர்க்காய்ப் பாவியே னென்மகனைக்
கோணாகம் வேண்டிக் கொலைநேர்ந்தே-னானாலுந்
[3]தேவர்க்காங் கொல்லோ திரிவில்லா தாங்கொல்லோ
யாவர்க்காம் பாவ மிது. (உ௩௫)

என்று உரைப்பக் கேட்டு யாது சொன்னான் கன்னன்:-

(பா-ம்.) 1. என்னவர்கள். 2. மூதாய். 3. தேவர்க்காங் கில்லோ திரிவில்லோ தாங்கில்லோ.

340. பாரதத்துட் பட்டேன் படேனாகிற் பாண்டவர்பா
[1]லாதரித்து நான்வருவே னாரணங்கே-சீர்மிகுத்துன்
பொற்கமல பாதம் புரிகின்றேன் போவென்றா
னற்றவத்தின் மிக்கோ னயந்து. (உ௱௬)

*எ-து.-* துரியோதனனோடும் உங்கட்கு மூண்ட பெரும் போரில் மாண்டேனில்லையாகில் எனக்கு இளைய இளங்குமாரரை வந்து கண்டு மனமகிழ்வேன்; அது வில்லையாகில் யுத்தகளத்து மாண்டேனாகில் செய்யத்தக்கன இல்லை என்னும் இதற்கெல்லாம் இப்பொழுதே உம் ஸ்ரீபாதங்களைப் பணிந்தேன் என்று திருவடியில் நமஸ்கரித்துக் குந்திதேவியை எழுந்தருளுவித்து, கன்னனும் எல்லை யில்லாததோர் சந்தோஷத்துடன் விடைகொண்டு தன் கோயில் நோக்கிப் புக்கான் என்றவாறு, இப்பால் குந்திதேவியும் யாது நிகழ்ந்து போயினாளோ வெனில்:-

341. மல்லுயர் தோட்பார்த்தன் மாய னுடனிற்கக்
கொல்லு மிவனை யெனக்குலையா-நல்ல [2]மழைக்
காராரும் பூங்குழலாள் காதலொடு கண்ணிணைக
ணீரார்ப் போனா ணினைந்து. (உ௱௭)

*அன்றியும்,*

342. வென்றிநெடு வேல்விசயன் [3]வெங்கணைகள் வேறாக
வென்று மிருகாற் றொடானாக்கிச்-சென்றங்கோர்
கோயிற் குறுகிக் குலமாலுக் குற்றுரைத்தாள்
வேயனைய தோளாள் விரைந்து. (உ௱அ)

*எ-து.-* கன்னன் பக்கற் போய்ப் பிறப்புணர்த்தி மகா மாயன் சொற்படியே மதலையை வஞ்சித்து நாகபாசமுந் தடுத்துத் தன் மனக்கருத்தினால் வேண்டிக்கொண்டவா றெல்லாம் ஸ்ரீ வாசுதேவனை வந்து கண்டு மனக்கருத்து முற்றுவித்தேனென்று விண்ணப்பஞ்செய்து, தேவதேவன் மகாமாயை வல்லான் ஸ்ரீ வாசுதேவனை விடைகொண்டு, தன் மலர்க்கண்கள் மழையரும்பப் போந்து உபலாவிய நகரம்? புகுந்தாள் குந்திதேவி யென்றவாறு. இப்பால் ஸ்ரீ வாசுதேவ னிலைமை யாதாயிற்றோ வெனில்:-

343. ஏனைநடு வாகவெழின் மணித்தேர் பின்னாகச்
சேனையை முன்னே செலப்பண்ணி-வானவர்முற்
றன்னெடுந்தே ரேறினான் றாரணிமேன் முன்னொருகால்
வன்னெடும்புள் வாய்பிளந்த மால். (உ௱௯)

*அன்றியும்,*

*(பா-ம்.) 1. ஆர்வமொடு நான். 2. மலர்க். 3. மேற்கணைகள்.*

344. வரி [1]யரவிற் றிண்கொடியான் வஞ்சனையை வென்று
பரிவாரப் பார்வேந்தர் சூழ-முரிபணையின்
மூரிக் கொடியான் முழங்கொலிமா நாடணைந்தான்
மாரிக் கொடிதடுத்த மால். (உ௱௪௰)

அன்றியும்,

345. நாடு பலகடந்து நன்னெறிக ணீங்கிப்போய்க்
காடு மலையாறுங் கைகடந்து-கோடாத
செங்கோ னடத்துந் தருமனகர் சென்றடைந்தா
னங்கோத வண்ணன்போ யாங்கு. (உ௱௪௧)

எ-து.- விதுரராச னெல்லையில் தானெழுந்தருளியிருந்த பூங்காவனம் விட்டு நீங்கி யிரண்டு திவசம் வழியிற் றங்கி மூன்றாந்திவசம் உபலாவிய நகரஞ் சென்று சேர்ந்து மருவுமளவில், ஸ்ரீ வாசுதேவ னெழுந்தருளு மது கண்டு தருமபுத்திரனும் பிராதாக்களும் விராடராசனும் பாஞ்சால ராசனும் மற்றுமுள்ளாரும் எதிர்கொண் டடிபணிய, எம்மருங்கும் சேனை புடைசூழ, தவளச்சத்திரம் மேனிழற்ற, எழின் மணிக்கவரி யருகிரட்ட, கருடத்துவசம் விசும்பணுவ, சங்கு பேரிகை முதலாயுள்ள அணிகலன்கள் பஞ்சமகா சத்த முழங்கத் தருமபுத்திராதிகளுடன் சாலப் பிரியமான இனிமை பேசி, மற்றாங்கவரு மதற்கிரட்டி புடைசூழ உபலாவியநகரு ளெழுந்தருளித் தன் மணி நெடுங்கோயில் சென்றெய்திச் சபா மண்டபத்துச் சர்வ க்ஷத்திரியரும் புடைசூழ வீர சிங்காதனத்துமிசை வீற்றிருந்தான் தேவ தேவன் விக்கிரம மூர்த்தி பக்தவற்சலன் சக்கரபாணி ஸ்ரீ வாசுதேவன் என்றவாறு இவ்வகை பாண்டவரும் பரராஷ்டிரத்தாரும் சேவை பண்ணிச் சிந்தாகுலந் தீர்ந்து தெளிவுற் றினிதிருந்தவிடத்துச் சிறிதுபொழுது கழித்து, அஸ்தின புரத்துப் பிறந்த விசேஷங் கேட்டு வினவக் கண்டு திருப் புன்முறுவல் செய்து தருமபுத்திரனை நோக்கி யாதருளிச்செய்தான் ஸ்ரீ வாசுதேவன்:-

346. நாகக் கொடியானைக் கண்டதுவு நன்னெடுந்தேர்
மேகக் கொடியான்றன் வில்லிறுப்பும்-பாகத்தா
[2]லைந்தூர்கள் வேண்டினதும் வேண்ட மறுத்ததுவு
நஞ்சூரச் சொன்னா னயந்து. (உ௱௪௨)

அன்றியும்,

347. கொற்ற வரவுயர்த்தோன் கோயிற்க ணின்றுபோய்
வெற்றி விதுரனகத் துண்டமையும்-பெற்றிமிகு

(பா-ம்.) 1. அரவத்திண். 2. அஞ்சூர்கள்.

மாதாவைக் கண்டுமனந் தேற்றியது [1]மற்றதுவும்
வேதா திபனுரை த்தான் மிக்கு. (உசங)

அன்றியும்,

348. வாளிரவி மைந்தன் மணிக்கவச குண்டலங்கள்
கோளறவே [2]தானேவக் கொண்டமையு-மாமறையோன்
செம்மை யுரைத்ததுவுந் தேர்வேந்தற் குற்றுரைத்தா
னுண்மகிழ வாழியா [3]னுற்று. (உசச)

அன்றியும்,

349. கொன்னவில்வே னாகக் கணைதடுப்பக் குந்திதனைக்
கன்னனிடை விட்டதொரு காரணமு-முன்னி
வருவார் தமக்கருள வத்திகிரி மன்னும்
பெருமா னுரைத்தான் பெயர்ந்து. (உசரு)

எ–து.– தேவதேவன் பாண்டவர்க்குத் தூதாகத் துரியோதன னிடைக்குப் போய் மற்றவனை யற்றைக்குக் காணாது விதுரனகத்து விருந்துண்டமையும், மற்றைநாட் காலத்தாலே துரியோதனனைச் சென்று கண்டவாறும், அர்த்தராச்சியம் வேண்ட வுடன் படாதிருந்தானை யைந்தூர்வேண்ட மறுத்தவாறும், மற்று ஆங்கிருந்த வீஷ்மர், துரோணர், விதுரரு முரைத்த நீதிமார்க்கமும், அது கண்டு தன் சிறுதாதையாகிய விதுரனைப் பார்வேந்தன் துரியோதனன் முனிந்து புருஷவாக்கிய முரைத்தவாறும், அது கண்டு விதுரன் தன் திவ்வியமான வீரச்சிலையினை முறித்துப் போர் புகுதாமற் போனவாறும், அது கண்டு ஸ்ரீ பீஷ்மன் நடுவுரைத்த நன் மொழியும், அவ்விடத்துக் கன்னன் பேசிய சாமர்த்திய வுரையும், அது கண்டு துரியோதனனுந் துச்சாதனனுஞ் சகுனியு மிகுந்த உதாசீனமும், அது கண்டு கதுமெனப்போய்க் குந்திதேவிகோயிற் சென்றுமற்றவளுக் குற்றுரைத்த பட்டாங்கும், பின்னு மொருபரிசு துரியோதன னழைத்து வஞ்சனைத் தொழில் கருதி மணியாசன மிட்டவாறும், அதனுண் மல்லரு மரக்கரு மாயவைத்தவாறும், (அது கண்டு) தருமபுத்திர னுரைத்து விட்ட வுபகார நினைந்து மற்றவன் செய்யப்பட்ட மகா மாயையும் வல்லபங்களும் பொறுத்துப் பரராஷ்டிரத்தார்க்குச் சான்றுரைத்த வாறும், அவ்விடத்திற் பிறந்த வுற்பாதங் (களுங்) கண்டு கதுமெனப் போர் வேண்டிப் புரிந்தவக் கோயில் விட்டு நீங்கிப் போந்த கன்னன் கருத் தறிந்தவாறும், துரோணபுத்திரன் அசுவத்தாமாவைச்

(பா–ம்.) 1. மற்றவற்றை, வேதாதியன். 2. தானேவிக் 3. ஓர்ந்து.

சேனாபத்தியந் தடுத்தவாறும், சிறிதிடம் போந்து கன்னன் திறலழிக்கக் கண்ணாயிரமுடையான் தேவேந்திரன விடுத்துக் கவச குண்டலம் வாங்கினவாறும், அதன் பின்பு சிகாமணியும் அவனைக் கொண்டே யகற்றியவாறும், அதன் பின்பு கொற்றவேந்தன் மாதாக் குந்தி தேவி பணியினால் வெற்றிபுரிந்த நாகபாசந் தடுத்து வரங்கொண்டவாறும் மற்றுள்ள விசேஷங்களுந் தருமபுத்திரனுக்குச் சாந்தந் தோன்ற வெடுத்துப்பேசி யெல்லை யில்லாததோர் பிரியமெய்தி யினிதிருந்த ஸ்ரீ வாசுதேவனை நோக்கித் தருமபுத்திரனும், வீமார்ச்சுன நகுல சகாதேவர் விராடராசன் பாஞ்சாலராசனும் எல்லை யில்லாததோர் பிரிய மெய்தி நின்று யாது விண்ணப்பஞ் செய்தாரோவெனில்:-

350. உலகத் திரு[1]ணீங்க வுன்பொருட்டே யன்றோ
நிலனும் விசும்புமாய் நின்றா-யுலகுக்
குருவொன்றே யானாய்நீ யுன்னாலே வந்த
திருவன்றோ வெங்க டிரு. (உ சசா)

நிச்சயமே மகாயுத்தம் விளையாநின்றது; இனி யுங்களாற் செய்யத்தக்க வுற்சாகங்களை யீண்ட னொருப்படுமின் என்றருளிச் செய்தினிதிருந்தான் ஸ்ரீ வாசுதேவனாகக் கருதுவது.

### ஸ்ரீ வாசுதேவன் றூது முற்றும்

## சஞ்சயன் றூது

இப்பால், ஸ்ரீ வாசுதேவன் போயினபின்பு திருதராஷ்டிரனுங் காந்தாரியும் ஒருதனி சபாமண்டபத் திருந்து ஸ்ரீ வாசுதேவன் வந்தவாறும், மற்றவன் செய்த விக்கினமும், மகா மாயையும், ஆங்கவன் சகாயமு மறிந்து பயப்பட்ட மனத்தராய்த் துரியோதனனை யழைத்துவிட்டு யாதுசொன்னாள் காந்தாரி:-

351. மாய னெழுந்தருளி வந்தக்கான் மற்றவர்க்குத்
தாயங் கொடுக்கை தரமன்றோ-நீயா
யொருகுலத்தார் கூடி யுலகாள்வ தன்றோ
குருகுலத்தார் கோவே குணம். (கு)

எ-து.- தருமபுத்திரனுக்குத் தாயபாகம் வேண்டி மகா மாயனாகிய ஸ்ரீ வாசுதேவ னெழுந்தருளினால் மற்றவர்க்கிராச்சியங் கொடாது மறுத்துரைக்குமது குருகுல வங்கிசத்தார்க்கு இயல்பல்லகண்டா யென்று காந்தாரி சொல்லக் கேட்டு யாது சொன்னான் துரியோதனன்:-

(பா-ம்.) 1. நீங்க லுன்.

352. எல்லா மிழந்திடினு மின்றென் னுயிர்விடினு
மல்லார்தோண் மன்னரெலா மாண்டிடினு-நல்லாளே
பண்விடா மென்மொழியாய் [1]பாண்டவர்க்கியா னுள்ளளவு
மண்விடே னென்றான் மறுத்து. (உ)

என்றிவ்வகை துரியோதனன் சொல்லக் கேட்டு யாது சொன்னான் திருதராஷ்டிரன்:-

353. பஞ்சவர்கள் பாகங் கொடாயாகிற் பார்வேந்தே
விஞ்சவே மாய னுடன்விசயன்-வெஞ்சமத்துப்
பொன்றிவிழச் செற்றிந்தப் பூமியிடை மாளாதே
நன்றியுட னல்காய் நயந்து. (ங)

*எ-து.- பாண்டவர்கட் குண்டான தாயபாகங் கேட்டு ஸ்ரீ வாசுதேவனெழுந்தருளவுங் கொடுத்தாயில்லை; ஐந்தூர்தனை யாகிலுங் கொடுத்து ஆங்கவரோடு முடன் கூடி யினிதுட னிராச்சியம் பண்ணுவது கருமமாகக் கருதினேன்; மற்று அப்படிச் செய்யாயாகில், மாயவனை முன்னிட்டுக் கொண்டு அருச்சுன னாண்மையாலும் வீமசேனன் புயவலியாலும் தரும புத்திரன் பொறையினாலும் இராச்சியமுழுதும் ஆங்கவர்களே யாள்வர்; முன்ன மவன் சொற்படியே ஐந்தூர்தனைக் கொடுப்பாயாக' என்று திருதராஷ்டிரன் சொல்லக்கேட்டு மறுத்திட்டான் துரியோதனன். மறுத்திடுதலும்,மிகவும் பயமும் பரித்திராசமு மெய்திப் 'பாண்டவர் பலத்தினாலும் ஸ்ரீ வாசுதேவன் சகாயத்தினாலும் இது கேவல மல்ல; என்றுந் துரியோதனாதிகளுக்குப் பழிபாவம் வரும்' என்றெண்ணிச் சஞ்சயனை யழைத்துத் தருமபுத்திரன் பக்கற் போவாயாகென்று யாது சொன்னான் திருதராஷ்டிரன்:-*

354. தருமற்குந் தம்பியர்க்குந் தாமரையான் கோக்கும்
வருவதுதான் காப்பரிதா மென்று-குருபதியைக்
கோணாக வேந்தன்மேற் கோபம் [2]விட்டுப் போகச்சொல்
காணாத காட்டிற் கடிது. (ச)

*என்றிவ்வகை (சொல்லி வருவாயாகென்று) சொல்லிப் பின்னும் யாது சொன்னான் திருதராஷ்டிரன்:-*

355 ஓதத் தரவணைமே லூழி பலகிடந்த
வேதத் தருமணியை வேறிறைஞ்சிப்-பேதத்தா
லத்தரும னம்மோ டமர்புரியா வண்ண [3]மவன்
சித்தமது தேறநீ செப்பு. (ரு)

*(பா-ம்.) 1. பாண்டவர்கட் கியானுள, மண். 2. விடப்; விடஇப். 3. அவர்.*

*எ-து.-* பாண்டவரைக் கண்டு, பின்னைப் பாரடங்கலு மோரடியாலளந்து நீண்டவனைச் சென்று (கண்டு) நினைவுகளெல்லா மியம்பி, 'பாண்டவரைப் பேதித்துப் படர்கானத் தேறவிடத் தூண்டு பரித்தேர் மன்னன் றனக்கே பரமென்று சொல்' என்று சொல்லி, எப்படியாகிலும் பாண்டவர்களை அருங்கானம் பசைப்பித்துப் படர்கானத் தேறத் தப்பிலாவகை செய்யென்று சஞ்சயனைப் போக்கினான் திருதராஷ்டிர னென்றவாறு. அப்பொழுது யாது செய்தான் சஞ்சயன்:-

356. [1]என்றா னெழின்மன் னிருஞ்சேனை தற்சூழ
நன்றாக வென்றுரைத்து நான்மறையோன்-சென்றான்
படந்தா ழரவின்மிசைப் பாரடங்கக் கோட்டா
விடந்தா னிருந்த விடத்து. (சு)

இவ்வகை (சஞ்சயனுந்) திருதராஷ்டிரனை விடைகொண்டு ஓராயிரம் விடைமணிக்களிறும் ஈராயிர மணிநெடுந்ரேும் கோத்திர வயப்பரி யையாயிரமும் நூறாயிரம் விறலுடை வீரரும் உடன்வரப் புறப்பட்ட, இரண்டு திவசம் வழியிற்றங்கி மூன்றா நாள் உபலாவிய நகரம் புகுந்தான் சஞ்சயனாகக் கருதுவது. இவ்வகை சஞ்சயன் வருகின்றதனைக் (ஸ்ரீ வாசுதேவன்) கண்டு அருச்சுனனையுந் துரோபதியையும் அருகுகொண்டு ஒரு தனிமண்டபத்துப் பள்ளிகொண்டருளினான் ஸ்ரீ வாசுதேவன். அவ்விடத்து வந்து யாதுசெய்தான் சஞ்சயன்:-

357. கோவத் தனமெடுத்த [2]கோளரியைச் சென்றிறைஞ்சி
யாவத் துயர மகற்றினான்-மேவிமிக
வாழ்ந்தான் மகிழ்ந்தான் மனங்கூர வைப்புற்றான்
வீழ்ந்தா னெழுந்தான் விரைந்து. (எ)

இவ்வகை சஞ்சயனும் வந்து திருவடிதொழுது நிற்ப, மற்றவனை யறியாது போலப் பள்ளியுணர்ந்தருளி, அருகிருந்த வனிதையரையும் அந்தரங்கத் தாரையும் நோக்கிக் கண்டதொரு தரிசன லக்ஷணம் யாதருளிச்செய்தான் ஸ்ரீ வாசுதேவன்:-

358. பங்கயமும் பல்கொடியும் பார்த்தன்றன் பாதத்திற்
செங்கரமுங் கண்டு தெளிந்திருந்தே-னிங்கினியோர்
பார்த்தனே பாராளப் பார்வேந்த ரெல்லாரு
[3]மாய்த்திடுவ னென்றிருந்தேன் மற்று. (அ)

---

(பா-ம்.) 1. என்றா வெழின். 2. கோளரியைக் கண்டிறைஞ்சி 3. மாய்த்திடுமே; மாய்த்திடுமோ.

எ-து.- யான் துயில்கொண்டவிடத் தொருலக்ஷணங் கண்டபடி கேண்மின் என்றருளிச்செய்வான்: 'அருச்சுனன் காலிற் றாமரைப்பூவுங் கொடியுங் கண்டேன்; கையி லொரு சங்க பற்பமுங் கயலுங் கண்டேன்; மற்றும் பல ராச லக்ஷண முண்டாயிருந்தது. இதனா லருச்சுனனுக்கு வீரபரவசியம் உண்டாம்; துரியோதன னிராசசபைக்குப் பங்கமா யவன் மகரசேனைக்கும் நிச்சயமே நாசஞ் சித்திக்கும்' என்று, இவ்வகை கண்டதொரு லக்ஷணங் குறித்திடுங்களென்று அருச்சுனனுக்குந் துரோபதிக்கு மருளிச்செய் தினிதிருந்த விடத்துச் சஞ்சயன் வந்தமை யறியாதானைப்போலப் பள்ளியுணர்ந் தெழுந்தருளியிருக்கு மளவில் நமஸ்கரித்து நின்ற சஞ்சயனை நோக்கித்திருப் புன்முறுவல் செய்து 'நீ யெப்பொழுது வந்தாய்' என்றருளிச்செய்யக் கேட்டு வியாகுல மெய்தி யாது விண்ணப்பஞ் செய்தான் சஞ்சயன்:-

359. கொல்லா ளரவங் கொடிமேல் வலனுயர்த்தா
[1]னில்வாழ்வார் சொற்கேளா தீங்கிருந்தா-னெல்லாங்
கருதி யதுமுடிக்குங் கார்வண்ணா யாங்கள்
செருவின் மடியுமதோ செப்பு. (கூ)

என்றிவ்வகை விண்ணப்பஞ் செய்து பின்னும் யாது விண்ணப்பஞ் செய்தான் சஞ்சயன்:-

360. ஓதத் தரவணைமே லூழிநாட் கண்வளர்ந்த
வேதத் தருமணியே மெய்ச்சுடரே- [2]பேதத்தா
லத்தரும னெம்மோ டமர்புரியா வண்ணமவன்
சித்தமது தேறநீ செப்பு. (கo)

எனக் கேட்டு யாதருளிச்செய்தான் ஸ்ரீ வாசுதேவன்:-

361. அறந்தெரியுந் தன்ம னடலமரே யன்றி
மறந்[3]தெரியு மற்றோர்சொற் கேளான்-புறந்தெரியும்
வல்லானீ தூதா வழக்கொழிய யாமொருநாள்
வெல்லாது சொல்லோம் விடு. (கக)

எ-து.- சஞ்சயன் வந்து திருதராஷ்டிரன் புருஷாகாரத்தால் வேண்டத்தக்கன விண்ணப்பஞ் செய்து, துரியோதனனுக்குந் தருமபுத்திரனுக்கும் விபரீதம் விளையாவாறும் சந்தாமாறும் அருளிச்செய்வாயா கென்று விண்ணப்பஞ் செய்ததனை நோக்கி வாசுதேவ னருளிச்செய்வான்: தருமபுத்திரன் முன்னமுள்ள சாது தருமங்

(பா-ம்.) 1. இன்னாச்சொற் கேளாமல் யானிருந்தேன்; என்றாள் சொற் கேளாமை யானிருந்தேன். 2. பேதத்தோ, டத்தருமன்; போதத்த, வந்தருமன். 3. தெரிய.

கைவிட்டு இராச தன்மமே துணையாகக் கொண்டு விரும்பினான்போற் றோன்றியிருந்தது. இவ்வகை யெக்காலமும் தன்மமே துணையாக விரும்பி வாழ்கின்றான் இன்றிராச்சிய மூலமாக வறந்தெரிந்தானுக்கு யாம் இனி யென்ன சாத்திர மெடுத்துக்காட்டித் தணிப்போம்? அது நிற்க, துச்சாதனன் துரோபதியைக் கேசக் கிரகணஞ் செய்த ஞான்று மற் றவர்பட்ட பரிபவத்தாலும், வீமசேனன் பண்ணின பிரதிக்கினையாலும், முன்னம் சபாமண்டபத்துப் பேசிய விவஸ்தை யழிந்து நீதி மார்க்கங் கெட வுரைத்தமையாலும் இனித் திருதராஷ்டிர னுரைத்தபடி யாமுரைத்தாலும் இனி அவர் காடுறைவான் கருத்தல்லார் போலத் தோன்றி யிருந்தா ராதலால் இனி அவர்க்கு மன்றுரிமை கொடாமற் கூட்டவரிது என்றிவ்வகை யுரைத்துப் பின்னும் யாதருளிச்செய்தான் ஸ்ரீ வாசுதேவன்:-

362. தருமன் றனைக்கண்டு தாதைதான் சொன்ன
வொருவசனந் தன்னை யுரைத்துக்-குருபதியி
லிற்றைக்குத் தங்கி [1]யிசைத்த பொருள்கேட்டு
மற்றைநாட் செல்கென்றான் மால். (கஉ)

இவ்வகை யருளிச்செய்து சஞ்சயனுக்கும் மகாசேனைக்கும் விடுதலை காட்டி யுபகரித் தினிதிருந் தளவில், ஸ்ரீ வாசுதேவனைக் கண்டு வீமார்ச்சுனர் சொல்லுவார்: எம்பெருமானே! சஞ்சயனைத் தருமபுத்திரன் காணில் இங் கிவன் சொன்னபடியே யிசையவல்லோ போகின்றான்;இங்கிதற்குச் செயலாவ தென்கொலோ? என, அவைக்கு மறுமாற்றம் (ஸ்ரீ வாசுதேவன்) அருளிச் செய்வான் : சமரபூமியில் வந்து யுத்த மொழியாமற் செய்யப்பெறும்; யுத்தங்களுக்குத் துரியோதனனுடன் அஸ்தினபுரத்திற் செய்து கொண்ட விவஸ்தைகளெல்லா முளதாயிருக்க, இப்பொழுது சஞ்சயனுடன் சந்தாமாறு விசாரித்தீரோ? என்று ஆங்கவர்களை வற்புறுத்தி ஸ்ரீ வாசுதேவனுந் தன்கோயிற் புக்கானாகக் கருதுவது. இப்பால்,-

363. பஞ்சவர்க ளெண்ணத்தாற் பாம்புயர்த்தோன் சீரழியக்
கஞ்ச மலர்முளரி காதலிப்பத்-துஞ்சுமவர்
தாமெழுந்து போற்றத் தனித்தேரின் மீதெழுந்தார்
சூரியனார் தாமுந் தொகுத்து. (கங)

இவ்வகை யாதித்திய னுதயஞ்செய்தலும், அதுகண்டு சபா மண்டபத்துச் சர்வ க்ஷத்திரியரும் ஸ்ரீ வாசுதேவனும் புடைசூழ விருக்கின்ற தரும புத்திரனிடைக்கே சஞ்சயன் வாராநிற்ப, ஆங்கவன் வருகின்றது கண்டு யாது செய்தான் தருமபுத்திரன்:-

(பா-ம்.) 1. இசைந்த.

364. நான்முகனோ டொத்தவனை நால்வேதம் வல்லானைத்
தானெதிர்கொண் டன்பாற் றலைவணங்கி-ஞானவனுக்
காதனமே நல்கி யருமறைசேர் சஞ்சயனைப்
[1]போதனவே தென்றான் புரிந்து. (கச)

இவ்வகை சஞ்சயனைக் கண் டெதிர்கொண்டு தன் கோயிலிடம் புகுந்து, மற்றவனுக் காசனமு மடைக்காயுங் கொடுத் தினிதிருந்து மனமகிழ்ந்து பின்னை யாதுசொன்னான் தருமபுத்திரன்:-

365. தனியே முதலாய [2]தந்தமெலா முண்டு
தனியே தளர்ந்தவரைத் தேடு-முனியே
படர்ந்தவாப் பின்றொடரப் பாதங்க ணோவ
நடந்தவா [3]றென்றா னயந்து. (கரு)

எனக் கேட்டு யாது சொன்னான் சஞ்சயன்:-

366. வேதியன் சொல்லும் விதுரன் பெருஞ்சொல்லுங்
கோதில் குருகுலத்தார் கோன்சொல்லு-மாதா
பெருஞ்சொல்லுங் கேளாது பின்னிகழ்ந்தான் [4]மாம
னருஞ்சொல்லே சொல்லாக வாங்கு. (கசா)

இவ்வகை சத்திய வசனங் கேளாதிருந்த துரியோதனனை யறிவித்தீங்கிதற்குச் செயற்பால தென்கொலோ வென்று திருதராஷ்டிர னருளிச் செய்தா னென்று, பின்னும் யாதுசொன்னான் சஞ்சயன்:-

367. தம்பியரு நீயுந் தழைக்காடு கானகம்புக்
கின்ப முடனிருக்க [5]வேகீரேல்-வம்பவிழ்தார்
மன்னவர்க ளைவரையு மாளுவிப்ப னென்றுரைத்திங்
கென்னைவர விட்டா னிசைந்து. (கஎ)

எ-து.- இன்னங் கானகத்துறை கண்டா யென்றும், சதுர்வேதஞ் சமைத்துச் சொன்ன யாகத்துறை யியற்றி யிகல்வேந்தனா யினிதிருந்து சரசத்தினை யனுஷ்டிக்கை பரிபவங்காண்; பெரிதொரு பாபத்தினை விட்டு நீங்கி யுன் னிளங் குமாரருடன் கொடிய கானிடையிற் போவாயாக; அன்னதற்குக் காரணம்-வீஷ்மர், துரோணர், விதுரர், கன்ன னென்னும் நாலு கரையாலுங் காக்கப்படுவன் துரியோதனன் சாதுரங்கமாகிய கடலொடு பகைகொண்டு மடியிற் பின் பார்வேந்த னுனக்குப் பிதாவாகவுஞ் சார்ந்தவர்களைக் கொன்ற. . .வெற

(பா-ம்.) 1. போதனவென் னென்றான். 2. தந்தவெலா முண்டு, தனியேதான் றந்தவனைத். 3. என்னென்றா னன்கு. 4. மாமன், றருஞ்சொல்லே. 5. ஏகாயேல்.

குமாரராற் கொல்லுவித்தா னென்னுங் கொடும்பழி தாராதே வெல்விற்கைத் தம்பியருடன் வெங்கானிற் போவது என்றும், குருவசன மலங்குகை குணமல்ல தனக்கென்றும் உரைசெய்தா னுன் பிதாவாகிய திருதராஷ்டிர னென் றுரைப்பக் கேட்டு மறுமாற்றஞ் சொல்லாது வற்புற்றிருந்த தருமபுத்திரனை முகநோக்கி யாதருளிச் செய்தான் ஸ்ரீ வாசுதேவன்:-

368. தானங்கள் செய்தாய் தலைவேள்வி தான்முடித்தாய்
மான முடையாய்நீ மன்னவனே-ஞானத்தால்
வாழ்வேந்தர் சூழ வழக்கறா மாமுனியாய்ப்
போர்வேந்தே கென்றான் புரிந்து. (கஅ)

பரராஷ்டிரத்து க்ஷத்திரியர்க் கெல்லாஞ் சங்காரமாகிய காரணமே தான் றுணிகின்றதாதலாற் றனக்குக் கடனன்று; தானுந் தம்பிமாரும் வனசாரிகளாய்த் தபசு பண்ணுகை தன்மம்' என்று சொன்னா னுங்கள் பிதா என்று ஸ்ரீ வாசுதேவ னருளிச்செய்யக் கேட்டு அங்கையோ டங்கை தாக்கித் துங்கமா முடி துளக்கிச் சஞ்சயனை நோக்கி யாது சொன்னான் தருமபுத்திரன்:-

369. மாயத்தாற் சூதாடி மண்கொண்ட மன்னவன்றா
னேயத்தாற் றாரானே னீண்மறையோய்-தாயங்
[1]கொடாதானைக் கொன்றெங் குருநாடு கொள்கைக்
கடாதனவோ வெங்கட் கமர். (கக)

மாயச்சூதாடி மண்கொண்ட துரியோதனன் முன்னஞ் சொன்ன வெல்லைக்கண் காடுறைந்து வந்தோமுக்கு விவஸ்தை வழுவி யிராச்சியந் தாராமலிப்பொழுது திருதராஷ்டிரன் சொன்னானென்று ஆள் வலியும் பராக்கிரமமும் பேசி யெம்மைக் காடுறைகவென்று நீ சொன்ன வார்த்தை நீதிமார்க்க மல்லகண்டாய்; அது நிற்க, நியாயமல்லாதன செய்யில் பாதியாயினும் மண்கொள்கை காவலரசற்குக் கடன்; (என்று) சத்தியபுத்திர ராகையாலே யெங்கட்கும் யுத்தபூமியிற் படுகை கட னென்று தருமபுத்திரன் சொன்ன வுற்சாகங் கண்டு சத்துரு நாச முற்றும் பண்ணி யிராச்சியங் கொண்டாற் போல மகாப் பிரியஸ்தனாய்ச் சஞ்சயனை முக நோக்கி யாது சொன்னான் வீமசேனன்:-

370. அரவக் கொடியோனு மாடெழிற் [2]றோண மன்னுங்
குரவிக் குருநாடு தாராரே-[3]விரவியெழுங்
காற்றுக் கிசைந்த கடுங்கனலுங் காடும்போற்
கூற்றுக் களிப்பேன் கொதித்து. (உ0)

(பா-ம்.) 1. கொடாதாரைக். . . .கொள்கை, யடாதனவோ. 2. தோளாருங், குரவக். 3. உரவினெழுங்; விரவியெழுங்.

இவ்வகை பேசிய வீமசேனனை நோக்கி யாது சொன்னான் சஞ்சயன்:-

371. [1]பாராள ரெண்ணும் பகடும் பரிமாவுங்
காராருங் கன்னனுடன் காங்கெயனுந்-தேராளர்
நூறுநூ றாயிரம்பேர் நூற்றுவரோ டுற்றெழுந்தால்
வேறுமா [2]றாரோ விளம்பு. (உகு)

எனக்கேட்டு யாது சொன்னான் வீமசேனன்:-

372. ஆற்றலுடை யங்க ரரசன் [3]முதலாயோர்
நூற்றுவ ரென்னும் [4]பகடுழக்கிச்-சீற்றமுடன்
பாராள வின்னம் பெறாதொழிந்த பார்த்திபனை
வீராகம் பண்ணுவிப்பேன் மிக்கு. (உஉ)

எ-து.- கேளாய் சஞ்சயனே! தருமபுத்திரனை வீரயாகம் பண்ணுவிக்கக் கடவேன்; அந்த யாகம் பண்ணும்படி கேளாய்: குருக்ஷேத்திர மென்ற யுத்த பூமியே யாகசாலையாக, கோபமென்னும் அக்கினி மூட்டிக் கொடித்தே ரென்னும் இந்தனம் அடுக்கிக் குருசேனை யென்னும் நெய் சொரிந்து தரும புத்திரன் யக்ஞபரனாகவும் துரோபதியே யக்ஞபத்நியாகவும் நாங்கள் நால்வரும் இருத்துவிக்குகளாகவும் என்கையிற் றண்டாயுதம் யூபமாகவும் தன்மவிரோதிகளா யுள்ள துரியோதனாதிக ளென்னும் நூற்றுவரையும் பசுப்படுத்து வைகல்லியப் படாமல் அலகைக்கும் பக்ஷிசாதிக்கும் பிணமென்னுஞ் சொன்னதானம் பண்ணித் தட்டுப்படாமல் (வீரயாகச்) சடங்கு செய்வித்து, வைவச்சுதனாகின்ற ஓதாவினுக்கும் பூதங்களுக்கும் பரராஷ்டிரத்து ராசாக்கள் பிராணனென்கின்ற தக்ஷிணை கொடுத்து (த்திருதராஷ்டிரதலையே ஸ்தானமாகவும்) (பூர்த்தி செய்தலாம்.) இந்தயாகத்துக்குப் பல னேதென்னில், துரோபதி குழன் முடித்தலும் என் மனக்கருத்து முடித்தலும். இதற்கு ஸ்ரீ வாசுதேவனே மந்திரலோப காரியலோபங்கள் வராதபடிக்குச் சடங்குகாட்டி, இப்படித் தருமபுத்திரனைக் கொண்டு வீரயாகம் பண்ணுவிக்கக் கடவேன் என்றும், இந்தப்படிக்கு ஸ்ரீ பீஷ்மர் துரோணர் விதுரனுக்குந் துரியோதனாதிகளுக்குங் கன்னனுக்குஞ் சொல்லுவாயா கென்றும் வீமசேனன் சொல்லக் கேட்டுச் சஞ்சயனும் மிகவும் பயமும் பரித்திராசமு மெய்திப் பேசுவதொன் றில்லா திருந்த விடுத்து, வீமசேனனை முனிந்து யாது சொன்னான் தருமபுத்திரன்:-

373. பற்றா ருடன்பகரும் பாரதப்போர் பண்பிலா
வுற்றா ருடனுரைக்க வேண்டினான்-மற்றாரை

(பா-ம்.) 1. பாராள்வார். 2. ஆமே. 3. முதலாக. 4. பதமுழக்கிச் பதவுழக்கிச்.

யன்றியே யாடாமற் றூதருடன் [1]வன்மொழிகள்
வென்றியோ வீமா விளம்பு.. (உங)

எ-து.- பண்பில்லாத வுற்றோருடன் போர்புரிய வேண்டியுரைக்குங் காலத்து மற்றவர்முன்னம் பேசுவதன்றி யவர் விடுத்த தூதரு... வெவ்வுரையும் வேறுபாடும் பேசுவது யுத்த வீரர்க்கு யோக்கியமல்ல வென்றும், இவ்வகை வேதியனுட னுரைக்குமது வீர சௌரிய பங்கமாமென்றும் தருமபுத்திர னுரைப்ப, வீமசேனனும் மற்றந்தச் சஞ்சயனுக் குபசாரஞ் செய்து இன்சொலுடன் 'போவாயாக' என்று விடைகொடுப்ப, வியாகுலமெய்தி வந்தகரும முற்றப் பெறாமையாற் றளர் வெய்திச் சஞ்சயன் யாதன்னினனோ வெனில்:-

374. மன்னவன்பாற் றானணைந்த மன்னர் மொழிமாற்றம்
பன்னுவநா மென்றந்தப் பண்ணவனே-றான்னிப்
பலவேந்தர் சூழப் பணிக்குடைக்கீழ் வாழு
.நிலவேந்த னைக்கண்டா னின்று. (உச)

இது இவ்வகை ஸ்ரீ வாசுதேவனையும் தருமபுத்திரனையும் விடைகொண்டு பரிகரத்துடனும் புறப்பட்டிரண்டு திவசம் வழியிற் றங்கி மூன்றாநாள் அஸ்தினபுரம் விசேஷஞ் சொல்லுவாயா கென்ன, யாது சொன்னான் சஞ்சயன்:-

375. ஆதியா னாங்குரைத்த மாற்ற முரைசெய்யப்
போதுதா னில்லை புரவலனே-சோதிச்
சுடரோனும் போய்மறைந்தான் சொற்பிழைக்க மன்னா
[2]வெடிவே யதுகேள் விரைந்து. (உரு)

ஆதித்தியபகவா னஸ்தமனத்தாலும் வழிவந்த வருத்தத்தினாலும் காலமே கேட்பாயா கென்ன, சஞ்சயனுக்கும் விடைகொடுத்துத் தானும் பெருகச் சந்தேக மெய்திய வியாகுல வேந்தனாய்த் தன் கோயிற் புகுந்தான் துரியோதன னென்றவாறு. இவ்வகை திருதராஷ்டிரன் கேட்டு விதுரனுட னளவளாவித் தன்மபுத்திராதிகளுக்கும் மித்திர பாந்தவத்தார்க்கும் பழிபாவம் வருமெனக் கருதிச் சோக விருதயஸ்தனாய்ச் சிறிது நாழிகை பள்ளிகொண்டானாகக் கருதுவது. அப்பொழுது,-

376. வைய மிருளகல மன்ன ருயிர்போகச்
செய்யதிரு மாலெண்ணஞ் சென்றோங்க-வெய்யதனித்
தேரோனும் வந்துதித்தான் செம்மையுடைப் பாண்டவர்கள்
பாராளு மாறே பரிந்து. (உசா)

(பா-ம்.) 1. துன்மொழிகள். 2. விடிவோரை கேண்மின் விரைந்து.

இவ்வகை யாதித்திய பகவான் உதயஞ்செய்யலுந் துரியோதனனுந் திருதராஷ்டிரனும் பள்ளி யுணர்ந்து சபாமண்டபம் புகுந்து விதுரனை யழைத்துவிட்டு யாது சொன்னார்:-

377. ஆண்டகைவேற் பாண்டவர்பா லாய்ந்த மொழிகேட்க
மீண்டுவரு மந்தணானா ரைத்தனியே-யீண்டன்வர
நீயழையா யென்ன நிகரேது மொவ்வாதான்
போயழைத்தா னன்றே புரிந்து. (௨எ)

இவ்வகை சொல்லக் கேட்டு விதுரனுஞ் சென் றழைப்ப யாது செய்தான் சஞ்சயன்:-

378. மேவலரை வெல்லும் விதுரன் குரல்கேட்டுக்
காவலருங் கங்குல் கழிந்ததற்பி-னேவலரும்
பூமறைய வண்டிருக்கும் பொய்கைசூழ் நாடன்பான்
மாமறையோன் சென்றான் மதித்து. (௨அ)

எ-து.- சஞ்சயனும் விதுர னழைப்பக் கேட்டுக் கதுமெனப் பள்ளியுணர்ந்து, ஆதித்திய னுதித்தலு மனுஷ்டான கரும முடித்து விதுரனுடன் போந்து சபாமண்டபத் திருந்த துரியோதனனையுந் திருதராஷ்டிரனையுங் கண்டு சுவாகதஞ் சொல்லிப் பின்னும் யாது சொன்னான் சஞ்சயன்-

379. [1]ஆயனும் பார்த்தனு மாயிழையார் கால்வருடத்
தூயமணிப் பள்ளிச் சுடரொளிசேர்-பாயலுடன்
சிங்கா தனத்திருந்தார் தேர்வேந்தர் தேவியுட
னங்கே [2]யருகிருந்தா ளாங்கு. (௨௯)

எ-து.- அருச்சுனனுந் துரோபதியு மருகிருக்க, அப்சரசுக்களனையாரடிவருடப் பள்ளிகொண்டருளினான் ஸ்ரீ வாசுதேவன். அப்பொழுது நானுஞ் சென்று காண, அறியாதானைப் போலப் பள்ளி யுணர்ந்தருளி யவனருளிச்செய்த ராசலட்சணமுஞ் சாமர்த்தியமும், கண்டு மற்று முற்ற வார்த்தை விண்ணப்பஞ் செய்யக் கேட் டவனருளிச்செய்த வாசகமும், அங்கு நின்று விடைகொண்டு போந்து மற்றைநாட் காலமே சென்று தருமபுத்திரனைக் கண்டவிடத்து மற்றவன் பேசிய துணிவும் (சொல்லுவே னென்று) யாது சொன்னானோ வெனில்:-

380. தருமனுந் தம்பியுந் தாமரையாள் கோனு
முரிமையுடன் கட்டுரைத்த வூக்கங்-கருதிமிக

(பா-ம்.) 1. ஆயனையும் - பார்த்தனையு மாயிழையார் தங்களையுந். 2. அருகிருந்தா ராங்கு; அருகிருந்தே னாங்கு.

[1]மல்லாடு திண்ணியதோண் மன்னனுக்கு முற்றவர்க்கு
மெல்லா முரைத்தா னெடுத்து. (௩0)

*எ—து.— தருமபுத்திரனைக் கண்டு திருதராஷ்டிரன் சொன்ன வசனமு மற்று முரைத்தவளவில், அவன் முன்போலன்றி (த்தருமபுத்திரன்) சாது தருமங் கைவிட்டு ராசதன்மமே துணையாக விரும்பியிருந்தமையும், அது கண்டு வீமசேனன் சொன்ன பராக்கிரமங்களுந் தப்பின்றி யுரைத்துப் பின்னும் யாது சொன்னான் சஞ்சயன்:-*

381. குரவனையும் பார்த்தனையுங் கூட்டுவையா கென்ன
வுருவுடையோ னுள்ளத் துரைப்பான்- [2]வருமறைக்கு
மூத்தாணி யென்றுரைத்த மூதுரைகள் யான்சொல்லிப்
[3]பார்த்தாலு மேகூடாப் பண்பு. (௩௧)

*அன்றியும்,*

382. அரவணையான் றானுரைத்த தெல்லா முரைக்கி
னிருநிலமு மிங்கிவருக் கில்லை-[4]குருபதியைக்
கொன்னவிலுங் கூராழிக் கொற்றவன்பால் வேறுரைத்த
மன்னவனே வேண்டா மதித்து. (௩௨)

*எ—து.— ஸ்ரீ வாசுதேவன் பக்கல் யான் போய்க் கருமங் கேட்டளவில், இராச்சிய முற்றுந் தருமபுத்திரனே யாள்வானாகா நினைந்து மற்றதற்கு வேண்டு முற்சாகமுஞ் தோன்ற வுரைத்து, இனி யிரண்டு திறத்தோரும் யுத்தம் பண்ணிக்கொள்ளக் கடவரென்றுந் தருமபுத்திர னினிக் காடுறைவான் கருத்தல்லனென்றும் (ஸ்ரீ வாசுதேவன்) அருளிச் செய்தமையால் நிச்சயமே யுத்தம் விளையாநின்றது. ஆதலால் நீயும் இனி (யுத்தத்துக் காம்படி) மற்றுனக் குற்சாக முடையார்க்கும் மித்திரபாந்தவத் தார்க்கும் ஆசனமும் அபிஷேகமுங் கொடுத்து, மற்று மெண்ணப்பட்ட யுத்தவீரர்க்கு வாகனமும் வளநாடுங் கொடுத்து, குருக்களுக்கும் பிராமணருக்கும் மகாதானங் கொடுத்து யுத்தத்துக் காம்படி யொருப்பட்டு வாழ்வாயாக என்று சஞ்சயன் சொல்லக் கேட்டு மற்றவனை முனிந்து யாது சொன்னான் துரியோதனன்:-*

383. பாண்டவரை வெல்வதற்குப் பாரதப்போர் வேண்டுமோ
தூண்டுபரி மன்னவர்முன் சொல்லுங்கான்-மூண்டகயல்
வாளைப்போர் செய்யும் வளநாட ரெண்ணமெல்லா
நாளைப்பா ரென்றா னகைத்து. (௩௩)

---

*(பா—ம்.) 1. மல்லாடுந் திண்டிறற்றோள். 2. அருமறைக்கு, மூத்தரணி. 3. பாத்தலுமே கூடாத பண்பு. 4. குருபதியே.*

எ-து.- துரியோதனனுங் கோபித்துப் பாண்டவரை வெல்வதற்குப் பாரதத்தொழில் வேண்டுமோ என்று சபையின்கட் பேசித் தனக்கருகிருந்த ஸர்வ க்ஷத்ரியர்க்கும் விடைகொடுத்துத் தானுந் தன் கோயிலுட் புகுந்து திருதராஷ்டிரனுந் தானும் ஒருதனி சபாமண்டபத் திருந்து அளவளாவித் தருமபுத்திரனையுந் தம்பிமாரையும் யுத்த பூமியில் வெல்வதற்கு வேண்டுவன நினைந்து இரகசியம் பலபேசி விசாரியா நின்றாராகக் கருதுவது. இங்கிது இவர் நிலைமை. இப்பால் சஞ்சயன் போயின பின்னைத் தருமபுத்திரனை நோக்கி யாதருளிச்செய்தான் ஸ்ரீ வாசுதேவன்:-

384. பாராள வல்லீரோ பாம்புயர்த்தோன் சொற்படியே
நேராக நாடு தனைவிட்டுச்-சீராருந்
தம்பியரு நீயுந் தழைக்காடு கானகம்போய்
வெம்பவல் லீரோ விளம்பு. (௩௮௪)

என்றிவ்வகை ஸ்ரீ வாசுதேவன் அருளிச்செய்யக் கேட்டு யாது விண்ணப்பஞ் செய்தான் தருமபுத்திரன்:-

385. எம்பெருமா னெம்பி விசயன்றேர் மேனிற்க
[1]வும்ப ருடன்றெழினு மூடறுத்துத்-தம்பியரோ
டாள்வே னிராச்சியத்தை யாரணியந் தானோக்கிப்
போகேனென் றானே புகழ்ந்து.. (௩௮௫)

எ-து.- விவஸ்தை யறியாமற் காடுறைந்து மீண்டு வந்தேனுக்கு அர்த்த ராச்சியம் வேண்டித் தேவதேவனாயுள்ள நின்னைப் போகவிடவுந் தாரா மற மன்னவற்காகத் தேவதேவனோடுந் தேவர்கள் கூடி யுத்தம் பண்ண வந்தாலும், எம்பெருமான் அருச்சுனனுக்குச் சாரதியாக மற்றவன் தேர்மிசை யெழுந்தருளி நிற்க ஆங்கவரை யுத்த பூமியிற் பட மலைந்து இராச்சியங் கொள்வதன்றி இனி யெம்பிமாருடன் ஆரணியம் போகேன் என, நாரணன் இட்ட திருவுளத்தனாய் யாதருளிச் செய்தான் ஸ்ரீ வாசுதேவன்:-

386. பல்வே றரசர்க்கும் பல்வேறு தூதரைவிட்
டிவ்வாறு செய்கென் றெடுத்துரைத்தா-னல்வேந்தன்
றானாகி யேற்றத் தடங்கடல்வா யெந்நாளு
மானாக மேற்றுயிலு மால். (௩௮௬)

இவ்வகை பரராஷ்டிரத்து க்ஷத்திரியரும் வருகவென்று திருமுகமுந் தூதரும் போக்கென் றருளிச்செய்தான் ஸ்ரீ வாசுதேவ னவ்விடத்து. இப்பால் துரியோதனன் நிலைமை யாதாயிற்றோ வெனில்:-

சஞ்சயன் றூது முற்றும்

(பா-ம்.) 1. உம்பருட னேன்றாலும்.

# படைத்திரட்சி

## (கடவுள் வாழ்த்து)

387. பொருப்படைந்து தங்கள் புலனைந்துஞ் செற்று
நெருப்படைந்து நீரடைய வேண்டாம்-விருப்படைந்து
வைகுந்தஞ் சிந்தையிலே வைப்பார்க்கு மாதவனும்
வைகுந்தஞ் சிந்தையுளே வந்து. (க)

*இப்பால் கன்னனை நோக்கி யாது சொன்னான் துரியோதனன்:-*

388. அரவுயர்த்தோ னோலை யகலிடத்தார் [1]காண்க
முரசுயர்த்தோ னோடும்போர் மூண்டோம்-[2]வரவியற்றா
தங்கிருந்தார் நாடு மணிநகரு மானைகளு
மிங்கிருந்தார்க் கென்றே யெழுது. (உ)

*இவ்வகை கன்னனை நோக்கி யுரைத்துத் தன்பெருஞ் சேனைத்தலைவர்க்கும் பரராஷ்டிரத்தார்க்குந் திருமுகமுந் தூதரும் போக்கி யீண்டன் படைவரச் சொன்மினெனக் கேட்டு, யாது சொல்லி யோலை போக்கினன் அங்கராசன்:-*

389. வேந்தர் பெருமான்றன் வெங்கண் மிகச்சிவந்தான்
பூந்தண் முடியார்தாம் போற்றிசெயத்- [3]தாந்தஞ்
செருவிலங்க வேந்தர் திறைகொணரா மன்னர்
கருவிலங்கி னுள்வைப்பர் கால். (ங)

*இவ்வகை பேசிச் சமுத்திர திக்குக் கப்பாலை யாவரு மிப்பாலை யாவரு மீண்டன் வாராத க்ஷத்திரிய ருள்ளா ரிராச்சியமும் நகரியுங் கச துரங்க பண்டாரமும் ஈங்கிருந்தார்க்குக் கொடுப்பர்; அதுவுமன்றித் திறைகொண ராத வரசர்கள் பூண்ட விலங்கு பூட்டுவே னென்று வெகுண்டுரைத்து, இராசராசன் திருமுகமுந் தூதரும் வேறு வேறு போக்கித் திசாமுகந் தோறு மேவிவிட்டுக் கடங்கொண்ட மால்யானை போலக் காவல் வேந்தன் கன்னனுந் தானும் வீற்றிருந்தான் இராசராசன் துரியோதன னென்றவாறு. அப்பொழுது யாது நிகழ்ந்ததோ வெனில்:-*

390. தன்னொத்த சுற்றத்தா ரெல்லோர்க்குந் தன்னோலை
பொன்னொத்த பூண்மார்பன் போக்கவே-மின்னொத்த
தம்படையுந் தாமுந் தனித்தனிவந் தெய்தினார்
வம்படையு மன்னரெல்லாம் வந்து. (ச)

---

*(பா-ம்.) 1. காண. 2. விரவியல்பால். 3. தான்றன், செருவிலங்கு வேந்தைத் திறைகொணரா மன்னன், கருவிலங்கி னுள்வைப்பன் காண்.*

அது யாங்ஙனமோ வெனில்:-

391. ஓரிரண்டு கூடி யொரோவொன்றா யாங்கோத
மீரிரண்டு வேலை யெதிர்ந்தாற்போற்-போர்திரண்டு
பாரின்மே லுள்ள படையோடு மீண்டினரே
வாரிசூழ் மன்னரெல்லாம் வந்து. (ரு)

இவ்வகை பரராஷ்டிரத்தரசர்கள் வருகின்ற தன்மை: பலதிக்குங் கூடிய மகா வெள்ளஞ் சமுத்திராதியை நோக்கிச் செல்வதனைப் போலத் துரியோதன னிருந்த அஸ்திநபுர நோக்கி வருகின்ற மகா சேனையும் மற்றந்தச் சருவ க்ஷத்திரியரும் வந்தடிபணியக் கண்டு மனமகிழ்ந்து வீற்றிருந்தா னிராசராசன் துரியோதன னென்றவாறு. அவ்வகை வருகின்ற *க்ஷத்திரியரில்,

மத்திரராசன் சல்லியனும், மகதராசன் சகதேவனும், விருஷ்ணி வீரன் கிருதவன்மாவும், கெவுசிலேசுவரன் பிரகறமவேலனும், விந்தரனும், காலிங்க ராசன் சகதேவனும், பிராக்சோதிஷபதி பகதத்தனும், காந்தாரராசன் சகுனியும், சிந்துநாடன் செயத்திரதனும், குண்டலபோசி காம்போதராசனும், சூரசேனாதிபதி கவுசிகராசனும், காம்போதராசன் சுதக்ஷிணனும், திரிகர்த்தராசன் சுசர்மாவும், கைகயரும், கேயூரரும், சவ்வீரரும், மாளுவரும், சவுமியரும், பரமகரும், வங்காளரும், வசுகரும், தக்ஷிணரும், மல்லவரும், அசுவகரும், சிஞ்சகரும், சேதிகரும், குலிந்தரும், யாதவரும், மகாதுங்கரும், மகாதும்முகரும், லக்ஷகரும், காலிங்கரும், காரூசகரும், சோமதத்தனு முள்ளிட்ட அனேகஞ் சாமந்தராலும், அக்குரோணிபதிகளாலும்,-

மதங்கரும், சௌபகரும், கைகயரும், மரோவுணிமரும், கவுசுகரரும், மாளுவரும், வங்காளரும், அவந்திகரும், அபங்கரும், பஞ்சப்பிரகரரும், சாதிகரும், சங்கரரும், தாசரதரும், அங்கணரும், ஆரியரும், கொங்கணரும், குலிந்தரும், கெசளுவரும், குந்தளரும், பங்காளரும், மிலேச்சரும், சித்திரரும், காகுத்தரும், காழிகை கடங்கரும், லாடரும், இராக்ஷதரும், சிசுராசனும், துருக்கரும், ஒட்டிரரும், பூசுரரும், பூபலரும், பார்மன்னரும், பிராடரும், மகதரும், சோனகரும், சோமகரும், பாவலரும், சேனகரும்,சேதிபரும், கிராதரும், கிங்கிலியரும், தெலுங்கரும், கலிங்கரும், கன்னடரும், கார்திகரும், காசிபராசனும், கவுசிகரும், கிருபகரும், கேயூரரும், அத்திகரும், சத்திகரும், பத்திரகரும், பார்திவரு முள்ளிட்ட சருவ க்ஷத்தியராலும்,-

* க்ஷத்திரியர் பெயர்களில் விளங்காதன பலவுள; அவை கையெழுத்துப் பிரதியி லிருந்தவாறே பதிப்பிக்கப்பெற்றன. பின்னர்க் கூறப்படும் பாண்டவர்கடையரசர் பெயர்களிலு மிவ்வாறே.

பூரியும், பூரிச்சிரவாவும், கௌரிமாவும், பவனரும், அசுவத்தாமாவும், விருஷசேனனு முள்ளிட்ட க்ஷத்திரியகுமாரராலும்,-

விருஷ்ணிவீரர் ஸ்ரீ நாராயண கோபலரு முள்ளிட்ட அக்குரோணிபதிகளாலும்,-

இராசராசன் துரியோதனனும், அவன் பிராதாக்கள்-துச்சாசனனும், விகன்னனும், துஷ்கருணனும், உக்கிராயுதனும், துர்மருஷணனும், பிராகிதனும், சித்திரனும், சயசேனனும், சயசாமந்தனும், சித்திராயுதனும், சித்திராக்ஷனும், சோத்திரதனும், அத்திரனும், ஆகாசபலனும், மகாமயந்தனும், விஷசேனனும், போகபாலனும், சுராசத்தியும், சுதக்ஷினனும், சகசிரவாக்கும், சித்திரசேனனும், சித்திரவர்மாவும், சித்திரசிந்துவும், மித்திரநாதனும், குண்டபோசியும், தீர்க்க போதனும், தீகல்லியனும், தீர்க்க போசியும், தீர்க்கபாகுவும், சலசந்தனும், மத்திரவத்தியும், சூரகூதனும், சரீகுதனும், பர்வதமல்லனும், பிரதகுண்டலனும் திவ்வியகேதுவும், பாகுவிந்துவும், மண்டலவாகியும், தண்டதாரனும், சுபகனும், வீமபாகுவும், வியோமனும், வீமசேனனும், அபயனும், சோத்திரசிரவாவும், விஷதரனும், சகலகனும், சகசிரவாகுவும், பரமசீனனும் மகரகுண்டலனம், குண்டல வாகுவும், தீர்க்கசூரனும், மண்டலவாகுவும், இரதிபொரனும்,மகா சத்திகனும், மகாவீரனும், குமுந்திரனும், சர்வ சோகனும், சித்திரத்ருமனும், மகா ரக்ஷகனும், சத்திராசிரயனும், அமித்திர ஸிந்துவும், சித்திரவர்மாவும், சித்திராக்ஷனும், விக்கிரம வேகனும், நாகதந்தனும், துஷ்டபந்துவும், அங்கிராபுவும், ராசேந்திரனும், சர்வபுருஷனும், சர்வகீகல விக்கிநேசுரனும், லக்ஷ்மணனும், ஆதிநாதனும், நபோகதனும் என்றிவ்வகை யெண்ணப்பட்ட தொண்ணூற்றொன்பதின்மரும், வீஷ்மர், துரோணர், விதுரன், கிருபன், கன்னன், அசுவத்தாமாவு முள்ளிட்ட சருவ க்ஷத்திரியராலும்,-

மூன்று நூறாயிரத் தறுபதினாயிர மகுடவர்த்தனராலும், ஆறுநூறாயிரத் தறுபதினாயிரம் பட்டவர்த்தனராலும், அவர்களாற் கொணரப்பட்ட கசதுரக பதாதிகளாலும் இதற் கடைந்த பல பதினாயிரஞ் சேனாதிபதிகளாலும் வந்தீண்டப்பட்டது (சங்கினமாக்கி) சாதுரங்கம்.

இருபத்துநாலு லக்ஷத் தறுபதினாயிரத் தொருநூற் றெழுபது தேரும், எண்பத்திரண்டு லக்ஷத் திருபத்தோராயிரத் தறுநூற்றுத் தொண்ணூற்றொன்பது யானையும், எட்டுக்கோடியே யிருபது லக்ஷத் தறுபத்தையாயிரத் தறுநூற் யெழுபது குதிரையும், எண்பத்திரண்டு கோடியே நூறாயிரத் தொன்பதினாயிரத்து முந்நூற்றைம்பது காலாளுங் கொண்டது ஓரக்குரோணியாக இப்படிப் பதினோ ரக்குரோணிப் படையானது ராசராசன் துரியோதனன்படை. இதற்குச் சேனாதிபதியாவார் யாவரோ வெனில்:-

392. இருபத் தொருகா விருநிலத்து வேந்தர்
குருதிப் புனற்குளித்த கோவைச்-செருவழிய
வெற்றிச் சிலைவென்றான் வேல்வேந்தன் முதாதை
கொற்றக் குருகுலத்தார் கோ. (சுா)

என்றிவ்வகை சொல்லப்பட்ட வதிரதரில் முன்றோன்றல் திரிகாலக் கியானியாகிய ஸ்ரீ வீஷ்மனாகக் கருதுவது. இது துரியோதனன் நிலைமை. இப்பால் சத்திய வாக்கியன் தரும சீலன் இராசராசன் தருமபுத்திரன் படை யாங்ஙனங் கூடிற்றோ வெனில்:-

393. குருநாட னோலை குவலயத்தார் காண்க
[1]வருவீர் படையோடு மன்ன-ரிருகாலு
மால்வண்ணன் வேண்ட மயிர்முனைக்கு மண்கொடாப்
போர்மன்ன னோடே பொர. (எ)

அன்றியும்,

394. மாய னெழுந்தருளிக் கேட்கவு மண்ணீயாத்
தாயாதி யோடுயுத்தந் தான்மூண்டோ- [2]மாயதனா
லங்கிருந்தீ ரெங்கட் கமர்செய்ய வாரீரேன்
மங்குவகை செய்தறுப்போ மற்று. (அ)

எ-து.- தேவதேவ னெழுந்தருளி யைந்தூர் கேட்கவுந் தாராத மற மன்னன் துரியோதனனொடு யுத்தமான வெங்கட் கங்கிருந்த வரசர்களும் படைமன்னரும் படைத்துணையாக வரவும்; வாராதளவில், க்ஷத்திரியரில் சராசந்தனைப்போலவு மிராக்ஷதரி லிடும்பனைப்போலவும் விநாசஞ் செய்வேனென்று திருமுகமுந் தூதரும் போகவிட்டான் தருமபுத்திரன். அப்பொழுது யாது நிகழ்ந்ததோ வெனில்:-

395. மன்றலர்தார் மன்னவர்க்கு மாய னுடனிருந்து
பொன்றியிடாத் தன்னோலை போக்குதலால்-வென்றிதருங்
குஞ்சரமுந் தம்படையுங் கொண்டுடனே வந்தார்கள்
வெஞ்சிலைவேன் மன்னரெலா மிக்கு. (கூ)

எ-து.- (தருமபுத்திரன்) நீதிமார்க்க விவஸ்தை வழுவாமல் ஸ்ரீ வாசுதேவன் சென்றைந்தூர் வேண்டப் பெறாதவாறும், அதனா லிராச தன்மம் விரும்பி யுத்தம் பண்ணத் துணிந்து படை குவியாநின்றவாறும், மற்று முற்றவார்த்தை யெல்லா முரைத் தீண்டன் வருவீரெனத் தன்றிருமுகமுந் தூதருந் தனித் தனியே திசாமுகந்தோறும் போக்கி, வாராநின்ற பல வேறு வகைப்பட்ட சருவக்ஷத்திரியருங்

(பா-ம்.) 1. வருக. 2. நியாயத்தா, லங்கிருந்தார். . . வாராரேல்.

கசதுரங்கபதாதியுடனும் வந்து உபலாவிய நகரம் புகுதக் கண்டு மனமகிழ்ந்து வீற்றிருந்தா னிராசராசன் சந்தியவிரதன் தருமபுத்திரனாகக் கருதுவது. இவ்வகை வந்து கூடிய பெரும்படை யாது போன்றதோ வெனில்:-

396. வாரிதனைச் [1]சென்றநந்த வாரி கலந்தாற்போல்
வாரி யடைய வருவனபோல்-வாரிதா
னோங்கூழி நாளி லொலிகடலே போன்றதே
பாங்காழி [2]வேந்தர் படை. (50)

இவ்வகை சத்தசமுத்திரங்கள் தம்மிற் கலந்தாற்போல வந்து கூடிய படை மன்னரின்-பாஞ்சால ராசன் அஞ்சனசேனனும், திட்டத்துய்மனும், சிகண்டியும், உத்தமோசாவும், உதாமனு முள்ளிட்ட பல்லாயிரம் பாஞ்சாலரும்,-

(மத்திரராசன்) விராடராசனும், சதாநிகனும், சுவேதனும், உத்தரனும், சேதிதரனு முள்ளிட்ட வெத்தனையோ ராயிர மச்சநாட்டரசரும்,-

சூரசேனாதிபதிகளும், சாமந்தரும், கைகயராசனும், குந்திபோசனும், க்ஷத்திரதேவனும் சோமுகரு முள்ளிட்ட வக்குரோணிபதிகளும்,-

கடோற்கசனும், அராவானும், அபிமன்னுவும், விந்தனும், சுகமோசனும், செரியசெந்தனும், மதங்கனும், மகாமாந்தனும், திரிதரனும், சத்திரதரரும், சவுராஷ்டிரரும் சோமகரும், கேதாரரும், திரிகர்த்தரும், மல்லரும், விதேகரும், தேசிகரும், தக்ஷகரும், பத்திரகரும், மித்திரரும், அவிந்தகனும், சுரதெணனும், பூதகிசத்தியும், சத்தியவானும்,சாத்தகியும், அண்டலனும், அஞ்சனபர்வாவும், பிரத்தபண்டிதனும், சேர சோழ பாண்டியத் தொடக்கத் தாரும், பஞ்சத் துரோபதியரு முள்ளிட்ட மகாரதராயினாரும்,-

மக்கள் நூறாயிரங் குமாரரும், விருஷ்ணவீரரும், சங்குபரும் சகோட்டிதரும், மகாசந்தனும், மகாவீரனும், குமுந்திரனும், பர்வதவேசங்கனும், மித்திரதன்வனும், சத்திராஞ்சியனும், அமித்திரசிந்துவும், விசித்திரவர்மாவும், விந்தராசுஷதனும், விக்கிரமதேவனும், நாகதந்தனும், மதங்கரும், அடங்கரும், கூடகரும், பர்வதலக்ஷரும், விடங்கரும், சனமகரும், மாளுவரும், பரமகரும், பஞ்சவரும், சராசந்தரும், கேதகரும், குண்டலரும், புண்டரீகரும்,

(பா-ம்.) 1. சென்றந்த; சென்றணைந்து. 2. வேந்தன் படை.

வங்காளரும், கொங்கணரும், விங்களரும், சீனகரும், சோமகரும், துருக்கரும், அசனிகரும், சூதமாக்களும், காகுத்தரும், திரிகத்தரும், சோனகரும், கந்தடரும், காலிங்கரும், விசுவீரரும், அசுகரும், சமுத்திர குக்ஷியில் வாழ்வாரும் பர்வத வாகளு முள்ளிட்ட அனேக ராஷ்டிரத் தவனிபாலரும், அவர்களாற் கொணரப்பட்ட மகாசேனையும்,-

அறுவகைப்பட்ட வணிகத்தோடுங் கூடத் தேவதேவனுள்ளிட்ட தருமவீம தனஞ்சய நகல சகாதேவரும் வந்தீண்டப்பட்ட தொகை இருபத்து நாலு லக்ஷத் தறுபதினாயிரத் தொருநூற்றெழுபது தேரும், எண்பத்திரண்டு லக்ஷத்திருபத்தோராயிரத் தறுநூற்றுத் தொண்ணூற்றொன்பது யானையும், எட்டுக்கோடியே யிருபது லக்ஷத் தறுபத்தையாயிரத் தறுநூற்றெழுபது குதிரையும், எண்பத்திரண்டு கோடியே நூறாயிரத் தொன்பதினாயிரத்து முந்நூற்றைம்பது காலாளுங் கொண்டது ஓரங்குரோணியாக இப்படி யேழக்குரோணிப் படை வந்தீண்டப்பட்டது சத்தியவிரதன் சர்வகுண சீல னிராசராசன் தருமபுத்திரன் படை இதற்குச் சேனாதிபதி யாவார் யாவரோ வெனில்

397. வரிசிலையும் பல்படையு மாதவஞ்செய் தீசன்
றிருவருளாற் பெற்ற சிவேதன்- [1]குருபதியர்க்
கச்சஞ்சூழ் வேல னறற்பணைசூழ் தண்கிடங்கின்
மச்சஞ்சூழ் நாடன் மகன். (கக)

இவ்வகை யதிபலபராக்கிரமன் அதிரதரிற் சூரன் வதை வல்லான் மத்திரராசன் விராடபுத்திரன் சுவேதனாகக் கருதுவது. இவ்வகையினா லிரண்டு படையும் வந்தீண்டப்பட்டது மகாசேனை, பதினெட் டங்குரோணியாக வகுக்கப்பட்டது. அஃதெவ்வகையோ வெனில்:-

398. [2]கரிபத்துத் தேர்மூன்று காலா யிரமாம்
பரிநூற தாகும் பதாதி- [3]வருதொகைதா
னெண்பத் திருமடங்கு தண்டா மிதுநூறு
[4]கொண்டதக்கு ரோணியின் கூறு. (கஉ)

அன்றியும்,

399. ஒன்பதி னாயிரம் யானையொ டியானையாற்
பொன்பொதிந்த தேர்மூன்று [5]தேரொன்றாற்-கண்பொதிந்த

(பா-ம்.) 1. குருபதிக்குக், கச்சஞ்சூழ் வேலன் கரும்பனையின் றண்கிழங்கின். 2. கரிமூன்று தேர்பத்துக் காலாளோ ரைந்து. 3.வருதொகையி, லெணபத் தொருமடங்கு. 4. கொண்டதோ ரக்குரொணிக் கூற்று. 5. தேரொன்றாய்க்-கண்புதைந்த.

காண்டகைய வக்குதிரை யொன்றினாற் காலாணூ
றாண்டைகைய [1]வக்கோணி யாங்கு. (கஙு)

அஃதெவ்வகைத்தோ வெனில்,- "ஒருபெருந் தேரு மிருபெருங் களிறுந், துரக நான்கும்படைஞ ரைவருங், கொண்டது பதாதி யென்ப தாகும், பதாதி முறைவழ வாமன்மும் மடங்கு, கொண்டது சேனை யென்பதாமே, ஆங்கது மும்முறை கொண்டது குன்மங், குன்ம மும்முறை கொண்ட தனீகினி, அனீகினி யைம்பதிற் றிரட்டியோ டாயிரங், கொண்டதக் குரோணி யென்ன மொழிந்தான், முவகை யுலகழ முறைப்பட வேத, பாரதம் பகர்ந்த பராசரன் மகளே" என்றிவ்வகை சொல்லப்பட்ட *அக்குரோணியால் வந்த சங்கையினை யிவ்வாசிரியத்துக் கண்டுகொள்வது. இவ்வகை மகாசேனை கூடிய பொழுது ஸ்ரீ வாசுதேவனை நோக்கிச் சந்தோஷித்துச் சிந்தனையுடன் போற்றி யாது விண்ணப்பஞ் செய்தான் தருமபுத்திரன்:-

400. வெஞ்சமத்து வந்து விதுரன் பொருமாகி
லஞ்சனத்து மாலே யரணில்லை-தஞ்சமிதற்
காமாறு நாடி யறிந்தருள்செய் யென்றுரைத்தான்
[2]கோமான் குருகுலத்தார் கோ. (கச)

வெற்றிகொள்ள வெஞ்சமரி லுற்றகாலத்துப் பின்னும் விதுரனேன்று வருமாகில் திரிமூர்த்திகளாலும் வெல்லவொண்ணா தென்னும்படி யெம்பெருமானே யறிந்தருளியது; அதற்குத் தக்க பரிகார முண்டோ வென்று தருமபுத்திரன் சொல்லக்கேட்டு யாதருளிச்செய்தான் ஸ்ரீ வாசுதேவன்:-

401. மாறில்லை யென்றுரைத்த மன்னற் கெதிராகக்
கூறு முரசுயர்த்தாய் கூறக்கேள்-[3]வேறின்றி
வெம்பரியின் மேனகுலன் மேற்கொண்ட போதெல்லா
மம்பரமே கண்டா யரண்.. (கரு)

எ-து.- துரியோதனனுக்காக மீண்டுவந்து விதுரன் யுத்தம் பண்ணுமாகில், நம்முடைய நகுலன் பரிமேற்கொண்டபொழுது விதுரனும் மற்றுமுள்ள யுத்தவீரரும் எமலோகத்து வீற்றிருப்பதல்லால், நகுலனுக்கு மீண்டு மதிகமுண்டோ வென்று ஸ்ரீ வாசுதேவன்

(பா-ம்.) 1. அக்குரோணி. 2. கோதார் குரு. 3. வேறன்றி.

* முன்னே வசனத்திலும் இரண்டு வெண்பாக்களிலும், இங்கே இவ்வாசிரியத்திலும் கூறப்பட்ட அக்குரோணிச் சங்கியை ஒன்றுக்கொன்று வேறு படுகின்றன; இவை ஆராயத்தக்கன. இவையன்றி வேறுவகையாகக் கணக்கிடுதலு முண்டு.

அருளிச்செய்யக் கேட்டு மன மகிழ்ந்து, பின்னு மொருநாற் சந்தேகமா யாது சொன்னான் தருமபுத்திரன்:-

402. அண்ண லெமக்குரிய வாசா ரியன்புதல்வன்
றன்னைப் படைத்தலைமை செய்யுமேல்-வண்ணங்
கரியாய் கடல்வண்ணா கஞ்சனைமுன் செற்ற
பெரியா யிதற்குறுதி பேசு. (கசா)

எனக் கேட்டு யாதருளிச்செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-

403. அவனுக் கிணையாக வண்ணற் கிளைய
விவனைப் படைத்தலைமை கட்டச்-சிவனுக்கு
மாலுக்கு மற்றை மலரோற்கு மிந்திரற்கு
மேலுக்கு மேலுளதோ மிக்கு. (கஎ)

இவ்வகையே ஸ்ரீ வாசுதேவ னருளிச்செய்து, இவ்வகை யெல்லா முன்னமே சொல்லப்பட்டது கேட்டு நாம் துரியோதனன் பக்கல் தூதாக வஸ்திநபுரத்துக்குப் போயினபோது அவையிற்றுக்குத் தக்கன வினைகளடைத்துப் போந்தோ மாதலா லினி யுன்னுடைய மனசிலுள்ள சந்தேகந் தவிர்ந்து கதுமென யுத்தத்துக் காம்படி யொருப்படுவாயாகென்றும் (ஸ்ரீ வாசுதேவன்) அருளிச்செய்யக்கேட் டெல்லையில்லாத பிரிய மெய்திப் பின்னும் யாது சொன்னான் தருமபுத்திரன்:-

404. நாக வரவுயர்த்தோ னெங்கட் கரசுரிமை
பாக மளியாத பான்மையனை-வேகத்தாற்
சேதிபர்கோன் வீழத் திறலாழிமுன்னுயர்த்தா
யாதினிநாஞ் செய்வ தியம்பு. (கஅ)

எ-து.- துரியேதனன்பா லிராச்சியம் வேண்டிப் புரோகிதனை விட்டதுவுமன்றித் தேவதேவனாயுள்ள வெம்பெருமான் தேவரீ ரெழுந்தருளவுஞ் சிறிது முணராது செற்றமே மனத்துள் வைத்துத் திண்மையே முயன்ற திருவிலோனைச் செங்களத்துத் திறலழியச் சேனையோடும் யுத்தஞ் செய்வதற்கு நாள் வரைந்து மற்றவனிடைக்குச் சொல்லிவிடுமாறும், அவன்பாற் செல்வாரையுஞ் செப்புவாயாகெனக் கேட்டுக் கடோற்கசனை யழைத்து யாது சொல்லிவிட்டானோ வெனில்:-

405. தூண்டுபரித் தேரான் றுரியோ தனனறிய
வீண்ட னவனிடைக்கு நீசென்று மூண்டதோர்
பாரதந்தா னிற்றைக்குப் பன்னிரண்டா நாளென்று
மாரதற்குச் சொல்லிநீ வா. (ககூ)

*எ-து.- நீ சென்று துரியோதனனைக் கண்டு இற்றைக்குப் பன்னிரண்டா நாள் குருக்ஷேத்திர வெளி சமரபூமியாகக் குறித்து யுத்தத்துக் கொருப்பட் டுன் மகாசேனையோடும் வருவாயாகென்று சொல்லி யீண்டன் வருவாயாக என்று ஸ்ரீவாசுதேவ னருளிச்செய்யக் கேட்டு (க் கடோற்கசனும்) விடைகொண்டுபோ யஸ்திநபுரம் புகுந்து துரியோதனனைக் கண்டு நமஸ்கரித்து நின்ற கடோற்கசனைக் கண்டு, காணாதுபோலயாது செய்தான் துரியோதனன்:-*

**406. காய்ந்த கடோற்கசன் றன்னைக் [1]கடைக்கணித்தும்**
**வாய்ந்தவேன் மன்னவர்க்கு வாய்மாற்றந்-[2]தோய்ந்துசொலி**
**யப்பரிசி லாங்கவனைக் [3]காணானைக் காண்பரிய**
**வெப்பாகி யுள்ளம் வெகுண்டு. (௨0)**

*எ-து.- அருகிருந்த வேல்வேந்தர் தம்மை நோக்கி வினைத்தொழில் விளம்பி, பணிந்தெழுந்து நின்ற கடோற்கசனைக் கண்டுங் கண்டிலான்போலிருந்த துரியோதனனை நோக்கி மகாவேகத்தாற் சினங்கன்றி வியிரத்திண்டோள் புடையரப்பி யாது செய்தான் கடோற்கசன்:-*

**407. மன்ன னினிதிருந்த மண்டபத்துப் பொற்றூணைத்**
**தன்னெடுந்தோ ளான்மிகவுந் தாக்கினான்-முன்னிருந்தா**
**ரொன்றொருவ ரொன்றொருவ ரோடவுடைந் துக்கதே**
**[4]பொன்றிணிந்த மாடப் பொருப்பு. (௨௧)**

*எ-து.- இராசராசன் துரியோதனன் உதாசீனம் பண்ணி யினிதிருந்த விலங்குமணிச் சபாமண்டபத் தெழின்மணிப் பொற்றூண் பொடியாக, மண்டப மிடிந்து வீழ, அரசர் குழா மிரிந்தோட அங்கிலும் புறப்பட்டதி வேகத்துட னின்ற கடோற்கசனை நோக்கி யாது சொன்னான் துரியோதனன்:-*

**408. நேர்நின்றா [5]யுன்பேர் நிகழ்த்துதிநீ யெங்குறுவை**
**யாரோதா னென்முன்பு நீவந்த-காரணமென்**
**மண்டபந்தான் றூணெகிழ வந்துற்ற [6]தேதென்றான்**
**கொண்டகுற்றங் கொண்டிருந்த கோ. (௨௨)**

என்றிவ்வகை துரியோதனன் வினவ யாது சொன்னான் *கடோற்கசன்:-*

**409. பாண்டவரும் பாம்பணையான் றானும் பணித்தவுரை**
**யீண்டனுனக் கெல்லா மியம்புவன்கேள்-பூண்ட**

(பா-ம்.) *1. கடைக்கணித்து. 2. தேர்ந்துசொல்லும். 3. காணாது. 4. பொன்றில்சூழ் மாடப். 5. உன்பேரென் 'னீயெங் குறைகின்றாய். 6. ஏனென்றான் ; என்னென்றான்.*

மணியினாற் பூணாரும் [1]வாழ்வீமன் றன்சே
யணியினா னீயறிய வாங்கு. (உந)

என்று பின்னுஞ் சொல்லுங் கடோற்கசன்:-

410. மண்டபத்தில் வீற்றிருந்த மன்னர் தமக்கெல்லாங்
கண்டிகை யன்னதிறற் காவலன்கேள்-விண்டார்
வெருவத்தண் டேந்தும் விறல்வீமன் மைந்தன்
பெருகடோற்க சன்காண் பெயர். (உச)

எ-து.- 'பாண்டவரி வேறனையான் தூண்டு சினத் தரி வீரன் வீமசேனன் புத்திரன் கடோற்கசன்காண் யான்; தருமபுத்திரனும் ஸ்ரீவாசுதேவனும் விட்ட பணியினா லுன் பக்கலில் வந்தேன்; இனி முன்னம் வேண்டிய விராச்சிய மின்னந் தருவையாகில் நின்பணி தலைமேற் கொள்வோம். அதன்றி மறுத்துரைக்கின், மறமன்னா! துரியோதனா!! இனிப்பாரத யுத்த மிற்றைக்குப் பன்னிரண்டா நாள்' எனச் சொன்ன கடோற்கசனை நோக்கி யாது சொன்னான் துரியோதனன்:-

411. உன்னளவோ முன்ன முரைத்துப் பெறாதொழிந்தார்
மன்னவர்கோன் றன்னை மறந்தனையோ-வின்னமுந்தான்
பாராளு மாசையோ வென்றா னரவுயர்த்தோன்
போராளு மாறே புரிந்து. (உரு)

எனக்கேட்டு யாது சொன்னான் கடோற்கசன்:-

412. மாலை முடிபுனைந்த மன்னவனைத் தானிறைஞ்சிச்
சீல மவையறிந்து செப்பினான்-கோலத்தாற்
பார்தருவை [2]யல்லையேற் பாண்டவர்க்கீ ராறாநாட்
போர்தருவா யீண்டநீ போந்து. (உசா)

என்று கடோற்கசன் வெகுண்டுரைத்த வசனங் கேட்டு, நீ யுரைத்த பாரத நாள் பன்னிரண்டாவது சாலத் தூரமுண்டாதலா விற்றைக் கெட்டா நாள் குருக்ஷேத்திர வெளியில் வந்து யுத்தத்துக் காம்படி நிற்பீரென்று துரியோதனன் சொல்லக்கேட்டுக் கதுமென மற்றவனை முன்கை சாற்றிச் சிங்கம்போலச் சிதற நோக்கி, யான் வேண்டிய திதுவன்றோ வெனப் பேசி, நீயு மீண்டென வந் தெமக்குப் போர்தருவாயாகென்று சுடுத்துரைத்து மற்றந்தத் துரியோதனனை விட்டு நீங்கி யுபலாவியநகரம் புகுந்து தருமபுத்திரனைக் கண் டுற்ற வார்த்தை யெல்லா முரைத்தது கேட்டு யுத்தத்துக் கொருப்பட்டார் பாண்டவர்க ளென்றவாறு.

## படைத்திரட்சி முற்றும்

(பா-ம்.) 1. வாள்வீமன். 2. அல்லையோ பாண்டவர்கள் பேசாதே, போர்.

# களப்பலி

இப்பால், கடோற்கசன் வந்து சொல்லிப்போன பின்பு, எல்லையில்லாத தோர் சந்தாப மெய்தித் தன்சேனைக்குச் சேனாபதியாகிய ஸ்ரீ வீஷ்மனை யழைத்துத் துரியோதனன் சொல்லுவான்: பாரத யுத்தம் வெல்லக் களப் பலி யூட்டுதற்கு நமக்கான நாளும், முகூர்த்தமும், ரோமலக்ஷணமுடையா ராரோ வென்று மிதற்குச் சொல்லத்தக்க திரிகாலக்கியானராயிருப்பாரை யுரைப்பாயா கென்று பார்வேந்தன் வினவக்கேட்டு யாது சொன்னான் ஸ்ரீ வீஷ்மன்:-

413. திருவொப்பார் நின்னுடைய செஞ்சோ திடத்தி
லுருவொப்பா ராரென் றுரைக்கின்-[1]மருவொப்பார்
மாதேவ ரல்லரேன் மன்னு மிரட்டையரிற்
சாதேவற் குண்டோ தரம். (க)

எ-து.- திரிலோகங்களிலுள்ள சர்வபிராணிகட் கெல்லாஞ் செல்காலம் வருங்கால மிவையறிந்து சத்திய விரதனுமாய் மகானுபாவனுமாயுள்ள சகா தேவனன்றிச் சோதிடத்தில் யாவரு மில்லை; (யாதலாற்) சகாதேவன் யுத்தத்துக்குத் தக்க நாளும் முகூர்த்தமுஞ் சொல்லுமாகில் திரிலோகங் கூடிவரினுந் திரிமூர்த்திகளாலும் யுத்த பூமியில் வெற்றிகொள்ள வரிதுகண்டாய்; (ஆதலாற் சோதிட சாத்திரஞ் சொல்லவல்ல திரிகாலக்கியான ரில்லை) அவனைச் சத்துருபக்ஷத்தானென்று கருதாது கடிதுபோய் நாளு முகூர்த்தமும் வேண்டி வருவாயாகென்று ஸ்ரீ வீஷ்மன் சொல்லக்கேட்டு யாது சொன்னான் துரியோதனன்:-

414. முகுர்த்தமிட நாங்கண் முனியாது [2]சொன்னாற்
றெகுத்து நினைவறிந்து [3]சொன்மோ-பகுத்தருளாய்
பற்றலரைக் கண்டாலும் பாங்குரைத்தாற் பாண்டவர்க்கு
முற்றுமதோ வென்றான் முயன்று. (உ)

எ-து.- சகாதேவன்பால் யான் போனால் மாற்றலனெனக் கருதாது மகிழ்ச்சியுட னுற்ற வார்த்தை கேட்டுப் பாரதத்துக்குத் தக்க நாளு முகூர்த்தமுஞ் சொல்லுமோ வென்று துரியோதனன் சந்தேகித்துக் கேட்க யாது சொன்னான் ஸ்ரீ வீஷ்மன்.

415. வைதவங்கள் செய்தாலு மன்னவனே பஞ்சவரிற்
கைதவங்கள் செய்வாரைக் கண்டறியோம்-பையவே
யேதேனும் வேண்டிக்கொண் டிங்குவர [4]வேகுநீ
சாவேதன் றன்பாற் சமைந்து. (௩)

---

(பா-ம்.) 1. மருவொப்பான், மாதேவ னல்லனே. 2. சென்றாற். 3. சொல்லல். 4. ஏகுதியாற்.

*எ-து.- தருமபுத்திரன் முதலாயுள்ள பிராதாக்களுக்குஞ் சத்திய வாக்கிய முளது கண்டாய்; அதன்றிச் சகாதேவனாவான் சர்வஞானியுமா யாவர்க்குஞ் சத்திய விரதனுமா யிருக்குமாதலா னீயு முன் மனக்கருத்துள்ள சந்தேகந் தீர்ந் தீண்டன் மற் றவன்பாற் போவாயா கென்ன, உடன்பட்டு யாது செய்தான் துரியோதனன்:-*

416. வேகத்தா னாண்முகூர்த்தம் வேண்டி விரைவிரைந்து
[1]நாகத்தா னற்கொடியோ னன்றியுடன்-பாகொத்த
சொல்லான் விசுவகன்மாத் [2]தோன்றாயே யென்றுசொல்ல
நல்லானுந் தானினைந்தா னாங்கு. (ச)

*எ-து.- இவ்வகை யாவரு மறியாம லுபலாவிய நகரம் புகுந்து சகாதேவனைக் கண்டு பாரத யுத்தம் வெல்வதற்கு நன் முகூர்த்தமும் நாளுங்கேட் டிற்றை யிரவின்கண்ணே மீளவேண்டுமாதலா லதற்கு ஆகாசத்தே யோடத்தக்க தேராக வேண்டு மென்றும், மற்றதற்கு விசுவகன்மாவை வெளிப்படுத்திக்கொண்டு மற்று அவன்பக்கல் மாயத் தேர்வேண்டிக் கொள்வே னென்றும் நினைந்து, தெய்வாசாரியான விசுவகன்மாவை நினைக்க அவனு மப்பொழுது யாது செய்தான்:-*

417. வேந்தர் பெருமா னழைத்தா னெனவிரைந்து
சார்ந்து தவமுனியைத் தான்கண்டு-பூந்தார்
விசுவகன்மாத் [3]தோன்ற மிகவிரும்பிப் பாரா
ணசையினாற் சென்றணைந்தா னாங்கு. (ரு)

*இவ்வகை துரியோதன னினைத்தலுந் தேவலோகத்தி லொரு பூங்காவி லிருக்கின்ற விசுவகன்மாவும் வந்து தோன்ற, மற்றவனை யெதிர்கொண்டு மற்றவனுட னளவளாவிச் சிறிதுபொழு திருந்தபின்பு யாது சொல்லி வேண்டிக்கொண்டான் துரியோதனன்:-*

418. பாண்டவர்கள் தம்பதிக்குப் பாயிருளிற் போய்மீளக்
காண்டகசீர் மாயத்தேர் காதலித்தேன்-மீண்டுமது
வாகாயத் தோடி யரைநா ழிகையில்வரும்
வாகாய தேர்தா மகிழ்ந்து. (சா)

*எ-து.- பாண்டவர்கள் படைவீடாகிய வுபலாவிய நகரத்துக் கிற்றை யிரவின்கண்ணே போய்யாவரு மறியாமல் மீளவேணுமாதலால், மற்றதற்கு, மகா மாயமான தேருமாய் யாவரொருவர் சந்தித்தால் மற்றவர்க்குத் தெரியாதவண்ண மாகாசத்தே யோடவல்லதுமா யரை*

---

*(பா-ம்.) 1. நாகத்தா நற்கொடி. 2. தோன்றா யெனச்சொல்லி. 3. தோன்றி விரும்பிப்பா ராளும்.*

நாழிகையில், மீள வல்லதுமா யொருதோர். . சமைத்துக் காட்டி மற்றதனை யாது சொல்லிக் கொடுத்துப் போயினானோ வெனில்:-

419. ஈங்கிவன்றன் சொற்படியே யிற்றையிரா விங்கியங்கிப்
பாங்குடனே வான்போம் படிபணித்-தாங்கண்
விசுவகன்மாப் போயினான் வேல்வேந்தன் பாரா
னசையினாற் றேர்புகுந்தா னன்கு. (எ)

இவ்வகை துரியோதனனுக்கு விசுவகன்மாவுந் தேர் கொடுத் திற்றை யிராத்திரி யிங்கு நின்று துரியோதனன் மனத்தின்படி யியங்கி யிராத்திரி கழிந்தால் வானுலகம் போம்படி பணித்து (விசுவகன்மாவுந்) தெய்வ லோகம் போயினான். பின்னைத் துரியோதனன் மற்றந்தத் தேரேறித் துணிவுடைய நெஞ்சத்தனா யாது செய்தான்:-

420. பாண்டவரை வெல்வதற்குப் பாரதப்போர் செய்யுநாள்
வேண்ட விரைந்தேகி வேல்வேந்தன்-மூண்டதோ
ராரிருளிற் சென்றங் கவர்க்[1]கிளைய வென்கோவைப்
பேரிருளிற் கண்டான் பெயர்ந்து. (அ)

எ–து.– விசுவகன்மாவாற் சமைக்கப்பட்டதோர் திவ்வியமானதே ரேறி யர்த்தராத்திரியில் யாவரு மறியாம லுபலாவியநகரம் புகுந்து, சகாதேவன் கோயிற் சென்றணையு மளவில், ஆகாசத்தே வருகின்ற திவ்வியமான தேர் யாதோவென்று தன் மணிக்கோயிற்றலத்து நின்று சகாதேவனு முன்னறிந் தெதிர்கொண்டு தன் கோயிலுட் புகுந்து மணியாசனத்து வைத்து நின்று யாது சொன்னான் சகாதேவன்–

421. எம்பெருமா னென்பா லெழுந்தருளி வந்ததுநீ
யம்பொன் முடியா யருளென்றான்-வம்பின்
வளங்கோக்குந் தாரலங்கன் மன்னவர்கட் கெல்லா
மிளங்கோவாய் வீற்றிருந்த வேறு. (கூ)

இவ்வகை யெம்பெருமா னெழுந்தருளி பணி யென்கோலோ வென்று சகாதேவன் வினவக் கண்டு யாது சொன்னான் துரியோதனன்:-

422. வண்மை [2]யுடையாய் மறாயென்ப ராதலா
லுண்மை யுனக்குரைத்தே னுங்களுடன்-[3]றிண்மைப்
படைகருதி மூண்டாற் பலிக்குநாட் சொல்லி
விடைதருவா யென்றான் விரைந்து. (கo)

(பா–ம்.) 1. இளைய வெங்கோவைப். 2. உடைமை மறாய். 3. திண்ணம்.

எ-து.- நீ சத்திய விரதனென்றுந் திரிகாலக்கியான னென்று முன்பக்க லொரு வரம் வேண்டி வந்தேன்; இது நீ தருவாயாகில், உங்களுடனுண்டான பாரத யுத்தம் வெல்வதற்குத் தக்க நாளு முகூர்த்தமு மெனக் குரைத்துக் களப்பலிக் காவா ரிவரென்று முரைத்து, இளங்கோவே யீண்டன் விடுப்பாயாகெனக்கேட் டுடன்பட்டு மறாது அவன் பணி தலைமேற் கொண்டு யாதுசொன்னான் சகாதேவன்:-

423. பைம்பொற் றனுவிற்பருவத் தினைப்பெற்ற
[1]வம்பொன்செ யங்குர வாரத்து-வம்பு
கொளப்பொலியுந் தார்வேந்தே குன்றாமற் சென்று
களப்பலியூட் டென்றான் கடிது. (௬௬)

எ-து.- தனுநாயிற்றுப் பூருவபருவத்துப் பிரககபதி யுதயத்துத் திவ்வியமான திவசத்து (த்திரையோதசியும் பெற்ற தக்க ஞானககனறுளதொரு சிதலை யென்னு முகூர்த்தத்து) அருச்சுனன் மக னராவான்பா லுள்ள சுரோணிதமு மாங்கிசமுங் கொண்டுபோ யீண்டன் களப்பலி யூட்டினா லுன்னைத் திரிமூர்த்திகளாலும் வெல்ல வொண்ணா தென்று சகாதேவன் சோதிட சாத்திரஞ் சொல்லக் கேட்டுப் பிரியப்பட்ட மனத்தனாகி யாது சொன்னான் துரியோதனன்:-

424. பாராள வேண்டியே பாண்டவர்க ளேம்மோடு
நேராகப் பாரதப்போர் நேர்ந்தக்காற்-சீராரும்
வேந்தனே யுங்களைநான் வெல்வேனோ வென்றுரைத்தான்
சாந்தமொன் றில்லான் றரித்து. (௬௭)

எ-து.- இராச்சியம் பண்ண வேண்டி யுங்களுடன் பாரத யுத்தம் பொருத காலத்து வெல்வேனோ தோற்பேனோ சொல்லுவாயா கென்று துரியோதனன் கேட்ப, மணிமுறுவ லரும்ப நின்று யாது சொன்னான் சகாதேவன்:-

425. பாராளு மன்னர் படைவேண்டிப் பாரதப்போர்
நோராக நீமலைந்து நின்றக்காற்-சீராரு
மன்னவனே கேட்டருள்வாய் வன்செருவிற் றாம்பெரியோர்
[2]மன்னவன்றே வெல்வர்காண் மற்று. (௬௮)

எ-து.- எம்பெருமா னெங்களுடன் பாரத யுத்தம் வேண்டி யெதிர் மலைந்த காலத்து யுத்தபூமியில் யாவரொருவர் பெரிய ராங்கவரேவெல்வதற்குச் சந்தேகமில்லை யென்றும், யாவரொருவரிம் முகூர்த்தத்திற் களப்பலி யூட்டினா ராங்கவரே வெல்வ ரென்றுஞ் சொல்லக் கேட்டுப் பிரியப் பட்ட மனத்தனாகி மற்றவனை விட்டு நீங்கி யாது செய்தான் பார்வேந்தன்:-

(பா-ம்.) 1. அம்பொற்சே யங்கார. 2. மன்னவரே.

426. தானாக யாரிடைக்குஞ் சென்றறியாத் தார்வேந்தன்
[1]வானா ரிருள்சேர்ந்த மாக்கங்குன்-மான
வராவானை வேண்டும் பலியதற்கு [2]நல்கி
யிராவகத்தே சென்றா னெதிர்ந்து. (கச)

*இவ்வகை துரியோதனனும் போந்து யாவரு மறியாது சகாதேவன் சொற்படி நினைந்து அராவான் கோயிற் புகுந் தராவானைக் கண்டவிடத்து மற்றவனுங் கதுமென வெழுந்திருந்து நமஸ்கரித் தடியேன்பா லெழுந்தருளு மதென்கொலோ வென, கருதி வியாகுல மெய்தி யாது சொன்னான் துரியோதனன்:-*

427. இவ்வளவும் யார்பாலுஞ் சென்றொன் றிரந்தறியே
னெவ்வளவும் வந்தறியே னென்மகனீ-செவ்வி
வரந்தருவா யாகென்று வாழ்த்தினான் செம்மை
நிரந்தரமாக் கொண்டான்பா லின்று. (கரு)

*இவ்வகை சொல்லி யிரப்பக் கண்டு மறாது, பணி தலைமேற்கொண்டு யாது சொன்னா னராவான்:-*

428. பாண்டவரி லேறனையான் பார்த்தனோ வென்றந்தை
நீண்டபுகழ் மன்னவனே நீயன்றோ-வேண்டுவது
வேண்டிக்கொள் ளென்றான் விறல்வேந்த ரைவரைப்போ
ரீண்டுவிக்கு மன்ன னிசைந்து. (கசா)

*எனக்கேட்டு யாதுசொல்லி வேண்டிக்கொண்டான் துரியோதனன்:-*

429. தாரகஞ் சேருந் தலையுவாச் [3]சந்தித்தால்
வீரமுறு நின்னுடைய மேனிமேற்-சீருறுப்பா
முப்பத் திரண்டு[4]முகுசெங் குருதியையுந்
தப்பின்றி யேயெனக்குத் தா. (கஎ)

*எனக்கேட்டு யாது சொன்னா னராவான்:-*

430. இப்பொழுதே வேண்டினுங் கொண்டுபோ வில்லையே
லப்பொழுதே வந்திட் டறுத்துக்கொ-ளெப்பொழுதும்
வேண்டினாய் வேண்டிற்றுப் பெற்றா யெனவுரைத்தான்
காண்டகைய செல்வன் கலந்து. (கஅ)

*எ-து.- சாமர்த்தியமும் முப்பத்திரண் டுறுப்பிலுங் கலந்துள்ள சுரோணிதமும் மாங்கிசமு மிப்பொழுதேயாகிலு முனக்கு*

---

*(பா-ம்.) 1. வானா ரொளிசேர்ந்த மாக்கோலமான. 2. நல்க.*
*3. சிந்தித்தா, லீருறுப்பு நின். 4. உகுதற் குருதி.*

வேண்டினபொழுதாயினும் வாங்கிக்கொண்டு போவாயாகென்று தன் சரீரத்தை மறாவண்ண மேற்கொண்டு துரியோதனனுக்குத் தானங்கொடுத்த அராவானுடைய சத்திய வாக்கியமும் வேண்டமறாத மகானுபாவமுங் கண்டு, விசுமயப்பட்டு 'இப்பொழுது வேண்டா; வருகின்ற வமாவாசைக்குத் (திரியோதசியினன்று) தருவாயாக' என்று சிறிது சிந்தித்துச் சந்தோஷித்து நின்ற பார்வேந்தனைக் கண்டு பின்னும் யாது சொன்னா னராவான்:-

431. உன்கருத்தே போலப் பிறரை யுணராதி
நன்குரைத்த கட்டுரைநீ நாணாதி-யென்கருத்தா
[1]லீண்டநீ பெற்றா யிரண்டுரைப்பா ரீங்கில்லை
மூண்டசின மன்னரைப்போன் முன். (கசகூ)

எ-து.- நீ வேண்டிற்றுத் தந்தேன்; இதுக்கு வியாகுலப்படாமற் போயுனக்கு வேண்டின நாளில் வந்தாலுந் தருவன் கண்டாய்; அது நிற்க, எங்களி லுங்களைப்போல மறுத் திரண்டுரைப்பா ரில்லை கண்டாய்; ஆதலா லீண்டன் நீ போவாயாகென்று அரவா னுரைப்பக்கேட் டெல்லையில்லாததோர் பிரிய மெய்தித் தன் மனக்கருத்தின்படி முற்றுவித்து அராவானை விட்டு நீங்கி யிராச்சிய மினி யென்னுதென்று கதுமென மீண்டுபோந் திராத்திரி யின்கண் அஸ்திநபுர மெய்தித் தன்கோயிற் புகுந்து பள்ளிகொள்ளப் புக்கான் துரியோதன னென்றவாறு. அப்பொழுது,-

432. வைய மிருள்பறப்ப மாக்கமலம் வாய்திறப்பப்
பொய்கைகளும் வாவிகளும் புட்சிலம்பச்-செய்யகதிர்
மன்னவர்க ளெண்ணமது மாய்த்திடவே தான்கருதி
யன்னகடன் மீதெழுந்தா னாங்கு. (உ0)

எ-து.- பாஸ்கர னுதயஞ்செய்தலும் பார்வேந்தனும் பள்ளியுணர்ந்து சபாமண்டபம் புகுந்து ஸ்ரீவிஷ்மனையுந் திருதராஷ்டிரனையு மழைத்துக் கொண்டினிதிருக்கு மளவில் யாது நிகழ்ந்ததோ வெனில்:-

433. பாயிருளிற் போய்மீண்ட பைம்பொ னெடுந்தேரு
மாயமென விண்ணின் மறைந்தபின்னைத்-தாயமினி
யென்னதே யாமென் றுரைத்தானே யெல்லோர்க்கு
மன்னர்கோ னுள்ள மகிழ்ந்து. (உக)

இவ்வகை விசுவகன்மா கொடுக்கப்பட்ட தேரு மற்றவன் சொற்படியே யாதித்திய னுதயகாலங் கண்டு விண்ணுலகம்

(பா-ம்.) 1. ஈண்டனீ.

போனபின்னை, துரியோதனனுந் தா னந்ததராத்திரியி லுபலாவிய நகரம் புகுந்த சகாதேவனைக் கண்ட வாறும், மற்றவனாற் சொல்லப்பட்ட நாளுமுகூர்த்தமும், மற்றவன் சொற்படியே அராவான் பக்கற் போ யங்கவனைக் கண்டு களப்பலிக்குத்தக்க சுரோணிதமு முறுப்பும் பெற்றவாறுஞ் சொல்லி யிராச்சிய மினி யென்னதே யென்று மனமகிழ்ந் தினிதிருந்தான் (துரியோதனன்) என்றவாறு. இப்பால் இராத்திரி நீங்கித் தேவதேவன் ஸ்ரீவாசுதேவன் பள்ளியுணர்ந்தருளி, இராத்திரியின்கண் துரியோதனன் வந்து சகாதேவனால் வரைந்துகொண்ட நாளும் அரவான் களப்பலிக் கிசைந்தவாறுந்திருவுளத்தே நினைந்தருளிச் சபாமண்டபம் புகுந்து வீரசிங்காதனத்தின் மிசை வீற்றிருந்தருளித் தருமபுத்திரனையுந் தம்பிமாரையு மழைத்து அருகிருத்தி, மற்றவர் சம்பந்திகளான விராடராசத் தொடக்கத் தாரையும் பாஞ்சால ராசனையு மருகுகொண்டு, உகாந்த காலத்துச் சீற்றத்தீ யுடன் றெழுந்தாற் போல வுக்கிரமெய்தித் தரும புத்திரனை நோக்கி யாதருளிச்செய்தான் ஸ்ரீ வாசுதேவன்-

434. எத்திசைக்கு மிங்கிருந்தே யேதிலர்க ளெண்ணாதே
சத்தியமே சொல்வ தெனச்சமைந்து-புத்திகெடப்
பாங்குரைப்பீ ராயினீர் பார்கொடா மன்னவற்கா
யீங்கெமதாற் [1]செப்புவதே யின்று. (உஉ)

எ-து.- நீங்கள் சத்திய விரதரென்று சர்வலோகங்களுக்கும் பிரகாசிகளாய்ச் சத்துருக்கள் மித்திரர்களென் றுரையாது வாய்மையுட னிற்றலால் இராத்திரியின்கண் துரியோதனன் வஞ்சனைகளால் வந்து வேண்ட, வரம் மறா து பணிதலைமேற்கொண்டு தனக்கு யுத்தத்துக்கு வெற்றிபுரியத்தக்க நாளு முகுர்த்தமு முங்களாற் பெற்றுப் போனான்; இனி யுங்கட்குப் பாரதப் போர்க்கு யான் குறித்த நாளு முகுர்த்தமு மவனுக் காயிற்று; மற்றினியவரை யாவராலும் வெல்லவரிது கண்டீர்; இதற்கு மினி யென்னாற் சொல்லத்தக்கன செய்யத்தக்கன வில்லை யென்று திருமபுத்திராதிகளையும் அவர்க்கருகிருந்த வரசர்களையு நோக்கி யுரைத்து முனிவுற் றதிகோபமாகிய ஸ்ரீவாசுதேவனை நோக்கி யாது விண்ணபப்ஞ்செய்தான் தருமபுத்திரன்:-

435. சேரார் தமக்குவரஞ் செய்தெமக்குத் தீங்குரைத்தா
ராரா ரெனவாங் கடிதொழுது-கூராழிக்
கொற்றவனே யெங்கள் குலவேந்தே கூறென்றான்
வெற்றிதரு பாண்டவர்கோன் மிக்கு. (உங)

(பா-ம்.) 1. செப்புவதே னின்று.

என்றிவ்வகை தருமபுத்திரன் சொல்லக் கேட்டு யாதருளிச்செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-

**436. பாரதத்தை வெல்வதற்குப் பாங்காக நன்முகுர்த்தங்**
**காருறைந்த பூகங் கழுத்தொடிய-[1]வாரல்**
**குதித்தேறு கங்கைக் குருநாடா வும்பி**
**மதித்தாற்கு மீந்தான் காண் மற்று.** (உ௬)

*எ-து.-* வீமார்ச்சுன ரிருவரு மொழிய மற்றவர் சத்தியவிரத ரெனவிருந்து, சத்துருவாகிய துரியோதனனுக் கான நாளு முகுர்த்தமுஞ் சகா தேவன் வரைந்து கொடுப்ப, களப்பலி யூட்டுதற்கு அராவான் சுரோணிதமு மாங்கிசமுங் கொடுப்ப வகைபுரிந்து வாழ்கின்றா ருன்றம்பியு முன்மகனுமென வுரைத்து மிகவு முனிந்தருளி யெம்மால் யுத்தத்துக்குத் தக்க வெற்றியுள நாளு முகுர்த்தமும் வரைய வரிதென் றருளிச்செய்து கதுமென வீரசிங்காதனம்விட்டு நீங்கி ஸ்ரீமத் துவாரகாபதிக்கேற வெழுந்தருளுவதாகத் தன் மணித்தேரைப் புரவி பூட்டென வருளிச்செய்து, சாத்தகியுஞ் சர்வ குமாரரும் புடைசூழச் சபாமண்டபம் விட்டுப் போது மெல்லைக்கண், பாண்டவரு முட னெழுந்து மிகவும் பயமும் பரித்திராசமுமெய்தி ஸ்ரீவாசுதேவனை நோக்கி நமஸ்கரித்து யாது விண்ணப்பஞ்செய்தான் தருமபுத்திரன்:-

**437. என்னுடைய பேதைமையு மெம்பிமார் பாலிதையு**
**மன்னிடைமுன் மண்ணிழந்த மாட்டாங்கு-முன்னுடைய**
**பொற்பாத மேயடையப் போமன்றோ பொங்கொளிசேர்**
**புட்கரசா வென்றான் புகழ்ந்து.** (உ௫)

*எ-து.-* என்னுடைய பேதைமைகளாலு மென்னுடைய பிராதாக்கள் பாலியதைகளாலும் வந் துண்டான தீமைகளுக்கு மிராச்சிய மிழந்து திரிகின்ற துன்பமு முன்னுடைய ஸ்ரீவாதங்களை யாச்சிரயித்தோமுக்கு நிற்குமோ வென்றும், அது நிற்க, மற்றென்னால் வீமார்ச்சுனரால் விளையப்பட்ன சொல்லபப்ட்டன வனைத்து முண்டாகிற் பொறுத்தருளி யெங்களை யிரக்ஷிப் பாயாகென்றுந் தருமபுத்திரன் விண்ணப்பஞ்செய்து நமஸ்கரிப்பக் கண்டு யாதருளிச்செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-

**438. [2]நீதியா னின்ற பதினாலா நாடன்னை**
**யாதி யமாவாசை யாக்கலாஞ்-சோதிமதி**
**யாதித்த னோடே [3]யமர்ந்திருக்க வேதியராற்**
**சாதித்துக் கொள்வதுகாண் [4]சார்பு.** (உ௬)

(பா-ம்.) 1. வாளை. 2. நீதியாய். 3. அமர்ந்திருக்கும். 4. சால்பு.

எ-து.- சதுர்த்தசியை யமாவாசையாகப் பணித்துக் கொள்வதாக நிச்சயித்துப் பாரதப்போர் வெல்வதற்கு ஒருபாயமுண்டென்று ஸ்ரீ வாசுதேவனருளிச்செய்யக் கேட்டுப் பாண்டவரும் பிரியப்பட் டருளிச்செய்வாயாகென, மற்றவரைக் கைகவித்து அராவானை நோக்கி யாதருளிச்செய்தான் ஸ்ரீ வாசுதேவன்.

439. வண்மை வரிசிலைநூல் வல்லாண்மை [1]சீர்மென்மை
திண்மை திருவுடைமை தீதின்மை-யுண்மை
யுருவஞ் சுடருலக முன்னுடனே யென்னை
மருவும் படி[2]மதிக்கு மற்று. (௨௭)

எ-து.- உரோமமுஞ் சுரோணிதமுஞ் சர்வ ராசலக்ஷணமு மென்னோ டொப்பை; நம்மிருவரி லொருவர் களப்பலியாகவேண்டும்; ஆதலா லினியிவனை யொழிய வென்னுடைய சுரோணிதமு மாங்கிதமும் வாங்கிக் கொண்டு நீங்கள் களப்பலி யூட்டுவீராமி னென் றருளிச்செய்யக் கேட்டு மிகவும் பயமும் பரித்திராசமு மெய்தி யாது சொன்னான் தருமபுத்திரன்:-

440. இச்சொற் பணித்தனைநீ யெம்பெருமா னெங்கட்கு
நச்சுச்சொல் லென்று நடுநடுங்கி-யிச்செல்வம்
வேண்டோம்யா மென்று விழுந்தழுதான் றம்முடைய
வாண்டான்றன் பாதத்தே யாங்கு. (௨௮)

எ-து.- சத்த லோகங்களுக்குஞ் சத்த சமுத்திரங்களுக்குஞ் சங்காரம் வந்த காலத்தும்நின் றிருமேனிக் கொரு தீங்கில்லை; எங்களை யிரக்ஷிப்பான் காரணமாக விவ்வகை தீங் கருளிச்செய்யுமதோ வெம்பெருமா னெனப் பேசியதிபயமெய்தி யெங்கட் கிராச்சியம் வேண்டோம்; இன்னமு முன்னந் திரிந்துரைந்த வருங் கானகமே போவோ மென்று பத்தியெய்தி யுரைப்பக் கண்டு ஸ்ரீவாசுதேவனை நோக்கி நமஸ்கரித்து விண்ணப்பஞ் செய்வானராவான்: 'அடியே னிருக்க வொரு தீங்கு திருமேனிக்கு நினைந்தருளுமதோ' என்று விண்ணப்பஞ் செய்து நமஸ்கரித்து நின்ற வராவானைக் கண்டு, பாண்டவ ரனைவரும், இவனாகிற் கொண்டருளவும்; இவனாகாதாகி லெங்களி லொருவராமாயினுங் கொண்டருளி யெங்கள் பிரதிக்கினையை முற்றுவித் தருள்வாயாகென்று விண்ணப்பஞ் செய்து நிற்ப மற்றவர்க்கு வேண்டத்தக்க புராண மருளிச்செய்து, வீமார்ச்சுனரைக் கொன்றால் துரியோதனாதிகளுக்குங் கன்னனுக்கு மெதிரில்லை யென்று, பின்னு மராவானை நோக்கி யாதருளிச்செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-

(பா-ம்.) 1. தீமேன்மை. 2. மதித்தாய்.

441. உந்தைமார் சாக வுனக்குப் பகையான
தந்தைமார் வாழத் தகுமுறையால்-முந்த
வரங்கொடுத்தாய் நீயன்றே யென்றுரைத்தான் மாற்றா
ருரங்கெடுக்கு மாலோ னுடன்று. (௪௯)

*எ-து.- பாண்டவர் மாள்வாராகவுந் துரியோதனன் வெல்வதாகவுங் கருதி யவற்கு வெற்றிகொள்ள வுன் சரீரத்தி லுண்டான சுரோணிதமு மாங்கிசமுங் களப்பலிக்குக் கொடுத்தாயாதலா லுன் சரீர மினி யுச்சிட்ட மன்றோ வென் றருளிச்செய்த முனிவு கண்டு நடுக்கத்தோ டிடுக்கணெய்தி யாது விண்ணப்பஞ்செய்தா னராவான்:-*

442. என்னை முனிந்தருளே லெம்பெருமா னென்னுடம்பிற்
றொன்மைத் தசையுஞ் சுரோணிதமு-நன்முறையான்
முன்புநீர் கொண்டு முனைசெய்யு மற்றவற்குப்
பின்பியா னீவேன் பெயர்ந்து. (௫0)

*எ-து.- துரியோதனனுக்கு யான் ஓ மென்றதொரு காரணமுண்டு, மற்றவன் வேண்டிவந்தபொழுது மறாது கொடுப்பேனென்றதன்றிப் பின்னை முன்னை யென் றவனுடன் பேசியவாறறிந்ததில்லை; வருகின்ற வமாவாசை வந்தாற் கொடுப்பதாகச் சங்கற்பித்த தன்றி மற்றவனா லிற்றைக்குக் கொடுபோவே னென்றதில்லை யெனப் பேசி, அஃதொழிய, நீ யதற்கு முன்னம் வேண்டுகையா லுனக்குத் தருவேனென்று அராவான் சொல்லக் கேட்டுத் திருப் புன்முறுவல்கொண்டருளி யாதருளிச்செய்தான் ஸ்ரீ வாசுதேவன்:-*

443. தூண்டுபரித் தேரான் றுரியோ தனன்றன்பால்
வேண்டியநாள் வேண்டும் வரங்[1]கொடுத்தா-யீண்டவே
யுந்தைமார் பாராள வுன்னுவைநீ [2]தான்காக்க
சிந்தைதா னோகாது சேர்ந்து. (௫௧)

*எ-து.- துரியோதனன் வேண்டிய நாள் கலையுவா. . . ட்டித் தருவாயாகென் றருளிச்செய்யக் கேட்டு அராவான் விண்ணப்பஞ் செய்வான்: என்னுறுப்பை யீண்டெனப் பலிகொண்டருளி யெந்தைமா ரைவரையு மிரக்ஷித்துச் சத்துருசய முடித் திராச்சிய முற்றுமாளும்படிக் கருளிச்செய் வாயாகெனக் கேட்டுத் திருப்புன்முறுவல் கொண்டருளி யவ்விடத்தே தானே மாலைசூட்டிக் கதுமெனக் களப்பலிக்குக் காப்புக் கட்டி மற்றதற் கங்குள்ள சந்தேகந் தீர்ந்து தருமபுத்திரனை நோக்கிப் பன்னீராயிரம் பிராமணருக்கு மகாதானங் கற்பித்துப் பிராமணரை*

*(பா-ம்.) 1. கொடுப்பா-யீண்டனீ. 2. யான்காக்கச்.*

*வரவழைத்துச் சதுர்த்தசியை யமாவாசையாக்கித் தரவேண்டு மென்று ஸ்ரீ வாசுதேவ னருளிச்செய்யக் கேட்டு மற்றதற்கு யாது சொன்னார் பிராமணர்:-*

**444. எம்பெருமா னின்னேவல் செய்யுமே யெங்களுக்குத்**
**தம்பமாஞ் சந்திரா தித்தர்களை-யெம்பெருமை**
**கூட்டலா குங்கொல்லோ கூடுநாள் கூட்டுதற்கு**
**வேட்டதுவென் னென்றார் விரைந்து. (௬௨)**

*எ-து.- சந்திராதித்த ரிதற்குமுன் பமாவாசையொழியக் கூடியறியார்; அவர்களை யெங்களாற் கூட்டச் சத்தியுண்டோ வென்று விண்ணப்பஞ் செய்த வேதியரை நோக்கி யாதருளிச்செய்தான் ஸ்ரீ வாசுதேவன்:-*

**445. தேவரா வாருந் திசைப்பால ராவாரு**
**மூவராய் நிற்கின்ற மூர்த்தியரும்-யாவருந்தான்**
**கொந்தலருஞ் சோலைக் குருநாட்டுப் பூசுரர்கா**
**னந்தணரா லன்றோவா வார். (௬௩)**

*எ-து.- தேவர்களாவாரு மிருடிகளாவாருந் திரிமூர்த்திகளாவாரும் பிராமணருடைய சத்திகொண்டன்றோ வென்றும், பிராமண ருச்சரித்த மந்திரமன்றோ தெய்வமென்றும், உங்கள் பணி மறுக்குந் தன்மை யுடையார் யாவருமுண்டோ வென்று மிவ்வகை யுரைத்து நீங்க வீண் டினிது துணிந்தமாவாசையாக்கித் தருவீரென்று தேவதேவ னருளிச்செய்யக்கேட்டு மறாது பணித்தலை மேற்கொண்டு ஸ்ரீ வாசுதேவன் பிரசாத பலம் பெற்று யாது செய்தார் பிராமணர்:-*

**446. வேதியர்க டம்மை யுளத்தெண்ணி வேதத்தி**
**னோம மருத்தி யுளதென்னுஞ்-சோதி**
**யணிந்தா ரமாவாசை யாகென்று பேசிப்**
**பணிந்தார்கள் சாலப் பரிந்து. (௬௪)**

*அப்பொழுது,*

**447. மாமறையோர் வாக்குப் பழுதாமோ மண்ணின்மேல்**
**யாமறியோ மிவ்வார்த்தை நன்றென்னாச்-சோமன்**
**சுடர்நாயிற் றொள்ளொளிக்கே தோன்றினான் கொல்லோ**
**வுடனாயிற் றன்றே யுவா. (௬௫)**

*இவ்வகை யிதிகாச வேத புராணங்களாலும் ஸ்ரீ வாசுதேவன் மகாமாயையாலும் வேதியர் சடங்குடன் துதிக்குமளவில், சந்திராதித்தியர்களும் தம்மிற் கூடி யிஃதென்கொலோ வென்னு மளவிற் சதுர்த்தசியு மமாவாசை யாயிற்று; அது கண்டருளி யிஃதசிசயமெனத்*

தேவதேவன் ஸ்ரீ வாசுதேவன் முகுர்த்தம் வழுவாது அராவானை நோக்கிக் களப்பலிக்குச் சுரோணிதமு மாங்கிசமுந் தருவாயாகெனக் கேட்க, யாதுசொன்னா னராவான்:-

448. என்னுறுப்பை யானே யறுத்திட் டிழிகுருதி
முன்னியற்ற வல்லேமுகில்வண்ணா-வென்னுறுப்பைக்
காட்டப் பெறாத விதியொன் றிலாதோற்குப்
பூட்டப் பெறவேண்டும் போர். (ரு௬)

எ-து.- துரியோதனாதிகளுடன் பாரத மெல்லா மென் கையிலே மாளும்படிக்கு யா னாயுதசிக்ஷை பண்ணி யதற்குத் தக்க வஸ்திரசஸ்திரங்கள் தேடினேன்; என் கன்ம விதியினாலே யெனக்குக் களப்பலியாய் முடிந்தது. இதற்கும் பெருகெனப் பிரியமாயிருந்தது. அது நிற்க, எம் பெருமானே! அடியேனுக் கொரு வரம் பிரசாதிப்பாயாகென, தேவதேவனுமுடன்பட யாது வேண்டிக்கொண்டா னராவான்:-

449. பாரதப்போர் தான்பொருது போமளவும் பாரின்மேல்
வீரசத்தி யுள்ளாரை யான்வினவிப்-போர்புக்குப்
பின்னையே சாவப் பெருவரந்தா வென்றுரைத்தான்
றன்னேர் பிறரொவ்வான் றாழ்ந்து. (ரு௭)

இவ்வகை விண்ணப்பஞ் செய்த அராவானைக் கண்டு பிரியப்பட்ட திருவுளத்தனாய் மற்றவன் வேண்டிய வண்ணமே பிரசாதிப்பான் கருதி யாதரு ளிச்செய்தான் ஸ்ரீ வாசுதேவன்:-

450. பாரதப் போர்பொருது போமளவும் போர்கண்டு
வீரருட னெட்டாநாண் மேற்சென்று-போர்பொருது
மற்றவர்கள் கையாலே வானுலகம் போவாயென்
றுற்றுமிக நேர்ந்தா னுகந்து. (ரு௮)

அன்றியும்,

451. மைந்த னினைவின் படியே வரங்கொடுத்துச்
சிந்தைமகிழ்ந் தெட்டாநாட் சென்றுபுக்-குந்தைமார்
தம்முடனே நீபொருது சாகென் றருள்செய்தான்
வெம்முனைவெல் லாழியான் மிக்கு. (ரு௯)

இவ்வகை பாரத யுத்தம் விளைந்தவிடத் தெட்டாநாளை யுத்தத்தி லுன்றாயாதி யாகிய துரியோதனாதிகளுடன் யுத்தம் பண்ணி மற்றந்த வதிரதர்கையி லஸ்திரங்களாற் புண்பட்டு யமலோக மெய்துவாயாகென் றருளிச் செய்து பின்ன ரவன்பாற் சுரோணிதமு மாங்கிசமும் வாங்கிக்கொண்ட, கந்த புஷ்ப தூபதீபங்களால் அலங்கரித்துக்கொண்டு, சகாதேவன் சோதிடஞ் சொல்லி

வரையப்பட்ட முகுர்த்தத்திலே குருக்ஷேத்திர மென்னுஞ் சமரபூமி புகுந்து தேவராசனை முன்னீடாகக் கொண்டு யாது செய்தார் பாண்டவர்:-

452. [1]பகைவன் கருத்தழியப் பார்வேந்தன் வெல்லக்
குருவன்று மாமுகுர்த்தங் கொண்டு-மிகவுங்
களப்பலியை யூட்டினார் கார்முரசங் கொட்ட
வளர்ப்புலிகள் போலெங்கும் வந்து. (சo)

அன்றியும்,

453. தொல்லரச ரீண்டப்போய்ச் சோதிப் புனல்சிந்தி
யெல்லையில்சீர் மாகாளிக் கேய்தொழிலார்-நல்ல
மனிசரொடு மாவு மதகளிறு மற்றுங்
குனிசிலையா [2]ரோட்டினார் கூர்ந்து. (சக)

இவ்வகை யராவானைப் பலியிட்டுக் குருக்ஷேத்திரமென்னுஞ் சமரபூமி முழுதுஞ் சுரோணிதமு மாங்கிசமுஞ் சிந்தி வீரஸ்திரீக்குத் துரியோதனனையும் பிராதாக்கள் தொண்ணூற்றொன்பதின்மர்களையும் பலியாக வுதகம் பண்ணி யலகைக்கும் பக்ஷிசாதிகளுக்குஞ் சுரோணிதமு மாங்கிசமுந் தானம் பண்ணித் தங்கள் படைநிலையுங் குறித்துப் பிரதிக்கினை முற்றும் வகை கருதி யார்ப்பரவம் பண்ணி, தங்கள்தங்களுக்கான அஸ்திர சஸ்திரங்களனைத்து மலங்கரித்துத் தேவதேவன் ஸ்ரீ வாசுதேவன் ஸ்ரீ ஹஸ்தத்தாற் றெழுது வாங்கி, வாகுத்தடித்து வாகனங்கள் மேற்கொண்டு கசதுரங்க பதாதிகளாரச் சமரபூமி முழுதுங் காற்றென்னக் கடுவிசைத் தேரோட்டிச் சிங்கநாதஞ் செய்து, தருமபுத்திரனை நமஸ்கரித்து வீரஸ்ரீ பொலிந்து தோன்ற வளராநின்ற புயத்தினராய் மனமகிழ்ந்து யுத்தமண்டலம் விட்டு நீங்கிச் சத்திரசாமரம் புடைதயங்கத் தவளச்சத்திரம் மேனிழற்றக் கருடத்துவசமு முரசத் துவசமும் விசும் பணுவ வீரத்துவசம் பல கலந் திலங்க எம்மருங்கு மெழின் மணிக்கவரி யருகிரட்டக் கசதுரங்க பதாதிகள் புடை சூழப் பரராஷ்டிரத்து க்ஷத்திரியர் சூழ்ந்து சேவை பண்ண விதவிதமாகக் களிகூர்ந்து யுத்த வீரருடன் வெற்றிப்பலி யூட்டித் தாந்தாம் பாடி வீடு புக்கார் தருமபுத்திரனும் ஸ்ரீ வாசுதேவனு மென்றவாறு.

## களப்பலி முற்றும்

(பா-ம்.) 1. பகைவான் கருத்தழிக்கப். . . . வெல்லச், சிகையென்னு மாமுகுர்த்தஞ் சென்று. 2. ஒட்டினார்.

# அணி வகுப்பு

இப்பால், துரியோதனன் யுத்தத்துக் கொருப்படுமளவில் தருமபுத்திரன் களப்பலி யூட்டின வர்த்தமானங் கேட்டு, அளவில்லாததோர் கோபாக்கினி யெய்தி ஸ்ரீ வீஷ்மாசாரியனை யழைத்து யாது சொன்னான் துரியோதனன்-

454. பலியூட்ட வேண்டுமோ பாரதப்போர் வெல்ல
வலிகெட்டார் போலநீர் மன்னீர்-கலிநாட்டித்
தேர்க்கோலஞ் செய்ம்மின் சிறுகாலே நீரெல்லாம்
போர்க்கோலஞ் செய்ம்மின் பொர. (க)

எ-து.- முன்வந் தெமக்குப் பலிதருவா னராவானை ஸ்ரீ வாசுதேவன் முன்னறிந்து வஞ்சனையால் மாற்றிப் பலிகொண்டான்; இனி யெமக்குப் பலியாவார் பாண்டவரே யெனக்கருதி ரோஷித்த கோபாக்கினியா லுபாய மறந்து வெகுளியுடன் பலியூட்டுகை தவிர்ந்து பாண்டவரை வெல்வதற்குச் சத்தியீனரைப்போல் நாளு முகுர்த்தமும் வேண்டுமோ வென வெகுண்டு ஸ்ரீ வீஷ்மனை நோக்கித் தன் பெரும் படையினை யணிவகுப்பாயா கென்றலும் ஸ்ரீ வீஷ்மனும் தன் பெரும் படையினை யாங்ஙன மணி வகுத்தானோ வெனில்:-

455. அதிரதரே மாரதரே யாண்டகைமை மிக்க
[1]சதிரர் சமரதரே தக்க-சதுரதரி
லத்தரத ரென்றங் கரசர்களைத் தான்றெரிந்தான்
[2]மற்றிரத கங்கை மகன். (உ)

எ-து.- தன்னையுந் துரோணாசாரியனையு மசுவத்தாமாவையும் பூரிச் சிரவாவினையு மதிரதரி லக்கிரகண்ணியராக வகுத்து, பகதத்தனையுஞ் சத்திர தேயுவினையுஞ் சகுனியையுந் துன்மருடணனையும் மகாரதரி லக்கிரகண்ணியராக வகுத்து, துச்சாசனனையுங் கன்னனையும் விஷசேனனையும் பூரியையும் அர்த்தரதரி லக்கிரகண்ணியராக வகுத்துப் பின்னும் அக்குரோணியி லகப்படாத மகாபல முடையன யங்ஙனம் வகுத்தானோ வெனில்:-

456. எண்ணிற் படாத வெழிற்சிங்கம் போனின்ற
வண்ண வகுப் [3]புடையார் வாரணங்க-டிண்ண
மருகோடி மன்னர் மதித்தேறி வந்த
வொருகோடி யான முள. (ங)

---

(பா-ம்.) 1. சமரதரே சாமந்தர் தக்க. 2. மத்தரத. 3. உடைய வாரணங்கள்.

எ—து.— சுப்பிரதீபமுஞ் சித்திரனு மகாதேவனும் அசுவத்தாமாவு முள்ளிட்ட பல பதினாயிரம் பலயானையின் பலமுடையன வொருகோடி யானையும், சோமதத்தனுஞ் சித்திரசிந்தனும் யுகவிச்சுதனும் வாயுசெகந்தனு முள்ளிட்ட முப்பது லக்ஷந் தேரும், குலசீலனும் குலவானுவு மகாவீரனு மகாவேகனு முள்ளிட்ட வநேக அங்சுத்த முடையன பத்து லக்ஷங் குதிரையும், அறுபதினாயிர மரசகுமாரரும், பன்னூறாயிரங் காலாளுங் கட்டுப்படத் தெரிந்து அதிரதர் மகாரதர் சமரதர் அர்த்தரதரென்கின்ற நாலணியர்க வகுத் திவ்வகையே பதினோ ரக்குரோணி மகாசேனையையும் வகைவகையாகக் கொண்டு விதவிதமாக வகுப்ப, அது கண்டு நின்ற அங்க ராசன் முனிந்து ஸ்ரீ வீஷ்மனை நோக்கி யாது சொல்லி யாது செய்தான்:—

**457. தான்போ லதிரதனு மாரதனு மாகுவான்**
**யான்போலு மத்தரத னாகுவே-னூன்பாயு**
**மின்னாங்கு செய்தா னுயிர்செகுப்பே னென்றுரையா**
**மின்னாரும் வாளெடுத்தான் மிக்கு.** (௪)

எ—து.— அதிரதரி லக்கிரகண்ணியராகவுஞ் சமரதரில் வளஞ்சிறக்கவும் யானாதல் வச்சிரபாணியாதல் பூலோகத்திற் பிறரில்லாமை யறிந்திருந்து மென்னைச் சகியாமே பரராஷ்டிரத்து க்ஷத்திரியருங் காண வர்த்தரதனென்று சொன்ன வீஷ்மனைத் தலைபுரள வெறிவே னென்று கதுமென வாளுருவிக்கொண்டு கன்னன் வெகுண்டெழலும், அதுகண்டு ஸ்ரீ வீஷ்மனுந் தன் றேரினின் றிழியப் பாய்ந்து பூதலத்தின்மிசை யெதிர் சென்று வாளுருவிக்கொண்டு கன்னனைத் தடுத்து யாதுசொன்னான் ஸ்ரீவீஷ்மன்-

**458. உன்னாண்மை யாலுரைத்த வூக்கமுடன் [1]கட்டுரைக்கி**
**லென்னாண்மை பேச லெளிதன்றே-யொன்னார்முன்**
**[2]னாராலும் வென்றா ரதிரத ரென்றுரைத்தான்**
**போராரு மன்னவன்முன் புக்கு.** (௫)

*அன்றியும்,*

**459. மன்னர் சபைநடுங்க மாற்றலர் [3]மேல் யாமிருவ**
**ரின்னநெறி செய்வே மெனச்சீறி-யிந்நெடுநாட்**
**சோறிட்டான் வென்றித் துரியோ தனன்காண**
**வேறிட்டான் றேர்மேல் விரைந்து.** (௬)

---

(பா—ம்.) 1. கட்டுரைமு, னென்னாண்மை பேசில். 2. ஆரானும். 3. முன் யாமிருவ, ரெஞ்சநெறி.

எ--து.- நின்னை யர்த்தரதரில் வைத்தமைக்கு லச்சித்தாயாகில், உன்னையு மென்னையு மிரக்ஷித்துப் போதுகின்ற விராசராசன் துரியோதனனுக்கு விளைந்து நின்ற யுத்தத்துக்கு மாறுபட்டு வருகின்ற வதிரதரில் முன்றோன்றலான அருச்சுனனையாதல் வீமசேனனையாதல் மற்றவர்க்குப் படைத்தலைவனாய் நின்ற சுவேதனையாதல் எதிர்மலைந்து தடுத்து அவரைச் செயித்தோ மொருவரே யதிரதராகக் கடவம்; அதுவன்றி, இருவோமும் வாளுருவித் தனித்தனி நின் றெம்மி லிகலுற்றால் வன்ம மறாது; அது வொழிந்து, இந்நெடுநா ளிருவோமுக்குஞ் சோறிட் டிரக்ஷித்த பார்வேந்தனுக்கு வினை விளைந்தவிடத்து மற்றதுக்குச் சகாயம் பண்ணி யவன்மேல் வந்த வினைதுரந்து செஞ்சோற்றுக்கடனுந் தீர்த்துக்கொள்வதல்லாம் ஸ்ரீ வீஷ்மனுங் கன்னனும் தம்மி லுடன்று தங்கள் வன்மத்தா லெதிர் மலைந்து பட்டாரென்று பரராஷ்டிரத்து யுத்த வீரரும் தேவசாதிகளு மிகழப்படுவங் கண்டாய்; ஆதலா லிருவோமு முண்ட செஞ்சோற்றுக் கடன்றீரப் பார்வேந்த னெதிர்ப்பட்ட பகையுந் தணித்துக்கொடுத்த அவர் தமக்கு மிருவோமுக்கு முண்டாகிய விசயங்களுங் காண்பதாக விரணமுகத்து நின்ற சருவ க்ஷத்திரியர்மேற் சென்று செருச்செய் திரண்டு திறத்து யுத்த வீரருங் கண்டு களிகூர யுத்தம் பண்ணினா னின்னை யதிரதனாகக் கட்டுகின்றேன். அல்லாதபொழுது நின்னை யர்த்தரதரி லக்கிரதனாகக் கட்டுகின்றேன். அல்லாதபொழுது நின்னை யர்த்தரதரி லக்கிரகண்ணியனாக வகுத்து நிறுத்தக் கடவேன் என்று ஸ்ரீ வீஷ்ம னுரைக்குமளவில் அது கண்டு யாது செய்தான் துரியோதனன்:-

460. கன்ன பெருமானுங் காங்கெயனுந் தம்வீர
முன்னி யுரைத்த வுரைகேட்டு-மன்னர்
வெறுத்தார் தமைவிலக்க வெற்றித்தே ரோட்டிக்
குறித்தான் குருகுலத்தார் கோ. (௭)

இவ்வகை யுடன்று தம்மி லெழுந்து சமர்முகத்துச் செல்லாநின்ற ஸ்ரீ வீஷ்மனையுங் கன்னனையுங் கண்டு கதுமெனத் தன்றேர் கடாவிச் சென்றிருவர்க்கு மிடைபுகுந்து, எமக்கு விபத்து வந்த காலத்தேயோ வுங்கள் வன்மங் கொண்டாடுவீர்? இது வுங்கட்கு யோக்கியமல்ல என்றிவ்வகை யுரைத்து விலக்கலுற்றானை நோக்கி யாது சொன்னான் கன்னன்:-

461. உன்னை யுடையேனா னென்னார்த முன்னிலையி
லின்ன மதுகேட் டிருப்பேனோ-வன்னவன்றன்
போர்மாளு மவ்வளவும் போர்பொரே னென்றுரைத்தான்
கார்மாளுங் கையான் கறுத்து. (அ)

எ-து:- பரராஷ்டிரத்து க்ஷத்திரியர்முன் னென்னை யர்த்தரதரில் வகுத்துப் பரிபவம் பண்ணின ஸ்ரீ வீஷ்மன் சேனாபத்தியத்துக்குள் நில்லேனென்றும், நின்னையுடைய நானிப்படி வீர சௌரிய பங்கமாவதோ வென்றும், இவன் போர் மாளுமளவும் யுத்தபூமியிற் புகுதேனென்று மிவ்வகை யுரைத்து, என் சவுரியங்களையும் பராக்கிரமங்களையுந் தனிக் காண்பாயாகில் சத்துருசயம் பண்ணித்தருவே னென்றுஞ் சொல்லித் தன் கோயிற் புகுந்தா னங்கராச னென்றவாறு. இப்பால், பாண்டவர் சேனைக்குச் சேனாபதியாகிய சுவேதன் தங்கள் மகா சேனையை யாங்ஙனம் வகுத்தானோ வெனில்:-

**462. மன்னவர்கள் மண்டலிகர் வன்குறும்பர் சாமந்த**
**[1]ரின்னவரிக் கோடியரென் றெண்ணுங்கான்-மன்னவரை**
**வெவ்வேறு தானிறுத்தி வெற்றி யணிவகுத்தான்**
**செவ்வேறு போல்வான் றெரிந்து.** (கூ)

இவ்வகை மச்சராசன் சுவேதன்றன்னைச் சேனாபத்தியங் கட்டுகையில், தன்னையும் அருச்சுனனையும் அபிமன்னுவையும் புண்டலனையும் அதிரதரில் அக்கிரகண்ணியராக வகுத்து, சிகண்டியையுந் திட்டத்துய்மனையும் விராட ராசனையும் வீமசேனனையும் மகாரதரி லக்கிரகண்ணியராக வகுத்து, சாத்தகியையும் பாஞ்சாலராசனையும் உத்தமோசாவையு முதார்மனையுஞ் சமரதரிலக் கிரகண்ணியராக வகுத்து, கடோற்கசனையும் அஞ்சனவர்மாவினையும் நகுல சகாதேவரையும் அர்த்தரதரி லக்கிரகண்ணியராக வகுத்து, பல பதினாயிரம் க்ஷத்திரியரையுந் தெரிந்துகொண்டு இவ்வகை யானை தேர் குதிரை கருவி காலாட்களையுங் கலந் துடனிறுத்திப் பல பதினாயிர மகடவர்த்தனரையுந் தெரிந்து, நூறாயிரம் யானையு மிருபதினாயிரந் தேரு நூறாயிரத் தறுபதினாயிரம் புரவியுந் தெரிந்து கொண்டு கலந் துடனிறுத்தி, அதிரதர் மகாரதர் சமரதர் அர்த்தரத ரென்கின்ற நால்வகைப்பட்ட யுத்தவீரரையு நாலணியாக வகுத்துக்கொண்டு நிற்குமளவில் ஸ்ரீ வாசுதேவன் முகநோக்கி யாதருளிச்செய்தான் ஸ்ரீ பலதேவன்:-

**463. இங்கிவர்க்காய் நீநிற்க யானவர்க்காய்ப் போர்மலைதல்**
**நங்குடிக்குச் சாலா தெனநாணிக்-கொங்கசைய**
**வண்டாடுங் கண்ணி வளைவண்ணன் போயினான்**
**கொண்டாடுந் தீர்த்தங் குறித்து.** (௬௦)

(பா-ம்.) 1. இன்ன கொடியாரென் று; இன்னர் கொடியாரென்று.

*எ-து.-* தேவரானவர் குறை முடிக்கவும், பூமிபாரந் தீர்க்கும் பொருட்டாகவு மானிடவேஷந் தரித்து மகாவிஷ்ணு மூர்த்தியாய்த் தோன்றினாயாதலால், யாமிருவோமுஞ் சமரபூமியி லெதிர் நிற்குமது நம் வங்கிசத்துக்கு யோக்கியமல்ல. தருமபுத்திரனுக்குப் மிராத்தியான விராச்சியங் கொடாது, மனுஷன் பொருட்டாக நீ போய் வேண்டவு மர்த்தராச்சியங் கொடாததாலு மைந்தூர் வேண்ட விடாததாலுந் துன்மதியாகிய துரியோதனனுந் தம்பிமாரு மனுபவிக்குந் தீங்கு நின்று காணமாட்டே னென்று தீர்த்தயாத்திரை போயினான் ஸ்ரீ பலதேவன். அது யாங்ஙனமோ வெனில்:-

464. மிக்கசிலை சீறி யொடித்த விதுரனையு
மொக்க வுடன்கொண் டுயர்நிலத்து-மிக்கபெருந்
தீர்த்தங்க ளாடிவரச் சென்றான் செழுமுனிவ
ரேத்தியெதிர் [1]கொள்வா னிசைந்து. (கக)

இவ்வகை விதுரனையு முடன்கொண்டு தீர்த்தயாத்திரை போயினான் ஸ்ரீ பலதேவ னென்றவாறு. இப்பால், அன்று கழித்த மற்றைஞான்று,-

465. பனியகலப் [2]பாரிடத்தோ ரெல்லாருந் தத்தம்
வினையகலப் போற்றிமிக வாழ்த்தத்-தனியொருதேர்
மேல்கொண்டான் வெய்யோனும் வேல்வேந்தர் தாமும்போய்க்
கால்கொண்டார் தங்கள் களம். (கஉ)

இவ்வகை யாதித்திய னுதித்தலு மிரண்டு திறத்துப் படையுஞ் சென்று குருக்ஷேத்திர நாற்பத்தெட்டியோசனையு நிறையப்பட்டது. அது யாங்ஙனமோ வெனில்:-

அகவல்

466. குருகுலத் தரசர் பொருகளங் குறித்தங்
கிருபதிற் றிரட்டி யிருநான் கியோசனை
விரிவொடு நின்ற வியன்பெருந் தேரில்
யானையின் மாவி லமர்பொரு நாளிற்
பரந்தோங்கு கொடியிற் பிணங்குதிறற்
பதாகையொடு நீடிரை யுகளத்
தார்க்கிய தானத் தலைமைசிறந் தீண்டிப்
பொருமதப் பகட்டினிரு வெண்கோட்டுக் கிம்புரி
மகர வேலை புடைபெயர்ந் ததுபொரக்

(பா-ம்.) 1. கொள்வா ரினிது. 2. பாரிடந்தோ றெல்லாருந் தத்தம்.

கொற்றவர் நின்ற குழாந்தொறுங் குழாந்தொறும்
வெண்குடை பிச்ச நிழல்படப் பரப்ப
நிவந்த நீழ லகலப் பெருந்திசையிற்
பகலவன் றன்னொளி பயின்றுநனி காட்டி
மன்னவ ரங்கையின் மின்னொளி படைக்குஞ்
சூலமுங் கணிச்சியுஞ் சுடர்த்தோ மரமும்
வேலும் வாளும் வெங்கப் பணமு
முசலமுங் குந்தமு முசுண்டியு நேமியுங்
[1]களைகப் பணமும் வெங்கர வாளமுஞ்
சத்தியு மழுவுந் தண்டு நாஞ்சிலு
மத்திர குந்தமு மல்ல வாயமும்
பிண்டி பாலமும் பெருவச் சிரமு
மென்பன முதலாப் பல்படை [2]நளிர்தர
மின்னித் தோன்றி யொழுகுநிரைத் தார்த்துக்
கொட்கு மிடையிடை மிடைந்த [3]வேல்வையுட்
பவளச் செங்காடு பரப்பி
முரசி னல்லொலி முகிலென முழங்கப்
பலபறை கறங்கிப் பணைமுக டதிர
விசும்புச் சுடரினை வெல்வதா முலரப்
பல்சுட ரன்ன பருமணி விம்ம
வகலிரு விசும்புந் துகளிருள் படைப்ப
நெடுந்தேர் திமிலி னிலைதடு மாறப்
பாய்பரி நெடுந்தேர்ப் பாத்திபர் விளைக்கும்
போர்த்தொழி லதனி னார வார
மந்தர நிறைய வமரரொ டரம்பைய
ரேறிய விமானம்வான் மீதறுத் தியங்கலிற்
கரைகா ணொண்ணாப் பெருமை யாலு
மொருபால், மாயோன் மகிழ்ந்த விளையாட் டாலும்
வீரப் பொற்றிரு விளைத்த லாலு
மாப்பொற், கடலிடை வலைய மலைபட நரலுந்
திரைநெடுங் கடலெதிர் மலைவ தாமென
வந்துதலைப் பெய்தன மன்னோ
வெந்திறல் வேந்தர் வியன்பெரும் படையே. (௧௩)

*இவ்வகை சத்தசாகரங் கிளர்ந்ததென்னச் சகல சந்துவுந் திரண்ட தென்ன மத்தமாவும் பரிமாவு மறமன்னருங் கொடுந்தேருமாய்த் திரண்டு நிற்பப் பண்ணும் வகுப்பும் பாங்குடன்*

*(பா—ம்.) 1. கலைகாலபாசமும். 2. நளிர்தரு. 3. வேலையுட்*

காணவேண்டிப் பார்வேந்தன் துரியோதன னொரு யானையின் மேற்கொண் டிரண்டுதிறத்து மகா சேனையையு மகா சேனையி லதிரரையு மூடுருவக் கண்டு தன் சேனைக்குச் சேனாபதி யாகிய ஸ்ரீ வீஷ்மனை நோக்கி யாது சொன்னான் துரியோதனன்-

467. கங்கை பெருமகனே கண்ணுதலே காசினியி
லெங்கள் குலத்துக் கெழில்வீரா-வங்கவர்கள்
தம்படையு மெம்படையுந் தார்வேந்தற் கொன்றானால்
வெம்படைவெல் வாரை விளம்பு. (௧௪)

அன்றியும்,

468. நம்படையோ டிப்படைநா ளோடாமற் கொல்வாரை
யெம்பெருமான் யாரோ வியம்புகென-வம்பரத்து
மீதா டரவுயர்த்தோன் கேட்டான் விறல்விளங்கு
மூதாதை யைநோக்கி முன்பு. (௧௫)

எ-து.- குருக்ஷேத்திர நிறையப்பட்ட விரண்டு திறத்தின் மகா சேனையிற் சதுரங்க பலத்துக்கு மதிபதி யொருவனானா லிந்தப் பெரும்படையை வெவ்வா ருளரோவென்று வினவக்கேட்டு யாதுசொன்னான் ஸ்ரீ வீஷ்மன்:-

469. வணங்கா முடியுடைய மன்னவனே கேண்மோ
பணந்தாங்கும் பார்நெளிய வீண்டி-யிணங்கு
கடல்போல நிற்குங் கடும்படைகொல் வாரை
யடல்வேந்தே கேளா யமர்ந்து. (௧௬)

என்றிவ்வகை சொல்லிப் பின்னும் யாதுசொன்னான் ஸ்ரீ வீஷ்மன்:-

## அகவல்

470. திருமிக விளங்கிய துரியோ தனற்குக்
குருகுலக் கிழவன் கொற்றவன் கூறு
மரிதிறன் மொய்ம்பி னெரிகொளப் புடைக்கு
மிருவகைப் படையிற் பதினொரக் குரோணி
யேழுடன் மிடைந்த விப்படை மடியக்
கேழ்கிளர் சிலையைக் கீற்றென வளைத்து
நாழிகை முப்பதி னான்கொல் லுவனே
யந்தணன் றுரோணா சாரிய னாகிய
வெந்தொழின் மறையோன் வேதியர் தலைவன்
றோன்றுங் கூற்றெனச் சுடுகணை யேவி
மூன்று நாளையின் முடித்திடு மவனே

யரசநின் றோழ னங்க ராச
னிரவிதன் புத்திர னில்லையென் னாதவ
னிந்திரன் கையி லிகல்வெல் பெற்றவ
னங்கவில் லதனை யழகுடன் வளைத்தங்
கைந்து நாளி லடுவனிப் படையே
யாங்கது வன்றியும்
பிறையுட னரவை முடிமிசை வைத்த
கறைமிடற் றண்ணல் [1]கருதல ரொடுங்குறப்
புவனியிற் றுரோணன் புத்திர னாகிய
வந்தணர் கோமா னசுவத்தாமா
நாழிகை யொன்றினி னளிகடற் சேனையை
யூழியி லெரியென வுயிர்கவர்ந் திடுமே
யீங்கிது நிற்க வாங்கு நின்ற
நீல மேனி [2]நெடுமுகில் வண்ணன்
[3]சகாய னசைவி றனஞ்சயன் விசயன்
சுவேத வாகனன் சொற்றிறம் பாத
தருமன் றம்பி தழலெழும் வில்லன்
பொருகள மதனிற் புறகிடா வீரன்
செஞ்சடை யுடைய [4]நஞ்சடை கடவு
டன்றிருச் சடையிற் றனுவொன் றதனால்
வெம்புறப் புடைப்ப வேயுறு தோளி
வில்லது தன்னை விரைவினிற் கையிற்
காமுற வாங்கக் கண்ணுத றன்னுடன்
போர்செய் யாயுதம் புண்ணியன் காணாத்
தாழ்சடை யோனைத் தடக்கைப் பற்றிக்
காலது வளைத்துக் கருத்துடன் மல்லிற்
றீங்குவிட் டகலச் செருச்செயு மாண்மையன்
கொடிமே னின்ற [5]குரக்குடை யுரவோ
னொடிவரை யதனி லடுவெனிப் படையே. (அகவல்)

*அதுவன்றியும்,*

471. பூருவர்கள் சொல்லும் படியிவைகாண் போர்வேந்தே
மாறுபடும் பூபார மாற்றுகைக்குச் சீறித்
திருமாலுங் கார்விசயன் றேரேறி நின்றால்
வருமாறு தானறியேன் மற்று. (நே.வெ)

---

*(பா-ம்.) 1. கருத்தொருங்கிடப். 2. மாமுகில். 3. சகாயன் னைசவன் றனஞ்சயன். 4. நஞ்சுடைக் கடவுள். 5. குரங்கன் முரசெறி, நொடி-*

என்றிவ்வகை தன்றிவ்வியஞானத்தை யுருவ நோக்கி யுள்ளபடி சொல்லிப் பின்னும் விஷ்ணுமூர்த்தி பூபாரந் தீர்க்கை பொருட்டாக விசுவரூபங் கரந்து வெற்றி விசயன் றேர்மிசை நின்றான் ; மற்றவன் மகா மாயம் யாவர்க்குந் தெரியாதென்று ஸ்ரீ வீஷ்மன் சொல்லக்கேட்டு யாது சொன்னான் சகுனி:-

472. மந்திரத்தின் வாய்மையான் மாதவங்கள் செய்தமையாள்
[1]பந்த முடையான் பதமலர்கள்-சிந்திக்குஞ்
சேவகனார் பாண்டவர்கள் செய்த தவமொழிய
யாதவர் செய்தா ரியம்பு. (கக௯)

இவ்வகை துரோணன், கிருபன், கன்னன், அசுவத்தாமா விவர்கள் பராக்கிரமங்களிலு மருச்சுனன் பராக்கிரம மிகவுங் கேட்டுச் சகுனி யளவிலாததோர் பொறாமை தோன்றிச் சொல்லுவான் : மந்திரங்களாலுந் தபசுகளாலும் பெரியாய் வனசித்தராய்த் திரிந்ததன்றி யிப்பொழுது சர்வப்பிராணிகளுக்குஞ் சங்காரஹேதுவாய்த்தம் சர்வ சேனையையும் படக்கொடுத்து மீண்டும் வனசித்தராவர்; அதுவன்றி நம் மகாசேனையை வெல்லக்கூடுமோ வென்று சகுனி சொல்லக் கேட்டு ஸ்ரீ வீஷ்மனை நோக்கி யாது சொன்னான் துரியோதனன்:-

473. எங்கள் குலமுதலே யென்னுடைய மூதாதா
யிங்குநீ நிற்க விகலமருட்-சங்கந்
தரித்தான் வருமெனினுந் தாங்குமே யுன்றன்
கரத்தா லெடுக்குங் கணை. (உ0)

இவ்வகை திவ்வியமூர்த்தி நாராயணசுவாமி கால சக்கர மெங்கள்மேல் வரினு நின் சிலைநிழற்கீழ் வாழ்வோமுக் கபசயமுண்டோ வென்று ஸ்ரீ வீஷ்மனை நமஸ்கரித்து மகா சேனையைப் பண்ணுக வென்று, சேனை மத்தியினின்ற துரோண கிருப கன்ன அசுவத்தாமா பூரி பூரிச்சிரவாவும் பாகுலிக சோமதத்தர் தொடக்கத்தாரு முள்ளிட்ட பன்னூறாயிர மரசர்களோடுந் துச்சாசன னுள்ளிட்ட தொண்ணூற்றொன்பதின்மர் தம்பிமாரோடும் பரராஷ்டிரத்துச் சருவக்ஷத்திரியரும் புடைசூழத் தனி வெண்கவரி புடையிரட்டத் தவளச்சத்திர மேனிழற்றத் தடவரை முகட்டிற் பன்னகம் போலச் சர்வாபரண பூஷிதனாய் நின்றான் துரியோதன னென்றவாறு. இவ்வகை நின்ற சேனைமுன்னே யளவிறந்த மதஹஸ்திப்படையோடு மறுபதினாயிரந் தேர்க்குழாத்தோடும் வெள்ளிக் கவசமும் வெள்ளி வெண்குடையும் விட்டு விளங்கத் தடங்கடல் நடுவுட் சந்திரவுதயத் தொளிகாட்ட வரும் பனைக் கொடி

(பா-ம்.) 1. பங்கன் றுணைப்பொற் பதமலர்கள்.

விசும்பணுவப் பரராசசிங்கமெனப் பொலிந்து தோன்றினான் ஸ்ரீ வீஷ்மன். அவ்விடத்து,-

474. கூர்முகத்து வாளமரர் கோமான் கொடிநகரிற்
போர்முகத்த [1]கோபுரம் போன்றதே-பார்நிழற்றும்
பைம்பொற் குடையான் படைச்சேனை முன்னின்ற
செம்பொற் பனைக்கொடியான் றேர். (உக)

இவ்வகை நின்ற ஸ்ரீ வீஷ்மனையும், அவற்கருகாக விருபதினாயிரந் தேர்க்குழாஞ் சூழ நின்ற துரோணாசாரியனையும், அவற்கருகாக நின்ற கிருபாசாரியனையும் கிருதவர்மாவினையும், அவர்ற்கருகாக நின்ற அசுவத்தாமாவையும், அவற்கருகாகப் பதினாயிரந் தேர் புடைசூழ நின்ற மத்திரராசன் சல்லியனையும், அவற்கருகாகநின்ற சகுனியையும், ஆங்கவற் கருகாக நின்ற துரியோதனன் றம்பிமார் தொண்ணூற்றொன்பதின்மரையும், பன்னூறாயிரந்தேர் புடைசூழ நின்ற துரியோதனனையும் உள்ளிட்ட சம்பந்திகளையும், சருவ க்ஷத்திரியரையுங் கண்டு சந்தோஷித்து எல்லையில்லாததோர் கருணை தோன்றி யாதுசொல்லி யாது செய்தா னருச்சுனன்:-

475. உற்றாரை யெல்லா முடன்கொன் றரசாளப்
பெற்றாலும் வேண்டேன் பெருஞ்செல்வஞ்-[2]சொற்றாழ்ந்து
வாட்டடக்கை வின்னெகிழ வாளா விருந்திட்டான்
றேர்த்தட்டின் மீதே திகைத்து. (உஉ)

எ-து.- பிதாமகனாகிய ஸ்ரீ வீஷ்மனையுஞ் சுவாமியாகிய துரோணசாரியனையும் பிராதாக்களையு மற்றுமுள்ள சம்பந்திகளையும் பதாதிசங்கத்தையுங் கண்டு, சமரபூமியி லிவ்வனைவோரையுங் கொன்று தருமபுத்திரனுக் கற்பமாகிய விராச்சியங் கொடுப்பதில், காட்டிற் போமது தன்மமென்று எல்லையில்லாததோர் கருணை தோன்றிச் சோகவிருதயஸ்தனாய்த் தளர்ந்து காண்டீவங் கைசோரத் தன் னணிநெடுந்தேர்மே லாண்டொழின் மறந்திட்டிருந்தான் அருச்சுனன். அப்பொழுது ஸ்ரீ வாசுதேவன் அவனபிப்பிராய மறிந்து (தக்க ஞான) தேகாதிசயத்தால் மயக்குற்றானென்றும், அவனைக் கொண்டே மறைந்து நின்று பூபாரந் தீர்க்க வேண்டுகையாலு மிவை யிரண்டுந் திருவுளத்தே கொண்டருளி யாது செய்தான் ஸ்ரீ வாசுதேவன்-

476. பிறப்பு நிலைகே டிவையாவான் பாவ
மறத்தினொ டைம்பூத மாவா-னுறற்கரிய

(பா-ம்.) 1. கோபுரமே போன்றதாற். 2. சுற்றார்ந்த.

**வானாவான் மண்ணாவான் மன்னுயிர்க ளித்தனையுந்**
**[1]தானாதல் காட்டினான் றான்.** (௨௫)

எ-து.-பிறப்பேனும் யான், இறப்பேனும் யான், காத்தளிப்பேனும் யான், முடிவுகாலத்து வந்து சத்த சமுத்திரங்களாய்க் கிளர்ந்து பிரளய மாவேனும் யான், அவையுட் டிரியுஞ் சர்வ மச்சசாதியாவேனும் யான், கற்ப வூழித்தீயாய்ச் சங்கரிப்பேனும் யான், பூமி யந்தர சுவர்க்க மாகின்றேனும் யான், சர்வமாகின்றேனுஞ் சத்தமாகின்றேனும் யான், தன்மமாகின்றேனும் யான், கன்மமாகின்றேனும் யான், இரவாகின்றேனும் பகலாகின்றேனும் யான், மாலை மயக்கமாகின்றேனும் யான், பிருதுவி, யப்பு, தேயு, வாயு வாகாசமாகின்றேனுமியான் கண்டாய்; என்னையொழிந் துண்டாவன வொன்றுமில்லை கண்டாய்; சகல பதார்த்தமும் யானாகி நிற்கின்ற தன்மைதனைக் காண்பாயாக என்றும், உனக்குத் திவ்வியாக்ஷந் தந்தே னென்றும் அருளிச்செய்து தன் றிவ்வியமான விசுவரூபத்தை வெளிப்படுத்திக் காட்டுதலும், அதுகண் டருச்சுனனு மதிபயங்கர மெய்திச் செய்வதொன் றறியாது, யாது சொல்லி யாது செய்தான்: அருச்சுனன்-

477. **ஆயாவென் மைத்துனனே யாழித்தேர்ப் பாகாநான்**
**[2]பேயா னுரைத்த பெரும்பிழைகண்-மாயா**
**பொருபடைக்கை மாலே பொறுத்தருள்வா யென்று**
**திருவடிக்கே வீழ்ந்தான் தெளிந்து.** (௨௬)

எ-து.- எம்பெருமானென் றறியாமையினாற் செய்தனவுஞ் சொல்லியனவு முளவாயிற் பொறுத்தருளவேண்டு மென்று சரணாரவிந்தத்துமேற் பணிந்து கிடந்தானைத் தடவரைத்தோள் பற்றி யெடுத்து நிறுத்திச் சொல்லுவான்: 'கிரதயுகத்தின்கண் அசுரர்வதை நிமித்தமாக நான் நாராயணனாய்த் தோன்ற நீ நரனாய்த்தோன்றினாய்; அதன்பின் திரேதாயுகத்தின்கண் இராக்கதர் வதை நிமித்தமாக நா னிராமனாய்த் தோன்ற நீ லக்ஷ்மணனாய்த் தோன்றினாய் அதன்பின் துவாபரயுகத்தின்கண் மனுஷர்வதை நிமித்தமாக நான் வாசுதேவனாய்த் தோன்ற நீ யருச்சுனனாய்த் தோன்றினாய்; அதுவும் பிராண நாசம் பண்ணிப் பூபாரந் தீர்ப்பதன் பொருட்டாகத் தோன்றின விக்கிரகங் கண்டாய். ஆதலா லுனக்கிங்குப் பூமிபாரந் தீர்ப்பது சந்தேகமில்லை; மற்றிவர்களாற் பிரயோசனமில்லை; இங்கு நிற்கின்ற க்ஷத்திரிய ஸமூகமும் ஸர்வப் பிராணிகளும் நொடி வரையிலென்கையின் மாண்டொழியும் பூமியின்கண் தன்ம கன்ம மென்கின்றவை யிரண்டு

(பா-ம்.) 1. தானாவான். 2. பேயேன்.

நிலை பெறற்காகவும், யாவர்பாலுஞ் சத்தியமென்கின்ற வசனத்துக்குப் பிரசித்தம் வேண்டுமென்றும், தருமபுத்திரனுடன் முன்னமுரைத்த மொழி மறுத்த துரயோதனன் சேனையை யுங்கள் பிரதிக்கினை பங்கமாகாம னின்னைக்கொண்டு பங்கந் தீர்த்துத் தரவேண்டியு மிது நின்னாலே துணியப் பட்டது கண்டாய்; நீ கொல்லாம லொழிந்தாயாயினும் யானிந்தப் பதாதி சங்கத்தைச் சங்கரித்துவிடுகை தவிரேனாதலின், உங்கள் பிரதிக்கினை பங்கமாகாமல் யா னிற்க வீண்ட நீ யிந்த க்ஷத்திரிய சமூகத்தைக் கொல்வதற்கு நிமித்தமாய்த் துணிந்து நிற்பாயாக என்றும், யானும் நீயும் நர நாராயண ரன்றோ வென்றும் இவ்வகை தெருட்டி யருளிச்செய்யக் கேட்டு மனந்தெளிந்து தக்க ஞானத்தால் யாது விண்ணப்பஞ்செய்தா னருச்சுனன்:-

478. தாயாகித் தந்தையாய்த் தத்துவமாய் மெய்த்தவமாய்
மாயாநீ மண்ணுலகும் வானுலகுந் தானாகி
யெங்குமாய் நின்றானே யெங்களைமுன் கொண்டவரை
மங்குமா செய்யாய் மகிழ்ந்து. (உரு)

இவ்வகை விண்ணப்பஞ்செய்துநின்ற வருச்சுனனைக் கைகவித்து மற்றிந்தச் சமரபூமியில் வந்தீண்டி நிறையப்பட்ட சேனை வெள்ளத்தை மடித் துங்கள் பிரதிக்கினை முற்றுவிப்பான் காரணமாக வுன்னை யுடன் கொண்டு நின்றேன்; மற்று யானிற்கின்ற பொழுதே யுங்கள் பிரதிக்கினை பங்கந் தீர்ந்துகொள்ளீராகில் மற்றந்தச் சத்துரு பக்ஷத்தாரை யாவராலும் வெற்றிகொள்ள வரிது கண்டாய்; ஆதலா லீண்ட னுயுத்தத்துக் கொருப்படுவாயாக என்று தக்கஞான மாற்றி யஞ்ஞானங் கொடுத்துக் கோபாக்கினி யெழுப்பி யொருப்படுத்தி, பின்னைத் தருமபுத்திரனைக் கண்டு யுத்தத்துக் கொருப்படுக வென்றலும், ஸ்ரீ வாசுதேவனை நோக்கித் தருமபுத்திரன் விண்ணப்பஞ்செய்வான்- வீஷ்மத் துரோணர் அனுஞ்ஞை வேணுமே யென்றுரைத்திடுதலும், ஆங்கவர்களைக் கண்டு குறைவுபேசி வாருங்க ளென்று ஸ்ரீ வாசுதேவன் விடுப்ப, அவர்களுஞ் சென்று சத்துரு பக்ஷத்து நின்ற ஸ்ரீ வீஷ்மனைக் கண்டு நமஸ்கரிப்ப, தருமபுத்திரனை நோக்கி ஸ்ரீ வீஷ்மன் சொல்லுவான்-உனக்கு முன் பிராதாக்களுக்குஞ் சிநேக முடையேனாகிலுந் துரியோதனன் சோறு பலகாலுண்டமையா லவனுக்குப் பிரமாதம் விளைந்த விடத்து ரணமுகத் தென் பிராணனைத் துறப்பேனாக லிராசதன்மம் விரும்பினேன்; எத்தனையு நீயு முன் பிராதாக்களுஞ் சத்தியவாக்கிய மொழியாது தருமசீலராய் நீதிமார்க்கத்துடன் சமய விரோதஞ் செய்யாது நின்றீர்; இதுவுமன்றித் தேவதேவன் ஸ்ரீ வாசுதேவனைச் சாரதியாகப் பெற்றுடையீருக்கு, மற்றவனாற் செய்யப்பட்ட வனாசாரமனைத்துங் கண்டும் நீங்கள்

பொறுத்திருந்த புகழினால் நுஞ் சத்தியமுந் தன்ம விசேடமுஞ் சத்துருக்களுக்கு மிருத்துவாங்கண்டாய்; அதனா லிராச்சிய முற்றும் ஸ்ரீ வாசுதேவன் உங்கட்கே தருங்கண்டாய்; யானுனக்குச் செய்யத்தக்கன வென்கொலோ? எனக்கேட்டு யாது சொன்னான் தருமபுத்திரன்:-

479. வெலற்கரிய வாட்டானை நீநிற்க வெம்மால்
வெலற்கரிய வாம்விளம்ப வேண்டு-மலர்க்கமலச்
செந்தாது மீன் [1]கதுவத் தேனுகரு நன்னாடா
வெந்தாதை தாதா [2]வெமக்கு. (௨௬)

எ-து.- எம்பெருமான் நீ யிப் பெரும்படைக்குச் சேனாபதியா யிரக்ஷித்து நிற்க விப்பெரும்படை யிமையவர்க்கும் வெலற்கரிதாதலா னின்னை நாங்கள் வெல்லு முபாய மருளிச்செய்வாயா கென்று தருமபுத்திரன் சொல்லக்கேட்டு, ஸ்ரீ வீஷ்மன் சொல்லுவான்: பண்டென்னால் மறுக்கப்பட்டாளம்பை யென்பாளோர் கன்னிகை போய், வீஷ்மனுக்குச் சத்துருவாவே னென்று நெடுங்காலந் தபசு பண்ணி யெக்கியசேனனுக்கு மகளாய்த் தோன்றிப் புல்லிங்கமாயினாள்; சிகண்டிப் பேருடையா னாங்கவனை யிற்றைக்குப் பத்தரநாள் சமரபூமியிற் கொண்டுவந் தென்முன்பு காட்டின், அப்பொழுது அவனைக்கண் டாயுதம் போட்டு நிராயுதனாய் நிற்பேன்; நின்றபொழுது அருச்சுனன்கையி லடுசரங்களாற் றளர்ந்து விழுந் தவ்வுலகத்துக்குப் போவேன். அதுவுமன்றி, போர் பொருந் தேராட்களில் நானுந் துரோணாசரியனு மசுவத்தாமாவுங் கன்னனுஞ் சித்திரவித்தாரஞ் செய்ய வல்லோமாகிலும், அருச்சுனன் செய்யும் பிரகாரங்க ளெம்மாற் செய்ய வொண்ணா வென்று ஸ்ரீ வீஷ்மன் சொல்லக்கேட்டுத் தருமபுத்திரன் செவிபுதைத்து, உன்னைக் கொன்று வாழு மிராச்சியத்தினாற் பிரயோசனமில்லை யென்று மயங்க, அவனை நோக்கி ஸ்ரீ வீஷ்மன் பல வாக்கியங்களு மெடுத்துரைத்து, அருச்சுனனாவான் ஸ்ரீ கிருஷ்ணாமிச மாதலா லவன்கையிற் படுகை யெமக்கு மோக்ஷங் கண்டாய். நீங்களனைவரு மதற்கு விலாகா துடன் படுமென் றுடன்படுத்தி (ஸ்ரீ வீஷ்மன்) தருமபுத்திரனுக்கு விடைகொடுப்ப, அவனும் போய்த் துரோணாசாரியனைக் கண்டு நமஸ்கரிப்ப (த் தருமபுத்திரனை)க் கண்டு கலசயோனி சொல்லுவான்: திருதராஷ்டிரன் புத்திரரால் விளைந்த வநீதிமார்க்கத்தோடே முடியாநின்ற திந்த விரராச்சிய முற்று முங்கட்கே யாவதற்குச் சந்தேகமில்லை யென் றுரைப்பக்கேட்டு யாது சொன்னான் தருமபுத்திரன:-

(பா-ம்.) 1. கதுவித். 2. விரகு.

480. தக்க சரத்தாலுஞ் சாபத்தா லுங்கொல்லு
மிக்க திறலுடைய வேதியனே-தொக்கபுக
ழெம்பெருமா னிற்கவே யின்றிப் பெரும்படையை
யும்பர்தமால் வெல்லொணுமோ வுற்று. (உஎ)

*எ-து.- எம்பெருமா னின்றவிடத்துத் திரிமூர்த்திகளாலும் வெல்ல வொண்ணாதாதலால், தேவரீர் திவ்வியாஸ்திரங்களுக்குப் பின்னைச் செயிக்கும் பலமுடையா ரெங்களி லுண்டோ வென்றும், எங்களாற் செயிக்கப்படா தென்றுந் தருமபுத்திர னின்சொலுட னுரைப்பக்கேட்டு யாது சொன்னான் துரோணாசாரியன்:-*

481. என்மக னென்மு னிறந்தா னெனுமாற்ற
மன்னவையுட் கேட்பிக்க வல்லையேற்-பின்னை
யடலுகவா வென்றிண்டோ எம்புகவா வென்கை
யுடலுகவா வென்ற னுயிர். (உஅ)

*எ-து.- என் மக னசுவத்தாமா வென்னின் முன்னம் யுத்தபூமியிற் பட்டானென்னும் வார்த்தை யிராச சமூகத்தார் முன்னந் தருமபுத்திரன் வந்து சொல்லுமாகி லப்பொழுதே னாயுதம் போட்டு நிராயுதனாய் நிற்பே னென்று பின்னும் யாது சொன்னான் துரோணாசாரியன்:-*

482. இற்றைக்கு மூவைந்தா நாளி லிகலமருட்
கொற்றப்போர் மன்னவனே கூசாதே-வெற்றிகொளும்
பாஞ்சாலன் புத்திரன் கைப்படவே னென்றுரைத்தான்
றான்சாயு மாறே தரித்து. (உகூ)

*என்றிவ்வகை யிற்றைக்குப் பதினைந்தா நாளில் நீ யந்த வாக்கியஞ் சொன்னா லாயுதம்போட்டு நிராயுதனாய் நிற்பேன்; அவ்விடத்தி லெனக்குப் பகைவனாகிய பாஞ்சால புத்திரன் திட்டத்துய்மன் கையிற் படுவே னென்று சொல்லிப் பின்னும் பிரிய வாக்கியம் பலவுஞ் சொல்லித் தருமபுத்திரனுக்கு விடைகொடுப்ப, அவனை விடைகொண்டு போந்து தங்கள் மகா சேனைபுக்கார் தருமபுத்திரனு மருச்சுனனு மென்றவாறு. இப்பால், ஸ்ரீ வாசுதேவன் கன்னனிடைக்கே யிரகசியமாக வெழுந்தருளி யருளிச் செய்வான்-ஸ்ரீ வீஷ்மன் படைக்குச் சேனாபதியாய் நிற்க வுன்னாற் செய்யப்பட்ட பராக்கிரமங்களெல்லா மவனாற் செய்யப்பட்டனவாம் என்று பின்னும் யாதருளிச் செய்தான் ஸ்ரீ வாசுதேவன்-*

483. வன்றறுகண் வீரரையாம் வாளமருட் காணலா
மென்றவன்றா னன்றுரைத்த வின்னாச்சொ-[1]லொன்றலுமே

---

*(பா-ம்.) 1. என்றலுமே.*

**வில்லாண்மை [1]காட்டுவாள் வேத்தவையு ணன்றேநின்**
**வல்லாண்மை காட்டும் வழக்கு.** (௩௦)

எ-து.- நீ அதிரதரில் முன்றோன்றலாய் அஸ்திர சஸ்திரங்களுமுடைய வுன்னை யர்த்தரதரில் வைத்த ஸ்ரீ வீஷ்மன் சேனாபத்தியத்தின் கண் நின்ற உன் சவுரியங்களும் விசயங்களுங் காட்டினாயாயினும் அதுவும் ஸ்ரீ வீஷ்மனாற் செய்யப்பட்ட விசயமாங் கண்டாய்; ஆதலால் ஸ்ரீ வீஷ்மன் சேனாபத்தியத்தின் பின் நீ சேனாபதியாய் மஹா சேனையையு மிரக்ஷித்து நின்னுடைய பராக்கிரமங்களும் விசயங்களுந் தனி நின் றுன்காதற்றோழன் துரியோதனனுக்குக் காட்டுவதே பிராத்தியென வெமக்குத் தோன்றிற்று என்றும், அது நிற்க, உன்னை ஸ்ரீ வீஷ்மன் அர்த்தரதரில் வகுக்கப்பட்டது பரராஷ்டிரத்துச் சருவ க்ஷத்திரியரு மிது நீதிமார்க்க மன்றென்றும் வீரசவுரிய பங்கமாயிற்றே யங்கராசனுக்கென்று மிகழாநின்றார்; இது நீ சிறிது முணர்ந்திலை யென்றும், இதுவுனக்குத் தக்கதல்லவென்று மிவ்வகை யெல்லாஞ் சொல்லிப் பேதித்துப் பின்னு மிரகசியம் பலவு மருளிச்செய்து ஆங்கவனைப் பாடிவீடே விடுத்துப்போக்கி மீண்டும் போந்து அருச்சுனனைக் கண்டு கதிர்மணி நெடுந்தே ரேறி யுத்தத்துக் கொருப்படுவாயா கென்று தரும வீம நகுல சகாதேவரையு முடன்கொண்டு விற்படையைக் கைகவித்து வச்சிரநாபமென்னும் வியூகம் வகுத்துத் துரியோதனன் சேனையைச் சென்று தாக்கினாராகக் கருதுவது.

## அணி வகுப்பு முற்றும்

# உத்தியோக பருவ முற்றுப்பெற்றது

(பா-ம்.) 1. காட்டுவான் வேந்தவைளேன்றேநின்..... காட்டல் வழக்கு.

# வீடுமபருவம்

## முதனாட்போர்

484. தேனோங்கு சோலைத் திருவேங் கடமென்றும்
வானோங்கு சோலை மலையென்றுந்-தானோங்க
தென்னரங்க மென்றுந் திருவத்தி யூரென்றுஞ்
சொன்னவர்க்கு முண்டோ துயர். (க)

இவ்வகை சர்வஞானியாயுள்ள சகாதேவன் கடவுளை வாழ்த்தி ஸ்ரீ வாசுதேவனை நமஸ்கரிப்பப் பாண்டவரனைவரும் நமஸ்கரித்து அஸ்திரசஸ்திரங்களைத் தொழுதெடுத்து எல்லையில்லாததோர் பிரியமெய்தி யார்த்திட்டார்; அப்பொழுது இரண்டு திறத்து மகாசேனையும் யாங்ஙன முயுத்தம் பண்ணி னவோவெனில்:-

485. எண்டிசை [1]மன்ன வெழில்வா ளிளங்கதிரோன்
[2]கொண்டல் பொழிலேழ் குலவரையோ-டண்டர்பதி
முட்டப் பரந்ததே வின்னா ணொலிமுற்றும்
வட்டத் திகிரிசூழ் மண். (உ)

*இவ்வகை யெட்டுத்திசையுந் தலைபணிப்ப விரண்டுதிறத்து யுத்தவீரருந் தஞ் சிறுநாணெறிந்து யுத்தகோஷஞ்செய்தார். அவ்விடத் திரண்டு வேணைக்கடலுந் தம்மொடு தாக்கி யேன் றொருவர்மெலொருவ ருடன் றெழுந்தார். அப்பொழுது ஸ்ரீ வாசுதேவன் வடிக்கயிறு முட்கோலும் பிடித்துச் சுவேதாசுவங்களைத் தூண்டிக் கடுவிசையாற் றேரோட்டாநின்றான். அவ்வளவில் அதிகோபமெய்திக் கூற்றிரண்டு குறித்தெழுந்தாற்போல அருச்சுனனும் ஸ்ரீவீஷ்மனுந் தலைப்பெய்தார். வீமசேனனுந் துரியோதனனுந் தலைப்பெய்தார். தருமபுத்திரனுஞ்

---

(பா-ம்.) 1 மன்னனெழில் ; மன்னுமெழில். 2 கொண்டபொழில்.

* இவ்வுரையிற் சிலசொல்லும் வாக்கியமும் பிழைபட்டுக் கிடக்கின்றன வாயினும் இவ்வுரையுள்ள பிரதி ஒன்றுக்குமேற் கிடைக்காமையாலே ஒப்பிட்டுத் திருத்த வியலவில்லை.

சல்லியனுந் தலைப்பெய்தார். திட்டத்துய்மனுந் துரோணாசாரியனுந் தலைப்பெய்தார். சகாதேவனுஞ் சகுனியுந் தலைப்பெய்தார். அபிமன்னுவும் லக்ஷண குமாரனுந் தலைப்பெய்தார். விராடராசனும் பகதத்தனுந் தலைப்பெய்தார். நகுலனுந் துச்சாசனனுந் தலைப்பெய்தார். சுவேதனுஞ் சயத்திரதனுந் தலைப்பெய்தார். குந்திபோசனும் அசுவத்தாமாவுந் தலைப்பெய்தார். பாலகீசனுந் திருஷ்டகேதுவுந் தலைப்பெய்தார். விகர்னனும் உத்தமோசாவுந் தலைப்பெய்தார். விகந்தரனும் விஷசேனனுந் தலைப்பெய்தார். சாத்தகியும் பூரிச்சிரவாவுந் தலைப்பெய்தார். துருபதராசனும் அலம்புதனும் தலைப்பெய்தார். கைகயரர்சனுங் கிருபாசாரியனுந் தலைப்பெய்தார். உத்தரனுங் கிருதவர்மாவுந் தலைப்பெய்தார். கடோற்கசனும் வச்சிரசேனனுந் தலைப்பெய்தார். காம்போசராசனுஞ் சோமதத்தனுந் தலைப்பெய்தார். சிகண்டியுந் திரிகர்த்தராசனுந் தலைப்பெய்தார். பாண்டியராசனுங் கிருதவர்மாவுந் தலைப்பெய்தார். க்ஷத்திரதேவனும் மகதராசனுந் தலைப்பெய்தார். அலாயுதனும் புண்டரீகனுந் தலைப்பெய்தார். இவ்வகை மற்றொழிந்த வரசர்களோ டரசர்களும், காலிங்கரோடு காலிங்கரும், குண்டலரோடு குண்டலரும், மாளுவரோடு மாளுவரும், குலிந்தரோடு குலிந்தரும், சுரசேனரோடு சுரசேனரும், சுரராஷ்டிதரோடு சுரராஷ்டிதரும், மேகலரோடு மேகலரும், மதகரோடு மதகரும், பத்திரரோடு பத்திரரும், மீனவரோடு மீனவரும், பறமகரோடு பறமகரும், அளகரோடு அளகரும், பஞ்சகரோடு பஞ்சகரும், காந்தாரரோடு காந்தாரரும், கெதகரோடு கெதகரும், கருடரோடு கருடரும், இளவன்னரோடு இளவன்னரும், குச்சரரோடு குச்சரரும், நாராயண கோபாலரோடு நாராயண கோபாலரும், மிலேச்சரோடு மிலேச்சரும், காந்தாரரோடு காந்தாரரும், கவுசிகரோடு கவுசிகரும், விராடரோடு விராடரும், தசரதரோடு தசரதரும், சேதிபரோடு சோதிபரும், மகாமாநதரோடு மகாமாநதரும், துருக்கரோடு துருக்கரும், கன்னடரோடு கன்னடரும், ஒட்டியரோடு ஒட்டியரும், மற்றொழிந்தாரோ டொழிந்தாரும், ஒன்றொருபரோ டொன்றொருவர் சென்று தாக்கி நெருக்கலுற்றனர். அப்பொழுது தேருந் தேரும் எதிர்திளைத்தன. மாவு மாவும் மயக்குற்றன. களிறுங் களிறுங் கையுறுத்தன. வாளும் வாளும் வயவுற்றன. வேலும் வேலும் வேய்ப்புற்றன. சிலையுஞ் சிலையுஞ் சிதைவுற்றன. மழைபொழிந்தன சரபடலங்கள். மற்றுமுள்ள அஸ்திர சஸ்திரங்களா விருவிசும்பும் பொறி யெழுந்தன. இவ்வகை யிரண்டு திறத்து யுத்தவீரரும் எய்து மெறிந்து மார்த்திடுதலினா லாகாசமுஞ் சரபடலத்தான் மறைப்புண்டது. திரண்டெழுந்தது தூளிபடலம். சிறுனாணொலி திசாமுகங்கள் செவிடுபடச்சிலம்பின. அப்பொழுது, சத்திகளும் விட்டேறுகளுந் தண்டு பிண்டிபாலங்களும் பெருவச்சிராயுதமுந் தோமரங்களும் வேலும் வாளும் வில்லுங் குந்தமும் பாராவளையமும் முசுண்டியுஞ்

சூலமுங் கணிச்சியுந் தொல்படை யாவு மெதிரெதிர் திளைத்தன. விசும் பெரிபரந்தன. சேனைமுழுதும் போர்மலைந்தன. பொறிபறந்தது. அமரகணங்களு மாச்சரியப்பட்டன. ஆதித்திய மண்டலமுந் தூளிபடலத்தான் மறைப்புண்டது. ஆர்ப்பரவ மெழுந்திட்டது. சூரிய பணிலமுஞ் சுமுலபடகமுந் துளைததும பரிகலங்காட்டக் (?) கரதாளமு மணிமுரசும் பேரிகைகளும் மததளமுஞ் சல்லிகையுங் குடமுழாவுங் குலுங்க வார்த்து எம்மருங்கும் பஞ்சமகாசத்த முழங்க மகாயுத்தம் விளைந்திட்டது. உற்பாதம் பல தோன்றியிட்ட துருமுக்குர லொலிபோன்றது. இவ்வகை மகாகோஷமான திமிலயுத்தம் விளைந்திட்டது. அப்பொழுது,-

486. கங்கை [1]பெறுமகனைக் காமி னெனப்படைமுன்
வெங்கண் விடநாக மேந்தினான்-பொங்கொளித்தேர்
மாமானைத் தம்பியரை யுள்ளிட்ட மத்திரத்தார்
கோமானைச் சொன்னான் குறித்து. (ங)

எ-து.- அருச்சுனனோடும் பொருகின்ற ஸ்ரீ வீஷ்மனுக்குத் துணைசெய்யென்று துச்சாசனனையுந் துன்முகனையுஞ் சித்திராங்கனையுஞ் சித்திர சேனனையு முள்ளிட்டார் நாற்பத்தொன்பதின்மர் தம்பிமாரையும், சல்லியனையும், சகுனியையும் அதற்குத்தக்க வெத்தனையோராயிரங் கசதுரங்க பதாதிகளோடும் போகவிடுத்தான் துரியோதனன். அதுகண்டு தருமபுத்திரன் யாதுசெய்தான்:-

487. அங்கோ ரிளங்குமர ரைவரையு மாடொலிநீர்க்
கங்கை மகனோடுங் [2]காசினிப்போர்-பொங்கித்
தொடுத்தான் மணிநெடுந்தேர் சூழ்காமி னென்று
விடுத்தான் முரசுயர்த்த வேந்து. (ச)

எ-து.- ஸ்ரீ வீஷ்மனுக்குத் துணைபுகுந்தமைகண்டு, தருமபுத்திரனுமருச் சுனனுக்குத் துணையாகத் திட்டத் துய்மனையும், சாத்தகியையும், பூமிகுந்தனையும், அபிமன்னுவையும், வீமசேனனையும், எத்தனையோராயிர மானைதேர் குதிரை காலாட்களையு மனுப்ப, வந்து அருச்சுனனுக்கு முன்புகுந்து ஸ்ரீ வீஷ்மன்மேற் சீறி யெழுந்து யாதுசெய்தான் வீமசேனன்:-

488. நினைப்பரிய கூர்வாளி நீள்வரைத்தோள் வேந்தன்
பனைக்கொடிமேற் பன்னிரண்டு பாய்ச்சி-நுனைப்பகழி
யொன்பதுகொண் டாங்கவன்ற னொண் [3]கவசத் திற்புகுத்தி
முன்பதிர வெய்தான் முனிந்து. (ரு)

(பா-ம்.) 1. பெருமகனைக் காரார் கடற்படைமுன். 2. காசிகுபோர். 3. கவசத்திண்புறுத்தி.

இவ்வகை அவன் பனைக்கொடிமேற் பன்னிரண்டுங் கவசத்தின்மே லொன்பதும் பகழிபாய்ச்சி நான்கு சரத்தாற் காய்ந்தாரைக் கலக்குறுத்தித் தேருஞ் சிலையு மழித்துச் சிங்கநாதஞ் செய்தான் வாயுபுத்திரன் வீமசேனனென்றவாறு. அப்பொழுது அபிமன்னு யாதுசெய்தான்:-

489. பேரொலிநீர்க் கங்கை பெறுஞ்சிறுவன் றேர்பூண்ட
போரொலிமா நான்கினையும் பொன்றுவித்தான்-கூரிய
வேல்வண்ணன் போர்முகத்து வெவ்வாளி நான்கினான்
மால்வண்ணன் றங்கை மகன். (சா)

இவ்வகை ஸ்ரீ வீஷ்மன் தேர்பூண்ட நான்கினையும் அயில்வாயம் பினா லுயிர்வவ்வினா னபிமன்னு வென்றவாறு. ஒருபால்,-

490. மத்திரத்தார் கோமானு மச்சத்தார் கோன்மதலை
யுத்திரனுந் தம்பி லுடன்றெழுந்தா-ரத்திரங்க
ளொன்றொருவர் [1]விட்டாலவ் வொன்றொருவர் மேனியின்மேற்
சென்றுருவும் வண்ணஞ் செயிர்த்து. (ஏ)

*எ-து.-* மத்திர ராசன் சல்லியனுக்கும், மச்சராச னுத்தரனுக்கும் மகாயுத்தம் விளைந்திட்டது. அப்பொழுது மந்திர ராசன் படைமுழுது முத்தரனாற் கொல்லப்பட், சல்லியனையும் வில்லறுத்து மற்றவன்றேர்ப் புரவி நான்கினையுஞ் சாரதியையு முயிரகற்றித் துரியோதனன் சேனைமுழுதுந் துரத்திக்கொண்டு திரிகின்றான் விராடராசன் புத்திரனாகக் கருதுவது. அப்பொழுது மிகவு மிலச்சித்து யாதுசெய்தான் சல்லியன்:-

491. மெய்கொண் டெழுந்த வெகுளிக் கடுங்கூற்றைக்
கைகொண்டு சென்றவனைக் காயென்று-மெய்கொண்டு
விட்டானோர் வெள்வேல் விராடன் குலமதலை
பட்டானவ் வெள்வேல் பட. (அ)

*எ-து.-* முன்ன மழிந்துபோன சல்லியன் பின்னுமொருகால் வந்து தாக்கி யொரு திவ்வியமான வேலை உத்தரன்மேல் விட, அதுவு முத்தரன் மார்பகலம் பிளக்கப் பூதலத்தின்மேல் விழுந்தா னுத்தரனாகக் கருதுவது, அது கண்டு பாண்டவர்சேனை யிரிந்தோடிற்றறு. அவ்வளவி லதுகண்டு, அவன் சேட்டனாயினான் சுவேதன் தன் பிராதாவைக் கொன்று வீழ்த்த சல்லியன் மேற் றிசைநடுங்கத் தேர்கடாவிச் சென்று யாதுசெய்தான்: சுவேதன்-

(பா-ம்.) 1. விட்டாலுமொன்றொருவர்.

492. செம்பொனெடுந் தேரிற் சுவேதன் செருக்களத்துத்
தம்பி யவியத் தரியாதே-தம்பியைத்தான்
கொன்றாண்மே [1]னாட்செய்தான் கூற்றுவனைக் காலினால்
வென்றான்முன் னாட் [2]கொடுத்த வில். (௯)

இவ்வகை சுவேதன் சென்று சல்லியனோடுந் தாக்கி மற்றவனைக் காத்தபேரையெல்லாங் கொன்றுழக்காநின்றான்; அதுகண்டு துரியோதனனும் பயமெய்திச் செயசேனனையுஞ் செயத்திரதனையு முள்ளிட்டா ரறு பதினாயிரந் தேராட்களையுந் விடுத்துச் சல்லியனுக்குத் துணையாமினென்ன, அவர்களும்போய்ச் சல்லியனுக்கு முன்புகுந்து சுவேதன்மேற் சென்றார். அது கண்டு யாதுசெய்தான் சுவேதன்:-

493. அறுவர் சிறையினையு மாறிருகூ றாக்கிச்
சிறுபொழுதிற் சின்னங்கள் செய்தாங்-குறுபொழுதிற்
போர்வீரர் மாளப் பொருகணையாற் பொன்றுவித்தான்
றேர்வீரன் [3]மச்சர்கோன் சேய். (௧௦)

இவ்வகை மூடிக்கொண்ட தேரு மாவு மூரிவேழமுங் காலாளும் நொடி வரையிற் படமலைந்து, மற்றந்த மறமன்னரைத் தேருஞ்சிலையு மழித்து, அறுபதினாயிரந் தேராட்களையுங் கொன்று குவித்துச் சல்லியனையுந் தேருஞ் சிலையுமழித்துப் பதாதியாக்கிப் புறகிடுவித்து முரசுமுழக்கி யார்த்திட்டான் சுவேத னென்றவாறு. ஒருபரல்,-

494. கூரெயிற்று நாகக் கொடிகொண்ட கோமானைத்
தேரழித்த வீமன்மேற் சென்றூன்றிப்-பேரமரிற்
பல்படைநூ றாயிரவர் சூழ்ந்தார் பகட்டினமும்
வெல்படையுந் தேரும் விரைந்து. (௧௧)

எ-து.- முன்னமொரு தேரழிந்துபோன துரியோதனன் வந்து வீமசேனனுடனே தாக்கப் பன்னூறாயிரந் தேரும் பன்னூறாயிர மதஹஸ்தியும் பத்துநூறாயிரம் புரவியு முடன்சூழ்ந்துகொண்டு சரபடலஞ் சிந்தி வளைத்து மூடி யார்த்திட்டன. அப்பொழுது,-

495. மாவல்ல பாஞ்சாலன் மக்களுடன் மச்சத்தார்
காவலனுங் கார்வண்ணன் றம்பியரு-மேவலரு
மொய்த்து நுனைப்பகழி மூழ்கச் [4]செருவிளையா
மைத்துனனைத் தாக்கினார் வந்து. (௧௨)

(பா-ம்.) 1. நாட்செய்து கூற்றுவனுக் காக்கினான். 2. கெடுத்து. 3. மச்சத்தார் சேய். 4. சிலைவளையா.

எ-து.- தருமபுத்திரனால் விடுக்கப்பட்ட திட்டத்துய்மனுஞ் சிகண்டியுஞ் சாத்தகியுமுள்ளிட்ட தேராட்களும் வந்து வீமசேனனைச் சூழ்ந்து நின்றாரைத் தருக்குவித்துப் போர் மலைந்தார். அப்பொழுது யாது செய்தான் வீமசேனன்:-

496. போர்வயிரத் திண்டேரிற் போந்து பொருதடக்கைக்
கூர்வயிரத் தண்டேந்திக் கொண்டெழுந்து-தேரி
னுகம்பிளந்து தேர்பூண்ட நுண்பரிமாச் சாய
முகம்பிளந்தான் வீமன் முனிந்து. (கந)

எ-து.- முன்ன மூடிக்கொண்ட பெரும்படையைக் கைதுரந்து துரியோதனனைத் தாக்கித் தேருஞ் சிலையு மழித்து மற்றவனைக் காத்தாரைக் கொன்றுழக்கி யுருமேறெனத்திரிகின்ற வீமசேனனுக் காற்றாது நிலைகலங்கிச் சமர்மலை நீதிவிட்டு வீஷ்மத்துரோணர் நின்றாரிடைக்கே புகவிழுந்தது சேனையாகக் கருதுவது. ஒருபால், சல்லியனுக்குத் துணைபுகுந்து ஸ்ரீ வீஷ்மனுஞ் சுவேதனுந் தம்மி லுடன்று தாக்கி யாது செய்தாரோ வெனில்:-

497. பன்னொன்று கூறாகப் பத்து [1]வடிக்கணையால்
வென்னின்ற தோளானை வில்லறுத்தான்-மன்னர்
வெருவத்தேர் [2]புற்கொடியும் வெண்டுகிலும் விழ்த்தா
னிருபத்தே ழம்பினா லெய்து. (கச)

எ-து.- ஸ்ரீ வீஷ்மனைத் தேருஞ் சிலையுங் கொடியுமறுத்து மற்றவனைக் காத்தாரையெல்லாங் கொன்றுவீழ்த்து உருமேறென்னத் திரிந் தார்த்துக்கொண்டான் சுவேதன். அப்பொழுது யாவருஞ் செய்வதறியாது, ஒரு விசயஞ்செய்தான் சுவேத னெனப்பேசித் தேவசாதிகளு மாச்சரியப்பட்டாராகக் கருதுவது. இவ்வகைப்பட்டு மிகவு மிலச்சித்துப் பின்னும் யாது செய்தான் ஸ்ரீ வீஷ்மன்:-

498. அற்ற [3]சிலையானு மவ்வளவி லாங்கேயோர்
வெற்றிச் சிலையை வெகுண்டெடுத்தான்-மற்றதனை
யீரைந்து கூறாக வெய்தா னெழிற்பகழி
யோரைந்து நான்கு முடன்று. (கரு)

எ-து.- ஸ்ரீ வீஷ்மன் விளிந்தெழுந் திரண்டாவது போர்மலைந்து (தேருஞ்சிலையுமழிந்து ஏழம்பினா லெட்டுக் கண்டமாக்கிக் கொடியுமற்றுப் பூதலத்து வீழச் சாரதியையுந் தேர்ப்புரவி நான்கினையும் வீழ்த்தி) புறகிட்டா னென்றவாறு. அப்பொழுது ஸ்ரீ வீஷ்மனுக்குத் துணைசெய்வதாக விகன்னனையுஞ் செயசேனனையு

(பா-ம்.) 1. வடிகணை. 2. வெல்கொடியும். 3. சிலையாள னவ்.

முள்ளிட்டார் முப்பத் தொன்பதின்மர் தம்பிமாரைத் துரியோதனன் விடுப்ப, மற்றவரும் வந்து சுவேதனை வளைத்து மூடித் திளைத்துரப்பிச் சரமாரி பொழிந்து போர்மலையாநின்றார். அப்பொழுது மகாவேகமெய்திப் பின்னும் யாதுசெய்தான் சுவேதன்:-

499. தேரிழந்து மாவிழந்து செம்பொற் [1]சிலையிழந்து
போரிழந்து நாணிப் புறகிட்டான்-மூரிப்
படுகணைகள் சிந்தப் படருநீர் நாடன்
சுடுகணைக டூர்ப்பச் சுளித்து. (கசா)

எ-து.- துரியோதனனால் விடுக்கப்பட்ட தேராட்களுந் தம்பிமாருங் கச துரங்க பலத்தோடுஞ் சென்று சேர ஸ்ரீ வீஷ்மன் சுவேதனோடே தாக்கி மகாயுத்தம் விளைத்த விடத்துச் சுவேத னபசயப்பட்டுக் கசதுரங்க பதாதிகளோடும் பார்மன்னர் களத்தவியத் தாங்கற்கரிய ஸ்ரீ வீஷ்மனை மூன்றாவது தேருஞ் சிலையு மழிக்க அழிப்புண்டு பட்டுப்படாத சேனையுடன் புறகிட்டு நிலையாற்றாது தளர்கின்றானைக் கண்டு துரியோதனன் பின்னையுஞ் சில தேராட்களை விடுப்ப மற்றவரும் ஸ்ரீ வீஷ்மனுக்குத் துணை புகுந்து சுவேதனோடும் வந்துதாக்கி மகாகோஷஞ்செய்து அகோரயுத்தம் விளைத்திட்டா ரப்பொழுது. **இவ்வகை வீஷ்ம துரோணரும் கண்டு நிற்கவே யாங்கவர்களுடன் வந்த மகாசேனையைப் போர்மலைந்து போகத்துரத்தித் தேர்வேந்த ரிருவர் சிலையினையு மறுத்து ஆங்கவரைக் கைவிட்டுத் துரியோதனாதிகண்மேலே போயினான் வீமசேன னென்றவாறு. ஒருபால் யாது செய்தான் சுவேதன்:-

500. அறுவர் சிலைதுணித்தாங் காரமருள் வீழ்த்திட
டறுவ ருடறலைவே றாக்கி-யறுவ
ருதிரக் குருதியா றொண்கடல்போன் மண்ட
வதிரப்போர் செய்தா னவன்.. (கஎ)

இவ்வகை பொருது குருதிப்புனல் பெருகிட நிணம் வீழப் பிணமிதப்பப் போர்க்கள முழுதும் பரந்து நின்ற க்ஷத்திரியக் கூட்டத்தினையும் யானைதேர் குதிரைகளையும் காலாட்களையு நொடிவரையிற்படமலைந்து பெருந்தே ராட்களில் சேனாபதியாகி நின்ற ஸ்ரீ வீஷ்மனையுந் தேருஞ் சிலையுங் கொடியுமறுத்துப் பெரும்படையைக் கைதுரந்து உருமேறென்ன வுடன்று சிங்கநாதஞ்செய்த எதிர்மலைவாரை யின்றிக் களமுழுதுந் தேர்கடாவித் திரியா நின்றான் மச்சராசன் சுவேதன்.. இவனைக்கண் டாற்றாது மகாசேனை யுடைந்துபோக, போகாது லச்சித்துப் பெருங்காற்று

(பா-ம்.) 1 கொடியிழந்து.

** இவ்விடத்து ஒரு பாட்டு விடுபட்டிருக்கவேணுந், தோற்றுகிறது.

ளகப்பட்ட மகாவிருக்ஷம்போல நிலையாற்றாது கலங்கி நின்று சுவேதனை மாளப்பொருமாறு கருதி வியாகுலத்தோடு நின்றான் ஸ்ரீ வீஷ்ம னென்றவாறு. இவ்வகை யாவராலுஞ் செயற்கரியதோர் விசயத்தினால் நாலுபிரகாரமாகச் சுவேதனா லபசயப்பட்டச் சினங்கன்றி நின்ற ஸ்ரீ வீமனைக்கண்டு தேவசாதிகளு மதிசயப்பட்டுத் தேவேந்திரனை நோக்கிச் சொல்லுவார்: இவன் முன்னம் சொர்க்கவாசியாய் வாழுங்காலத்து அஷ்டவசுக்களிட்ட சாபத்தினால் மண்ணகத்து விராடராசனுக்கு மகனாய்த்தோன்றிச் சுவேதனென்று நாமகரணந் தரிக்கப்பட்டான்; இவனுமினிச் சொர்க்க மெய்துகைக்கு நாளாயிற்று; இனி யிவனைக் கொல்லுமுபாய மருளிச்செய்யவேண்டும் என்று சொல்ல, தேவேந்திரனும் அங்ஙனமே சிந்தித்திருப்ப, அக்காலத்துத் தானல்லாதுபோலத் தன் திவ்விய சத்தியினா வசரீரியாகச் சென்று யாதருளிச்செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-

501. ஆடரவம் பூண்ட வரனார்தம் பாற்பெற்றுக்
கூடமருள் வெல்லுங் கொடுஞ்சிலையா-னோடேநீ
வல்லாண்மை செய்யில் வலிதொலையான் வஞ்சனையால்
வில்லாண்மை யோடொழிய வெல். (கூ௦)

எ-து.- பரமேசுவரனால் வரப்பிரசாதம் பெற்றுத் தனுவுந் திவ்வியாஸ்திரங்களு முடையவனை யாவராலும் வெல்லவொண்ணா தாதலால், அவனை வில்லொழிய வேறாயுதங்களான் மலைந்து கொல்லுவீர்; இதுவே யுபாயமென் றருளிச்செய்யக் கேட்டுத் தேவேந்திரனு மசரீரியாகச் சென்று சமரபூமியில் நின்ற ஸ்ரீ வீஷ்மனுக்கு யாதுசென்னானோ வெனில்:-

502. வஞ்சனையாற் கொல்லிவனை [1]வாள்வேந்தே மற்றிவன்கை
வெஞ்சிலையுண் டாக வெலப்படா-னஞ் [2]சுடர்கண்
மின்னுயிர்க்கும் வெவ்வேல் விராடன் குலமதலை
யின் [3]னுயிர்க்குங் கால மிது. (கூக)

எ-து.- சுவேத னினியொருநாழிகை சிலைகொண்டு யுத்தம் பண்ணுமாகில் உங்கள் மகாசேனை முழுதுங் கொன்றுவிடுங்கண்டாய்; ஆதலால் இவனை வஞ்சனையாற் சிலைபோடுவித்து வேறோராயுதம் பிடிக்கப்பண்ணிக் கொல்லுவீராமின் என் றமரேந்திர னசரீரியாய்ச் சொல்லக்கேட்டு யாது சொல்லி யாதுசெய்தான் ஸ்ரீ வீஷ்மன்:-

503. அப்படியே செய்வேனென் றங்கே சிலைவைத்துச்
செப்பரிய மன்னன் [4]றிறமழிக்க-வொப்பிலாக்

(பா-ம்.) 1. வாழ்வேந்தே. 2. சுடரின், மின்னுயிர்க்கும் வெள்வேல். 3. உயிர்க்குக் காலம். 4. திறலழிப்ப.

கங்கைமகன் வாள்கொண்டு கட்டாண்மை செய்தானே
பொங்கமரு ளாங்கே புகுந்து. (உ0)

*எ-து.- தேவர்கள் சொன்ன வாக்கியங் கேட்டுச் சுவேதனோடும் பொருகின்ற ஸ்ரீ வீஷ்மன் கதுமெனத் தன் சிலையினைவைத்து வாளும் வேலுந் தண்டும் பிண்டிபாலத் தொடக்கத்துச் சுருவாயுதங்களும் வழங்காநிற்ப, ஆங்கதற்குத் துளங்காது நின்ற சுவேதனை நோக்கி யாது சொன்னான் ஸ்ரீ வீஷ்மன்:-*

504. வெற்றிச் சிலையல்லா னின்னை விறற்படைகண்
மற்றும் பயிற்றி வளர்த்திலனோ-கொற்றப்
படைவேந்த னுன்றதை பைந்தார் விராடன்
குடைவேந்தன் மச்சத்தார் கோ. (உக)

*எ-து.- நின்னை யுன் றாதை விராடராசன் வில்லாயுதமொழிய மற்றாயுதங்க ளொன்றுங் கற்பித்திலனோ வென்று ஸ்ரீ வீஷ்மன் வினவக்கேட்டு யாதுசொல்லி யாதுசெய்தான் சுவேதன்:-*

505. வெஞ்சிலையே யன்று விராடன் பயிற்றியதென்
றஞ்சுரிகை வாங்கி யதிர்த்துரப்பி-வெஞ்சமத்துப்
பல்லா யுதமும் பயின்றேன் பனைக்கொடியாய்
சொல்லாயென் றானே சுளித்து. (உஉ)

*அன்றியும்,*

506. கையாற் சிலையெறிந்து காலாளாய்த் தேரிழிந்து
மெய்யாற் செயிர்த்து மிகநோக்கி-வையாப் போய்
வாள்வலக் கைக்கொண்டான் வந்தெதிர்ந்தான் [1]மன்னவன் முன்
னாளுலக்கப் புக்கா னடந்து. (உங)

*இவ்வகை தன் கடவுட் சிலையினைத் தேர்த்தட்டின்மே லெறிந்து வெவ்வுரைகள் பலபேசிப் பலவாயுதமும் பயின்றே னென வாளெடுத்துத் தேரினின் றிழியப் பாய்ந்து வருகின்ற சவேதனைக் கண்டு யாதுசெய்தான் ஸ்ரீ வீஷ்மன்:-*

507. மன்னர் நிலைகலங்க வாளேந்திச் சென்றானைச்
சின்னஞ் சிலபடுத்திச் சென்றெய்தித்-துன்னியதோர்
தோளுங் கடகந் துணியச் [2]சுரந்தொட்டான்
வாளொண்கைக் கங்கை மகன். (உச)

*அன்றியும்,*

(பா-ம்.) *1. மன்னவர்மு, னாளுலக்கை. 2. சரந்தொடுத்தான்.*

508. வானவர்கோன் சொற்படியே வாள்கொண் டெதிர்பொருதான்
சேனை கலங்கத் திசைநடுங்கத்-தானவனாய்
[1]வாளேந்தி வந்தான் வலக்கையற வெய்தானே
கோளேந்து மன்னன் கொதித்து. (உரு)

*எ-து.- இவ்வகை வாள்கொண்ட வலக்கையினைக் கூர்துனைப் பகழி யொன்றினாலே கூறுசெய்த ஸ்ரீ வீஷ்மனைக் கண்டிடக்கையில் வாள்வாங்கியாது செய்தான் சுவேதன்:-*

509. சென்று நடுங்கியிடத் தெய்வப் படைதெரிந்து
நின்றவனை நோக்கி நெடுவரையிற்-சென்றவனைக்
கொல்லென் றுயிர்நோக்கி விட்டான் கொடுஞ்சுடர் [2]வா
ணில்லென்று சென்றதே நேர்ந்து. (உசா)

*இவ்வகை வெகுண்டெறிந்த வாள்கண்டு யாதுசெய்தான் ஸ்ரீவீஷ்மன்:-*

510. சென்று திசைவணங்கத் தெய்வப் படைநினைந்து
துன்று நெடுஞ்சிலைநாண் டோளலைப்ப-நன்றுலகின்
மன்னுயிரைத் தான்படைத்தான் மந்திரத்தான் மற்றவன்ற
னின்னுயிரைப் போக்கினா னெய்து. (உஎ)

511. திசைநடுங்கத் தெய்வப் படைதெரிந்து சென்றிங்
கிகலவனைக் கொல்லென் றுரைக்கும்-வகை [3]தெரிந்து
சென்றுய்ப்பான் போலச் செழுஞ்சுடர்வே லொன்றினாற்
கொன்றடர்த்தா னப்பொழுதே கூர்ந்து. (உஅ)

*இவ்வகையினாற் பெரு நெடுந் தேர்மேனின் றிழியப்பாய்ந்து மிருத்து வேபோல வாளுருவிக்கொண்டு பாராநின்ற சுவேதனைத் தன்னுடைய பிரமாஸ்திரத்தாற் கொன்றான் ஸ்ரீ வீஷ்மன் என்றவாறு. (சுவேதன் பாடு.) இவ்கை பட்டுச் சுவேதன் வீழ்தலும் திருதராஷ்டிரன் சேனையென்னும் மகாப்பிரளயம் ஆர்த்தெழுந்தது; அழிந்திட்டது பாண்டவர் சேனை. அவ்விடத்து,*

512. மக்க ளிருவரையு மச்சர்கோன் றானிழந்த
துக்க மதுகண்டு சோர்வான்போன்-மிக்க
தடவரைமே [4]னின்ற தழற்கதிரோன் மன்னுங்
குடகடன்மேல் வீழ்ந்தான் கொதித்து. (உகூ)

*இவ்வகை ஆதித்திய பகவான் அஸ்தமன பருவதஞ் சேரப் படையிரண்டுங் கைவாங்கித் தம் பாடிவீடு புக்காராகக் கருதுவது.*

---

*(பா-ம்.) 1. வாளேந்திச் சென்றான். 2. வா னில்லென்று. 3. செறிந்து. 4. நின்று தழற்கதிரோன் றானுங்.*

513. பெரங்கமர்செய் தாங்கமரர் போயினார் பொன்னுலகத்
தெங்கு மிருக்க விடம்பெறார்-தங்கள்
[1]கருத்தமர முற்றிக் கலிவானஞ் சேர்ந்தார்
விருத்தரச ரெல்லா மிடைந்து. (௫௦)

*இது யமலோகத்தில் விசேடம்.*

முதனாட்போர் முற்றும்

## இரண்டாநாட் போர்

*அன்று கழித்த மற்றைஞான்று யாதுநிகழ்ந்ததோ வெனில்:-*

514. நீலமே காரின் முகிலே நெடுங்கடலின்
கோலமே யத்திகிரிக் கோமானே-மூலமென
[2]மாத்தா மரைமடுவின் மால்யானை யோலமிடக்
காத்தாய் கடைபோகக் கா. (௧)

*என்றிவ்வகை கடவுளை வாழ்த்தி யாது செய்தார் பார்வேந்தர்:-*

515. குடகடலிற் பாய்ந்தொளித்த வெய்யோன் குணபா
விடையிடையே செம்பொன்செய் தென்னப்-புடைவிரவும்
பொன்னெடுந்தே ரேறினா னவ்வளவிற் போர்மன்னர்
தந்நெடுந்தே ரேறினார் தாம். (௨)

*இவ்வகை ஆதித்திய னுதிக்குமளவில் யாது செய்தருளினான் ஸ்ரீ வாசுதேவன்:-*

516. பால்வளைக்கு மின்சொற் பவளவாய்ப் பாஞ்சாலி
தோல்வளைக்கு முன்பிறந்த கோமானை-மேவிக்
கதிர்ப்பட்ட வாட்டானைக் காவலர்க்குச் சேனா
பதிப்பட்டஞ் சேர்த்தினான் பார்த்து. (௩)

*அன்றியும்,*

517. பாண்டவர்கள் மைத்துனனைப் பாஞ்சாலர் கோமானை
யாண்டகையைச் சேனா பதியாக்கி-மூண்டெழுந்த
போர்வீர ராங்கன் பொருபடையுங் கொண்டணைந்தான்
கார்மேக வண்ணன் களத்து. (௪)

*எ-து.- திட்டத்துய்மனைச் சேனாபத்தியங் கட்டித் தருமபுத்திரன் சேனையை இரக்ஷிப்பானாகக் கொண்டு சமரபூமி புகுந்து*

---

(பா-ம்.) *1. கருத்தமரின். 2. மாத்தா மடுவின் மதயானை.*

யூகங் கட்டாநின்றார். அப்பொழுது, தங்கள் படைநிலை புகுந்து சஞ்சயனும் சோமகரும் சிகண்டியுங் உத்தமோசாவும் உதார்மனும் சேதிகாரனு முள்ளிட்ட வெத்தனையோராயிரம் பாஞ்சாலரோடும் பதினாயிரந் தேர் கொண்டு துருபதராசன் தலையாகவும், தசரதரும் குந்திபோசனும் துமகரும் சீனகரும் சோனகரு முள்ளிட்டாரோடும் எண்பதினாயிரந் தேர்கொண்டு நகுலன் அதுக்குக் கழுத்தாகவும், விராடராசனும் சதானிகனும் திருஷ்டகேதுவும் சலந்தரராசனும் சேர சோழ பாண்டியத் தொடக்கத்தாரும் உள்ளிட்ட பல பதினாயிர மரசர்களொடும் எழுபதினாயிரந் தேரும் இருபதினாயிர மதகரியும் பண்ணூறாயிரம் புரவியு முடன்கொண்டு பீமசேனன் தக்ஷின பக்ஷமாகவும், அஸ்திரகரும் மதங்களும் மாளுவரும் குச்சரரும் மகுடவர்த்தனரு முள்ளிட்ட எத்தனையோ ராயிர மரசர்களோடு முப்பதினாயிரந் தேரும் பதினையாயிரம் யானையும் அறுபதினாயிரம் புரவியு முடன்கொண்டு நூறாயிரந் தேராட்களுடன் சகாதேவன் வாமபக்ஷமாகவும், கேகயரும் மாகதருமமகாமாகதரும் தசார்ணரும் இலாடரு முள்ளிட்ட சர்வ க்ஷத்திரியரும் நூறாயிரந் தேராட்களுடன் கொண்டு தருமபுத்திரன் வயிறாகவும், சோமகரும் காம்போசராசனும் கலிங்கரும் திரிகர்த்த ராஜனும் சேதிபரும் செயவீரரு முள்ளிட்ட இராசகுமாரரும் நூறாயிரம் யானையும் எழுபதினாயிரம் புரவியும் இருபதினாயிரந் தேரும் இரண்டு நூறாயிரம் பதாதிகளும் உடன்கொண்டு கடோற்கசன் வாலாகவும், அருச்சுனனும் அபிமன்னுவும் அஞ்சனவர்மாவும் மற்றுமுள்ள யுத்தவீரரும் அதற்குத் துண்டமாகவும் இவ்வகை யானை தேர் குதிரை காலாளுடன் கலந்து நிறுத்திச் சங்கபடலங் கடல் முழங்க எம்மருங்குஞ் சேனை யிரைந்தார்ப்பக் கிரவுஞ்சமென்னும் வியூகம் வகுத்துநின்றார் ஸ்ரீ வாசுதேவனுந் திட்டத்துய் மனுமாகக் கருதுவது. இப்பால் துரியோதனன் பெருஞ்சேனையை மகர மென்னும் வியூகம் வகுத்து நின்றான் ஸ்ரீவீஷ்மனாகக் கருதுவது. இவ்வகை நின்றவிடத்து இரண்டுபடையும் ஆர்த்தெழுந்து தம்மொடுதாந் தலைப்பெய்து நிற்க யாது நிகழ்ந்ததோ வெனில்:-

518. குடகடன்மிக் கோடிக் குணகடன்மேற் பாய்ந்தங்
கடல்கருதி யார்த்தெழுந்த தென்னப்-புடைகமழும்
வார்கடா யானையான் மன்னர்மேற் சென்றதே
பார்கொடா வேந்தன் படை. (ரு)

இவ்வகை யிரண்டு படையுந் தலைப்பெய்து மிக்கெழுந்த கோபாக்கி னியுடன் ஒருவரோடொருவர் தாக்கினர்: பதாதியோடு பதாதி தாக்கினர்; தேரோடு தேர் திளைத்தன; மாவொடு மா மயக்குற்றன; வாளொடு வாள் வகைதிரிந்தன. அப்பொழுது, உற்பாதம் பலவெழுந்தன. காலொடு கால் துணிந்தன; தோளொடு தோள் துணிந்தன; முடியொடு

முடி புரண்டன; குடலொடு நிணம் விழுந்தன; குடையொடு குடை சாய்ந்தன; பரியொடு பரி புரண்டன; தேரோடு தேர் சிதைந்தன; குறைத்தலைகள் கூத்தாடின; காகங்கள் கலந்தார்த்தன; ஓரிக்குரல் பெருகியிட்டது; குருதிப் புனல் குமிழிவிட்டது; வீரஸ்ரீ பொலிந்து தோன்றினள்; அத்திர சத்திரத்தாற் றிசைமறைந்தது; சண்டமாருதஞ் சுழித்தடித்தது. ஆங்கு,-

519. மாரியது கூந்தன் மறித்தடிக்க மாமழையின்
றாரை தடுமாறிச் சாய்வதுபோற்-பாரி
னெதிரெதிரின் விண்புதைய வோடிற்றே யெங்கு
மதிரதரின் வில்லுதைத்த வம்பு. (சா)

ஒருபால்,-

520. வேதியரின் மிக்கானும் வீங்கொலிநீர்ப் பாஞ்சாலர்
காதலனு மேர்கண்ணி கட்டினார்-மீதிட்
டொலிபரவ மாக்களத்தி லோரிரண்டு தம்மிற்
புலிபோ லெதிர்மலைந்தார் போந்து. (எ)

521. ஒண்சிலையு நான்மறையும் வல்லா னுடனெய்யத்
திண்சிலையுந் தேருஞ் சிதைப்புண்டான்-றிண்சிலையைக்
கால்வளைத்த மன்னவரைக் கைச்சிலையின் மோதுவித்த
கோல்வளைக்கு முன்பிறந்த கோ. (அ)

இவ்வகை துரோணாசாரியனால் திட்டத்துய்மன் தேருஞ் சிலையும் அழிப்புண்டு தளர்ந்துபோகலும், அதுகண்டு வீமசேனன் இடைபுகுந்து துரோணாசாரியனை யெதிர்மலையக் கண்டு மற்று அவற்குத் துணையாகக் காலிங்கராசனும் பல பதினாயிரம் யானையும் வந்து வீமசேனனைச் சூழ்ந்து கொண்டு சரவருஷஞ் சொரிந்திட்டார். அதுகண்டு வீமசேனன் யாது செய்தான்:-

522. கன்றி யுடன்றெழுந்த காலிங்கன் மால்யானை
யொன்றுகொண் டொன்றி னுடன்புடையா-வென்றி
புரிந்தார் படையிரியப் போர்க்களத்தை முற்றுந்
திரிந்தான் வெறுங்கையே சென்று. (கூ)

523. மல்ல னெடும்பண்ணை மாக்கொடியான் றானின்ற
வெல்லை யளவு மிரிந்ததே-தொல்லைமிக
வாலிங் கவன்செய்ய வஞ்சிப் புறகிட்ட
காலிங்கர் சேனைக் கடல். (கo)

எ-து.- முன்னம் பட்டுப்படாத காலிங்கர் சென்று வீஷ்மனிடைக்குச் சேருதலும், அதுகண்டு, பீஷ்மன் தன்மேற்செல்லப் பின்னும் வெகுண்டு யாதுசெய்தான் பீமசேனன்:-

524. விசையநெடுந் தேரான் வெகுண்டெறிந்த வெவ்வே
நிசைநடுங்கச் செல்வதனைக் கண்டு-நசையினாற்
சுந்தரத்தேர் வல்லானோர் தோமரத்தா லங்கதனை
யந்தரத்தே வீழ்த்தா னறுத்து. (௯௯)

525. பனைக்கொடியின் மேலும் பரிக்குலத்தின் மேலும்
வெலற்கரிய வின்னாணின் மேலு-மலர்க்கரத்தாற்
பொன்மாரி யன்ன பொருகணைகள் சிந்தினான்
வின்மாரி யன்னான் வெகுண்டு. (௯௨)

*அப்போது பீஷ்மன் செய்தது:-*

526. குணவாரி யன்னான் கொதித்தெழுந்து வெய்ய
கணைமாரி சிந்தினான் கார்போற்-கணைமாரி
யொன்பதுகொண் டெய்தா னுயர்தேர் பரியதனை
யொன்பதுகொண் டெய்தா னுடன்று. (௯௩)

527. அழிப்புண்ட தேர்மிசைநின் றாடெழிற்றோள் வீம
னெழிற்றண்டு கொண்டிழியப் பாய்ந்து-வழித்தந்தை
வெற்றித்தே ரூர்வானை வீழப் புடைத்தார்த்தான்
மற்றத்தேர் சிந்த மலைந்து. (௯௪)

*ஒருபால்,-*

528. அரவக் கொடியான் மகனை யபிமன்
விரவிச் சிலையறுத்து வீழ்வித்-திரியச்
சரமாரி தூவித் தளர்வித்தான் வானில்
வருமாரி மேகம்போல் வந்து. (௯௫)

*அதுகண்டு துரியோதனனா லேவப்பட்டு நால்வகைச் சேனையுமுடன் கொண்டு விகன்னனும் விருஷசேனனும் அசுவத்தாமாவும் சென்று லக்ஷனகுமாரனைத் தாங்கி அவற்குமுன் புகுந்து விரைந்து தேர்கடாவி அபிமன்னுவைச் சூழ்ந்துகொண்டு சரவருஷஞ்சொரிய, அபிமன்னு யாது செய்தானோவெனில்:-*

529. சென்றேன்ற பார்வேந்தர் தேர்மேலு மாமேலுந்
தன்றேருந் தன்சரமுந் தாக்கினா-னின்ற
விறற்களிறே யன்னான் விரைந்தவர்க ளெல்லாம்
பகற்கணமே மாளும் படி. (௯௬)

*எ-து.- திருதராஷ்டிர மகாசேனை யெல்லாம் இற்றைப்பொழுதெல்லையில் மாண்டதுகொல் என்று அமரகணங்கள் ஆச்சரியப்படப் பல பதினாயிரங் களிறுந் தேரும் பாய்மாவுங் களத்தவியக் கொன்று யுத்தபூமியில் மகாவாயு திரிவதாமெனத் தேரோட்டாநின்ற*

அபிமன்னுவின் யுத்தங்காணு மாசையினால் அருச்சுனன்றேர் கதுமென வருதலும், அதுகண்டு துரியோதனன் மகாசேனை யாதுசெய்ததோ வெனில்:-

530. கார்வரையைச் சூழ்ந்த பனிமேகங் காய்கதிரோன்
றேர்வரவு கண்டங்கு சிந்தினபோன்-மூரி
வரிசிலைக்கைப் பார்த்தன் மணிநெடுந்தேர் காணக்
குருசிலைக்கைக் கொண்டார் குழாம். (கஎ)

531. காய்பரித்தேர் மன்னர் களிறு பிளிறிவரப்
போர்பரித்தே ரானைப் புறகிட்டார்-மீதிரையிற்
பாயுங் கடற்சென் றமுங்கப் பகலவன்போய்
மாயுங் கடற்சென்றான் மற்று. (கஅ)

இரண்டாநாட்போர் முற்றும்

*****

## மூன்றாநாட்போர்

### கடவுள் வாழ்த்து

532. மாண்ட பொழுதுன் மலரடிகள் வந்தடியேன்
றீண்டும் படியுன் றிருவருளான்-மூண்டமரி
லொன்னா ருடைய வொளிவளைவாய் வைத்தூது
மன்னா தருவாய் வரம். (க)

533. காரிருளு மெய்யன்பாற் கைதவம்போற் கட்டிரியப்
போர்புரிந்த மன்னர் புலர்ந்தார்ப்பத்-தேரின்மிசை
யேறினான் வெய்யோ னிளங்கதிர்கள் விட்டுத்தே
ரேறினார் மன்னரெல்லாந் தேர்ந்து. (உ)

அப்போது,-

534. பார்குறித்த மன்னர் படையிரண்டு மூன்றாநாட்
போர்குறித்து வந்து புகுந்தனவே-வீரர்
கணக்கிறந்த மால்யானைக் காவலர்க் ளெல்லா
நிணக்குழம்பாய் வீழ்ந்த நிலத்து. (௩)

எ-து.- மூன்றாநாள் இரண்டு படையும் பள்ளியெழுந்து யுத்தபூமி புகுந்தபொழுது, துரியோதனன் சேனையைக் கருடவியூகமாக வகுத்து நின்றான் வீஷ்மன். அப்பொழுது இரண்டுபடையும் வந்து தம்மொடுதாந் தலைப்பெய்ய, எழுந்தியம்பின சங்கபடலம்; திரண்டெழுந்தது நேமிகோஷம்; சரவருஷத்தாற் றிசைமறைந்தது; ஆகாசமதிர்ந்தது; தூளிபடல மிரண்டு சேனைகளையும் மறைத்திட்டது.

அவ்விடத்துத் துரோணாசாரியனும் பல பதினாயிரம் க்ஷத்திரியரோடு மார்த்தெழுந்து அருச்சுனனை வளைத்து மூடிக் கொண்டான். அப்பொழுது,-

535. கோனுந்தன் றம்பியருங் கோளரியே றேந்தினான்
றானின்ற கைமேலே தாக்கினான்-வானஞ்ச
நீடு சிலைவளையா வெய்தா னெடும்பகழி
கூடும் படையைக் குறித்து. (௪)

ஒருபால்,-

536. கடும்பகழி யொன்று கருத்தமைய வாங்கி
யிடும்பி குலமதலை யெய்தான்-கொடுந்தகையைக்
கேணாகந் தேர்மேற் கொடிகொண்ட கோமானைப்
[1]பூணாகத் துள்ளழுந்தப் புக்கு. (௫)

537. போர்வாளி மற்றவன்மேற் பாயப் புனைநெடுந்தே
ரூர்வானை வேலா லுயிர்வவ்வி-சீர்மதுரைத்
தென்னற்கை மந்நாரை தானணிதற் காரணமாய்
மன்னர்க்கை வென்றான் மகன். (௬)

எ-து.- முன்னமொரு சரத்தாற் கவசம் பிளப்புண்டு மயங்கி வீழ்ந்தானவன் றேர்ப்பாகனையுங் கொன்று புரவி நான்கினையு முயிர்வவ்வி, அத்துரியோதனனையுங் கைப்பிடியே பிடிக்கக் கருதுகின்ற கடோற்கசனைக்கண்டு, விசையாற் றேரோட்டி வீஷ்மன் சென்றக் கடோற்கசனைத் துரந்து துரியோதனனை யெடுத்துத் தன்றேர்மிசை யிட்டுக்கொண்டு போந்து, மிகவுமயங்காநின்றானை முயஸ்தி யென்பதோ ரவுஷதங் கொடுத்து அவனைத் தேற்றிப் போகவிடுத்து, தானு மூண்டெழுந்த கோபாக்கினியாற் சத்துரு பக்ஷத்தார்மேற் றேர் கடாவிச் சென்று யாது செய்தானெனில்:-

538. பொங்கெழிற்றே ரான்மன்னர் போர்க்களத்தே முற்றிவிடச்
செங்களத்தை முற்றுந் திரிகின்றான்-வெங்களத்து
வேட்டங்கொள் வார்களிற்றின் மீதுபோ லவ்வேந்தர்
கூட்டங்க ளத்தனையுங் கொன்று. (௭)

எ-து.- வீஷ்மனென்னும் வடவாமுகாக்கினியால் தருமபுத்திரன்சேனை யென்னும் மகாசமுத்திரம் வற்றாநின்றது. அதுகண்டு ஸ்ரீ வாசுதேவன் அருச்சுனனை யுபேக்ஷித்து இது நின்னாற் றாங்கப்படாதென்று முனிந்து தன் ஸ்ரீ ஹஸ்தத்திற் சக்கரம்

(பா-ம்.) 1. பூணாகத் தோளழுந்தப்.

வாங்குவானாக வோங்குதலும், அதுகண்டு அளவிலாததோர் பயமெய்தி ஸ்ரீவாசுதேவனைத் தொழுது யாது விண்ணப்பஞ்செய்தான் அருச்சுனன்:-

539. எம்பெருமான் பேராழி யென்கோலோ வெங்கண்மே
லும்ப ருடன்றெழுந்த போதன்றோ-வெம்பெருமான்
றேரின்மே னிற்கவே யின்றென் சிலைதனக்குப்
போதுவரோ மன்னர் பொரா. (௮)

எ-து.- இராசசிங்க மொரு மகிஷத்தின்மேல் வெகுண்டெழுந்தாற் போல, இத் தரணிபாலர் பலத்தை மெய்யென்று நின்னுடைய சக்கரம் வாங்குமது எம்பெருமானுக்குத் தக்கதன்று; இப்படி முனியுமிடத் துன்னுடைய திருவுள்ளக்கருத்திலே, கறுத்த வென்னுடைய காண்டீவ மென்னும் ஊழிக்காற்றின் கடுவிசையான் மலைந்து துரியோதனன் சேனையென்னும் பெருங்காட்டின் மகாமேருவென நின்ற பிதாமகனையும் நொடிவரையிற் றரைப்படுத்ததுமாறு கட்டருள்வாயாக என்று அருச்சுனன் வெகுண்டு சொல்லுமது கண்டு, ஸ்ரீ வாசுதேவனும் பிரியமெய்திச் சக்கரம் வாங்க நினைந்த வுக்கிர மொழிந்து தேர்கடாவு மளவில், ஸ்ரீவீஷ்மனுந் தேரிழிந்து வியாகுல மெய்தினவனாய் ஸ்ரீவாசுதேவனைத் தியானங்களால் நமஸ்கரித்து நிராயுதனாய் நின்று சருவஞானங்களால் யாது விண்ணப்பஞ் செய்தானோ வெனில்:-

540. நின்னாற்றன் னாளுலத்த னீட்பத்தில் வீடதுமற்
றென்னாற் பெறலாமோ வெம்பெருமா-னின்னாற்
கொலப்படுவ ரல்லரோ கோவாரா லென்று
சொலப்படுவ ரென்றான் றொழுது. (௯)

எ-து.- அடியேன்மேல் நின்னுடைய சக்கராயுதம் வாங்கி விடாமல் வஞ்சித்தவாறு என்னாற் றாங்கப்படாது; நின்னாற் கொலப்படுவே னென்று மகாப் பிரியமெய்தி யிருந்தேன்; நின்னால் முன்னங் கொல்லப்பட்டா ரன்றோ புத்தேளிருலக புக்கு இனிதிருக்கின்றார் என்று சொல்லிப் பின்னும் யாது விண்ணப்பஞ்செய்தான் வீஷ்மன்:-

541. பொன்னிறத்தோன் பொற்கண்ணன் கஞ்சன் பொருதிறல்
தென்னிலங்கை மன்னன் சிசுவாலன்-மின்னுபுக
ழாயிரந்தோள் வீரனுட னன்றுநீ கொன்றருளத்
தாமிருந்து செய்தார் தவம். (௧0)

எ-து.- இரணியன் இரணியாக்ஷன் இராவணன் கும்பகன்னன் கஞ்சன் சிசுவாலன் வாணாசுரன் இவ்வனைவருமன்றோ புண்ணியம் பண்ணி நின்று நின் சக்கராயுதத்தாற் பட்டுப்போய்ச் சொர்க்கலோக

மெய்தினார்; மற்றவரைப்போல் யானும் சொர்க்கலோகம் போக நின் சக்கராயுதத்தாற் படவேண்டு மென்று அபேக்ஷித்தேன்; அது இன்றெனக்குப் பாக்கியமில்லாமல் அருச்சுனனாற் றடுக்கப் பட்டதன்றோ? எனக் கழறிக் கதுமெனத் தன் றேர்மீதேறி வெகுண்டு அருச்சுனன்மேற் றேர்கடாவினான் வீஷ்மன். அதுகண்டு யாதுசெய்தான் அருச்சுனன்:-

542. சினமேவுங் கையான் றிருநெடுந்தேர்ப் பார்த்த
வினவேந்த ரீட்டங்க ளெல்லா-முனையிற்
கடும்படைஞ ராய்வந்த காவலர்க டம்மைக்
கொடும்படையாற் கொன்றான் கொதித்து. (கக)

எ-து.- ஸ்ரீ வாசுதேவன் முனிந்து தன் சக்கரம் வாங்கப் புக்கது என்னைப் பலவீனனாகக் கருதியன்றோ என்றும், இது வீஷ்மனால் விளைந்த பிரமாதமன்றோ என்றும், இற்றைப்பகலில் என்னுட னெதிர்மலைந்தானைத் தேருஞ் சிலையு மழித்து மற்றந்தப் பெருஞ்சேனையையும் எமலோகத்திற் கேற்றி வருவேன் என்றும் வெகுண்டடெழுந்து முடுகச்சென்று, ஸ்ரீ வீஷ்ம னென்னுங் கோபுர மழித்துக் கருடனென்னும் வியூகம் பிளந்து புகுந்து, துரியோதனன் மகாசேனையைக் கொல்லாநின்றா னருச்சுன் என்றவாறு. அதுகண்டு வீஷ்மனும் துரோணாசாரியனும் அசுவத்தாமாவும் உள்ளிட்ட அநேக பரராஷ்டிரத்து க்ஷத்திரியரும் கசதுரங்க பதாதியுடன் வந்து அருச்சுனனை வளைத்து மூடிக்கொண்டார். அப்பொழுது யாது செய்தான் அருச்சுனன்:-

543. தொடுத்த கொடுஞ்சிலைநாண் டோள்புரள வாங்கி
யெடுத்த திசையனைத்து மெய்ய-நொடிக்கணத்தில்
வில்லிழந்து தேரிழந்து வீரக் கொடியிழந்து
சொல்லிழந்து போனார் சுளித்து.. (கஉ)

இவ்வகை சருவ க்ஷத்திரியருந் தேருஞ் சிலையு மழிந்து புறகிட்டனர். அப்பொழுது பலருந் தாளற்றனர், தோளற்றனர், வில்லற்றனர், வாளற்றனர், குடலற்றனர், தலையற்றனர், கொடியற்றனர், குறைத்தலைகள் கூத்தாடின; காகமும் நரியுங் கழறியிட்டன; கழுகும் பருந்துங் கலந்தார்த்தன; குருதிவெள்ளம் பெருகியிட்டதாங்கு. அவ்வளவில்,-

544. பூதலத்து மன்னர் பொருதழிந்த போர்க்களத்து
மீதெழுந்த வெங்குருதி வெள்ளத்துச்-சோதி
புகச்சிவந்து காட்டிற்றே பொற்போது சாய
மிகச்சிவந்து காட்டிற்றே மேற்கு. (கரு)

545. மட்டவிழ்தார் மன்னர் மடிந்த வமர்க்களத்துப்
பட்டனவும் பார்த்தற்காய்ப் பேராழி-தொட்டருளிச்
செங்கண்மால் செய்தனவுந் தேர்வேந்தற் குற்றுரைத்தான்
வெங்கண்மா வல்லான் வெகுண்டு. (கச)

மூன்றாநாட்போர் முற்றும்

*****

# நாலாநாட்போர்

## கடவுள் வாழ்த்து

546. எந்தையாய்த் தாயா யிறைவனா யெவ்வுயிர்க்கு
முந்தி மடுவுதவு மூலமா-யந்தமிலாப்
பூதமாய் வேதமாய் நின்ற புராதனனை
யோதவா நெஞ்சே யுணர்ந்து. (க)

547. வெங்கண் மதயானை வெவ்வேல் விறல்வீரர்
திங்க ளனையகுடைத் தேர்வேந்தர்-வெங்களத்தி
லூன்றினார் சேனை யிரண்டுந் தலைப்பெய்யத்
தோன்றினான் வெய்யோன் றொடர்ந்து. (உ)

548. தானைத் தலைமை தலைப்பெய்யத் தானவர்கள்
யானைக் குழாத்திடைய னாயினான்-றேர்மொய்த்த
வீரத்தண் டேந்துவித்த வேந்தற் கிளங்கோமான்
மூரித்தண் டேந்தி முனிந்து. (ங)

இவ்வகை யுத்தவீரர் மேற்கொள்ளப்பட்ட மதயானைகள்மேற் சென்று தாக்கித் தேவேந்திரன் வச்சிராயுதங்கொண்டு பருவதங்களைச் சிறகறுத்தாற்போலத் தானுந் தன் வயிரத்தண்டினால் மோதி முருக்குகின்ற வீமசேனனைக் கண்டு துரியோதனனும் அவன் பிராதாக்களும் வந்து தலைப்பெய்து சுற்றுமுற்றுஞ் சூழ்ந்துகொண்டார். அப்பொழுது யாது செய்தான் வீமசேனன்:-

549. போர்வல் லவன்வீமன் போராம் பொழுதின்கட்
டேர்வல்லான் மேற்கொண்டு சென்றணுகப்-போர்வல்லா
னேறினா னேற வெதிர்ந்தா ரினவேந்தர்
பாறினா ரெங்கும் பறந்து. (ச)

*எ-து.- காலாளாய்க் களிற்றீட்டங்களை முறித்து மோதுகின்ற வீமசேனனுக்குக் கடோற்கசன் றேர்கொடுவந்து கொடுப்பத் தேரின்மீ தேறிக் கதுமெனச்சிலைவாங்கிச் சரவருஷஞ்சிந்திச் சங்கமூதித் தெழித்துருப்பி வாசவாயம்பு நூறுகொண் டுக்கிர வேகத்தோடு*

*துரியோதனன் வக்ஷஸ்தலத்துப் பட்டுருவ வெய் தார்த்தான் வீமசேனன் என்றவாறு. அதுகண்டு அதிவேகமெய்தி வீமசேனனை யாதுசெய்தான் துரியோதனன்:-*

550. மீளி வயமாமே லைநான்கும் வெந்தறுக
ணாளி நெடுங்கொடிமே லையிரண்டும்-வாளி
யொருமுப்ப தெய்தா னொளிக்கவசத் தின்மே
லிருமுப்ப தெய்தா னெடுத்து. (ரு)

*அப்போது யாதுசெய்தான் வீமசேனன்:-*

551. கொடுஞ்சிலையை நான்கினா லைந்துகூ றாக்கி
நெடுங்கொடியை யைந்தினா னீக்கிக்-கடும்பரியை
மூன்றினா லெய்தவன்றன் மொய்கவசத் திற்புகுத்தி
யூன்றினா னொண்பகழி யொன்று. (சா)

*அப்பொழுது துரியோதனன் பட்டது:-*

552. வைய முழுதாளும் வாள்வேந்தர் கோன்மார்பிற்
செய்ய குருதி சிவந்தலைப்பச்-செய்யமலை
வார்த்தட்டு நாடும் வளநாடன் றான்மயங்கித்
தேர்த்தட்டில் வீழ்ந்தான் றிகைத்து. (எ)

*இவ்வகை துரியோதனன் வக்ஷஸ்தலம் பிளப்புண்டு மதிமயங்கித் தேர்த்தட்டில் வீழ்ந்தமை கண்டு சர்வக்ஷத்திரியரு மிரிந்தோட, மற்றந்தப் பார்வேந்தன் பிராதாக்கள் தொண்ணூற்றொன்பதின்மருங் கண் டதிபோக மெய்தி விரைந்து சென்று வீமசேனனை வளைத்து மூடித் திளைத் தார்த்துச் சரவருஷஞ் சிந்தாநின்றார். அப்பொழுது யாதுசெய்தான் வீமசேனன்:-*

553. மத்திரத்தார் வேந்தனையும் வாள்வேந்தன் மாமனையுஞ்
சித்திரத்தே ரோடுஞ் சிலையழித்து-மெய்த்திறத்த
நூற்றுவரு ளைவரையு நுண்கணையா னாட்செய்து
வற்றுவனுக் காக்கினான் கொன்று. (அ)

554. ஒருபா லிடும்பிசே யோட்ட வொருபாற்
றிருமா றிருமருகன் செல்ல-வொருபா
லிடைமிடைந்த சோமகரும் வீமனுநன் றாட
வுடைந்தழிந்தார் மன்னரெல்லா முற்று. (கூ)

*அப்பொழுது யாதுசெய்தான் பகதத்தன்:-*

555. அட்டிலங்கு வேல்வேந்த ரந்தரத்தி னின்றரசர்
கட்டிலங்கு பல்படையைக் கைகவியா-விட்டெழுந்த

மாக்களிறுந் தானு மருவரைபோல் வந்தரசர்
கோக்களின்மேற் சென்றான் கொதித்து. (௩௦)

*இப்படி பகதத்தன் செய்ததுமன்றிச் சுப்பிரதீகமென்னுமவன் யானை யானது பாண்டவர் சேனையிலிருக்கும் யானை முதலியவற்றைத் துவைத்து மடித்து நாசஞ்செய்வதைக் கண்டு யாதுசெய்தான் கடோற்கசன்:-*

556. பல்களிற்றை வெல்களிற்றைப் பாலடியின் கீழ்ப்படுத்திக்
கொல்களிற்றைச் சுற்றுமுற்றுங் குத்துவித்தா-னல்ல
விடுமாய மவ்வில் விறலிடும்பி சூதன்
கொடுமாய வேழங் கொணர்ந்து. (௩௧)

*அப்போது,-*

557. கடலுடைந்த தாமென்னக் காய்பரித்தேர்த் தானை
யுடலுடைத்தங் கோடுவா ரோட-வடலுடைந்த
வார்கடல்போற் றோன்றியதே வாட்டிகிரிக் கோமானம்
போர்கடற்கே சென்றான் புரிந்து. (௩௨)

*இவ்வகை துரியோதனன் தம் தம்பிமார் முதலானவர்களைப் பறிகொடுத்துச் சோகமுற்றுப் பாடிவீடு புகுந்து விசாரமுற் றிருப்பதைக் கண்டு, அந்தப்புரமடந்தையர் வந்து அவன் பாதத்தில் வீழ்ந்து, பிரலாபித்தது யாங்ஙனமோ வெனில்:-*

558. காவு மடலனைய காளையர்க ளெல்லீருந்
தேவர் தலைபனிப்பச் சென்றீர்கள்-யாவ
ரொழியப் புகுந்தீர்க ளையாவென் றுள்ள
மழியப் புகுந்தழுதா ராங்கு. (௩௩)

நாலாநாட்போர் முற்றும்

*****

## ஐந்தாநாட்போர்

### கடவுள் வாழ்த்து

559. மூலமென வோலமிடு முத்திப் பரம்பொருளின்
சீலமருஞ் சேவடியைச் சிந்தியாய்-ஞாலத்து
நெஞ்சே நிலைதளர்ந்து நீடுமா றாமல்வந்
தஞ்சே லெனுங்கா ணவன். (௧)

*இப்பால்,-*

560. அந்த மலையடைந்த வத்திசையி னில்லாதே
மத்தக் கதிர்கண் மலர்பரப்பித்-தத்தஞ்
சலந்திரிவ வந்துறங்குந் தாழ்வரையி னுச்சி
லவந்திரிவான் றோன்றினான் வந்து. (உ)

*சூரியோதய மானபின்பு இரண்டுபடையுஞ் சேர, யாது நிகழ்ந்ததோ வெனில்:-*

561. மால்களிறும் பாய்மாவு மன்னவர் மேற்கொண்டு
கோல்கெழுவும் வெஞ்சிலையுங் கூர்வாளும்-வேன்முழுதுந்
தங்களங்கைக் கொண்டார்க டார்வேந்த ரெல்லாரும்
வெங்களங்கைக் கொண்டார் வெடிந்து. (ங)

*இவ்வகை படையிரண்டும் ஆர்த்துவந்து யுத்தகளம்புகுதக் கசேனு என்னும் யூகம் வகுத்து நின்றான் ஸ்ரீ வீஷ்மன்; அப்பொழுது பாண்டவர் சேனையை வச்சிரநாபம் என்னும் யூகம் வகுத்துநின்றான் திஷ்டத்துய்மன்; அவ்வளவில் அருச்சுனனைக்கொண்டு விரையமணித்தேரை முடுகவிட்டு ஸ்ரீவீஷ்மன்பாற் சென்று சரவருஷஞ் சொரிந்து மூடிக்கொண்டு யுத்தம் விளைவித்தான் ஸ்ரீவாசுதேவனாகக் கருதுவது. அப்பொழுது யவனரையுங் காலிங்கக் கூட்டத்தினையும் இக்ஷுபானுகுலத் தரசர்களையும் சல்லிய சகுனிகளையும் சௌராஷ்டிரரையும் சயத்திரதனையும் மற்றுமுள்ளிட்ட வருச க்ஷத்திரியரையுங் கச துரங்க பதாதிகளோடுந் துரியோதனன் விடுத்த ஸ்ரீ வீஷ்மனைக் காத்துநிற்பீராமினென மற்றவரும் போய் ஸ்ரீவீஷ்மனைக்காத்துத் துணைசெய்யுமிடத்து யாதுசெய்தான் வீமசேனன்:-*

562. வெங்கலிங்கர் கூட்டமும் வேல்வேந்தர் தம்படையுஞ்
செங்கலங்க லாய்மிதப்பச் சீறினாள்-கங்கை
வளை [1]வரைத்தண் சாரன் மணிகொணரு நன்னாட்
டிளவரசன் பாண்டவர்க ளேறு. (ச)

*எ-து.- பதினாயிரங் காலிங்கரையும் ஐயாயிரம் யவனரையும் மூவாயிரம் இராச குமாரரையும் கொடியிற் படமலைந்து சல்லிய சகுனிகளையுங் கைதுரந்து சயத்திரதனைத் தேருஞ் சிலையு மழித்துச் செல்லாநின்ற வீம சேனனுக்கு நிலையாற்றா துடைந்திட்டது மகாசேனை. அப்பொழுது,-*

563. மாமானு மத்திரனு மான்றேர்த் திரிகத்தர்
கோமானுங் கோவேந்தன் றம்பியரும்-[2]போமாறில்

(பா-ம்.) *1. வரைதன். 2. போமமரிற்.*

பார்த்தனைதாஞ் சூழ்ந்து பரிபவங்கள் [1]பட்டுடைந்து
கோற்றொழிலுந் தாமறந்தார் கூர்ந்து. (ரு)

இவ்வகை துரியோதனனால் விடுக்கப்பட்ட மகாசேனை யுடைந்து பின்னும் யாங்ஙனம் கூடிற்றோ வெனில்:-

564. [2]தாங்கு புனற்கங்கைத் தார்வேந்த ரெண்மரையு
மீங்கு விடுத்தா னிகல்வேந்த-னோங்கு
விடநாகங் கொண்ட விறல்வேந்தன் விட்டான்
படநாகம் போலும் படை (சா)

எ-து.- துரியோதனனால் விடுக்கப்பட்ட துரோணாசாரியனும் அசுவத்தாமாவுங் கிருதவர்மாவுங் களிற்றீட்டமும் வந்து தாக்க அதுகண்டு யாது செய்தான் தருமபுத்திரன்:-

565. கொற்ற முரசுயர்த்த கோ [3]வேந்த னெண்மருடன்
மற்று விடுத்தான் வழுதியையு-முற்றுந்
திசையனைத்து மோடத் தெரிசரங்கள் சிந்தி
விசையனைப்போய்க் காமின் விரைந்து. (எ)

எ-து.- நகுல சகாதேவரையும் சிகண்டியையும் திட்டத்துய்மனையும் கடோற்கசனையும் அபிமன்னுவையும் அஞ்சனவர்மாவையும் சித்திரசேனனையும் பாண்டியராசனையும் அருச்சுனராசனுக்குத் துணையாவீரென்று விடுத்தான் தருமபுத்திரனாகக் கருதுவது. இவ்வகை யிரண்டு திறத்துப் படைமன்னருந் தலைப்பெய்து மகாயுத்தம் விளைந்திட்டதாங்கு. ஒருபால்,-

566. வில்வல்லான் றன்மகனும்வீமன் பெருமகனுஞ்
சொல்வல்ல வம்பு சொரிந்தார்கள்-கொல்வல்ல
நேரே கரியிரண்டு நேரே [4]யுடன்றுதமிழ்
போரே புரிவனவே போன்று. (அ)

எ-து.- அசுவத்தாமாவுக்குங் கடோற்கசனுக்கும் அகோர யுத்தம் விளைந்திட்டது; அப்பொழுது இருபத்தொரு பல்லவங்கொண்டு அசுவத்தாமா எய்து ஆர்த்தலும், அதனை ஆகாசத்தெய்து அறுத்து வீழ்த்து ஒரு வாள் வாயம்பினால் மற்றவன் சிலையினை யறுத்து வீழ்ந்தான் கடோற்கசன் என்றவாறு. ஒருபால்,-

567. போர்வென்ற வீமன் பொலன்கவசத் துள்கிழிய
வீரைந்து வெங்கணைகொண் டெய்தார்த்தான்-கார்கண்ட
காந்தட் கடிமலர்க்கைக் காந்தாரி நாட்பயந்த
வேந்தர்க்கு முன்பிறந்த வேந்து. (கூ)

(பா-ம்.) 1. பட்டுடைந்தார். 2. தாங்குதிறற் காங்கேயன் சார்வேந்த ரெண்மாகளை, யீங்கு. 3. வேந்தர். 4. உடன்றம்மிற், போரே பொருவனவே.

**எ-து.-** துரியோதனன் வீமசேனனைக் கவசங் கிழிய வெய்து ஆர்த்திடுதலும் அதுகண்ட சத்தியசாத்தகி வந் தேன்றுகொண்டு துரியோதனன் மேல் இரண்டு வெங்கணையும் துச்சாசனன்மேற் பத்தும் சகுனிமேற் பதினைந்தும் இவ்வகை பகழிபாய்ச்சித் தேருஞ் சிலையு மழித்து லக்ஷணகுமாரன் வந்தானை ஆறம்பினாற் றேரழித்து ஐந்தம்பினால் வில்லறுத்து யவனரையுங் காலிங்கரையுந் துணித்தடுக்கி மலர் வெண்பூனையைக் கடுவளி துரந்தாற்போலப் பெரும்படையைக் கலக்குறுத்திக் கொல்லாநின்றானைக் கண்டு மற்றவனுடன வெகுண்டெழுந்து பூரிசிரவா வந் தென்றுகொண்டு தலைப் பெய்தான். அப்பொழுது,-

568. **ஒருகுலத்துக் காளையரோ டொள்ளமர ரேத்தக்**
**குருகுலத்துக் கோளரிமாத் தன்னோ-டொருகுலத்துத்**
**தோன்றாளாய் நிற்கின்ற தோன்றற் கிளங்கோமா**
**னேன்றா னெரிசரங்க ளெய்து.** **(௧0)**

இவ்வகை யிருவரும் பொருகின்ற பொழுது சாத்தகி வெஞ்சிலையை யொரு வாள்வா யம்புகொண்டு துணிய வீழ்த்தலும் வெற்றிச் சிலையொன்று கொண்டு பூரிச்சிரவாவைத் தேரழித் திருவரும் பதாதியாய் நின்று யாது செய்தாரோ வெனில்:-

569. **ஓடிய ஞாயி றுவாமதியோ டொத்தாற்போற்**
**கேடகங்க ளோரிரண்டுங் கேழ்கிளர-வாடமரிற்**
**றாக்கினார் சாரிகைகள் சந்தித்தா ராயுதங்க**
**ளூக்கினார் தம்மி லுடன்று.** **(௧௧)**

இவ்வகை யிருவருந் தாக்கினார். அப்பொழு திரண்டு படையும் வந்தீண்டி யிருவரையுங் கைக்கொண்டு மகாயுத்தம் விளைந்திட்டது. அப்பொழுது ஒருவரை யொருவர் சாயாது கச துரங்க பதாதிகளும் பார்மன்னரும் பட்டுவீழ்ந்து நிணக்குழம்பிற் றேர்தாழ்ந்து காகபந்தங் கலந்தார்த்தன. தங்களில் க்ஷயமாகாமல் நின்றனராகக் கருதுவது. அவ்வளவில்,-

570. **ஒற்றைத் திகிரி யொளிமணித்தே ரூர்வானும்**
**வெற்றிக் கடற்றானை வேல்வேந்தி-ரிற்றைக்**
**கமையும்போ ரென்பான்போ லவ்வரையி னுச்சிக்**
**கிமையவரைப் புக்கா னிசைந்து.** **(௧௨)**

இவ்வகை ஆதித்தியபகவா னஸ்தமன பருவதஞ் சேரக்கண் டிரண்டு படையுங் கைவாங்கித் தம் பாடிவீடு புக்காராகக் கருதுவது.

**ஐந்தாநாட்போர் முற்றும்**

*****

## ஆறாநாட்போர்

571. ஊன்கிடந்த விவ்வுட ல்விட் [1]டோடுவதன் முன்னமே
கான்கடந்த காலாற் கடல்கடந்து-வான்கடந்த
மாதவனே பாண்டவர்க்கா மண்வேண்டிச் சென்றிரந்த
தூதுவனே யென்றென்றே சொல். (க)

*கடவுள்வாழ்த்து. இப்பால்,-*

572. மாலைக் குழல்சரியம் மாதரார் தங்களுடன்
காலைக் கவியென்னுங் கள்ளுண்டு-வேலை
கதையத்தேர் [2]வந்துபோர் காண்பானாய் வெய்யோ
னதையத்தே வந்தா னுகந்து. (உ)

*எ-து.-அன்றுகழித்த மற்றைஞான்று ஆதித்திய னுதயஞ்செய்யக் கண் டிரண்டு படையும் பள்ளியெழுந்து யுத்தகளம் புகுந்து தம்மொடுதாந் தலைப்பெய்தார். அப்பொழுது, ஸ்ரீவீஷ்மனுந் திட்டத்துய்மனும் உடன்று தாக்கி யொருவ ரொருவர் ஸ்ரீகஸ்திரி (?) நோக்கி யுலகவலயந் தலைபணிப்ப அமர கணங்க ளாச்சரியப்பட மகாயுத்தம் விளைந்திட்டது. அப்பொழுது,-*

573. வெங்கண் மதயானை வீமன்மே லோடிற்றே
யங்கத் துரோண னணிநெடுந்தேர்-செங்கைக்
கொலையாருஞ் சிங்கக் கொடிப்படையான் றன்மேற்
சிலையார மாக்கினான் சென்று. (ந)

*எ-து.- துரோணாசாரியன் வீமசேனனுடனே தாக்கி யகோரமான யுத்தம் நிகழாநின்றது. அப்பொழுது,-*

574. தேருருவ வொடுஞ் சினப்புரவி நான்கினையு
மீரிரண்டு வெங்கணைகொண் டெய்தார்த்தா-னோரிரண்டு
சாரதிமே லெய்யத் தடுத்தவன் றன்னுடைய
தேரழிய வெய்தான் செயிர்த்து. (ச)

*எ-து.-இராசமத்திமத் துரோணாசாரியனைப் பதாதியாக்கித் தேரினின்றிழியப் பாய்ந்து கதாபாணியாய்க் கடற்படையைக் கொல்லாநின்ற வீமசேனனுடனே யொருபாற் சல்லியனும் வந்து தாக்க, அவனையுந் தேருடனே யெடுத்தெறியுமளவில் துரோணசாரியன் பின்னு மொருபான் மேற்சென்று வீமசேனனைச் சூழ்ந்துகொள்ள, இருக்காலாவதும் ஆசாரியனைத் தேரழித்துப் பதாதியாக்கித் துரத்தத்*

---

*(பா-ம்.) 1. ஓடு வதன்முன்னே, கானடைந்த காலாற் சடலடைத்து.*
*2. வந்துபொரு.*

துரப்புண்டுபோக, மற்றவருடன் வந்த தேராட்களையுங் கசதுரங்க பதாதிகளையுங் கொன்றுழக்கிப் பார்மன்னரைப் பொடியாக்கி மகாசேனையை நாசஞ்செய்து விலக்குவாரைப் பெறாது யுத்தகளமுழுதும் வேட்டந்திரியு மதகரியாய் நின்றான் வாயுமூர்த்தி வீம சேனன் என்றவாறு. இவ்வகை திரிகின்றானைக் கண்டு துரியோதனனுந் தம்பிமாரும் வந்து வளைத்து மூடித் திளைத் தார்த்தார். அப்பொழுது பின்னும் யாதுசெய்தான் வீமசேனன்:-

575. புண்ணூறு செங்குருதி பொற்கவசத் துள்ளிழியத்
தொண்ணூறு வீரச் சுடுசரத்தாற்-றெண்ணீர்க்
கனவரைமே னின்றிழியுங் கங்கைசூழ் நாட
ரனைவரையு மெய்தா னழித்து. (ரு)

இவ்வகை தொண்ணூறு சுடுகணையாற் துரியோதனன் றம்பிமாரையும் பலமழித்து, மற்றாங்குநின்ற சர்வ க்ஷத்திரியர்மேற் சென்று அவர்களாற் பரிபவப்பட்டு வளைப்புண்ட வீமசேனனுக்குத் துணையாவாரைத் தெரிந்து யாதுசெய்தான் தருமபுத்திரன்:-

576. வீமன்றே ராழிதமைக் காக்க விறலாழி
மாயன் மருகனொடு மற்றங்கோர்-வேமுனையிற்
போராட் களையழிக்கும் போர்வல்லார் பன்னிருவர்
தேராட் களைவிடுத்தான் சென்று. (சா)

இவ்வகை தருமபுத்திரனால் விடுக்கப்பட்ட அபிமன்னுவினோடு விகன்னன் வந்து தாக்கித் தேருஞ் சிலையும் அழிப்புண்டு முப்பத்தெட்டடி விரைந் தோடிச் சித்தரசேனன் றேர்புகப் பாய்ந்தானாகக் கருதுவது. ஒருபால்,-

577. கல்லணி திண்டோளார் காவலர்கண் முன்னபிமன்
வில்லைப் பொடிகண்டான் வேல்விகன்னன்-வில்லொன்று
மாண்டதேர்ப் [1]பார்த்தி வளைத்தெய்தான் மற்றிவன்மேற்
பாண்டவர் [2]கோ மைந்தன் பகைத்து. (எ)

இவ்வகை விகன்னன் சிலையறுத்து வீழ்த்திப் பின்னும் யாது செய்தான் அபிமன்னு:-

578. வெற்றிச் சிலையொன்றும் வீரத் தனிக்கொடியு
மற்றுப் படவம்பி னாங்கழன்று-முற்றுந்
திசையதிரச் செல்லுஞ் சினவயிரத் தண்டை
விசையன்சேய் விட்டான் வெகுண்டு. (அ)

(பா-ம்.) 1. பார்த்தன். 2. கோன்மைந்தன்.

இவ்வகை அபிமன் விட்ட தண்டாயுதத்தை விலக்கி யசனிகோஷமென ஆர்த்துச் சரவருஷமெனப் பொழிந்தான் விகன்னன். அப்பொழுது அது கண்டாற்றாது யாதுசெய்தா னபிமன்னு:-

579. சாரதியுந் தேருந் தடஞ்சிலையும் வெண்குடையும்
போர்பரியும் வீழப் புரட்டினான்-மாபெரிது
முட்கினா னுட்கி யுடைந்த பெருங்களத்து
வெட்கினான் போந்தான் விரைந்து. (கூ)

இவ்வகை யபிமன்னுவினா லிருகாலாவது தன்றேருஞ் சிலையும் அரிப்புண்ண, இலச்சையெய்திப் போயினான் விகன்னனாகக் கருதுவது. ஒரு பால் வீமசேனனுந் துரியோதனனுந் தலைப்பெய்து யாது செய்தாரோ வெனில்:-

580. ஒன்றினால் வெஞ்சிலையை வீழ்த்தங் குறுபகழி
யொன்றினான் மல்லகலத் துள்ளழுத்தி-யொன்று
விடுகணையாற் றேரழித்து வெல்கொடியை நான்கு
சுடுகணையா லெய்தான் றொகுத்து. (கo)

இவ்வகை வில்லுந் தேருங் கொடியு மழிந்து மல்லகலத்துப் புண்கூரத் துரியோதனன் றளர்ந்து போகலும், அதுகண்டு பகதத்தனும் சயத்திரதனு முள்ளிட்டா ரநேக ராஷ்டிரத்து க்ஷத்திரியரும் வந்து வீமசேனனைச் சூழ்ந்துகொண்டு சுடுகணைமாரி சொரிந்திடுதலும், அதுகண்டு யாதுசெய்தான் அபிமன்னு:-

581. அந்தார வார்பகழி யைந்தா லமர்கருதி
வந்தார் சிரங்கொண் மணிமுடிமேல்-வெந்தார்
வருந்தவே வில்வளைத்து மாமேகம் போலத்
திரிந்தானவ் வாள்விசயன் சேய். (கக)

எ-து.- வீமசேனனைச் சூழ்ந்துகொண்ட சர்வ க்ஷத்திரியரையுங் கசதுரங்க பதாதிகளையும் படமோதிப் பொருகின்ற அபிமன்னுவினுடன் பின்னும் மூன்றாவது விகன்னன் வந்து தாக்கினானை நாராசமொன்று கொண்டு அவன் மார்பகலத்துள் ளழுத்தி வித்தியுத்வத்தாகக் கோஷஞ் செய்தானவ வபிமன்னுவாகக் கருதுவது. அப்பொழுது வாயாறு குருதிசோரத் தேர்த் தட்டின்மேல் விழுந்திட்டான் விகன்ன னென்றவாறு. அவ்வளவில்,-

582. மேற்குலவுந் தெய்வத்தேர் வெய்யோனு மென்மாலை
மாற்கடல்வாய் வீழ [1]மறிந்ததே-தாக்கியதோர்

(பா-ம்.) 1. மறிந்தனனே.

போர்வேந்தர் பொன்றப் பொருகளந்தான் [1]விட்டகன்ற
பார்வேந்தர் தங்கள் படை. (கூ)

எ-து.- ஆதித்திய பகவான் அத்தமன பருவதஞ் சென்று சேரக் கண் டிரண்டுபடையுங் கைவாங்கித் தம் பாடிவீடு புக்காராகக் கருதுவது.

ஆறாநாட்போர் முற்றும்

* * * * *

## ஏழாநாட்போர்

### கடவுள் வாழ்த்து

583. மீனமா யாமையாய் வெண்கோட்டு மண்கொண்ட
வேனமாய் நல்ல வெழிலரியாய்த்-தானமா
மண்வேண்டு வாமனனா மாலை மறவாம
லெண்வேண்டு நெஞ்சே யிருந்து. (க)

584. பண்ணமர்ந்த தேரும் பகடும் பரிமாவும்
புண்ணமர்ந்த செங்களமே போதுகைக்கு-விண்ணமர்ந்த
மைசே ரிருளகல மாணிக்கக் கீழ்வரைக்கே
வெய்யோ னுதித்தான் [2]வெடிந்து. (உ)

இவ்வகை அன்றுகழித்த மற்றைநாள் ஆதித்திய பகவா னுதயஞ்செய் யக்கண் டிரண்டு படையும் பள்ளியெழுந்து மகாகோஷத்துடனே கசதுரகங்கண் மேற்கொண்டு விரைந்துடன் சென்று யுத்தகளம் புகுந்து படைநிலை குறித்தார். அப்பொழுது, பாண்டவர் சேனையை வச்சிரநாபமென்னும் யூகம் வகுத்துத் தூசிமுகத்து நின்றான் பாஞ்சால புத்திரன் திஷ்டத் துய்மனாகக் கருதுவது. அப்பொழுது துரியோதனன் சேனையை மண்டலம் என்னும் யூகம் வகுத்துச் சேனைமுகத்தில் நின்றான் ஸ்ரீ வீஷ்மனாகக் கருதுவது. அப்பொழுது,-

585. [3]வீங்கோத வண்ணன் விசயனும் வெஞ்சிலைக்கைக்
[4]காங்கே யனுமே கலந்தார்த்தா-ரோங்கூழிற்
சென்றநாட் போலத் திசையதிர விண்ணதிர
வன்றைநாட் செய்தா ரமர். (ங)

இவ்வகை தேவாசுர யுத்தத்திலுங் கோரமான யுத்தமாக விண்ணும் மண்ணுந் தலைபனிப்ப இருவரன்ன நேமிகோஷத்தாலும்

(பா-ம்.) 1. விட்டகன்றார். 2. விடிந்து. 3. வீங்குததி. 4. காங்கெயனுந் தம்மிற் கலந்தார்த்தார்.

சரபடலங்களாலுந் திசையனைத்துஞ் செவிடுபட்ட தென்றவாறு ஒருபால்,-

586. மன்னர் பெருமானு மத்திரத்தார் கோமானு
மென்னு மிருவருமே தேர்கடவி-முன்னின்று
தாக்கினார் சாரிகைகள் சந்தித்தார் தாரைவே
லோச்சினார் தம்மி லுடன்று. (ச)

ஒருபால்,-

587. அரவக் கொடியோனு மாடெழிற்றோள் வீமன்
[1]மரபிற் கடோற்கசனும் வந்து-விரவிக்
கருமேகம் பெய்கின்ற கார்மழைபோல் வாளி
[2]பொருததிகம் பெய்கின்றார் போந்து. (ரு)

இவ்வகை துரியோதனனுங் கடோற்கசனுந் தாக்கி யெண்டிசையுந் தலைபனிப்பச் சரந்துரந்து சிறுநா ணெறிந்தாராகக் கருதுவது. ஒருபால்,-

588. பாஞ்சாலர் கோமானும் பல்லா யிரந்தேரும்
பூஞ்சாலி மத்திரனும் புக்கார்த்துக்-காய்ந்தார்
கறுத்தார்கள் கைத்தார் களம்விட்டு வீழ்ந்து
தெறித்தார்க டம்மிற் சிதைந்து. (சா)

எ-து.- சல்லியனோடும் பாஞ்சாலராசன் றலைப்பெய்து பொருகின்ற வப்பொழுது, பரியுங் களிறும் பட்டவிந்தன; தேரோடு தேர் தாக்கின; வாளும் வாளும் வயக்குற்றன; தோளுந்தோளுந் துணிந்திட்டன; தரணிபாலர் தரைப்பட்டனர்; குருதிவெள்ளம் பெருகியிட்டது. காலனும் உயிர்திரட்டி யிட்டன னப்பொழுது. அவ்வளவில்,-

589. பொங்கு புனற்குருதி போர்க்களத்தின் மீதோட
வெங்கும் பெருஞ்சேனை யிற்றதே-பொங்குகடற்
காலைக்கே வந்த கதிரவனும் போய்ச்சிவந்து
மாலைக்கே புக்கான் மதர்த்து. (எ)

இவ்வகை ஆதித்திய பகவான் அஸ்தமன பருவதஞ் சென்று சேரக்கண் டிரண்டுபடையுங் கைவாங்கித் தம் பாடிவீடு புக்காராகக் கருதுவது.

ஏழாநாட்போர் முற்றும்

* * * * *

(பா-ம்.) 1. மரபுக். 2. பொருகிடிகம் பெய்கின்றார்.

# எட்டாநாட்போர்

## கடவுள் வாழ்த்து

590. படர்ந்தனவும் பார்புதைப்பப் பஞ்சவர்க்காத் தூது
நடந்தனவு நச்சரவி னுச்சிக்-கிடந்தனவு
[1]மான்றொடர்ந்த தாமரைதா மல்லவோ கானத்தின்
மான்றொடர்ந்த செந்தா மரை. (க)

591. மாலை மதியடைய வைய மிருண்மூடக்
கால மறிந்தகனற் காய்கதிரோன்-மேலைச்
சிலம்பிலே புக்கோன் றிரைகடலின் கீழைச்
சிலம்பிலே வந்தான் சிவந்து. (உ)

*எ-து.- அன்று கழித்த மற்றைநா ளாதித்தியபகவா னுதயஞ்செய்யக் கண் டிரண்டு படையும் பள்ளியெழுந்து சமரபூமி புகுந்து யாது செய்த னவோவெனில்:-*

592. வெம்பு மதயானை வீமற் கெதிராகித்
தம்பியருந் தானுமே தாக்கினா-னும்பர்
சிலையரவஞ் சென்றிசைப்பச் செல்படைமுன் செங்கட்
கொலையரவ முன்னுயர்த்த கோ. (ந)

*எ-து.- துரியோதனனும் பிராதாக்களும் முதலில் வெகுண்டெழுந்து வீமசேனன்மேற் போய்வளைத்து மூடித் திளைத்துரப்பித் தேருஞ்சிலையு மழித்துப் பாண்டவர் சேனையைத் துரந்து முருக்கிக் களித்த மனத்தராய் (காவலனுங் காலையறும்) மேன்மேலும் அடர்[illegible]து செல்கின்றமைகண்டு, பின்னும் வீமசேனன் ஒருபால் எரியெழ விழித்துப் புகையெழ வுயிர்த்துச் சேமத்தேருஞ் சிலையும் பெற்று, மற் றவருடன் ம[illegible]ந்து யாதுசெய்தன்: வீமசேனன்-*

593. கோட்டிய வில்லினராய்க் கொற்றவரின் முன்னந்தே
ரோட்டினா ரோரெண்மர் காளையரை-வீட்டினான்
பார்மேன் முடிகிடப்பப் பாடே படைகிடப்பத்
தேர்மே லுடல்கிடப்பச் சென்று. (ச)

*எ-து.- தார்த்தராஷ்டிரரில் முன்னம்வந்து தலைப்பெய்து, எதிர்விலக்கினாரில் விசுபெக்ஷணனும் பாண்டியதேவனு முள்ளிட்டா ரோரெண்மர் காளையரை ஒரு தொடையினா லெட்டு வாள்வாயம்புகொண்டு தலைதுமித்து, மகிதலத்திடை வீழ்த்து*

---

*(பா-ம்.) 1. கான்றொடர்ந்த தாமரைதா னல்லவோ.*

மன்னரெல்லாங் காண மனமகிழ்ந் தார்த்துக்கொண்டான் வாயுமூர்த்தி வீமசேனன் என்றவாறு. அப்பொழுது,-

594. தம்பிமார் பட்டவியத் தார்வேந்தர் கோமானும்
வெம்பியே வேல்வேந் தரைநோவ-வும்பர்
கடலரவஞ் செய்வித்த கார்வரைபோல் வீம
னுடலரவஞ் செய்தா னுடன்று. (௫)

எ—து.— தம்பிமார் எண்மர் காளையர் படக்கண்டு தன் படைவேந்தரை நோக்கி முனிவெய்திப் பிரலாபிக்கு மளவில் வீமசேனன் பின்னும் வாகுத்தடித்து மேல்வரக்கண்டு மற்றவனைத் தகைவாராகத் துரோணாசாரியனையும், அசுவத்தாமனையும், கிருதவர்மாவையும், பகதத்தனையும், சல்லிய சகுனி யுள்ளிட்ட சருவதேராட்களையும் உடன்கொண்டு மேற்சென்று, வீமசேனனை வளைத்து முடித் திளைத் துரப்பிச் சுடுகணை மாரி சொரிந்து, அவன் மல்லகலத்துப் புண்கூர ஒரு வாள்வாயம்புகொண் டெய்து மிகவும் நெருக்காநின்றான் துரியோதனன். அதுகண்டு யாதுசெய்தான் தருமபுத்திரன்:-

595. பைங்கதிரைச் சூழ்ந்த பனிமேகம் பாய்கதிரோன்
வெங்கதிரைக் கண்டாங்கு விட்டாற்போற்-பொங்கி
முரசுயர்த்தோ னோடிவர மொய்கடற்றேர்த் தானை
யாவுயர்த்தோ னோடினா னாங்கு. (௬)

எ—து.— தருமபுத்திரன் கடுவிசையா னெடுந்தேர் கடாவி யதிவேகத்துடன் வருகின்ற வெகுட்சிகண்டு வீமசேனனைவளைத்து மூடிக்கொண்ட சர்வ க்ஷத்திரியரும் பயமெய்தி யாதித்தியகிரணங்கண் டாற்றாதுடைந்திட்ட பனி போல விட்டுநீங்கிப் புறகிட்டாராகக் கருதுவது. அப்பொழுது இரண்டாவது மூன்றாவதுமுறை தாக்கின படையெல்லாங் கால்தளர்ந்து தேருஞ்சிலையு மழியக் கடிகைதோறுங் கனன்றெழுந்த கனலேபோல வீமசேனன் மேற்சென்ற சர்வசேனையையுங் களத்தவிக்க, பலகாலுந் துரப்புண்டு அவை நிலையாற்றாதுடைந்து துரியோதனன் தேர்க்காலில் வீழ, மற் றவனாலுந் தாங்கற்கரிதாய வீமசேனன்கோபாக்கினியால் வெந்து நிலையாற்றாது மகாசேனையுடன் புறகிட்டு ஸ்ரீவீஷ்மனிடைக்கே சென்று மற்றவன் பாதத்திலே வீழ்ந்தியாதுசொல்லிப் பிரலாபித்தான் துரியோதனன்:-

596. எம்பெருமான் கண்ணுளதா நிற்கவே யெம்பிமார்
வெம் [1]பகைஞர் கொல்ல விளிவதோ-வெம்பெருமான்
றோளிணைக்கீழ் வாழ்வோமுந் தோற்பதோ வென்றுரைத்தான்
றாளிணைக்கீழ் நீர்மல்கத் தாழ்ந்து. (௭)

(பா—ம்.) 1. பகையார்.

*எ-து.- எம்பெருமா னினக்குக் கண்ணாகநிற்கவே யென்பிராதாக்கள் திவசந்தோறும் வீமசேன னென்கின்ற வடவாமுகாக்கினியிலே புக் கவியாநின்றார்; இது நீ கண்டுநிற்கத்தக்கதோ வென்று கழறித் துக்கசோகமெய்திப் பேசுகின்ற துரியோதனனை நோக்கி யாதுசொன்னான் ஸ்ரீ வீஷ்மன்:-*

597. நின்றுணைவ னங்கர்கோன் சொல்லினவு நின்மாமன்
றுன்றுமலர்த் தாரோன் றுணிந்தனவு-மொன்றுங்
கடைபோகக் கண்டிலையோ காவலனே யின்னங்
கடைபோகக் கண்டே கவல். (அ)

*அன்றியும்,*

598. தலைவருவ வெல்லாஞ் சவையகத்தே யுங்கட்
குலகறிய வன்றே யுரைத்தேன்-சிலபகலின்
மாள்கின்றோ மெல்லோமு மாளாமல் வெங்களத்தின்
மீள்கின்றா ராரோ விளம்பு. (கூ)

*அன்றியும்,*

599. வில்லிகளிற் பாண்டவரை வெல்கிற்பா ராரென்று
சொல்லிய வென்னைச் சுளித்துரைத்தா-யொல்லொலிநீ
ரங்கத்தார் கோமா னதிரதரின் முன்றோன்ற
லிங்குத்தா னல்லனோ வின்று. (கo)

*அன்றியும்,*

600. வெற்றி விதுரன்கை வின்முறிந்த வப்பொழுது
மற்றந்த வீமன் விசயனையுஞ்-செற்றமரில்
வெல்வாரை யெண்ணா யெனவுரைப்ப நின்முன்னே
[1]வைவானே கன்னன் மறுத்து. (கக)

*அன்றியும்,*

*எ-து.- சபாமண்டபத்து வீற்றிருந்த நாளகத்துப் பாண்டவருரிமை கொடே னென்றவிடத்து, மற்று அது தகாதென்றும், வீமார்ச்சுனர்களை வெல்லுஞ் சத்தியுடையார் யாவரு மில்லையென்றும், அவரைத்தகையுஞ் சத்தியுடைய விதுரனை வில்லுமுறித்துப்போகக் கண்டிருந்தாயென்றும் யான் கட்டுரைத்த காலையில், சபாமண்டபத்துத் துச்சாசனனுஞ் சகுனியும் வெகு மதவாக்கியஞ் சொல்லிப் பாண்டவரை உதாசீனம்பண்ணி யிகழக் கேட்டு மன மகிழ்ந்திருந்தாய்; அஞ்ஞான்று நின்காதற்றோழன் கன்னன்*

*(பா-ம்.)* *1. வைதானே.*

பேசிய புருஷ வாக்கியங்களும் நீயறிவை; அவ்விடத்துப் புருஷ வாக்கிய முரைத்தமையும் அவன் பராக்கிரமங்களும் இன்று வீமார்ச்சுனர்முன் காட்டி அவரைத் தடுத்திலனே என்றும், இவ்வகையெல்லாம் வருவதெண்ணி முன்னமே உரைத்தேனை நீயன்று முனிந்தனை; இன்றுனக்கு விசனமாய்நின்றது என்றும் இவ்வகை நலத்தீங்கு கலந்துரைத்து, வீமார்சுனர் கோபாக்கினியா லவியப்படுவாரை நீ யின்னுங் கண்டுகொள்வாய்; நீ அதற்குத் தவிருவாயா கென்று யானும் என் ஆற்றலெல்லாங் கொண்டு தகையாநின்றே னென்றும், ஸ்ரீ வாசுதேவன் அருகு நிற்க இனி அவரை யாவராலும் யுத்த பூமியில் வெற்றி கொள்வ தரிதேயென்றும் இவ்வகை துரியோதனனைத் தேற்றிக் கோபாக்கினியால் மிக்கெழுந்து வருகின்ற அருச்சுனன்மேலே போயினான் ஸ்ரீ வீஷ்மனாகக் கருதுவது. அப்பொழுது முன்னைஞான்று பகதத்தனோடே அமர்மூட்டி அழிந்துபோயின கடோற்கசன் பொய்ம்மையாக நூறாயிரம் யானையும், நூறாயிரங் கடோற்கசரும் நூறாயிரம் பேய்க்கணங்களும் ஒருகையிற் சூலமும், ஒருகையிற் கொள்ளியுமாய்ச் சமரபூமி முழுதுந் தோன்றிக் கண்விளக்குப் பட்ட சர்வசேனைகளையு நாசஞ்செய்யாநின்றான். ஒருபால்,-

**601. பல்லா யிரம்பணத்தார் பல்லா யிரவராய்ப்**
**பல்லா யிரங்களிறும் பாய்மாவுங்-கொல்லு**
**மினமாயம் வல்ல விராவான் புகுந்து**
**சினமாயப் போரே சிறந்து.** (கஉ)

எ-து.- முன்னாட் களப்பலியாயின இராவான் பெற்றுக்கொண்ட ஸ்ரீ வாசுதேவன் பிரசாதத்தினால் எட்டாநாளை யுத்தம்பெற்று, ஆங்கவன் பிரசாதத்தினால் அஞ்ஞான்று யுத்தபூமி புகுந்து பல்லாயிரம் பணத்தலைகுலவ மணி வெயிலெறிப்ப மகாசேனை யித்தனையும் வேறுபடும்படி வெள்ளெயிற்றினர், செங்கண்ணினர், கருமேனியர், கருமனத்தினர், பலகறையன்ன பகுவாயினர், கவை நாவினர், பலவாளினர், பலசிலையினர், பலவேலினர், கோற்படையினர், இரத்தினகசித மகுடத்தின ராயினா ரெத்தனையோ ராயிர நாககுமாரரராய்த் தோன்றிச் சேனைமுற்றும் விநாசஞ்செய்ய எத்திசையிலுள்ளாரு மிரிந்திட்டனர். அதுகண்டு துரியோதனன், அவ்வளவி லிவ்வகைசெய்வா னிராவானென முன்னுணர்ந்து, முன்னம் பகனைக்கொன்ற சல்லியத்தினால் வீமசேனனுக்குப் பகைவனாவா னலம்புசனென்பானோ ரரக்கனை யழைத்து வீமசேனனையாதல் அவன் மரபினரையாதல் கொன்று உன்பகைதணித்துக் கொள்வாயாகென்றும், அருச்சுனன் மகன் இராவானைக் கொன்று என் சோகங்களைத் தீர்ப்பாயாகென்றும், யானுன் பகைவரான பாண்டவரைக் கொன்று தருவேன் என்றும் இவ்வகை தெருட்டி விடுத்து, மற்று அவனுக்குத்

துணையாக நூறுநூறாயிரம் இராக்ஷதர்களையும் கசதுரங்கபதாதிகளுடன் போக்க, அலம்புசனும் பிரியமெய்தி, என்பிரதிக்கினையை முடிக்கப் பெற்றேனென்று மிகவுங் கருவமெய்தி விரைந்துடன்போய்ச் சமரபூமியினின்ற இராவான்மேற்சென்று, தன்னால் அவனைத் தொலைக்கப்பெறாது தேருஞ் சிலையு மழிந்து புறகிட்டுப்போந்து, தங்கள் படைநிலையிற் சென்றடைந்தான் (அலம்புசன்) என்றவாறு. அப்பொழுது ஸ்ரீவாசுதேவன் அசரீரியா யலம்புசனிடைச்சென்று யாதருளிச்செய்தானோ வெனில்:-

602 விசயன்றன் சீர்மகனை வெல்லமன [1]துண்டா
லசைவற் றரக்களுடைக் கோவை-வசையற்ற
புள்ளரசா யோடிநீ பொன்றுவியா யென்றுரைத்தான்
கள்ளரச னாய்பிறந்தான் கண்டு. (கஙு)

இவ்வகை ஸ்ரீ வாசுதேவன் சென் றசரீரியாய் நின்று, இவன் நாககன்னிகையின் மகனாதலால், இவனைக் கொல்லும்பொழுது நீ கருடவுருக்கொண்டு வஞ்சித்துக் கொல்வாயாகென வருளிச்செய்யக் கேட்டு யாதுசெய்தா னலம்புசன்:-

603. மாயப் பெருவிறற்போர் மைந்தனைத்தான் வல்லமையான்
மாயத்தி னால்வெல்ல மாட்டாது-பாயத்தாற்
புள்ளரச னாய்வந்து தோன்றினான் போர்க்களத்தி
லொள்ளரசர் காண வுடன்று. (கசா)

இவ்வகை யலம்புசன் கருடனாக வோடுதலு மதுகண் டராவானுந் தான்கொண்ட நாகரூபந் தவிர்ந்து நடுக்கத்தோ டிடுக்கணெய்தி யேகசரீரமாய் நின்றானைக் கண்டு தன் னிலங்குவாளாற் றலைபுரள வெறிந்து சங்கரித்தார்த்தான் அலம்புச னென்றவாறு. (அராவான்பாடு) அப்பொழுது திரிந்திட்டது பாண்டவர் சேனை. ஒருபால்,-

604. வீரத் தனிக்கொடிமேல் [2]வேதம் வலனுயர்த்த
போர்வித் தகனும் [3]புதல்வனும்-போரிற்
பலரொழியச் [4]சென்றார்த்த பாஞ்சால ரெல்லாஞ்
சிலரொழியக் கொன்றார் செயிர்த்து. (கரு)

எ-து.- துரோணாசாரியனாலு மசுவத்தாமாவினாலும் பாஞ்சாலர்சேனை தரைப்பட்ட தென்றவாறு. ஒருபால்,-

(பா-ம்.) 1. உண்டாய், அசைவுற் றரக்கருடை கோவை. 2. வேதி வலனுயர்த்த. 3. புரவலனும். 4. சென்றார்த்தார்.

605. வெற்றித் தனிக்களத்தின் வேல்வேந்தர் பட்டவியக்
கொற்றத் தனிவில் குனித்திட்டு-முற்றுந்
திசையஞ்சி யோடத் தெரிசரங்கள் சிந்தி
விசையன்சேய் சென்றான் விரைந்து. (கூரு)

*எ-து.- அபிமன்னுவின் கோபாக்கினியாற் றுரியோதனன் சேனைவெள்ளம் வற்றாநின்ற தென்றவாறு. அப்பொழுது,-*

606. மன்னவனுந் தம்பியரு மாமனு மைத்துனனுங்
கன்மதிலைச் சூழ்ந்தார்த்த கார்முகில்போன்-முன்ன
முடைந்தார்க ளெல்லா மொருங்குடனே கூடி
யடைந்தார்கள் வீமன்மே லார்த்து. (கூசா)

*எ-து.- துரியோதனனும் பிராதாக்களுஞ் செயத்திரதனுஞ் சகுனியு முள்ளிட்டா ரெழுபதினாயிரந் தேராட்களுடன் சென்று வீமசேனனைச் சூழ்ந்துகொண்டு சரவருஷஞ்சொரிந் தபசயப் படுத்துமளவில் தேருமழித்து மற்றவன் சிங்கக்கொடியு நிலத்து வீழ்த்துத் தேர்ப்புரவிமேலுஞ் சாரதி மேலும் பொறபகழி பாய்ச்சி மேலுந் தாக்கினார். அப்பொழுது யாது செய்தான் வீமசேனன்:-*

607. அலைப்பட்ட வேலுழுவை [1]யாடவர்மேல் வீமன்
சிலைப்பட்ட வெஞ்சரங்கள் சிந்தித்-தலைப்பட்
டொருங்குடனே வீழ்ந்தா ரொளியவனுஞ் சென்று
கருங்கடலின் வீழ்ந்தான் கதித்து. (கூஅ)

*இரண்டாவது போர்மலைந்த பார்வேந்தன் பிராதாக்களி லேழுதேராட்களைக் கவசங்கிழியக் கலக்குறுத்துவதோர் பகழிபாய்ச்சித் தரணிதலத்து வீழ்த்து மற்றவருடன்வந்த க்ஷத்திரியரையும் அவியநூறிச் சிங்கநாதஞ் செய்தான் வீமசேனனாகக் கருதுவது. அவ்வளவில்,-*

608. நாழிகையிற் காற்கூறு தாழாது நாயிறுபோய்
வீழ விதியுடைய வேல்வேந்தே-வாழியரோ
[2]டேகாதே பையவே யிற்றைக் குளையாகிற்
போகாயோ வென்றான் புரிந்து. (கூகூ)

*ஆதித்தியபகவா னஸ்தமனங்கண்டு துரியோதனன் பட்டுப்படாத தம்பிமாருடனு மகாசேனையோடுங் கைவாங்கித் தன் பாடிவீடுநோக்கிப் போவானைக்கண்டு வீமசேனன் சொல்லுவான்: நின்னையும் நின் பிராதாக்களையும் ஒருநாழிகையிற் றரைப்படுத்துவனாகக் கருதினேன்; என்னைப் பிழைத் தாதித்திய னீண்டன்போ யத்தமித்தா னாதலா லுனக்கவன் சகாயஞ்செய்தான்.*

*(பா-ம்.) 1. ஆடரவின் வீமன். 2. ஏகாயே.*

ஆதலால் இனி யுன்மேற் றேர்விடுகிலேன்; நீ உன் சேனைபுடைசூழ மெள்ளப் போவாயாகென் றுரைத்து மீண்டும்போய்த் தன்படைநிலை புக்கான் (வீமசேனன்) என்றவாறு. அதுகண்டு தருமபுத்திரன்சேனை ஆர்த்தெழுந்து வீர முரசு முழக்கிட, வீரஸ்ரீ பொலிந்திலங்க வாகுத்தடித்து ஸ்ரீவாசுதேவ னினிமைபேசப் படைநிலை கைவாங்கித் தம் பாடிவீடு புக்காராகக் கருதுவது. இப்பால், துரியோதனன் யாதுசொல்லிப் பிரலாபித்தானோவெனில்:-

609. என்னெஞ்சம் [1]விட்டமுங்க வேதிலரால் வானடைந்தீ
ரின்னஞ் சிலரோடும் யானிருப்ப-மன்னர்
[2]பெருமானுந் தம்பியரே யென்றமுதான் பின்னைக்
குருநாடர் கோமான் குலைந்து. (உ0)

என்றிவ்வகை சொல்லிப் பிரலாபிக்கக்கேட்டு யாதுசொல்லிப் பிரலாபித்தான் திருதராட்டிரன்:-

610. மின்னாரம் பூண்ட விரைமார்பி லம்புவேல்
புண்வாய் திறக்கப் புரண்டீர்கண்-மன்னார்ந்த
பாண்டவரை யன்றி மறுத்தேன் செவிசுடா
வாண்டகைகாள் [3]பட்டீரே யாங்கு.. (உக)

இவ்வகை கேட்டுக் காந்தாரி யாது சொல்லிப் பிரலாபித்தாளோவெனில்:-

611. மல்லுக் குயர்ந்த மணிவயிரத் திண்டோள்கள்
வில்லுக் குடைந்தாங்கு வீழ்ந்தவெனச்-சொல்லுக்கே
[4]யீயொளித்த வாயா ளெழுந்து விழுந்தழுதாள்
வாயடித்துக் கைதலைமேல் வைத்து. (உஉ)

என்றிவ்வகை பிரலாபிப்பாளைக் கண்டு மற்றந்த விராசகுமாரர் தேவிமார் யாதுசொல்லிப் பிரலாபித்தாரோ வெனில்:-

612. ஆவா வெனவே யழுதாங் கலமந்து
போதாப் புவிமேற் புரண்டிட்டார்-தேவராற்
றைத்தடங்கும் வெள்வேற் றடங்கண்ணார் மாமிமேன்
மைத்தடங்க ணீர்சொரிந்தார் வந்து. (உங)

இவ்வகை பலவகைப்படக் கோயிலிற்கிடந்து புலம்புவாரை வீஷ்மனுந் துரோணனும் புகுந்து குருவசனஞ் சொல்லி யுலகியல்பு கூறித் தேற்றத் தேறினார் துரியோதனனு மற்றங் குள்ளாரு மாகக் கருதுவது. இப்பாற் சிறிதுபொழுது சிந்தித்திருந்து அற்றை யிராத்திரியின்கண் பட்டுப்படாத படைமன்னரு மீந்த தம்பிமாரும் புடைசூழப் பல பதினாயிரங் கைவிளக்குக் கலந்தெரிய விட்டுவிளங்காநின்ற

(பா-ம்.) 1. விட்டலங்க 2. பெருமான் றன் றம்பியரே. 3. பட்டீரோ வாங்கு. 4. ஈன்றொழித்த.

சபாமண்டபத் திருந்து கன்னனை யழைத்துவிட்டு யாதுசொன்னான் துரியோதனன்:-

613. கங்கைமகன் றன்பாற் கதந்தணிந்து வில்லேந்திப்
பொங்கு செருவிற் புகுதாயே-[1]லங்கண்
புடையெல்லாஞ் சூழ்ந்த புனனாட மற்றென்
படையெல்லா நாளைப் படும். (உ௬)

எ-து.- வீமசேனனென்னுங் காற்றினாலும் அருச்சுனனென்னு மக்கினியாலும் என் மகாசேனையென்னும் பெருங்காடு திவசந்தோறும் வெந்து போகாநின்றது. என் பிராதாக்களும் இற்றைவரையி லிருபதின்மர் வீமசேனனாற் கொல்லப்பட்டார்கள். இவ்வகை தளர்ந்துநின்றேனுக்கு நீ ஸ்ரீ வீஷ்மனிடையுள்ள காளையத்தினை யெமக்காகத் தவிர்ந்து நின் றடக்கையில் வில்லேந்தித் திண்டே ரேறி யுத்தமண்டலம் புகுந்து வேகாநின்ற சேனையை யஞ்சலென்று திவ்வியமான வம்பென்னும் நீர் முகந்து தடிகைமேகம் வருஷித்து அவியாயாகில், நானும் என் மகாசேனையும் நாளைப் பகற்பொழுதிற் படுகின்றோம் எனக்கேட்டு யாதுசொன்னான் கன்னன்:-

614. கமரழிந்த நீர்நாடன் காங்கெயன்வந் திங்க
ணமரொழிந்து புற்கவ்வு மாகி-லுமதுரிமை
மண்ணகமாய்ச் செய்தந்த [2]வாள்வேந்தர் தம்முரிமை
விண்ணமாய்ச் செய்வேன் விடிந்து. (உ௫)

எ-து.- நான் பின்னை யாயுதம்பிடித்து யுத்தபூமியிற் புகுதே னென்று பரராஷ்டிரத்து க்ஷத்திரிய ரனைவருங் காண ஸ்ரீ வீஷ்மன் புற்கவ்வுமாகிற் பாண்டவ ரனைவரையுங் கொன்று சத்துருசய முடித்துத் திரைலோக்கியங்களு முன்னதேயாகத் தப்பின்றியே நாளைத் தருவேன்; இதற்குச் சந்தேகமில்லை என வுக்கிரமான வுற்சாகத்துடன் கன்னன்பேசிய கட்டுரைகேட்டு மிகவும் பிரியமெய்திச் சிறிதுபொழுது சிந்தித்திருந்து பின்னைத் தன் பிராதாக்களிற் துச்சாசனனை யழைத்து யாதுசொன்னான் துரியோதனன்:-

615. மல்லிற் பொருதிண்டோள் வாள்வேந்த னங்கர்கோன்
சொல்லிற் படுஞ்சொற்கள் சோராதே-வில்லின்
மருவித்த திண்டோளான் வாழ்வேந்தன் மூதாதைக்
கறிவித்து வாவென்றா னாங்கு. (உ௬௱)

எ-து.- பிதாமகனாகிய ஸ்ரீவீஷ்மனுக்கு அங்கராசன் கன்னன் பேசிய வூக்கமுங் கட்டுரையு மறிவித்து வருவாயாகென்று சொல்லக்கேட்டுத் துச்சாசனனும்போய் ஸ்ரீவீஷ்மன்கோயிற் புகுந்து மற்றவனைக் கண்டு நமஸ்கரித்து யாதுசொன்னானோ வெனில்:-

(பா-ம்.) 1. அங்கை. 2. வாழ்வேந்தர்.

616. கொற்றவநின் பாதம் பணிந்தேயான் கூறுகின்றேன்
வெற்றி தருவதொரு விண்ணப்ப-மற்றெமக்கு
நற்செய்ய வேண்டுதியே னாணாது நாளையொரு
புற்கவ்வ வேண்டும் புரிந்து. (உஎ)

*எ-து.- கன்னனை நாளையளவுக்கு யுத்தபூமியிற் புகுதவிட்டு மற்றவனாற் செய்யப்பட்ட பராக்கிரமங்களைக் காண்பான்வேண்டிப் பார்வேந்தன் சருவ க்ஷத்திரியர் முன்பாக நின்னையொரு புற்கவ்வவேண்டுமென் றுரைத்து வாவென்று (வேந்தன்) விடுப்ப விடைபெற்று வந்தேன் என்று துச்சாசனன் சொல்லக்கேட்டு அளவில்லாததோர் கோபாக்கினி யெய்திப் பின்னுமதனி யவித்தடக்கி முறுவல்செய்து யாதுசொன்னான் ஸ்ரீவீஷ்மன்:-*

617. நாளை யளவென்போர் நாளை கழிந்ததற்பின்
காளை விசயன் கடுங்கணையால்-வாளமருண்
மாள்விக்க மாள்கின்றேன் மாண்டக்கா லங்கர்கோ
னாள்விக்க வாண்மி னரசு. (உஅ)

*எ-து.- வீமார்ச்சுனர் முன் யுத்தபூமியில் நிற்கவல்ல சத்தியுடையாரில்லை; மற்றவரை யாவராலும் வெல்லவொண்ணா தென்னுமிது தனக்குப் பலநாளுஞ் சபையகத் துரைத்துப் போதுவேன்; இன்று மிஃதுரைத்தேன். இதுநிற்க, வீமார்ச்சனர் கண்டுநிற்க எண்ணற்கரிய வதிரதரில் சுவேதனையும் அவனுள்ளிட்ட அறுபதினாயிரந் தேராட்களையுங் கொன்று தந்தேன். நாளை கழித்துப் பகற்பொழுதின் மத்தியானத் தளவில் இரு பதினாயிரந் தேராட்கள் என் கையாற் கொல்லப்படுவர். திவசந்தோறும் அறுபதினாயிரம் மகுடவர்த் தனரையுங் கொன்று தந்தேன். அதுவுமன்றி யாவராலுந் தங்கரிய ஸ்ரீவாசுதேவன் பிரதிக்கினை யழிந்து சக்கரம் வாங்கும்படி பலம் பண்ணினேன். இது சமரபூமியி னின்ற க்ஷத்திரியரனைவரு மறிவர். இன்னமுந் தன் சோறுண்ட கடன்கழிய நாளைப் பகற்பொழுதில் ஏனை வேந்த ரிருபதினாயிரவரைக் கொன்று குவித்துப் பத்தாநாளிற் பகல் நாழிகை மத்தியானத்தளவுஞ் சமரபூமியுள் நின்று என்னாற் செய்யத்தக்கன சருவ சத்தியெல்லாங் கொண்டு சத்துருபட்சத்தாரைத் தகைந்து சரவருஷஞ் சொரிந்த தருச்சுனன்கையி லடுசரங்களா லேவுண்டு மாள்கின்றே னாதலால், நீங்கள் நாளையளவு மெனக்காகப் பொறுத்தாற்றி நாளைகழிந்த பின் கன்னனாற் சத்துருசய முடித்து மற்றவன் றருகின்ற விராசயத்தினையு மினிதுடனிருந் தாண்மின் என்று ஸ்ரீ வீஷ்ம னுரைத்துத் துச்சாசனனுக்கு விடைகொடுப்ப மற்றவனும் போய்த் துரியோதனனைக் கண்டு ஸ்ரீ வீஷ்மனுரைத்த வெவ்வுரையும் பராக்கிரமங்களும் அவனாற் செய்யப் பட்ட விசயங்களும் மற்று முற்றவார்த்தை யனைத்து முரைப்பக் கேட்டு வியாகுலமெய்தி அற்றை யிராத்திரியின்கண் துயில்துறந்தா னிராசராசன் துரியோதனனென்றவாறு. இப்பால், ஸ்ரீ வீஷ்மனும் உதயகால மொருசாமமெனத் தொலையா வூக்கத்துடன் கொலையானை யென்னப் பள்ளி கொள்ளப் புக்கானாகக் கருதுவது.*

**எட்டாநாட்போர் முற்றும்**

****

# ஒன்பதாநாட்போர்

618. அரிநாம மாதரியா [1]வாதர்காண் முன்ன
மொருநாம நீர்வேண்டிற் [2]றோதிர்-வருநாள்கள்
வாக்கினால் வைத்துரைக்க [3]வல்லீரேல் வான்பிறவி
போக்குவான் றாளே புணை. (க)

*இவ்வகை கடவுள்வாழ்த்து.*

619. பைய விருளோடிப் பாய்கதிரோன் பொற்கடலில்
[4]வெய்ய கதிர்தோன்றி விட்டெறிப்ப-வெய்யமுனைப்
போர்வேந்த ரார்த்துப் பொருகளங்கைக் கொண்டார்கள்
பார்வேந்த ரெல்லாம் பரந்து. (உ)

*இவ்வகை யன்றுகழித்த மற்றைநா ளாதித்தியபகவா னுதயகாலங் கண்டு களித்தெழுந் திரண்டுபடையும் பள்ளியெழுந்து வந்து சமரபூமியை நோக்கி யாது செய்தாரோவெனில்:-*

620. வீரர் களிறேற வேந்தர்கள்பொற் றேரேறப்
போர்கெழுமி வெஞ்சிலைநாண் பூட்டேற-வார்முரச
மார்ப்பேற வேயிளைஞ ரம்பு மயில்வாளுங்
கூர்ப்பேற வேறினார் கூர்ந்து. (ந)

*இவ்வகை யிரண்டுபடையுங் படைக்கலங்க ளலங்கரித்துக் கச துரங்க மேல்கொண்டு விரைந்துடன்போய்ச் சமரபூமிபுகுந்து தலைப்பெய்து தம் மொடுதாந் தாக்கினார். அவ்வளவில்,-*

621. வெற்றித்தேர் வீமன்றன் மேலே விறலரக்கர்
கொற்றத் தரசன் கொதித்தெழுந்து-பற்றிச்
சிலம்பதனைக் கொண்டெறியச் சேண்விசும்பி லாற்றி
யலம்புதனைக் கொன்றா னழித்து. (சு)

*எ-து.- தடவரையி லொருசிகர முறித் தெறியவந்த னலம்புதனைக் கண்டு ஒரு திவ்வியாஸ்திரங் கொண்டு ஆகாசத்தே தூளியாக வெய்து தலை துமித்து வீழ்த்துச் சமரகோஷஞ்செய்தான் வீமசேன னென்றவாறு. அப்பொழுது, அலம்புதன் பட்டமைகண்டு கனலெழ விழித்துத் துரியோதனன் வெகுளியெய்தி (மற்றவன்மேல்) எத்தனையோ ராயிர மத்த கசங்களைக் கொண்டு நூறாயிரந் தேராட்களுடன் வீமசேனனை நெருக்கலுற்றான். அப்பொழுது யாதுசெய்தான் வீமசேனன்:-*

---

*(பா-ம்.) 1. ஆதுலர்கண் முன்னம். 2. ஓதி. 3.* வல்லீரோ வான்.
*4. செய்ய.*

622. காலக் களமென்னு மம்மிமேற் கைம்முகந்து
கோலத்தண் டென்னுங் குழவியான்-மேவிட்
டரைத்தான் களிறெல்லா மாங்குருதி நீரா
விரைத்தானத் தேரோ டெடுத்து. (ரு)

*எ-து.- துரியோதனன் பெருஞ்சேனையையு மவர்களாற் கொணரப்பட்ட களிற்றீட்டத்தினையுங் கண்டு களித்து வாகுத்தடித்துத் தண்டாயுதத்தால் யானைக்குழாங்களைச் சிதறுவித்து, அவனிதல மம்மியாகத் தன்கையிற் கோற்றண்டு குழவியாகக் குருதிநீர்கொண் டரைத்து யுத்தகள முழுது முருமேறெனத் திரிந்தான் வீமசேன னென்றவாறு.*

623. கைபோற் சிலைகுனியக் கங்கைதரு காவலன்முன்
மெய்போற் றருமன் வெளிப்பட்டான்-மைசே
ரருவரைமேற் கொள்கின்ற வாளரிபோற் றேர்க
ளிருவருமேற் கொண்டா ரெதிர்ந்து. (சு)

*இப்பால், தருமபுத்திரனும் ஸ்ரீவீஷ்மனு மொருபாற் றலைப்பெய்து தாக்கினார். அப்பொழுது அருவரைமே லிரண்டு சிங்க மெதிர்ந்தாற்போலத் தாக்கி யொன்றிரண்டு நாராசத்தாற் றருமபுத்திரன் மார்பில் ஸ்ரீவீஷ்ம னெய்யக்கண்டு தருமபுத்திரன் யாதுசெய்தான்:-*

624. கொற்றக் கொடிமுரசங் கொண்டான் கொடுஞ்சிலைநா
[1]ணற்றப் படும்வண்ண மாங்கெய்ய-வெற்றிவேல்
விட்டெறிந்தான் காங்கெயனை வெய்ய செருக்களத்தே
விட்டெறிந்தா னாங்கே வெகுண்டு. (எ)

*எ-து.- முன்னம் ஸ்ரீ வீஷ்மனால் வில்லறுப்புண்டு விளிந்துபோன தரும புத்திரன் ஸ்ரீ வீஷ்மன் மார்பி லொரு வேலிட் டெறிந்து குருதிநீர் சோரக் கண்டு வெறுங்கையே நின்றானாகக் கருதுவது. அவ்வளவில்,-*

625. பல்லா யிரம்பரித்தேர்ப் பாஞ்சால ருள்ளிட்டா
ரெல்லாருஞ் சென்றங் கெதிர்ந்தார்கள்-வில்லால்
வருகதிர்மேற் சென்றாலு மாமேகம் போலக்
குருபதிமேற் சென்றார் கொதித்து. (அ)

*இவ்வகை தருமபுத்திரனுக்குத் துணைசெய்வாராகப் பாஞ்சாலர் கூட்டமுந் திட்டத்துய்மனும் க்ஷத்திரதேவனுஞ் சேதிதானனுஞ் சிகண்டியு மாகச் சென்று மகாசேனையைக் கைதுரந்து சரவருஷஞ் சொரிந்தார். அப்பொழுது யாதுசெய்தான் ஸ்ரீவீஷ்மன்:-*

*(பா-ம்.) 1. அற்றுப்படுவண்ணம்.*

626. பூஞ்சாலி மச்சத்தார் போர்வேந்தன் றம்பியையும்
பாஞ்சாலர் பல்லா யிரவரையுந்-[1]தேஞ்சாலி
பொன்றொடுக்குஞ் சோலைப் புனனாடர் காணவே
[2]கொன்றுழக்கி நின்றான் கொதித்து. (௬௯)

*எ-து.- பாஞ்சாலரையும் விராடராசன்றம்பி சதானிகனையு முள்ளிட்ட யுத்த வீரரையுங் கொன்றுழக்கி வீமார்ச்சுன ரிருவருங் கண்டுநிற்க வெம் பெரும்படையைக் கொன்று குவித்தான் ஸ்ரீவீஷ்ம னென்றவாறு. அப்பொழுது யாதுசெய்தான் அருச்சுனன்:-*

627. தொடுத்த கணைமாரி தூவினா னெங்கு
மடுத்து பிணக்குவையாய் வீழ-மடுத்த
கடற்போற் பசுங்குருதி கானாறா யோட
வடற்போர் விசய னமர்ந்து. (௭௦)

*எ-து.- ஸ்ரீ வீஷ்மனைச் சூழ்ந்துநின்ற சர்வ க்ஷத்திரியரையுஞ் சரபட லங்களாற் சிதறுவித்துக் களிறுந்தேருங் களத்தவியக் கலக்குறுத்தி யோமுகனையும் யூபலாக்ஷனையும் இழிகுருதியி லொழுக்குவித்துத் திசாமுகங்களைச் செவிடுபடுத்தி ஆகாசமு மவனிதலமுந் தோன்றாவகை சரவருஷஞ் சொரிந்தார்க்கின்ற அருச்சுனனா னிலையாற்றாது புறகிட்டது துரியோதனன் சேனை யென்றவாறு. அவ்வளவில்,-*

628. ஆனையொடு தேர்மா வரசர் பலரவியச்
சேனை யுடைந்து செலக்கண்டே-யேனைப்
பொருங்கடலில் வந்துதித்த பொற்கதிரோன் மேலைக்
கருங்கடலில் வீழ்ந்தான் கலந்து. (௭௧)

*இவ்வகை யாதித்தியபகவா னஸ்தமன பருவதஞ் சேரக்கண்டு படையிரண்டுங் கைவாங்கித் தம் பாடிவீடு புக்காராகக் கருதுவது.*

ஒன்பதாநாட்போர் முற்றும்

* * * * *

## பத்தாநாட்போர்

### கடவுள்வாழ்த்து

629. முப்பொழுதாய் மூன்றுலகாய் மூவுருவாய் நின்றானைச்
சொற்பழுது சொல்லாமற் சொல்லுதியே-யெப்பொழுது
மாதவன்றா ளேத்தி மறவாம னீமனமே
யோத [3]வந்தென் னுள்ளே யுறும். (௧)

*(பா-ம்.) 1. பூஞ்சாலி. 2. கொன்றொடுக்கி. 3. வந்துன்னுள்ளே.*

630. மாக்களிறும் பாய்மாவு மான்றேருந் தாஞ்சூழப்
போர்க்கெழுந்து வெஞ்சிலைநாண் பூட்டேற்றி-வேற்களுமே
தங்களங்கைக் கொண்டுடன்று தார்வேந்த ரெல்லாரும்
வெங்களங்கைக் கொண்டார் வெடிந்து. (உ)

அன்றுகழித்த மற்றைநா ளாதித்தியபகவா னுதயகாலங்கண் டிரண்டு படையும் பள்ளியெழுந்து யுத்தகளம் புகுந்தன. அப்பொழுது யாதுசெய்தான் ஸ்ரீ வீஷ்மன்: மகானுபாவனாய், திரிகாலஞானனாய்ச் செல்காலம் வருங்கால மறிந்து வாழ்கின்றானாதலா லன்று தனக்குச் சொர்க்கமன திவசமெனக் குறித்துத் தன் கோயிலுள்ளிருந்து ஏகசரீரியாய்த் தன்னனுஷ்டா னங்களெவையு முடித்துப்போந்து, ஒருதனி சபாமண்டபத்தினிதிருந்து, எத்தனையோ ராயிரம் பிராமணரை யழைத்துச் சகல சாத்திரங்களாற் சடங்கு செய்து தடக்கை நீர்கொண்ட வடக்கு நோக்கிப் புஷ்பவிருஷ்டி பொழிந்து பஞ்சேந்திரியங்களை யொருக்கி யாதுசொல்லித் தியானித்தானோவெனில்:-

631. ஆக்கை [1]குலைந்திட் டனைத்தெலும்புங் கைவிட்டுக்
காக்கை பருந்து கலவாமுன்-னோக்கிக்
கருமாலை மாற்றிக் கருதிமட நெஞ்சே
திருமாலை யேத்தாய் தெளிந்து. (௩)

இவ்வகை தேவதேவன் விக்கிரமமூர்த்தி பத்தவற்சலன் சக்கரபாணி ஸ்ரீ நாராயணசுவாமி ஸ்ரீபாதங்களைத் தியானித்துத் தன்னிருதயத்தினை வேண்டிக்கொண் டொருப்பட் டெத்தனையோ ராயிரம் பிராமணர்க்குக் கோதானம் பூதானம் பண்ணி யின்சொலுடன் விப்பிரர் கூட்டங்களைக் கைதொழுது விடைகொண்டு அஸ்திரசஸ்திர சாலை புகுந்து சருவாயுதங்களையுங் கைதொழுதெடுத்து அலங்கரித்துத் தன் மணிநெடுந் தேறேித் தலைத்திராணமும் வீரப்புட்டிலும் புனைந் தெம்மருங்குங் கவசப்பிரபை கலந்தெறிப்ப வீராபரணங்கள் வெயிலெறிப்பச் சர்வக்ஷத்திரியருஞ் சூழ்ந்து சேவைபண்ணத் தவளசத்திர மேனிழற்றத் தடக்கைவே னின்றிலங்க வெழின்மணிக் கவரி காலசைப்ப வெழும் பனைக்கொடி விசும்பணுவ விமையோர் கூட்ட மெதிர்நோக்கக் கசதுரங்கபதாதி நெருக்கலுறச் சங்கு பேரிகை முதலாகிய வணிகலன்கள் பஞ்சமகாசத்த முழங்கத் தாளுந் தோளு மிடந்துடிப்பத் தடந்தேர்மிசை வீரசிங்கம்போல யுத்தவீரருடன் வந்து சமரபூமி புகுந்து தன் மகாசேனையைச் [2]சருப்பதோபத்திரமென்னும் யூகம் வகுத்துத் தூசி முகத்தின்கண் மகாமேருவைப்போலே நின்றான் அதிரதரின் முன்றோன்றல் ஸ்ரீவீஷ்மன் என்றவாறு. அதுகண்டு தருமபுத்திரன் சேனையைப் [3]பதுமராகமென்னும் யூகம் வகுத்துநின்றான்

(பா-ம்.) 1. குலைந்தே யனைத். 2. பதுமராகமென்னும்.
3. கிரவுஞ்சமென்னும்

திட்டத்துய்மனாகக் கருதுவது. இவ்வகை யிரண்டுபடையுஞ் சமரபூமிபுகுந்து பண்ணும் வகுப்புமாக நின்றவளவில் யாதுநிகழ்ந்ததோவெனில்:-

632. பொன்னுந் துகிலும் புனைமணியும் பொற்பூணு
மின்னும் பிறவெண் ணிவையெல்லா-மன்னு
மறையவர்க்குச் செய்கின்ற மாதானஞ் செய்தா
னறையுலக மாள்வா னமர்ந்து. (சு)

இவ்வகை மகாதானம் பண்ணிக் கச துரங்க பதாதி புடைசூழ நின்ற ஸ்ரீவீஷ்மனைக் கண்டு பிரியமெய்தி யருச்சுனனுக்குக் காட்டி யாதருளிச்செய் தான் ஸ்ரீவாசுதேவன்:-

633. நின்ற குலமதலை நின்னுடைய மூதாதை
வென்றி விசயாநின் வெங்கணையா-லின்று
கொலப்படா னாகிலிக் கோமதலை [1]நம்மால்
வெலப்படா னென்றான் விரைந்து. (ரு)

தூசிமுகத்திண்கண் உருமேறென நின்ற ஸ்ரீவீஷ்மனை யின்றுமாலை யந்தி யளவில் திவ்வியாஸ்திரங்களாற் சொர்க்கலோகத்துக்குப் போகவிடாயாகில், மகாசேனைக்கும் நமக்கு மிவனே கூற்றமாங்கண்டா யென்றும், மூதாதையென்று கருணையெய்தாதே யீண்ட னிவனைப் போர்மலைந்து போக்குமது வல்லாது யாவராலு மின்றிற்பின்னை வெற்றிகொள்ள வரிதுகண்டா யென்று மிவ்வகை ஸ்ரீவாசுதேவ னருளிச்செய்யக் கேட்டு யாது விண்ணப்பஞ்செய்தா னருச்சுனன்:-

634. மாக்கொடியுந் தேரும் வளைசிலையுந் தூணியுந்
தீக்கடவு ளீந்தானீ தேர்ப்பாகன்-றாக்குவனேல்
விண்ணரச ரோடே வெகுள்வன் றிருமாலே
மண்ணரச ரோவெனக்கு மாறு. (சுா)

எ-து.- தேவேந்திரன் காண்டாவனத்தை யக்கினிதேவனுக் கிரையூட்டு கின்றநாளி லவனாற் றரப்பட்ட தேருங் கொடியுந் தூணியுங் காண்டீபமென்னும் வில்லு மிவை திரிமூர்த்திகளாலு மழிக்கப்படா; சருவப்பிராணிகளுக்குந் தேவாசுரர்க்குஞ் சாமியாயுள்ள வெம்பெருமானே! நின்னைச் சாரதியாக வுடையேன்; இப்படிக்கொத்த வெனக்கு, யக்ஷ ராக்ஷத கந்தருவ சித்த கருட கின்னர கிம்புருட ரென்கின்றாரு மெதிரல்லாராதலால், மனுஷர் ஒருபொருளாக விவ்வகை யெல்லா மருளுமதோவென்று மிகவெகுண்டு தன்கடவுட் சிலையினை

(பா-ம்.) 1. எம்மால்.

ஜ்யாகோஷஞ்செய்து கதுமெனத் தேரோட்டி ஸ்ரீ வீஷ்மன்மேற் சென்று தாக்கினா னருச்சுனன். அப்பொழுது,-

635. குரக்குக் கொடியின்மேற் கூவியம்பா லெய்து
[1]சரத்துக் குழுவுபல தாக்கி-யரக்கரைமுன்
முக்கோடி வென்றான்மேன் மூடும் படிபொழிந்தான்
மிக்கொடி வீரன் வெகுண்டு. (எ)

அன்றியும்,

636. தெய்வப் படையாலுஞ் செஞ்சரங்க டம்மாலுங்
கவ்வைக் கலிவிசும்பு காட்டினான்-பவ்வ
முனையா வெதிரெழுந்த மூரித்தேர் மன்ன
ரெனையா யிரவரையு மின்று. (அ)

இவ்வகை ஸ்ரீ வீஷ்மனால் விடப்பட்ட சரவருஷங்களையுந் திவ்வியாஸ் திரங்களையுந் தன் னயில்வா யம்புகொண்டு (அவையிற்றை) ஆகாசத்தே யறுத்து மாற்றிப் பின்னும் யாதுசெய்தா னருச்சுனன்:-

637. சிலையுங் கொடியுஞ் சினமாவுந் தேரு
மலையுங் கணைமாரி பெய்தான்-கொலைவிற்
கடுஞ்சின மால்யானைக் காவலர்கோன் மேலு
நெடுஞ்சிலைநரண் [2]காலலைப்ப நின்று. (கூ)

எ-து.- ஸ்ரீ வீஷ்மன் மேலும் வெஞ்சிலையின் மேலும் பனைக்கொடி மேலும் புனைமணிநெடுந்தேர் மேலுஞ் சரபடலம் பொழிந் தெண்டிசையுந் தலைபனிப்ப மகாயுத்தம் விளைத்திட்டா னருச்சுனனாகக் கருதுவது. ஒரு பால்,-

638. வாங்கு திரைப்பரவை வாள்வேந்தர் தாமெண்மர்
வீங்கு புயல்போல வில்வளையா-வோங்கு
பலவேந்தர் தம்மோடு பாஞ்சாலர் வெள்ளங்
குலவேந்தைச் சூழ்ந்தார் கொதித்து. (கo)

எ-து.- குந்திபோசனும் பாஞ்சால ராசனுங் கைகய ராசனுங் கடோற்கசனும் அஞ்சனவர்மாவுஞ் சத்திய சாத்தகியும் பஞ்சத்துரோபதியருஞ் சோமகருஞ் சிஞ்சையருந் திட்டத்துய்மனுந் துஷ்டகேதுவும் அபிமன்னுவும் பாண்டியராசனு முள்ளிட்ட வநேக ராஷ்டிரத்து க்ஷத்திரியரோடும் விசிஷ்டமான சேனையோடுஞ் சென்று நெருக்கி யழித்து மண்டித்துரப்பி யிருவிசும்புந் திசையுமறைப்பச் சரவருஷஞ் சொரிந்து மூடித் திளைத்துக் கொண்டார். அப்பொழுது,-

(பா-ம்.) 1. சரத்துக்குழனி ; சரத்துத்துழனி. 2. காதலைப்ப.

639. கடகிடிந்து மீன்விழுந்து கண்கழன்று மின்னிச்
சுடரு மொளிமழுங்கித் தோன்றிக்-கொடுநிமித்தம்
விண்ணகத்துத் தோனறினவே வேல்வேந்தர்க் [1]கெத்தனையுங்
கண்ணகத்த வாகக் கலந்து. (கக)

இவ்வகை ஸ்ரீ வீஷ்மனுக் குற்பாதம் பல தோன்றின. ஒண்சுடரை யூர்வளைந்தது. உருமுக்குரல் பல வதிர்ந்தது. சரவருஷம் பொழிந்திட்டது. குறைமாருதஞ் சுழித்தெறிந்தது. பருதிமண்டல மிருளாய்த்தோன்றிற்று. மத்தமாவும் பரிமாவுந் தேர்மாவுங் குருதி சோருங் கண்ணின வாயின. காகபந்தங் கலந்தார்த்தன. கண்ணுந் தோளு மிடந்துடித்தன. கூகைக் குரல் குழறியிட்டது. ஓரிக்குரல் பெருகியிட்டது. வில்லுங் கணையும் விழுந்துகாட்டின. செம்முக மெல்லாஞ் சுளிமுகமாய் மண்ணகத்தும் விண்ணகத்துந் துன்னிமித்தம் பல தோன்றின வென்றவாறு. இவ்வகை தோன்றின வுற்பாதங்கள் பலவுங்கண் டினிப் படுகை நிச்சயமாமென்று கருதிச் சூழ்ந்துகொண்ட மகாசேனையைப் பிரத்தியக்ஷமாகவே நின் றுயிர் பருகுங் கூற்றேபோலவும், லோகாலோகங்களைத் தகிக்கலுற்ற வூழித்தீப்போலவுந் தகித்தான். அன்றி, மத்தியானத்தி லாகாயத்தின்கண் சூரியமண்டலங் காண்டற் கரிதாகியவாறே போல யாவர்க்குங் காண்டற் கரிதாகிநின்ற ஸ்ரீ வீஷ்மனுக்குத் துணையாக யாதுசெய்தான் துரியோதனன்:-

640. காங்கேயன் றன்றனிமை கண்டு படைத்தலைவீர்
பாங்கோடும் [2]போரேன்ற பார்வேந்தீர்-நீங்களெலா
மாங்கவனைக் கால்காப்ப வாடமருட் செல்கென்றான்
வீங்கெழிற்றோள் வேந்தன் விரைந்து. (கஉ)

எ-து.- ஸ்ரீ வீஷ்மன் றனிமை கண்டு சத்தியவீரனையுஞ் சல்லியனையுங் கிருபனையுங் கிருதவர்மாவையுஞ் சயத்திரதனையு முப்பத்தொன்பதின்மர் தம்பிமாரையு மெத்தனையோ ராயிரம் பதாதிகளையுந் துரியோதனனேவ மற்றவர்களும் வந்து ஸ்ரீ வீஷ்மன் முன் புகுந்து அருச்சுனனுடனே தாக்கினார். அப்பொழுது யாது செய்தான் வீமசேனன்:-

641. மொய்தா ரொலிப்ப முரட்டண்டு கொண்டிழிந்து
செய்தார் கடாக்களிற்றுத் தோர்வேந்த-ரெய்தார்த்து
முன்பிலா ரானாரை மூதாதைக் கெத்தனையும்
பின்பிலா ராக்குவித்தான் பேர்ந்து. (கங)

(பா-ம்.) 1. எத்திசையுங். 2. போர்வென்ற.

எ-து.- அருச்சுனனுக்குத் துணையாகக் கதிர்முனை வயிரத்தண்டு கைக்கொண்டு அதிர்குரலெழுப்பி மணித்தேரினின் றிழியப்பாய்ந்து (வீமசேனன்) சென்றெய்தி ஸ்ரீ வீஷ்மனைக் காத்தாரையெல்லாங் கலக்குறுத்தி மேகபடலங்களைக் கடுவளி துரந்தாற்போல மகாசேனையைத் துரந்து (கொல்லாநிற்ப) நிலையாற்றாது புறகிடுவித்துப் போர்மலைந்து ஸ்ரீ வீஷ்மனைத் தனியாக்கினான் வாயுபுத்திரன் வீமசேன னென்றவாறு. அதுகண்டு,-

642. தொடலரிய நாகந் துகிற்கொடிமேற் கொண்ட
வடலரசன் றம்பிமா ரைவர்-கடல்வலயம்
வென்றானை வென்றானை வீரக் கடன்கழிப்ப
நின்றானை நீங்கிற் றிலர். (சுச)

எ-து.- துரியோதனன் றம்பிமாரில் துச்சாசனனுந் துன்முகனுஞ் சித்திரசேனனுஞ் சித்திராயுதனும் விவிம்சதியு மென்பா ரைவர் தேராட்கள், பெரும்படை யிரிந்தோடவும் ஸ்ரீ வீஷ்மனைக் கைகலந்து காத்தா ரென்றவாறு. அதுகண்டு யாதுசெய்தான் தருமபுத்திரன்:-

643. ஆய்ந்து பணித்தான் றமரை யரவுயர்த்த
வேந்தன் றனிவிடுக்கும் வில்லாட்க-ளேந்தியதோர்
[1]மொய்தாற்றுப் பூம்பெண்ணை முன்னுயர்த்த கோமானோ
[2]டெய்தாமற் காமின்க ளென்று. (சுரு)

எ-து.- துரியோதனனால் விடுக்கப்பட்ட பல படைகளும் வந்து ஸ்ரீ வீஷ்மனுக் குதவாமுன்னம் போய்க் காப்பீரென்று சுதக்ஷிணனையுஞ் சாத்தகியையுந் திட்டத்துய்மனையு மபிமன்னுவையும் க்ஷத்திரதேவனையுங் கடோற்கசனையும் விராடராசனையுந் திருஷ்டகேதுவையும் நகுல சகாதேவரையுங் கைகயராசனையுங் காலிங்கராசனையுஞ் சுராஷ்டிரரையுஞ் சேர சோழ பாண்டியரையு முள்ளிட்ட வரசர்களையும் வீமசேனனையும் பண்டு ஸ்ரீ வீஷ்மனாற் பட்டுலர்கின்ற சிகண்டியை முன்னீடாகக் கொண்டு போமி னென்று விடுக்க, ஸ்ரீ வாசுதேவனும் வடிக்கயிறு முட்கோலும் வழுவாமற் பிடித்துச் செறி களம்பிற் சுவேதாசுவங்களை முடுக வேலித் துரக கதியைக் குறிக்கொடுத்துத் தமனிய மணித்தேரை முடுகவிட்டுச் சேருமளவில் சிகண்டி சென்று யாதுசெய்ய ஸ்ரீ வீஷ்மன் யாதுசெய்தானோ வெனில்:-

644. திண்ணென் சிலைகுனித்துச் சென்ற சிகண்டியுமே
[3]யெண்ணென் றெதிர்வாளி யேவுதலுங்-கன்னலெலாம்

(பா-ம்.) 1. மொய்யாரும். 2. எய்தாமுன். 3. எண்ணின்று.

**வண்டருந்தும் பூம் [1]பொதும்பர் வைகுந் திருநாடன்**
**[2]கண்டறிந்து வைத்தான் கணை.** (கசு)

இவ்வகை சென்று தாக்கின சிகண்டியைக் கண்டு முறுவலித்துத் தன்னாயுதம்போட்டு நிராயுதனாய் நின்றான் ஸ்ரீ வீஷ்மன். அப்பொழுது,-

**645. நிகரடும்போர் மீளி நிராயுதனாய் நிற்பப்**
**புகரடம்போர் போர்க்கோல வேங்கை-யுகிரொடிந்து**
**பல்வின்றி நின்றதன்மேற் பாய்ந்தனபோற் பட்டனவே**
**வில்லின்றி நின்றான் மிசை.** (கஎ)

*எ-து.- ஸ்ரீ வீஷ்மன்மேற் சில பாணதாரை விட்டான் சிகண்டி; அவ்வளவி லருச்சுனன் காண்டீபஞ் சாலவளைய யாது நிகழ்ந்ததோ வெனில்:-*

**646. திகழு மொளிமான்மேற் சென்று சிகண்டி**
**பகழி யொடுவிரவிப் பாயப்-பகழியினாற்**
**றீயெரியா விண்ணெரியாத் தேவர்கோன் காவெல்லாங்**
**காயெரியா வீழ்த்தான் கணை.** (கஅ)

*இவ்வகை சிகண்டியால் விடப்பட்ட சரபடலங்களுட னருச்சுனன் திவ்யாஸ்திரங்கள் விரவிப்பாய்தலின், உருவிப்போகின்ற வம்பைப் பிடித்துப் பார்த்துச் சிகண்டியை நோக்கி யாதுசொன்னான் ஸ்ரீ வீஷ்மன்:-*

**647. மூங்கி லிடைப்பிறந்த மொய்யெரித்தீத் தான்பிறந்த**
**தூங்கு படரதனைச் சுட்டாற்போல்-வீங்கெழிற்றோ**
**ளென்மகனம் [3]பென்னைப் படுக்குமே பாஞ்சாலன்**
**வன்மகனம் பேறாதென் மார்பு.** (கசு)

*எ-து.- மூங்கிலிடைப் பிறந்த தீ மூங்கிலைத் தானே சுட்டாற்போல வென்மகன் காண்டீபத்தாற் கடாவப்பட்ட சரபடலங்க ளென்னைச் சுடுகின்றனவே யொழிய, சிகண்டி! நின்னால் விடப்பட்ட சரங்க ளென்னைச் சிறிதுஞ் செய்யவொண்ணுமோ வென்று சொல்லுமளவில் பர்வதத்தைச் சூழ்ந்து கொண்டு பயோதரங்கள் வருஷித்தாற்போலச் சருவக்ஷத்திரியருஞ் சூழ்ந்து சரவருஷஞ் சொரியலுற்றார். அப்பொழுது பரிகரத்தின் பரிவேஷணமும் ஸ்ரீவீஷ்ம னிராயுதமுங் கண்டு துச்சாசனன் யாதுசெய்தானோ வெனில்:-*

*(பா-ம்.) 1. பொதும்பில். 2. கண்டனுங்கி. 3. என்னை யடுகின்ற; என்னைப் படுக்கிற்கும்.*

648. சென்றேன்று சீகண்டி தேர்மேலு மார்மேலுங்
குன்றேந்து சோலைக் குருநாட-னின்றேந்து
வில்லரசின் வன்னாணின் வெவ்வாளி மேற்கொண்டு
துல்லரச னெய்தான் சுளிந்து. (உ0)

*துச்சாசனன் முனிந்து சிகண்டி வக்ஷத்தலத் துருவ வொரு திவ்யாஸ்திரந் தொடுத்துவிட் டாங்கவன் வில்லுந் தேருங் கொடியு மழிய வெய் தவன் றளர்ந்துபோமளவில் ஸ்ரீவீஷ்ம னதிரோஷிதனா யாதுசெய்தான்:-*

649. குலக்குதிரை மேலுங் கொடிக்குரங்கின் மேலும்
வெலற்கரிய தேர்ப்பாகன் மேலு-மலைத்த
கடுஞ்சிலையான் றன்மேலுங் காய்கணைக டூர்த்தா
னெடுஞ்சிலைநாண் [1]காலலைப்ப நின்று. (உக)

*எ-து.- சிகண்டி புறகிட்டோடுதலும் ஸ்ரீவீஷ்மனுங் கதுமெனத் தன்னுடைய வெஞ்சிலையை எடுத்துக்கொண்டு வானரதுவசத்தின் மேலுஞ் சுவேதாசுவங்கண்மேலும் ஸ்ரீவாசுதேவன்மேலு மருச்சுனன்மேலு மவனைச் சூழ்ந்து நின்ற சருவ க்ஷத்திரியர் மேலும் பாணதாரை வருஷிக்க, காண்டீ பத்தாற் கடாவப்பட்ட சரங்களாலுங் காவனில்லாது கவசம் பிளப்புண்டுருவிப் போகலி னிதுகண்டு யாதுசெய்தா னருச்சுனன்:-*

650. பரிகடவிப் போர்நின்ற பன்மணித்தேர்ப் பாகன்
றிரு [2]வுடலிற் செஞ்சோரி நோக்கிப்-புருவக்
கருங்கடையும் [3]வில்லு மறவளைத்தான் றாதை
யருங்கொடியும் வில்ல மற. (உஉ)

*வீமசேனன் கோபாக்கினியாற் சிலைவட்டங் கடந்துபுக்கு ஸ்ரீவீஷ்மனைக் காக்கமாட்டாது நின்ற துரியோதனனுந் துரோணாசாரியனும் அசுவத்தாமாவுங் கிருதவர்மாவுங் கண்டு நிற்கவே, தேர்பூண்ட புரவிகளை நிலத்து வீழ்த்துத் தலைத்திராணமும் போர்வெஞ்சிலையு மறுத்து வீழ்த்து மகாகோஷஞ் செய்தா னருச்சுனன். அப்பொழுது,-*

651. வெவ்வாளி யைஞ்ஞூறு [4]விண்ணாடன் சேய்கொண்டு
நெய்வாளி தானெங்கு நேர்நிறுத்திச்-[5]செவ்வாளிச்
சேய்கண்டி யென்னுஞ் சிலைக்குச் சரங்கொண்டு
சீகண்டி வந்தான் றெளிந்து. (உரு)

*(பா-ம்.) 1. காதலப்ப. 2. உடம்பிற். 3. வில்லம் வளைத்தான்மு தாதை. 4. வில்லாளன் றான்கொண்டு. 5. செவ்வாளி, சேகண்டி யென்னச் சிலைக்குச்.*

*எ-து.-* சிகண்டி மெய்தெளிந் தடற்றேரோட்டிவந்து தேவப்பிரசாதன் ஸ்ரீவீஷ்மனை நிராயுதனாக்கினான். அவ்வளவில் அருச்சுனன் சரவருஷஞ் சொரிய ஸ்ரீ வீஷ்மனும் ஆங்கதனை வெல்லவொண்ணாமை யறிந்து தன்னருகு பிரியாம னின்ற துரியோதனன் பிராதாக்களில் துச்சாசனனை நோக்கி யாதுசொன்னான் ஸ்ரீவீஷ்மன்-

652. இதுவெனக்குக் கால மிருவரையும் வெல்லு
மதுவெனக்கிங் காவதொன் றில்லை-விதிநினைக்கி
லாந்தனைப்போ துண்டாகி லைவீருஞ் சென்றுங்கள்
வேந்தனைப்போர் காமின் விரைந்து. (௨௪)

*எ-து.-* ஸ்ரீவாசுதேவாருச்சுன ராவார் நரநாராயண ராதலால், இருவரையுந் திரைலோக்கியமுங் கூடிவரினுங் காலன் பாசஞ்சூடிவரினும் யாவராலும் வெல்லவரி தென்றும், எனக் கின்று அருச்சுனன்கையி லடுசரங்களால் (இன்று) மரணங்கண்டீர்; இதற்குச் சந்தேகமில்லை யென்றும், இதற்கிறையுஞ் சலியாது துரியோதனனுக்குப் பிரமாதம் புகுந்து நின்ற வதனைச் சென்று காப்பீரென்றும் மற்றவரையும் விடுத்துப்போக்கி, விஷ்ணு மூர்த்தி பத்தவற்சலன் ஸ்ரீநாராயணசுவாமி ஸ்ரீபாத கமலங்களைத் தியானம்பண்ணிக் கிஞ்சுக விருக்ஷ மலர்ந்தாற்போலப் பலவிடங்களுங் குருதி பொழிய வதற்குச் சிறிதுந் துளங்காது சீற்றமெய்தி யருச்சுனன் மேற்சென்று யாதுசெய்தான் ஸ்ரீவீஷ்மன்:-

653. குயில்பாயுஞ் சோலைக் குருநாட னெய்த
வயில்வாயம் பாங்கழிய [1]வெய்தப்-புயல்பாயும்
பொற்குன்ற நின்றதுபோ னின்றா னதற்கிறையு
[2]முட்குன்றா மன்ன னுடன்று. (௨௫)

*எ-து.-* அருச்சுனனால் விடப்பட்ட சகஸ்திரபாணங்கள் சரீரமெங்கு முருவிப்போதலு மறிவு நினைவுங் கெடாது நின்ற கங்கா சுதனைக் கண்டு சந்தோஷித்துப் புஷ்பமாரி பொழிந்திட்டார்கள் தேவர்கள். அவ்விடத்து,-

654. சென்றன புண்டிறந்து சென்றன செல்லாது
[3]நின்ற சரமென்னு நீடணைமேற்-[4]சென்றோர்
வெரிநொந்த யானையது வீழ்வதுபோல் வீழ்ந்தா
னிரிதந்த வேந்த ரினம். (௨௬)

(பா-ம்.) 1. எய்து. 2. முற்குன்ற மன்னா னுடன்று. 3. நின்றன வாளியெனும். 4. சென்று, வெருவிலா யாளியது.... னெரிந்ததே வேந்தர் குழாம்.

**எ–து.–** அருச்சுனனெய்த வெஞ்சரங்கள் வக்ஷஸ்தலங் கிழித் துட்புக மயங்கிச் சத்திகெட்டு [1]மத்தகசம் விழுந்தாற்போல விழுந்தான் அதிரதரில் முன்றோன்றல் ஸ்ரீவீஷ்ம னென்றவாறு. இவ்வகை சத்திமாண்டு விழுமளவில் மகாவேகத்துடன் போகின்ற பிராணவாயுவைப் பிடித்து யாது சொன்னான் ஸ்ரீ வீஷ்மன்:-

**655. ஒற்றைத் திகிரி யொளியோன் வடக்கெய்தி**
**மற்றை யுதையம் வருமளவுஞ்–சுற்றித்**
**[2]துயிலொழிய வென்றே னுயிர்துறவே னென்றம்**
**பயிலணைமேல் வீழ்ந்தா னலந்து. (உஎ)**

அண்டமூர்த்தி சண்டகிரண னாதித்திய னுத்தராயணம் வருமளவும் நித்திரையும் வராமற் பிராணனையு நிலைபெறுத்தித் தருவாயாகென்று சக்கரபாணியாயுள்ள நாராயணசுவாமி ஸ்ரீபாதகமலங்களைத் தியானம்பண்ணிச் சர்வப்பிராதிகளுக்கு மிடங்கொடுத்துச் சரசயனத்துக்கிடந்தான் பெருந்தேராட்களில் முன்றோன்றல் ஸ்ரீ வீஷ்மனாகக் கருதுவது. இவ்வகை ஸ்ரீவீஷ்மன் சத்திமாண்டு வீழ்ந்தமை கண்டு பாண்டவர்சேனை யார்த்தெழுந்தது. அதிர்ந்திட்டது சங்கபடலம். வீரஸ்ரீ பொலிந்து தோன்றினானாங்கு. அப்பொழுது துரியோதனன் சேனை யவிந்தடங்கிற்று. அது கண்டு அமரகணங்களு மாச்சரியப்பட்டுத் துரியோதன னினி யிராச்சியமிழந்தான்; சத்தியவிரதன் றருமபுத்திர னிராசயபாரந் தலைக்கொண்டானெனக் கழறி யுண்மகிழ்ந்தனர். அவ்வளவில் ஆதித்திய பகவானு மஸ்தமன பருவதத்தின்கட் செல்லுமளவில் ஸ்ரீவீஷ்மன் தேசெல்லா மொரு தேசோராசியா யிராச சமூகமுங் கண்டுநிற்கவே யாகாசத் தெழுந்துபோகா நின்றது. அவ்வளவில், ஆண்டொழில் மறந்த காங்கேயனைப் பாண்டவர் சென்று கைக்கொண்டு பாதமலர்தொழுது நீங்கித் தங்கள் சேனையைச் சுருக்குவித்து நின்றார். அவ்வளவில் துரியோதனாதிகள் யாதுசெய்தாரோ வெனில்:-

**656. தம்பியருந் தானும் புகுந்து தலைப்பெய்திங்**
**கம்பி னணைமேற் கிடந்தானைச்–செம்பொ**
**னடிமேலே வீழ்ந்தழுதா னாயிரவாய் நாகங்**
**கொடிமேல் வலனுயர்த்த கோ. (உஅ)**

அன்றியும்,

**657. என்னுடைய மூதாதா யெம்பிமார் தந்துணைவா**
**மண்ணிடையின் மன்னவர்கள் வாழ்வேந்தே–[3]மின்னிடையிற்**

(பா–ம்.) 1. மதசிங்கம். 2. துயல்வொழிய வேன்றென் னுயிர்.
3. விண்ணிடையிற்.

பொன்னாடு கொள்ளப் புரிந்தனையோ போறலரா
லென்னாடு மெங்களையும் [1]விட்டு. (௪௯)

*அன்றியும்,*

658. பாண்டவர்தஞ் சேனையெனுங் [2]காடு பரிவுடனே
மூண்டமரில் வீழ முனைசெய்து-மாண்டனையோ
மாயத்தான் மாலோன் மதியினாற் போர்புரிந்த
தாயத்தார் முன்னே தளர்ந்து. (௫௦)

*அன்றியும்,*

*என்றிவ்வகையாற் பிரலாபியாநின்றார் துரியோதனனும் பிராதாக்களுமாகக் கருதுவது. அப்பொழுது ஸ்ரீ வீஷ்மன் பாடுந் தங்கள் சேனை புறகிட்டமையுங் கேட்டுக் கதுமென வெழுந்து வீழ்ந்து காலாளாய்ப் போந்து தன் முடிமேன் மலர்க்கை வைத்துச் சரசயனத்துக் கிடந்த ஸ்ரீ வீஷ்மனைக் கண்டு மற்றவன் பாதத்தில் வீழ்ந்து யாது சொல்லிப் பிரலாபித்தான் கன்னன்:-*

659. தேன்றொடையல் சோரத்தன் றேமலர்க்க ணீர்சோர
வேந்த னடிமேல் விழுந்தழுதான்-சார்ந்துடையான்
றேர்வேந்த ரஞ்சச் சினநாக முன்னுயர்த்த
போர்வேந்தன் றோழன் புகுந்து. (௫௧)

*எ-து.- கன்னன் புகுந்து சரசயனத்துக் கிடந்த மூதாதை திவ்விய பாதங்களைத் தன் கண்ணீராற் கழுவி, எம்பெருமானே யென்னால் முன்னஞ் சொல்லப்பட்ட வனாசாரமெல்லாம் பொறுத் தருள்வாயாமென்று புகழ்ந்துரைத்துப் பின்னும் யாது சொன்னான்: கன்னன்-*

660. வேர்த்து நடுங்கி விரைவெய்திச் செங்கமலம்
பூத்த திருவடிமேற் புக்கிறைஞ்சிப்-போர்த்து
மடியேனான் செய்த வனாசார மெல்லாம்
[3]பொடியாமே கோவே பொறு. (௫௨)

*இவ்வகை பேசிக் கன்னன் பிரலாபிக்கக் கண்டு சிறிதுணர்வெய்திக் கருணைதோன்றி யாது சொன்னான் ஸ்ரீ வீஷ்மன்:-*

661. உன்னா லொருகுற் றமுமில்லை யுண்டேபோ
லென்னாலே வந்தன வன் றெண்ணொண்ணா-கன்னா
வதுசொல்லத் தக்கனையா லாதியான் செய்த
விதி [4]கண்டா யென்றான் விரைந்து. (௫௩)

*(பா-ம்.) 1. இட்டு. 2. காட்டைப் பரிவுடனே. 3. பொடியாதே. 4. காணாய்.*

எ-து.-கன்னன்மேற் கருணையெய்தி யவன் றலைமேற் றன் ஸ்ரீஹஸ்தம் வைத்து மற்றவனைத் தழுவிக்கொண்டு, உன்னாலு மென்னாலும் வந்த தொன்றில்லைகண்டாய்; பாரதமெல்லாம் ஸ்ரீவாசுதேவன் மகாமாயையாற் செய்யப்பட்டதொழில் கண்டாய் என்றும், உன்னையு மென்னையும் விரோதம் பண்ணிச் செய்தானு மவனேகண்டா யல்லது நீ யென் கன்றேபோன்றாய்; அதுநிற்க, நின்கையில் மகாநாகத்தி னதிகுபிதமான வேகத்தாலு மதன் கரலங்களாலு நின்னுடைய வதிபல பராக்கிரமங்களாலு முண்டாகிய வுற்சாகங்களைத் திரைலோக்கியத்தில் யாவருந் தகையவல்ல சத்தியுடையாரில்லை; நின்னையா னதிரதரி னிறுத்தாமல் அர்த்தரதரி னிறுத்தினமையு நீபொறுத்தி யென்றும் நின்னாற் செய்யத்தக்கன சொல்லத்தக்கன வெல்லாம் யான் மனசிற் கொள்ளே னென்றும் இவ்வகையெல்லாம் பேசி இனியுன் சருவசத்தியெல்லாங் கொண்டு சத்தருசயம்பண்ணித் துரியோதனனுக் கிராச்சியங் கொடுப்பாயாகென் றுரைத்துப் பின்னுந் துரியோதனனை நோக்கி யாதுசொன்னான் ஸ்ரீ வீஷ்மன்:-

662. அந்தார் விசய னமர்க்களத்தில் யான்கிடப்பத்
தந்தா னெனக்கோர் சரசயன-முந்து
கொலைக்கணையா மால்யானைக் கொற்றவனே மற்றென்
றலைக்கணையாய் நிற்பதுநீ தா. (௬௨)

எ-து.- அருச்சுனனாற் றரப்பட்ட சரவணைமேற் கிடக்கின்றேனுக்குத் தலைக்கணையொன் றில்லாது தலைதளர்ந்து நித்திரையில்லாதேனுக்கு நீயொரு தலைக்கணை தருவாயாகெனக் கேட்டு யாதுசெய்தான் துரியோதனன்:-

663. மூவே ழிருபத் தொருகா [1]லரசரெலா
மோவாது கொன்றோமஞ் செய்தானை-மேவார்
பணைதோளார் தாளாண்மை பட்டதே யென்னா
வணைகொண்டு காட்டினா னாங்கு. (௬௩)

இவ்வகை சொல்லி யத்தியந்த மிருதுவாயிருப்பதொரு பஞ்சணை கொண்டுவந்து துரியோதனன் கொடுப்பக் கண்டு துளங்கா மணிமுடி துளக்கி முறுவலித்து மற்றதனைத் துவேஷித்துத் துரியோதனனை நோக்கி யாது சொன்னான் ஸ்ரீ வீஷ்மன்:-

664. மங்குன் மதிதவழும் வானாடர் கோமானே
யிங்கு நமக்கீ தியல்பல்ல-விங்குத்
தலைக்கணையுந் தார்விசயன் றான்றருமே யென்றான்
கொலைக்களிறே றன்னான் குறித்து. (௬௪)

(பா-ம்.) 1. அரசையெலாம்.

எ-து.- நீ தந்த பஞ்சணை யுத்த பூமியிற் சரசயனத்துக் கிடக்கின்றே முக்கு யோக்கியமல்லகண்டா யென்று, அதனைத் தவிர்த்தத் துரியோதனனை நோக்கிப் பலகாலு நகையரும்பி எமக் குடற்கணைதந்த அருச்சுனன் றானே தலைக்கணையுந் தெரிந்து தருங்கா ணென்று சருவ க்ஷத்திரியரையுங் கன்னனையுமகற்றி யுத்தவீரரைப்பெறாது தன்னினம் பிரிந்தவீரசிங்கம் போலத் தக்ஷிணபாசிசத்து நின்ற அருச்சுனனை நோக்குதலின் மற்றவன் கருத்தறிந்து யாது செய்தா னருச்சுனன்:-

665. வாங்கு புனற்கங்கை வாழ்வேந்தர் கோமானே
யீங்கிகொள் ளென்றங் கிருவாளி-யோங்கி
வடித்தாரை வாள்விசயன் மார்புறவே வாங்கி
விடுத்தான் சிரமேல் விசைத்து. (௫௭)

எ-து.- அருச்சுனன் அதிவேகத்துட னெழுந்து காண்டீவத்தை யுக்கிரத்தோடும் வளைத்துத் திவ்வியாஸ்திரத்தினைத் தொடுத்து ஸ்ரீ வீஷ்மன் றிருமுடியிற் கடாவினான். அதுவு முடிபிளந் தெடுத்து நிற்றலு மதுகண்டு ஸ்ரீ வீஷ்மனு மகாதுயரந்தீர்ந்து துரியோதனனையும் பிராதாக்களையும் அங்க நாடன் கன்னனையு நோக்கி யாது சொன்னான் ஸ்ரீ வீஷ்மன்-

666. வெங்கண் விடநாக மேலுயர்த்த கோமானே
யங்கர் பிரானுக் களிவாழி-கங்கை
புடையெல்லாஞ் சூழ்ந்த புனனாடா மற்றுன்
படையெல்லாங் காப்பன் பரிந்து. (௫௮)

எ-து.- கன்னனைச் சேனாபத்தியங் கட்டியுன் மகாசேனையையு முன்பிராதாக்களையு முன்னையு மிரக்ஷித்துக்கொண்டு சத்துருசயம் பண்ணித் தருவனாகப் பணித்து மற்றவனாற் றரப்பட்ட விராச்சியத்தினையு மாள் வாயாகென்று கூறி, கன்னனைக் கைப்பிடித்துத் துரியோதனனுக்குப் பிரமாதம் புகுதாமற் காத்திராச்சியத்தினைக் கொடுப்பாயாகென்று மற்றவனையு முடன்படுவித்துத் துரியோதனாதிகளுக்குங் கன்னனுள்ளிட்ட சருவ க்ஷத்திரியருக்கும் விடைகொடுத்துப் போக்கித் தருமபுத்திரனை யழைத்து நீ பண்ணின தருமத்தா லுனக்குத் தேவராசன் ஸ்ரீ வாசுதேவனைச் சாரதியாகப் பெற்றாய்; அவனா லின்ன முங்கட் கிராச விசையமு மிராச்சியமுந் தரப்படுங் கண்டா யென்றுரைத்து, பின்னும் இனி நீ ஆதித்திய னுதய காலம்வந் துத்தராயணம் பற்றுமளவு முடனின் றிரக்ஷித்துப் பின்பு விடை கொள்வாயாகென்று மற்றவனுக்கு விடைகொடுத்து அஸ்திரங்களால் மயக்குற்று மயங்குமளவில், சர்வப்

பிராணிகளுக்குஞ் சிருட்டித்திதிசங்காரமுஞ் சராசரமுந் தானாகி மகாமாயை பண்ணாநின்ற விஷ்ணுமூர்த்தி சக்கரபாணியாயுள்ள ஸ்ரீ நாராயண சுவாமி ஸ்ரீ பாத கமலங்களைத் தியானம் பண்ணிக் கிடந்தான். அவ்வளவிற் சகாதேவனா னிருமிக்கப்பட்ட தொரு பெருங்கோயில். அவ்விடத்து,-

667. வெற்றிக் களம்பட்ட வேல்வேந்தர் மூதாதை
யப்புச் [1]சயனத் தசைந்தானால்-வெற்பி
லிருந்தான் சுடரோ னொளியிரண்டா மென்றே
[2]புரிந்தான்றண் ணங்கதிரப் போது. (கூகூ)

**எ-து.-** மாயிரு சுடரை மலைமறைத்திடுதலி னெத்திசையு மிருள்படைத்து மிருதங்க வேணு வீணை தாளத் தொனிகளோடு வாயுவதியாமல் மணமருட்டிச் சகத்திர கோடி சரசயனத்துக் கிடந்த ஸ்ரீ வீஷ்மனைக் கண்டு அகத்தியன், புலத்தியன், காசிபன், கௌதமன், விசுவாமித்திரன், வசிட்டன், ஸ்ரீநாரத னுள்ளிட்ட தேவசாதிகள் வந்து புஷ்பவிருஷ்டி பொழிந்தா ரென்றவாறு. அவ்வளவிற் றிவ்விய விமானங்கொண்டு தேவகன்னிகளுந் தேவர்களு மெதிர்கொள்ள விராத்திரியின் சேஷ நீங்கி யாதித்திய னுதய காலங் கண்டவளவில் திவ்விய சத்தியினா லுண்ணின்ற பிராணவாயுவும் போய்த் தேவர்களோடுஞ் சொர்க்க கமனமாயினான் ஸ்ரீவீஷ்ம னென்றவாறு. அப்பொழுது தேவர்களுடன் யாதருளிச்செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-

668. மாமுனிவன் சாபத்தால் வாளமரிற் பட்டதனைக்
கோமுனிவர்க் குற்றுரைத்தான் கோற்பாகன்-றூமலரின்
மட்டுவாழ் பூந்தெரியல் வாழ்வேந்தர் மூதாதை
பட்டவா றெல்லாம் பரிந்து. (சா௦)

**எ-து.-** முற்சனனத்தி லிவன் அஷ்டவசுக்களிலே யாதலால் வசிட்ட மகாவிருஷி யொரு காரணத்தினால் பிரமசரியமாய்ப் பிறப்பாயாகென்று சபித்தானாதலால் மற்றவன் சாபம்பெற்றுச் சாபந் தப்பாம லாயிரஞ் சம்வச்சரமும் பிரமசரிய மாசிரயித்துப் போயினான் ஸ்ரீ வீஷ்மன் என்று பாண்டவர்களுக்குந் தேவர்களுக்கு மருளிச்செய்து வியாகுலமெய்துமளவி லிரண்டு படையுங் கைவாங்கித் தம் பாடிவீடு புக்காராகக் கருதுவது. இப்பால், பட்டுப்படாத சேனையுடன் போய்த் துரியோதனனுந் தன் கோயிற் புகுந்த பின்பு ஸ்ரீ வீஷ்மன் பாடும் மற்றாங்குப் பட்ட சேனை வெள்ளமுஞ் சஞ்சயன் சொல்லக்கேட்டு மிகவுந் துக்கமெய்தி யாது சொல்லிப் பிரலாபித்தான் திருதராஷ்டிரன்:-,

---

(பா-ம்.) 1. சரத்தங் கசைந்தானை. 2. புரிந்தான் கதிரோனப் போது.

## விருத்தம்

669. யாயாகி யெந்தையுமா யென்னையுமென் மக்களையு மெடுத்து நாட்டி
யோயாது நீநிற்க வுரியதோ ரிவ்விடத்தே யுலந்தா யம்மா
தீயானை யென்மகனைச் செருக்களத்தே யின்றுநீ தமிய னாக்கி
மீகாம மில்லாத மரக்கலந்தா னாக்கினாய் வேந்த ரேறே. (சக)

அன்றியும்,

670. மண்ணெல்லா மூவெழுகான் மன்களைகட் டரசாண்ட [1]மன்னர் கோவை,
விண்ணுள்ளார் வியந்தேத்த மெய்விரதங் குன்றாமல் வென்ற கோவே,
யெண்ணில்லா வன்னெஞ்சத் தென்மகனுந் தம்பியரு மென்னைப் போலக்,
கண்ணில்லா ராக்குவித்தா யென் [2]செய்கே னினிநானுங் கடைப்பட் டேனே. (சஉ)

671. ஆடகப் பொருப்பு விற்கை யந்தமில் பவளக் குன்றிற்
பாடகப் பாதப் பச்சைப் பசுங்கொடி [3]படர வெய்தா
னேடகப் பகழி தீண்டா யாக்கையெங் கோவே பேடி
சூடகச் செங்கை யம்பிற் [4]றுயில்வதொன் றறிந்தி லேனே. (சுங)

எ-து.-ஆயிரஞ் சம்வச்சரம் பிரமசரிய மனுட்டித்துத் தேவவிருடிகளாற் பூசிக்கப்பட்ட டாங்கவராலும் பிராமணராலும் ஸ்ரீவீஷ்மனென்று நாமகரணந் தரித்து வீற்றிருந் தரசாண்டு, என் புத்திரர் நூற்றுவரையுஞ் சோடசவருஷம் நிரம்புமளவு மார்பகத்தே வளர்த்தாய்; எழுநூற்றெண் பத்துமூன்று வருஷ முனைப் பிரிந்தறியாத வென்மக்க ளின்று பிரிந்தார்கள்; அது நல்லபருவத்திற்றாவக்கொழுகொம்பிலாத கொடிபோலவு நாயகனில்லாத படைபோலவுமாம்; என்னைப்போ லென் மக்களையுங் கண்ணில்லாதாராக்கிப் போயினாய் என்றிவ்வகை பிரலாபியாநின்றானைக் கண்டு ஸ்ரீவேதவியாச மகாவிருடியு மற்றுமுள்ள சருவஞானிகளில் துரோணாசாரியனும் புகுந்து சகலபுராணங்களு மெடுத்துரைத்துத் தேற்றத் தேறினான் திருதராட்டிரன் என்றவாறு. அப்பொழுது துரியோதனன் யாதுசெய்தானோவெனில்:-

672. நெய்விளக்கு முன்னெரிய நேர் [5]வேந்தர் தம்முன்னே
கைவிளக்கு மெங்குங் கலந்தெரிய-மெய்விளக்கு

---

(பா-ம்.) 1. மறையோற் செற்றோய், விண்ணுள்ளார் மனமகிழ மெய். 2. செய்கே மினி. 3. படரவேய, வேடகப். 4. துயில்வதென் னறிந். 5. வேந்தன்றன்முன்னே.

மாமண் டபமடைந்தார் மன்னரெல்லா மப்போது
போர்மண் டபப்புரிந்து போந்து. (சச)

*இவ்வகை யிருந்து மற்றநாளைக்குத் தன் சேனைக்குச் சேனாபதி யாவார் யாவரோவெனத் தெரிந் திருப்பக்கமும் பதினாயிரம் விளக்குடன், விளங்காநின்ற குருகுலச் சுற்றமுங் கோவீரரும் புடைசூழச் சபாமண்டபத் திருந்து பதினோராநாளைக்கு நம்மகாசேனையை யிரக்ஷிக்கவல்ல சேனாபதி யாவார் யாரோவென வினவி யினிதிருந்த விடத்துத் துரியோதனனை நோக்கி யாது சொன்னான் கன்னன்:-*

673. காவலனே நின்சேனை காக்கக் கடற்கங்கைப்
பாவை மகனும் பணித்தமையாற்-றேவி
தனக்கருள்செய் பாகத்தாய் தாழாமற் காப்பே
னென்க்கருள்செய் யென்றா னிசைந்து. (சரு)

*எனக்கேட்டு யாது சொன்னான் துரியோதனன்:-*

674. யானாகி நிற்கு மதுவொழிய நீயின்று
சேனா பதிப்பட்டஞ் சேர்தினா-லானாக்
கொடைக்கரச னாயுள்ள கொற்றவனே மற்றென்
படைக் [1]கரச ராரோ பகர். (சசா)

*இவ்வகை யுன்னைச் சேனாபத்தியங் கட்டினா னம்மகாசேனைக்குப் பக்ஷபதியான சுவாமி யாரோவென்று மற்றவனைத் தவிர்த்துப் பின்னும் யாது சொன்னான் துரியோதனன்:-*

675. தெய்வப் படையான் சிலைத்தொழிற்கு முன்றோன்றல்
கவ்வைச் செருக்களத்துக் காறளரான்-[2]றெவ்வுட்கும்
விற்றானை வேதினை வேத மொருநான்குங்
கற்றானை யேயணிமின் காப்பு. (சஎ)

*கலசயோனி தனுர்வேதம் வல்லான் சகலசாத்திரங்களுக்கு முரியான் சர்வஞானி துரோணாசாரியன் தேவர் தானவர்க்கும் வெலற்கரியான் வீர புருஷன் சத்தியவிரத னாதலால் அவனைச் சேனாபத்தியங் கட்டினால் நமக்கு நம் மகாசேனைக்கு மொரு விக்கினமும் வாராதென்று பின்னும் யாதுசொன்னான் துரியோதனன்:-*

676. கால விறுதிக் கடுங்கதிர்தான் காயெரிதான்
மாலைக் கருங்கடறான் மாருதந்தான்-வேலை
நிலையிறக்க நிற்குமோ நீள்சரங்கோத் தண்ண
றலையிறக்கஞ் செய்த பொழுது. (சஅ)

---

(பா-ம்.) 1. அரசனாரோ. 2. தெவ்வுக்க ; தெவ்வுக்கு

எ-து.- உகாந்த காலத்து வடவாமுகாக்கினியோடு மூழிக்காற்றுக் கிளர்ந்து சகல சமுத்திரங்களூ முழங்கி வரம்பிகந்து பூமிமுழுவதுஞ் செல்லு மளவிலும் கலசயோனி கவசம்புகுந் தாவங்கட்டி யடுசிலைவாங்கித் தன் மணி நெடுந்தேரேறி நிற்குமாகி லவையுந் தடுப்புண்ணு மதற்குச் சந்தேகமிலலை. அதுவுமன்றி, வீமார்ச்சுனர் பராக்கிரமங்களூ மறிந்து மற்றவர்க்குத் தக்க யுத்தம்பண்ணும். ஆதலால் ஆசாரியனே நம் மகாசேனையைக் காத்திரட்சித்து நமக்கொரு பிரமாதம் புகுதாமற் காத் திராச்சியமுந் தருமென நினைந்து மற்றாங்கிருந்த சருவக்ஷத்திரியர்க்கும் பொருந்த வுரைத்துக் கதுமென வப்பொழுது யாதுசெய்தான் துரியோதனன்:-

677. [1]தேவா சுரர்போர்க்குத் தேவர்தஞ் சேனைக்குக்
காவல் குமரனைமுன் கட்டுவபோற்-றேவர்
மதிப்பட்ட வாட்டானை வாழ்வேந்தன் சேனா
பதிப்பட்டங் கட்டினான் பார்த்து. (சகூ)

எ-து.- தேவாசுரயுத்தத்துக்குச் சுப்பிரமணியசுவாமியைச் சேனாபத்தியங் கட்டினாற்போலத் தன் மகாசேனைக்குச் சேனாபத்தியமாகத் துரோணாசாரியனைக் கட்டினான் துரியோதன னென்றவாறு. இவ்வகை சேனாபத்தியங் கட்டி, அற்றை யிராத்திரியின்கண் வியாகுலசித்தனாய்ப் படைமன்னரைத் தெரிந்து சேனைகாவ லடைத்து மற்றவர்க்கு விடைகொடுத்துப் போக்கித் தானுங் கோயிலுட்புகுந்து பத்துநாழிகை பள்ளிகொண்டா னிராசராசன் துரியோதன னென்றவாறு.

பத்தாநாட்போர் முற்றும்

*****

## வீடும பருவ முற்றுப்பெற்றது

(பா-ம்.) 1. தேவசுரர் போருக்குத் தேவர்கடற்சேனைக்குக் காவற் குமரனை

# துரோண பருவம்

## பதினோராநாட் போர்

678. அண்ட முறநிமிர்ந்த வாயன்றன் சீர்பாதங்
கண்டு தொழுவார் [1]கருத்ததனின்-மிண்டி
யடர்ந்தவினை தீர்த்தங் கதன்பின்னே சொர்க்கந்
தொடர்ந் [2]தடைவார் நெஞ்சே தொழு. (க)

இவ்வகை கடவுள்வாழ்த்து. அவ்வளவில்,-

679. வேலை [3]யொலியே முழவாக வெண்டிரைகள்
சால வெறிந்தோங்கு [4]சாமரமா-வேலையென
வாதித்த மன்னரெலாம் வாரீ ரெனவழைக்க
வாதித்தன் வந்தெழுந்தா னாங்கு. (உ)

இவ்வகை யன்று கழித்த மற்றைநா ளாதித்தியனுதயங்கண்டு இரண்டு படையும் பண்ணிவந்து சமரபூமி புகுந்து முன்னாளைப் படைநிலையில் வியூகங் கட்டாநின்றார். அப்பொழுது, செயத்திரதனையும் கன்னனையும் அசுவத்தாமாவினையும் சகுனி சல்லியரையு முள்ளிட்டா ரெண்பதினாயிரந் தேராட்களையும் பலபதினாயிரம் பதாதி சங்கங்களையும் தக்ஷிண பாகத்து நிறுத்தி, காம்போசராசனையும் மாளுவராசனையும் குண்டலராசனையும் உள்ளிட்டார் முப்பதினாயிரந் தேராட்களையும் பல பதினாயிரங் கசதுரங்கங்களையும் வாமபக்ஷத்து நிறுத்தி, பூரி பூரிசிரவாவினையும் பிரசிந்தரையும் குலிந்தரையும் சூரசேனரையும் பிரதிவிந்தரையும் காளிங்கரையும் வாளாக நிறுத்தி, துரியோதனனையும் பிராதாக்களையும், பரராஷ்டிரத்துப் பதாதி வீரர்களையும் வயிறாக நிறுத்தித் தானம் பல பதினாயிரந் தேராட்களுஞ் சேனை காவலாகப் புறப்பட்டுச் சுற்றுமுற்றுங் கட்டமைய நிறுத்தி இவ்வகை சகடபத்திரமென்னும் வியூகம் வகுத்துத் தூசிமுகத்து வேதக்கொடி விசும்பணுவத் தேர்மிசை

---

(பா-ம்.) 1. கழலதனின் மண்டின். 2. அடைவாய். 3. ஒலிகண் முழவாக. 4. சாமரையா.

நின்றான் துரோணாசாரிய னென்றவாறு. இவ்வகை நின்ற சேனையையும், ஆசாரியனால் வகுக்கப்பட்ட படைநிலையையுங் கண்டு ஆகாசத்தே நின்ற தேவசாதிகள் யாது சொன்னாரோ வெனில்:-

680. மாக்கோ புரமிழந்த மாமதிலும் வெண்டிங்கள்
போக்கோவு நீள்விசும்பும் போன்றதே-நோக்கின்
முனைக்கொடித்தேர் மன்னரெலா முன்னின்று வெல்லும்
பனைக்கொடித்தே ரில்லாப் படை. (௩)

எ-து.- கோபுரமில்லா மதிலுந் திங்களுலாவாத விசும்பும் போன்றது ஸ்ரீவீஷ்மனில்லாப் படைநிலை யென்றவாறு. இவ்வகை நின்றளவில் பாண்டவர் சேனையைக் கிரௌஞ்ச மென்னும் வியூகம் வகுத்து நின்றான் திட்டத்துய்மனாகக் கருதுவது. அப்பொழுது இரண்டு படையுந் தலைப்பெய்து தாக்கித் தேருந்தேருந் திளைத்தன; மாவு மாவு மயக்குற்றன; களிறுங்களிறுங் கைவைத்தன; வாளும்வாளும் வகைதெரிந்தன. சரபடலங்கள் திசா முகங்களை மறைத்திட்டன; தூளிபடலம் விசும்பு போர்த்தது; சருவாயு தங்களு மெதிரெதிர் மலைந்து சீறிப் பொறிசிந்த இரண்டு சேனையும் வற்றா நின்ற தென்றவாறு. ஒருபால்,-

681. சோமகருஞ் சிஞ்சையருஞ் சூழ்ந்து துரோணன்றன்
கோமகனைச் சென்று குறுகினார்-கோமுனையின்
[1]மாதர்க் கமலத்து மாமறையோன் கைவார
வேதக் குலக்கொடியான் மேல். (௪)

இவ்வகை திட்டத்துய்மன் புகுந்து துரோணாசாரியனையும் அசுவத்தாமாவையும் வளைத்து மூடித் திளைத்தார்த்தான். அப்பொழுது யாதுசெய்தான் துரோணாசாரியன்:-

682. சென்றேறு பாஞ்சாலர் தேர்மேலு மார்மேலுங்
குன்றேறு [2]செங்கணைவிற் கோத்தேவி-நன்றேறி
வல்லான் விழுத்துகின்ற வாளவுண ராமென்னக்
கொல்லா விழுத்தான் கொதித்து. (௫)

இவ்வகை பட்டுப்படாத பாஞ்சாலரையும் படக்கொடுத்துத் திட்டத்துய்மனும் புறகிட்டா னென்றவாறு. அப்பொழுது அசுவத்தாமா யாது செய்தான்:-

683. சொரிந்த கணைமாரிச் சோமகரை முட்டி
யெரிந்த கணைமாரி யேவி-முரிந்து

(பா-ம்.) 1. மாதக்க வில்லதனின் மாமறையோர்; மாதிக் கமலத்து மாமறையோர். 2. செங்கட் குயவரிபோ-லன்றேறி, வல்லான் வதிக்கின்ற.

மறைத்தலைவன் மற்றந்த வாள்வேந்த ரெல்லாங்
குறைத்தலையாக் கொன்றான் கொதித்து. (கூ)

*அசுவத்தாமாவின் சரபடலத்தால் பலபதினாயிரஞ் சோமகருஞ் சிஞ்சையரும் பட்டவிந்தாராகக் கருதுவது. ஒருபால்,-*

684. மாதேவர் தாஞ்சூழ வாள்வேந்தர் காந்தாரர்
சாதேவ னோடு சலித்தார்கண்-மாதேவ
ரென்றாங் கெதிர்ந்தார்க ளெய்தார் கணைமாரி
சென்றாங் [1]கெரித்தார் செரு. (எ)

*எ-து.- சகுனிக்குஞ் சகாதேவனுக்கும் மகாயுத்தம் விளைந்திட்டது. அப்பொழுது சகுனியை யாதுசெய்தான் சகாதேவன்:-*

685. ஒருகணையாற் பாக னுயிர்வவ்வி நான்கு
தெரிகணையாற் றேர்சிதைய நூறி-யிருகணையான்
மேகத் தனிக்கொடியை மேனிலத்தில் வீழ்த்தவன்ற
னாகத் தழுத்தினா னாங்கு. (அ)

*எ-து.- சகாதேவனாற் றேருஞ் சிலையு மழிப்புண்டு தரணிதலத்தனாய்த் தண்டாயுதம் பிடித்தோடுதலுஞ் சகுனியோடு சகாதேவனுங் கதாபாணியாய்த் தேர்மிசை யிழியப்பாய்ந்து மேற்சென் றியாதுசெய்தான் சகாதேவன்:-*

686. வலக்கை மணித்தண்டில் வன்சகுனி தாக்க
விடக்கைமணித் தண்டுகொடு மேதி-மிடற்கண்
[2]ணுருமனையா னொய்யென் றுயர்புலிபோ லோடிப்
பொருமனையார் புக்கார் புரிந்து. (கூ)

*இவ்வகை சகுனியைச் சகாதேவனு மற்றவனைச் சகுனியும் நிராயுதனாக்கிப் பதாதியாக்கித் துரந்தார்த்துக்கொண்டா ரென்றவாறு. ஒருபால்,-*

687. வென்றி முரசுயர்த்த கோமானு மேவலர்மேற்
கன்று மரவுயர்த்த காவலனுஞ்-சென்றாங்கு
முட்டினார் முட்டி முரசதிர வார்த்தெழுந்து
கிட்டினார் தம்மிற் கிடைத்து. (கo)

*இவ்வகை தருமபுத்திரனுந் துரியோதனனுந் தலைப்பெய்து தாக்கினார். அப்பொழுது யாதுசெய்தான் தருமபுத்திரன்:-*

---

*(பா-ம்.) 1. எதிர்ந்தார். 2. உருமனையா ரெய்யென்று.*

688. மல்லாருந் திண்டோண் மறமன்னர் தஞ்சேனை
யெல்லா மிரிந்தா ரிறைப்போதில்-[1]வில்லாளாய்ப்
போய்க்கூத்துக் கண்டான் புகுதார் பெருஞ்சேனை
பேய்க்கூத்துக் [2]கண்டான் பெயர்ந்து. (கஅ)

*இவ்வகை எதிர்ந்தாரை யவியநூறிப் பெருஞ்சேனையைக் கை சுருக்குவித்துப் போர்க்கள முழுதுந் தானாய்த் திரிகின்ற சத்தியவிரதன் தருமபுத்திரனைத் தலைப்பெய்து பின்னுமொருபால் யாதுசெய்தான் துரியோதனன்:-*

689. மாநிரையைப் போக்கி மணித்தேர்கள் பின்செல்லக்
கானிரையைக் காய்களிற்றைக் கைவகுத்துத்-[3] தேனிரியாத்
தார்வேந்தர் சூழச் சமுத்திரம்போற் றப்பாமற்
போர்வேந்தைச் சூழ்ந்தான் புரிந்து. (கஉ)

*இவ்வகை துரியோதனனும் பிராதாக்களுந் துரோண கிருப கன்ன அசுவத்தாமா வுள்ளிட்டாரும் யானை தேர் குதிரை கருவிக் காலாளாற் றரும புத்திரனைச் சூழ்ந்துகொண்டு மண்ணும் விண்ணுந் தோன்றாவகை சரபடலந் திசை மறைப்ப முடுக்காநின்றவிடத்து யாதுசெய்தான் தருமபுத்திரன்:-*

690. மாற்றுப் படைதன்னை வாளமரிற் கொன்றுழக்கிக்
கூற்றுப் படைபோலக் கோபித்துத்-தோற்றத்து
மட்டுலாம் [4]பூந்தண்டார் மன்னர்கோன் றோளிரண்டுங்
கட்டினான் பாசத்தாற் காய்ந்து. (கங)

*இவ்வகை மற்றவனுடன் வந்த யுத்தவீர ரனைவரையுந் துரந்து தேருஞ் சிலையு மழித்துப் புறகிடுவித்துத் துரியோதனனையுந் தேருஞ் சிலையு மழித்து மற்றவன் சாரதியையும் புரவிநான்கினையுங் கொன்று வீழ்த்து நிராயுதனாக்கி (துரியோதனனை) நாகபாசத்தாற் கட்டுவித்துச் சிங்கநாதஞ்செய்தான் தருமபுத்திர னென்றவாறு. அப்பொழுது அதுகண்டு யாதுசெய்தான் துரோணாசாரியன்:-*

691. எட்டுத் திசையு மிரியப் படர்சிறைப்புள்
விட்டுத் தருமன் [5]மிடைந்தோடக்-கிட்டினா
னற்றப் படுநாக மன்னவனை யஞ்சலெனா
வெற்றித் துரோணன் வெகுண்டு. (கச)

*இவ்வகை துரியோதனனைக் கட்டின நாகபாசத்தை விடுவிக்க வொரு கருடனென்னு மஸ்திரத்தைத் தொடுத்து விடக்கண்டு*

---

*(பா-ம்.) 1. வில்லாளர். . . . கண்டார் புகுந்தார். 2. கண்டார் பெயர்த்து. 3. தேனிரியற், றார்; தேனிரியுந், தார். 4. தண்டார்சேர். 5. மிறைத்தோடக்.*

*நடுக்கத்தோ டிடுக்க நாகபாசம் விட்டோடத் துரியோதனனை மீட்டுக்கொண்டு யுத்த களங் கழியக் கொண்டுபோயினான் துரோணாசாரிய னென்றவாறு. அதுகண்டு வீமசேனன் யாதுசெய்தான்:-*

692. அடர்த்த முடிவேந்த ரஞ்சியெங்கு மோட
வெடுத்த மணித்தண்டா லெற்றி-யிடுக்கொருவர்
நில்லாத வண்ண நிரவிக் கொடுசென்றான்
மல்லார்தோள் வீமன் மதித்து. (கரு)

*இவ்வகை யெதிர் மலைந்த வேந்தரைச் சிதறநோக்கிச் சித்திரத் தண்டாற் றுணிய மோதி மாவொடு மாவடித்துத் தேரொடு தேரெறிந்து களிறொடு களிறுகலக்கி முடியொடு முடியுருட்டித் தலையொடு தலைபுரட்டி மதஹஸ்திபோலக் களமுழுதுந் திரியாநின்றான் வீமசேனன். அப்பொழுது நிலையாற்றா திரிந்திட்டது துரியோதனன் பெருஞ்சேனை யென்றவாறு. அப்பொழுது,-*

693. ஓங்கு கரைசாய்ந் துடைந்த பெரும்புனலைத்
தாங்கு மலைச்சிறைபோற் றாங்கினா-னாங்குப்
படைவேந்தைக் கண்டுடைந்த பல்படையை யெல்லாங்
கொடைவேந்தன் மத்திரத்தார் கோ. (கசா)

*எ-து.- நிலையாற்றா துடைந்திட்ட பார்வேந்தன் சேனையை மத்திரராசன் சல்லியன் சென்று தாங்கி யெதிர்மலைந்தானொடு நகுலன் வந்து தாக்க மகாயுத்தம் விளைந்திட்டது. அப்பொழுது யாது செய்தான் சல்லியன்:-*

694. கொடியுங் குனிசிலையுங் கோலாளுந் தேரு
மடியும் படிவாளி விட்டா-னொடியின்
மலைசுழன்று [1]வீழ்வதுபோன் மன்னர்நெடுந் தேர்மே
னிலைசுழன்று வீழ்ந்த நிலத்து. (கஎ)

*இவ்வகை தன்னுடன்வந்த பார்வேந்தரையு மவியக்கொடுத்துத் தானுஞ் சல்லியனாற் றேருஞ் சிலையு மழிப்புண்டு புறகிட்டு, பின்னு மொருபா லொரு சேமத்தேருஞ் சேமச்சிலையும் பெற்று வெகுண்டெழுந்து யாது செய்தான் நகுலன்:-*

695. ஓரம்பு வில்லின்மே லீரம்பு பாகன்மேற்
கூரம்பு மூன்று குலக்கொடிமேற்-பேரம்பு
மாவின்மே னான்செய்து மற்றையது மத்திரத்தார்
கோவின்மே லெய்தான் குறித்து. (கஅ)

*(பா-ம்.) 1. போவதுபோல்.*

*எ-து.–* நகுலனாற் றேருஞ் சிலையு மழிப்புண்டு சாரதியையும் புரவி நான்கினையும் மடியக்கொடுத்துப் பதாதியாய்ப் புறகிட்டான் சல்லியன் என்றவாறு. ஒருபால், கடோற்கசனுக்கும் பகதத்தனுக்கும் மகாயுத்தம் விளைந்திட்டது. அப்பொழுது,-

**694. கொடியுங் குனிசிலையுங் கோலாளுந் தேரு**
**மடியும் படிவாளி விட்டா-னொடியின்**
**மலைசுழன்று [1]வீழ்வதுபோன் மன்னர்நெடுந் தேர்மே**
**னிலைசுழன்று வீழ்ந்த நிலத்து.** (கஎ)

இவ்வகை தன்னுடன்வந்த பார்வேந்தரையு மவியக்கொடுத்துத் தானுஞ் சல்லியனாற் றேருஞ் சிலையு மழிப்புண்டு புறகிட்டு, பின்னு மொருபா லொரு சேமத்தேருஞ் சேமச்சிலையும் பெற்று வெகுண்டெழுந்து யாது செய்தான் நகுலன்:-

**695. ஓரம்பு வில்லின்மே லீரம்பு பாகன்மேற்**
**கூரம்பு மூன்று குலக்கொடிமேற்-பேரம்பு**
**மாவின்மே னாண்செய்து மற்றையது மத்திரத்தார்**
**கோவின்மே லெய்தான் குறித்து.** (கஅ)

*எ-து.–* நகுலனாற் றேருஞ் சிலையு மழிப்புண்டு சாரதியையும் புரவி நான்கினையும் மடியக்கொடுத்துப் பதாதியாய்ப் புறகிட்டான் சல்லியன் என்றவாறு. ஒருபால், கடோற்கசனுக்கும் பகதத்தனுக்கும் மகாயுத்தம் விளைந்திட்டது. அப்பொழுது,-

**696. தேர்மேலு மாமேலுந் திண்ணென் கொடிமேலுங்**
**கார்மேலு மம்பு கடாவினார்-சீர்பொன்னான்**
**மின்னாக்கும் பூணார் விறல்வேந்தர் மேன்மாரி**
**யென்னப் பொழிந்தா ரெதிர்ந்து.** (க௯)

இப்பால்,-

**697. பொங்கரவ முன்னுயர்த்த போர்வேந்தன் [2]மைந்தனுட**
**னங்கரவஞ் செய்தா னழன்றெழலும்-பொங்கும்**
**புவன மெரிகொளுவப் போர்வாளி தூவி**
**யிவனு மெதிர்ந்தா னிரைத்து.** (உ0)

துரியோதனன்புத்திரன் லக்ஷணகுமாரனுடன் செயசேனன் சென்று தலைப்பெய்து அஸ்திர சஸ்திரங்களாற் பொழிந்திட்டாராகக் கருதுவது. ஒருபால்,-

(பா-ம்.) 1. போவதுபோல். 2. செம்மலுடன்.

698. தென்னெடுந்தேர் மன்னன் செயத்திரத னுஞ்செம்பொன்
மன்னெடுந்தேர் மாயன் மருகனு-மன்னர்
விடைக்குஞ் செருக்களத்து வில்லொடுவிற் றம்மிற்
புடைக்கும் படிபொருதார் புக்கு. (உக)

*எ-து.- செயத்திரதனுக்கும் அபிமன்னுவுக்கும் மகாயுத்தம் விளைந்திட்டது. அப்பொழுது தேருஞ் சிலையு மழிப்புண்டு கதாபாணியாய்த் தேரினின் றிழியப் பாய்ந்து யாதுசெய்தான் அபிமன்னு:-*

699. அலங்குளைப் பாய்மாக்கொன் றம்மாவுய்ப் பானைப்
பொலங் [1]கொடித்தேர் மேற்புரள மோதி-நலந்திகழக்
கார்மேவு பூங்குஞ்சி கைத்தலத்தாற் சூழ்ந்தவனைத்
தேர்மேனின் றீர்த்தான் செயிர்த்து. (உஉ)

*எ-து.- செயத்திரதனைக் கைக்கொண்டு தேருஞ் சிலையு தண்டாயுதத்தாற் புடைத்து அவன் பூங்குஞ்சியைப் பிடித்திழுத்துத் தேரினின் றிழிய வீழ்த் தார்த்துக்கொண்டா னபிமன்னு வென்றவாறு. அதுகண்டு சல்லியன் வந் தேன்றுகொண்டு சயத்திரதனைக் கைக்கொண்டு மற்றவனைத் தன்றேர்மிசை யிட்டுக்கொண்டு சிறிதிடம்போய்த் தேற்றிப் போகவிட்டு அபிமன்னுவின்மேற் சென்றான். (சல்லியன்) அப்பொழுது யாது நிகழ்ந்ததோ வெனில்:-*

700. ஆர்க்கு மழைவண்கை யத்திரத்தான் மத்திரர்கோன்
[2]றூர்த்த மழைமாரி தான்கண்டான்-போர்க்கு
மழவிடைபோ [3]னின்றறுத்தான் மாதவிதன் செம்மன்
மழவிடைபோ லெங்கு மலைந்து. (உங)

*சல்லியனு மபிமன்னுவும் போர்விளைத்த விடத்து, அபிமன்னு தேர்வலந்திரியிற் சல்லியன்றே ரிடந்திரியும்; சல்லியன்றேர் வலந்திரியி லபிமன்னுதே ரிடந்திரியும். இவ்வகை யிருவர் கோபாக்கினியாலு மிரண்டு சேனையுங் கைகுறைந்திட்டன. ஒருபால்,-*

701. பாஞ்சால ராசனும் பல்போர் விராடனும்
பூஞ்சாலி மத்திரன்மேற் போர் [4]மலைந்தார்-தாஞ்சாலி
மின்னொத்த பைம்பூண் விறலரசர் நண்பல்லார்
பொன்னொத்த வாளி புரிந்து. (உச)

*எ-து.- விராடராசனும் பாஞ்சாலராசனும் அபிமன்னுவுக்குத் துணை புகுந்து சல்லியனோடே தலைப்பெய்து புறகிடுவித்தார். அப்பொழுது யாது செய்தான் சல்லியன்:-*

---

*(பா-ம்.) 1. கொடிஞ்சி. 2. சார்த்து மழை. 3. நின்றான் மாதவிதன். 4. மலையத்.*

702. இருவர் சிலையினையு மீரிரண்டு கூறாச்
சிறுபொழுதிற் சின்னங்கள் செய்தங்-குறுபொழுதில்
வானிற் றனிக்கொடியை மண்ணின்மேல் வீழ்த்தவர்கண்
மேனியிற்றா னெய்தான் வெகுண்டு. (உரு)

*எ-து.- பாஞ்சாலராசனும் விராடராசனும் வில்லுங் கொடியு மழிந்து மல்லகலத்துப் புண்கூர வாள்வாயம்பா லேவுண்டு மயங்கினாராகக் கருதுவது. அதுகண்டு யாதுசெய்தா னபிமன்னு:-*

703. கொடியுங் குனிசிலையுங் கோலாளுந் தேரு
மடியும் படிவாளி வாங்கி-நொடியின்
மலைதுளங்க மண்டுளங்க வான்றுளங்க நெஞ்ச
நிலைதுளங்க வெய்தா னெடிது. (உசு)

*எ-து.- அபிம னம்பினால் வலிகெட்டுத் தேருஞ் சிலையுமழிந்து புற கிட்டோடிக் காலாளாய் ஒருபாற் கதாபாணியா யெதிர்மலைந்து பின்னும் யாது செய்தான் சல்லியன்:-*

704. செருத்திண்டே ரூர்வானைத் தேர்சிதைய நூறிப்
பருத்தண்டு கொண்டிழியப் பாய்ந்தான்-றிருத்திண்டோட்
சித்திரத்தே ரார்ப்பச் செழும்பொற் கழலார்ப்ப
மத்திரத்தார் வேந்தன் மலைந்து. (உஎ)

*இவ்வகை மத்திரராசன் சல்லியன் மணித்தண்டு பிடித்து வீமசேனன் மே லோடி யாது செய்தானோ வெனில்:-*

705. உடற்கண் வெருவ வொளிநெடுந்தோள் வீமன்
[1]றடக்கைமணித் தண்டுகொடு தாக்க-மிடற்கண்
மடங்காப்போர் மால்யானை மத்திரத்தார் வேந்தன்
றுளங்காப்போய் விழ்ந்தான் [2]சுளிந்து. (உஅ)

*வீமசேனனா லவன் மத்தகத்திடை மொத்துண்டு நிலையாற்றாது மயங்கி வீழ்ந்தானைக் கிருதவர்மா கண்டு கடிதுசென்று கைக்கொண்டு தன்றேர்மிசை யிட்டுக்கொண்டு போர்க்களங்கழியக் கொண்டுபோகலுற்றான். அதுகண்டு துரியோதனன் சேனை நிலையாற்றா திரிந்திட்டதாகக் கருதுவது.*

706. முடியு முரசு மிடறித்தன் [3]றாளா
லடருமின மாவொடாங் கெய்தி-யடியிற்றின்
கைஞ்ஞாகம் புக்கவியக் காய்கதிரோன் காணலன்போன்
மைஞ்ஞாகம் புக்கான் மறைந்து. (உகூ)

*(பா-ம்.) 1. தடக்கை மணித்தண்டு தாக்க. 2. சுளித்து. 3. தோள்க, ளடியொ டினமாவொ டாங்குற்-றடியிற்றன், கைஞ்ஞாநம்.*

இவ்வகை தேரும் மாவுங் களிற்றீட்டமுங் களத்தவியக் கண்டு கருத்த மைந் தாதித்தியபகவானும் பகல் நாழிகை சுருக்குவித்து அத்தமன பருவதஞ் சென்றடைந்தான். அப்பொழுது இரண்டுபடையுங் கைவாங்கித் தம் பாடிவீடு புக்காராகக் கருதுவது. இப்பால், துரியோதனனும் போய்ப் பாடி வீடு புகுந்து வியாகுல சித்தனாய் அற்றை யிராத்திரியின்கண் யாது செய்தானோ வெனில்:-

707. கைவிளக் கெங்குங் கலந்தெரியக் கண்டுயிலா
மெய் [1]விளக்கும் பூணா ருடன்மேவிப்-[2]பொய்யில்
புரிந்தார் படையிரியப் போர்மண் டபம்போந்
திருந்தானப் போர்வேந்த னின்று. (ரு௰)

அற்றைநாட் பட்டுப் படாத படைமன்னருந் தானும் இராத்திரியின் கண் வியாகுல சித்தனா யிருபக்கமு மிருபதினாயிரங் கைவிளக் கொளிபரந்து பிரபைசெய்யச் சபாமண்டபத்திருந்து, தான்பட்ட பரிபவமுந் தன் படை பட்டமயக்கமு நினைந்து, துரோணாசாரியனை நோக்கி யாது சொன்னான் துரியோதனன்:-

708. வீமன் வலியும் விசயன் பெருந்திறலுந்
தாமொழியு மன்றே தனிச்சிலையோ-யேமுனைக்கு
நாயகமே [3]நன்குடிக்குக் காரணனே யென்றனக்குத்
தாயகனைப் பற்றிநீ தா. (ருக)

எ-து.- வெம்முனையிற் கூற்றமன்ன விருகோதரனு மருச்சுனனும் பொருகின்றது தருமபுத்திரனை யிராச்சியஞ் செய்வித்தல் பொருட்டாக வாதலால், மற்றவனை நின் சர்வசத்தியெல்லாங் கொண்டு சீவக்கிரகணஞ்செய்து தருவாயாக வென்கின்ற துரியோதனனை நோக்கி யாதுசொன்னான் துரோணாசாரியன்:-

709. வெலற்கரிய வெஞ்சமத்து விண்ணவர்கோன் றன்னை
மலைக்குந் துணைபெறினு மாட்டேன்-முனைக்க
ணுருமனையான் மாய னுயிர்த்துணையாய் நிற்கத்
தருமனையான் பற்றித் தர. (ருஉ)

தேவசாதிக்குங் காண்டற்கரிய ஸ்ரீவாசுதேவன் சகாயனாகத் தேவேந்திரன் றிவ்வியாஸ்திரத்தினாற் குசலனாகிய அருச்சுன னிற்கத் தருமபுத்திரனைச் சமரபூமியிற் பற்றிதருவே னென்பது தேவராசற்கு மரிதாதலால், மற்றவனை நாலுநாழிகை யென்னருகு வாராமற் றடுக்கவல்லா ருண்டாகிற் றருமபுத்திரனைப் பற்றித் தருவேனென்று துரோணாசாரியன் சொல்லக்கேட்டுத் திரிகத்தராசன் முதலாயுள்ள

(பா-ம்.) 1. விளக்கப்பூணார். 2. பொய்யிற், பொருந்தார். 3. நங்குடிக்குக் காரணனே யெந்தமக்குத்.

பலபதினாயிரம் க்ஷத்திரியர்களும் ஸ்ரீநாராயண கோபாலரு மெழுந்திருந் தக்கினிதேவனைச் சாக்ஷியாகவைத்து யாதுசொல்லிப் பிரதிக்கினை பண்ணினாரோ வெனில்:-

## அகவல்

710. கடவுட் குரங்கின் கொடித்தேர்த் தானைத்
தொலையா வூக்கத் தடுபோர் விசயனை
யமர்க்களங் கழிய வறைதனைக் கூவித்
தருமனுஞ் சேனையுந் [1]தனிப்படுத் தவனொடு
போர்புரிந் தெல்லாம் பொன்றுத [2]லன்றேன்
மற்றவன் றன்னை வானகத் துய்த்த
னாளையிவ் விரண்டிலொன் றொழிது மாகின்
[3]மெய்மண மாலையைக் கைமிசைக் கொண்டு
முடிமிசைச் சூட்டி யடியிணை வருடிய
குலமனைக் கிழத்தியைப் பிறரொடுங் கண்டு
பின்னவள் கையாற் பெய்துணும் பேதையு
[4]மற்றது வொழிந்து வன்செரு வதனி
லுற்றுறு பூசலி லுறுக்கிமுன் னின்ற
குருக்களைக் கொன்ற கொடியவோர் பாவியு
[5]றமலி யரச னணிமனைக் கிழத்தியைக்
[6]குறியல னரசன் கொண்டுன் போகக்
கேட்டு மிருந்தவோர் கெடுபுகர் வேந்தனு
மிவ்வகை யிவரிவ ரிழிந்திடு நரகம்
[7]புக்கவர் நாங்க ளெனப்புகழ்ந் தோதினார்
மிக்கதேர் வேந்தர் விரைந்தவன் முன்னே. ([illegible])

இவ்வகையாற் சஞ்சத்தகருந் திரிகத்தராசனும் பிரதிக்கினை பண்ணக் கேட்டுத் துரியோதனனு மனமகிழ்ந்து மற்றவர்க்குச் சிறப்புச்செய்து ஆங்கவர்க்கு விடைகொடுத்துத் தானுந் தன்கோயிற் புகுந்தான் (துரியோதனன்) என்றவாறு.

## பதினோராநாட்போர் முற்றும்

*****

(பா-ம்.) 1. தனிப்பட்டவனொடு. 2. அன்றி; அன்றியில். 3. மென்மண. 4. மற்றஃ தொழிந்து. 5. அறிவிலி. 6. குறியிலி யரசன். 7. புக்குழி நாங்கள்.

# பன்னிரண்டாநாட் போர்

## கடவுள் வாழ்த்து

711. அந்தரத்தில் வானவருந் தானவரு மாழ்திரைநீர்
சிந்தமுதங் கொண்டமுதஞ் செய்தநாண்-மந்தரந்தான்
சோரா முதுகைச் செறியத் துயிலுகந்த
காராண்மை யார்நமக்கோர் காப்பு. (க)

*இப்பால் அன்று கழிந்த மற்றைநாள்,-*

712. தேனடைந்த கோதைத் திருவனையார் தம்மோடு
[1]மூனடைந்த வேலா ருணர்ந்தெழவே-வானின்மேற்
[2]கானடைந்த வெய்யோன் கனையிருளைக் கையகற்றிச்
[3]சேணடைந்து காட்டினான் சென்று. (உ)

*இவ்வகை யாதித்தியபகவா னுதயஞ்செய்யக் கண்டு தானும் பள்ளி யுணர்ந்து புறப்பட்டுத் தன் படைத்தலைவரை நோக்கி யாதுசொன்னான் துரியோதனன்:-*

713. பண்ணுமின்கள் சேனையெல்லாம் பாய்பரியும் பொற்றேரு
நண்ணுமின்கண் மாக்களிறு நாற்றிசையும்-விண்ணின்ற
தானவரு மஞ்சப் பிடிப்பன் [illegible]ருமனையான்
[4]மானவரும் போய்க்காமி[illegible] மற்று. (ந)

*இவ்வகை பார்வேந்தன் துரியோதனன் சொல்லக்கேட்டுப் பெரும் படையுஞ் சஞ்சத்தகரு நாராயண கோபாலரு மார்த்தெழுந்து கருடத்துவசம் விசும் பணுவ யானை தேர் குதிரை கருவிக்காலாளுடன் போய் யாது செய்தாரோ வெனில்:-*

714. சோதி விளக்கெரிமுன் சூழ்சபையிற் சூளுற்ற
வேதிப் படைவேந்த ரெல்லாரு-நீதி
நிறைகூவிக் கொள்ளு நிரைமலர்த்தார்ப் பார்த்தற்
கறைகூவிப் போயினா ராங்கு. (ச)

*திரிகத்த ராசனும், சஞ்சத்தகரோடு பதினாயிர நாராயண கோபாலரும் வந்து அருச்சுனனை யறைகூவி யார்ப்பரவம் பண்ணக் கண்டு உக்கிரவேகத்தடன் மற்றவர்மேற் சொல்லலுற்ற அருச்சுனனைத் தடுத்து, யாது சொன்னான் தருமபுத்திரன்:-*

715. ஆர்தமக்கு வேறே யறைகூவிப் போயினார்
கூரிலைவேற் [5]பார்த்த குறித்துரைத்தா-ரேதிலர்முற்

---

*(பா-ம்.) 1. அறிவிலி. 2. குறியிலி யரசன். 3. புக்குழி நாங்கள். 4. வானவரும். 5. பார்த்தற்குறித்.*

**சீராருந் திண்டோட் [1]டிரிகத்தர் தம்மோடு**
**நாரா யணன்மக்க ணன்கு.** (ரு)

*அன்றியும்,*

716. **கலங்கா மணித்திண்டேர் காளையர்மே லின்று**
**விலங்காநீ யோட்டி விரைய-னலந்திகழுஞ்**
**[2]சந்திலங்கு கைத்தோட் டனஞ்சயனே யிங்குடன்று**
**[3]வந்தவர்க ளென்றான் மதித்து.** (சு)

***எ-து.***- *திரிகத்த ராசன் முதலாகிய சஞ்சத்தகரும் வந் தறைகூவினால்;இதற்கு நீ விரைந்து போவாயல்லை; வந்தபடி கேட்பாயாக என்று பின்னும் யாதுசொன்னான் தருமபுத்திரன்:-*

717. **நின்னைப் பிரிவித்து நின்றாரைக் கையகற்றி**
**யென்னைப் பிடிப்பதனுக் கெண்ணினா-னென்னைப்**
**[4]பிடியாது காவாயேற் பேரெழிலா னம்புக்**
**[5]கெதிராகி யார்மலைவா ரின்று.** (எ)

***எ-து.***- *சஞ்சத்தக ரறைகூவல்கேட்டு நீ யவர்கள்மேற் போயின பொழுதுன்னைச் சமரபூமி கழியக் கொண்டுபோயினபின், தங்கள் சதுரங்க பலத்தோடுஞ் சர்வசத்தியெல்லாங் கொண்டு தானை வெள்ளத்தைத் தளர்வித்து, என்னைப் பிடித்துத் துரியோதனன் கையிற் காட்டிக்கொடுப்பா னாகத் துரோணாசாரிய னொருப்பட்டா னென் றொற்றாட்கள் வந்து சொல்லக் கேட்டே னாதலால் அவன் கோபாக்கினி யாற்ற வல்லார் நின்னை யல்லது யாவருமில்லை; நீயின் றென்னைப் பிரிந்தா லிப்பொழுதே வந் தமராடி யென்னைப் பிடிப்பதற்கும் பிரமாதம் விளைவதற்குஞ் சந்தேகமில்லை யென்று தருமபுத்திரன் சொல்லக் கேட்டு யாதுசொன்னா னருச்சுனன்:-*

718. **தேவ ருலகத்தங் கண்டறியேன் [6]றிண்டிறலா**
**யாவரு மென்னையறை கூவுவார்-யாவர்மதி**
**மட்டுவெண் பூந்தெரியல் வாழ்வேந்தர் கோமானே**
**பட்டவா வென்றான் பணிந்து.** (அ)

***எ-து.***- *தேவேந்திரன் முதலாகவுள்ள தேவசாதிகளு மென்னை யறை கூவினாரில்லை; மண்ணுலகத்தவர் வந் தறைகூவக் கேட்டிருக்கும தெனக்கு வீர சௌரிய பங்கமாங்கண்டா யென்றுரைத்து, இவ்வகை செய்த திரிகர்த்தராச னுள்ளிட்டாரை நொடிவரையிற் படமலைந்து*

---

**(பா-ம்.)** *1. திரிகத்தன் றன்னோடு. 2. சந்துலங்கொள் கைத். 3. வந்ததவ ரென்னான் மதி. 4. பிரியாது. 5. இரியாதியார். 6. திண்டிறலார், யாவரோ வென்னை.*

ஸ்ரீவாசுதேவன் பிரசாதத்தினால் மகிதலத்துத் தலைபுரட்டிச் சயஞ்செய் தீண்டன் வருகின்றேன்; ஈங்கிதற்கு எம்பெருமான் வெகுளா தொழிவாயாக; எனக்கு நின்றிருவுளக்கருத்தால் விசயஞ்செய்து வருவேனாக வுன் பிராசாத பலத்தால் விடை தருவாயாக என்று தருமபுத்திரனை யடிபணிந்து விடைகொண்டு, பின்பு வீமசேனனைக் கைதொழுது யாதுசொன்னா னருச்சுனன்:-

719. கடுந்திறலாற் கானகத்திற் காரிருளில் வந்த
விடும்பனை யீடழிய வென்றாய்-படர்ந்தான்
செருவேற்ற மன்னவனைத் திண்கையாற் பற்றி
யொருநூற்றுக் கால்சுழற்ற வோய்ந்து. (௯௯)

எ-து.- மத்திய யாமத்துப் போர்மலைந் திடும்பனை யன் றுயிர் குடித்தனை; அதுவுமன்றிப் பகனைக் கொன்று எழில் நகரத்தா ரிடுக்கண் டீர்த்தனை; சர்வ க்ஷத்திரியரையுஞ் சிறையில் வைத்த சராசந்தனைப் பிளந்தெறிந்தனை; வைச்சிரவணன் மணிநகரிற் செம்பொற் சாரலுக்குக் காவலாகிய மணிமானை வானேற்றி மந்தாரபுஷ்பங் கொடுவந்து பாஞ்சால கன்னிக்குச் சூட்டுவித்தனை; கீசகர் நூற்றுவரையு மியமலோகத்துக்கு விடுத்தனை; கிழக்கும், வடகிழக்கு முள்ள தராபதியரைச் செயித்து ராசசூய யக்கியத்திற்கு மானெதிர் கொடுவந்து தருமபுத்திரனுக்குக் கொடுத்தனை. கின்னரர் கிம்புருடர் தொடக்கத்தார் மகாபலங்களுக்கும் பயங்கரமாயினை; தேவர்களுக்கு நினைப்பரிய சிம்மத்துவச மடைய நீ தேவேந்திரனுந் துணுக்கமெய்துவதோர் பீமபராக்கிரமத்தினாற் பீமசேனனாகி, உக்கிர வேக முடைய தோர் தண்டாயுதத் தடக்கை வீரனாகி நிற்க; நின்னருகுநின்ற தருமபுத்திரனை யாவராலுந் துளக்கவரிதே யென்றும், தருமபுத்திரனுக்குப் பிரமாதம் விளையாது காப்பா யென்றும், இது நினக்கே பணியல்லால் யாவராலுங் காக்கப்படாதென்றுங் கூறிப் பீமசேனனைப் பின்னும் நமஸ்கரித்துத் தருமபுத்திரனுக்கு ஸாதனம் பண்ணென்று பின்னும் யாது செய்தான் அருச்சுனன்:-

720. மன்னர் பெருமானை மச்சத்தார் கோமானே
நின்னிற் பரமென்று நில்கண்டாய்-பின்னும்
படைக்கலங்க டாஞ்சிந்தும் பாஞ்சாலர் கோவே
யடைக்கலமா மென்றா னவன். (௧0)

எ-து.- இவ்வகை விராடராசனுக்கும் பாஞ்சால ராசனுக்குந் தருமபுத்திரனை யடைக்கலங் காட்டிக் கொடுத்துப் பின்னுஞ் சர்வ க்ஷத்திரியரையு நகுல சகாதேவரையு நோக்கி யாது சொல்லி யாது செய்தா னருச்சுனன்:-

721. வேறுரைத்த மன்னவரை விண்ணுலகுக் கிப்பொழுதே
யேறுவித்து மீளுவனென் றேகினான்-மாறடர்த்த

**தென்னவனைத் தம்பியரைச் சிஞ்சயரைச் சோமகரை**
**மன்னவனைக் காக்க வகுத்து.** (கக)

எ-து.- சஞ்சத்தகர் வந் தறைகூவினாரை ஸ்ரீ வாசுதேவன் பிரசாத பலத்தினா லனைவரையும் விண்ணேற்றித் தேவராசனோடு மீண்டு வருமளவுந் தருமபுத்திரனை யிரட்சிப்பீராமினென்று பாண்டியராசனையு நகுல சகாதேவரையுந் திட்டத்துய்மனையுந் துஷ்டகேதுவையும் பல்லாயிரஞ் சோமகரையுஞ் சிஞ்சயரையும் பரராஷ்டிரத்து க்ஷத்திரியரையுங் கடோற்கசனையுந் தருமபுத்திரனைக் காப்பாராக்கி, அறைகூவின திரிகத்தராசன் நின்ற திசைநோக்கிப் போயினா னருச்சுன னென்றவாறு.

722. **மன்னவனைக் காமினென வாளமர்க்கண் வாள்விசய**
**னின்னபரி சென்றுணர்ந்தங் கேகினான்-மின்னிடையின்**
**மைவகுத்த சோலை வளநாடர் கோமானுங்**
**கைவகுத்து நின்றான் கலந்து.** (கஉ)

இவ்வகை யருச்சுனன் போனபின்பு, தங்கள்சேனையுடன் சமரபூமி புகுந்து [1]சர்வசமூகமென்னும் யூகம் வகுத்து நின்றான் துரோணாசாரிய னென்றவாறு. இப்படி வகுத் திரண்டு படையுந் தலைப்பெய்து தாக்கினவிடத்து யாது நிகழ்ந்ததோ வெனில்:-

723. **மேல்கடலுங் கீழ்கடலு மிண்டி யெதிர்ந்ததுபோற்**
**போர்மலைந்து மன்னர் புரிந்தார்கள்-சீர்மலிந்த**
**காந்தட் [2]கடிக்கலச யோனியுந்தன் காவலரும்**
**வேந்தற்கு முன்னே விரைந்து.** (கங)

எ-து.- பன்னீராயிர மகுடவர்த்தனரும், சயத்திரத னுள்ளிட்டாரும், பூரி பூரிசிரவாவும், கிருபனும், கிதுவர்மாவும், கன்னனும், அசுவத்தாமாவும், சகுனி சல்லிய னுள்ளிட்டா ரெழுபதினாயிரந் தேர்க்குழாமும், அதனிரட்டி புரவியும், நூறாயிர மதஹஸ்தியும், இரண்டக்குரோணி பதாதி வெள்ளமும் இராசராசன் துரியோதனன் பிராதாக்களோடும் ஆர்த்துவர, பூதலத்தைச் சமுத்திரங் கொண்டாற்போலவும், மேகபடலங்களைச் சண்ட மாருதஞ் சிதறடித்தாற் போலவும், சங்கு, தாரை மிகமுழங்கத் தருமபுத்திரன்மேற் சென்றான் துரோணாசாரியனாகக் கருதுவது.

724. **பல்பதி னாயிரவர் பாஞ்சாலர் வெஞ்சமத்து**
**வில்லொ டென்வளைய வெஞ்சரந்தூய்க்-கொல்ல**

(பா-ம்.) 1. மகரமென்னும். 2. கரக்கலச.

விடைபுகுந்தாற் போல வியனெடுந்தே ரோட்டி
யிடைபுகுந்தான் பாஞ்சால ரேறு. (கச)

*எ-து.- திட்டத்துய்ம னுள்ளிட்ட பல பதினாயிரம் பாஞ்சாலருடன், வில்வளைத் தெரிசரங்கள் தூவி யெதிர்மலைந்த மகாசேனை முன் புகுந்து யாது செய்தான் பாஞ்சாலராசன்:-*

725. வில்வளைத்த பல்வேந்தர் வெங்களத்துப் பட்டவிய
வெல்வளைக்கை யம்பெங்கும் வீசினான்-கல்வளைத்த
காந்தட் கடிச்சாரற் காவலர்கோன் பாஞ்சால
வேந்தர்க்கு முன்பிறந்த வேந்து. (கரு)

*எ-து.- வரையிழிகுருதியிற் படவுழக்கித் துன்மருஷனென் பானை மருமத்திடை மயங்க வெய்து காலிங்கரையுங் காந்தாரரையுங் கலக்குறுத்தி மகாசேனையை யிரிய நூறி யுத்த வயிரியாகிய துரோணாசாரியனோடே தாக்கிய சயத்திரதன் திண்சிலையினைப் பத்தம்பினா லறுத்துக் கூறாக்கி யார்த்துக்கொண்டான். அதுகண்டு மிகவும் வெகுண்டெழுந்து யாது செய்தான் துரோணாசாரியன்:-*

726. பாய்வாளி யொன்பதினாற் பாஞ்சாலன் வில்லறுத்து
வாய்வாளி யைம்பதினான் மான்றேரை-யீர்வாளி
யூக்கமா மென்றங் குதிர வுடனார்த்தான்
வீக்கமால் [1]காண வெகுண்டு. (கசா)

*இவ்வகை வாள்வாயம் பொன்பதினால் வில்லறுத்து ஐம்பதஸ்திரத்தினால் மணிநெடுந்தேரை யவனிதலத்து வீழ்த் துருட்டி யார்த்துக்கொண்ட துரோணாசாரியனைக் கண்டு நிலையாற்றாது பதாதியாய்ச் சிதறியோடி, மற்றாங்கொரு சேமத்தே ரேறி வேட்டமுற்ற கோளரியேபோல வெகுண்டெ ழுந் தொரு திவ்வியாஸ்திரத்தினைத் தெரிந்துகொண்டு துரோணாசாரியனு டனே தாக்கி யாது செய்தான் பாஞ்சாலராசன்:-*

727. நாகம் வளைத்தருளி நாக மசைத்தருளு
மாகன்மே லேக [2]மலர்வாளி-யேவுதிறன்
மன்மத னாமென்ன மன்னும்பல் வாளியெய்தான்
[3]பன்மதரா மென்னப் பரந்து. (கஎ)

*எ-து.- பாஞ்சாலராசன் பலவகைப்பட்ட வெங்கணைமாரி பொழிந்திடுதலு மெண்டிசையுந் தலைபனிப்ப யமதண்டஞ் செல்வதாமெனக் குருதி யாறு கொதித்தெழுந்தது; அப்பொழுது துரோணாசாரியன் வெகுண்டெழுந்து யாது செய்தானோ வெனில்:-*

---

*(பா-ம்.) 1. கண்டு. 2. அலர்வாளி. 3. பன்மதனா மென்னப்.*

728. பாஞ்சாலர் வெள்ளம் படுகளத்துப் பட்டவியக்
[1]காஞ்சாலி யம்பு கடாவினான்-பாஞ்சாலன்
[2]வெல்லழித்துத் தேரழித்து வேல்வேந்தர் தம்முன்னே
வில்லறுத்து நாணுவித்தான் மேல். (கஅ)

*இவ்வகை இரண்டாவதும் பாஞ்சாலன் வில்லுந்தேரு மழிப்புண் டபிமானித்துப் பதாதியா யோட, அதுகண்டு யாதுசெய்தான் திட்டத்துய்மன்:-*

729. செய்கை யழிந்து [3]திரிந்தானென் றந்தையென
வெய்ய சினத்தான் மிகவெழுந்து-கையாற்
சலிக்கவே [4]வெய்தாத் தடஞ்சிலையின் வின்னா
ணொலிக்கவுட னெய்தா னுடன்று. (கசு)

*எ-து.- ஆசாரியன் றன்னுடனே யடற்சிலையைச் சாகோஷித்துத் திட்டத்துய்மன் றலைப்பெய்தான். அப்பொழுது, மண்ணும் விண்ணு மதிர்ந்திட்டன. மகாயுத்தம் விளைந்திட்டது. அப்பொழுது யாதுசெய்தான் துரோணாசாரியன்:-*

730. இருநூறு வெவ்வாளி யேவிக் கொடிவீழ்த்
தொருநூறு மல்லகல மூன்றிப்-பொருநூறு
பாகன்மே லேவிப் பதிற்றிரட்டி வெவ்வாளி
தேரின்மே லெய்தான் றிளைத்து. (உ0)

*இவ்வகையாற் றேருஞ் சிலையுங் கொடியு மழிப்புண்டு மல்லகலத்துப் புண்கூரத் திட்டத்துய்மன் றளர்ந்துபோகலும், சிகண்டியுள்ளிட்ட பாஞ்சால குமாரரைக் கலக்குறுத்திச் சேனை முற்றும் விநாசஞ்செய் தெதிர்பொ ருவாரைப் பெறாது மேற்செல்லுகின்ற துரோணாசாரியைச் சென்று தாக்கியாது செய்தான் பாண்டியராசன்:-*

731. பாண்டவர்கண் மண்ணாளப் பாண்டியர்கோன் சென்றெதிர்ந்
தாண்டகைதன் னோடன் றமர்செய்தான்-பூண்டயங்கு
மேனிமேற் சென்று விடு [5]கணைக டூர்கலச
யோனிமேற் சென்றா னுடன்று. (உக)

*இவ்வகை பாண்டியராசன் வந்தேன்றுகொண்டு பொருகின்றபொழுது யாது செய்தான் துரோணாசாரியன்:-*

---

*(பா-ம்.) 1. காய்ஞ்சாலு மம்பு கடாயினான். 2. வில்லறுத்துத். 3. திரிந்தான்றன். 4. எய்தான் றடஞ்சிலையில். 5. கணைகட் டூர்கலச; கணைபா யக்கலச.*

732. பாண்டியர்கோன் பத்துச் சிலை [1]யழித்துப் பார்மீது
பூண்டயங்க நாண்டயங்கப் போதலுமே-யீண்டியெதிர்
தாக்கினார் மேலுந் தனித்துச் சரமாரி
[2]போக்கினார் தேர்மேற் புரிந்து. (உஉ)

*இவ்வகை பாண்டியராச னேன்றுகொண்ட யிரண்டு சிலைபிடித் தமரழிய, அதுகண்டு சேர சோழர் விலக்குதலும் அதுகண்டு யாதுசெய்தான் துரோணாசாரியன்:-*

733. கொற்றக் கொடிச்சிலையைக் கூறாக்கி வார்கணையால்
வெற்றிக் கொடியோடு [3]வில்லிணையு-மற்று
விடவாளி கொண்டே விரைந்தெய்தா னாங்கே
யடலே றனையா னவன். (உங)

*இவ்வகை தேருஞ் சிலையுங் கொடியு மிழந்து கவசம்பிளக்க வேவுண்டு சேர சோழர் தளர்ந்துபோகலும் அதுகண்டு விராடராசன் வந் தேன்று கொண்டு யாது செய்தானோ வெனில்:-*

734. மல்லாருந் [4]திண்டோளான் மச்சத்தார் தங்கோமான்
வில்லாற் றுரோணன்றன் வெம்படைஞ-ரெல்லாம்
பிணச்சேற்றி லேயழுந்தப் பேய் [5]கூத்தங் காட
நிணச்சேற்றின் மூழ்குவித்தா னின்று. (உச)

*அவ்விடத்து மற்றதுகண்டு யாது செய்தான் துரோணாசாரியன்:-*

735. கைம்மேலு மார்மேலுங் காமர் சிலைமேலு
மெம்மேலு மம்பெங்கும் [6]வித்தினான்-மென்மேலு
மாய்ந்திட்ட தேர் [7]நின்று மச்சர்கோன் மாநிலத்துப்
பாய்ந்திட்டுப் போனான் பதைத்து. (உரு)

*இவ்வகை விராடராச னிலையாற்றாது தேரினின் றிழியப் பாய்ந்து பதாதியா யோடுதலும், அதுகண்டு வீமசேனன் வந் தேன்றுகொள்ளலு மது கண்டு யாது செய்தான் துரியோதனன்:-*

736. சிங்கக் கொடியுஞ் சினமாவுந் தேரினுடன்
மங்கத் தனிலாளி வாங்கினான்-[8]றுங்கவுடல்
போற்றரிய பஞ்சவர்க்குப் போர்கொடுத்துப் பார்கொடா
மாற்றரிய நூற்றவர்க்கு மன். (உசா)

*(பா-ம்.) 1. அழிந்து பார்மீது, பூண்டயங்கி நாண்டயங்கிப். 2. போக்கினான். 3. வில்லினையும். 4. திண்டோள்வண். 5. கூத்தங்காடி. 6. வீசினான். 7. நின்ற. 8. துங்கமுடன்.*

*இவ்வகை வெகுண்ட துரியோதனன்ற னடு சரங்களால் வீமசேனன் சிங்கக்கொடியுந் தேரு மிழந்து சர்வாயுதங்களாலு மறைப்புண்டான். அது கண்டு யாது செய்தான் தருமபுத்திரன்:-*

**737. அம்பொன் முடிதுளக்கி யாடெழிற்றேர் மேற்கொண்டு**
**செம்பொற் கவசஞ் செறிவித்தே-யும்பரைமுன்**
**னாண்டவர னென்ன வலங்கரித்து வாளமரிற்**
**பாண்டவர்கோன் றோன்றினான் பார்த்து.** (உஎ)

*அன்றியும்,*

**738. மானத் திடையடரும் வாரி நெடுங்கடலிற்**
**சேனைத் தனியாறு செல்வதுபோற்-றானை**
**யடனோக்கி வேனோக்கி யாடெழிற்றோ னோக்கிப்**
**படைநோக்கி வந்தான் பரிந்து.** (உஅ)

*இவ்வகை தலைத்திராணமும் வீரப்புட்டிலுஞ் செம்பொற் கவசமுஞ் சாத்திப் படைக்கோலத்துடன் வந்து யாது செய்தான் தருமபுத்திரன்:-*

**739. மாமலையு மண்ணு மறிகடலும் வானகமுங்**
**கோமலையு மஞ்சிக் குலைந்தனவே-போர்முனையில்**
**விற்கையான் றன்மன் விசைத்துச் சிலை [1]நாணப்**
**பொற்கையா னாணெறிந்த போது.** (உகூ)

*எ-து.- தருமபுத்திரன் திண்டேரோட்டிச் செருமலைந்து எதிர் விலக்கினாரை மலங்க நூறிப் பின்னுமொருபாற் றுரோணாசாரியனைத் தாக்கி யாது செய்தான் தருமபுத்திரன்-*

**740. மற்றத் துரோணன்றன் மார்மேலுந் தோண்மேலுங்**
**கொற்றச் சிலைமேற் கொடிமேலுஞ்-சுற்றுஞ்**
**சரபடலம் போர்ப்பத் தலைப்பெய்தான் றன்மன்**
**[2]விரைபடலத் தேர்முடுக விட்டு.** (ஙo)

*எ-து.- துரோணாசாரியனுடன் தருமபுத்திரன் தாக்க, இருவரின் அஸ்திரகோஷத்தாலும், இருவரின் சரபடலத்தாலுந் திசை மயங்கியிட்டதாகக் கருதுவது. அப்பொழுது ஒருவரை யொருவர் சாயாது நின்றார்; அவ்விடத் தியாது செய்தான் தருமபுத்திரன்:-*

**741. கார்க்கலச யோனி கடுஞ்சரத்தைக் கார்மழைபோற்**
**போர்ச்சிலையி னோடும் புரிவித்தான்-பார்க்குங்**

---

(பா-ம்.) 1. நாணைப். 2. விரைபடரத்.

**கரமாரி யன்ன கருணையான் கையிற்**
**சரமாரி யாலே தகைந்து.** (௯௧)

*எ-து.- துரோணாசாரியன் விட்ட அஸ்திர சஸ்திரங்களைத் தருமபுத்திரன் சரங்களா லறுத்து மாற்ற, மகாயுத்தம் விளைந்திட்டது. அப்பொழு திரண்டு திறத்தோர் சேனையுங் குறைந்திட்டது. ஆங்கு,-*

742. **வீமனுஞ் சேயும் விசயன் பெருமகனு**
**மாமனு மச்சத்தார் கோமானுஞ்-சோமகரும்**
**பைத்தோடி [1]மார்வமேற் பாய்பழி கால்வீழ்த்து**
**மொய்த்தோடிப் புக்கார்கண் முன்.** (௯௨)

*எ-து.- வீமசேனனுங் கடோற்கசனும் அபிமன்னுவுஞ் சாத்தகியும் விராடராசனுமுள்ளிட்டார் பன்னூறாயிரம் பலத்தினோடு மணிநெடுந்தேர் விரையவேவிச் சாகோஷஞ் செய்து சங்கமூதித் தருமபுத்திரனுக்காய் முன்புகுதலும், கிருப கன்ன அசுவத்தாமாவோடுந் தலைப்பெய்து யாது செய்தான் வீமசேனன்:-*

743. காலாளாய்த் தேரிழிந்து கையிற் கதையினாற்
[2]றேராட்க ளானாரைத் தேரழித்துத்-தேராட்க
ணிற்பாரைக் காணாது நின்றா னெழிற்றருமன்
பொற்பாதஞ் [3]சென்னி பொறுத்து. (௯௩)

*இவ்வகை மகாசேனையோடுந் தாக்கிக் காலாளாய்த் தண்டுகொண்டு தேர்வேந்தராயினாரை யுத்தபூமியி னில்லா தெப்பக்கமு மோடத் துரத்தித் தேராட்க ளெதிர்ப்பாரைப் பெறாது மகாவாயு திவதாமெனத் திரிந்தார்க்கின்ற வீமசேனன், தார்த்தராஷ்டிரர் வந்தாரை யார்ப்பரவத்தினாற் பயங் கொளுத்தி, துரோண கிருப கன்ன அசுவத்தாமாவையும் ஆயுதங்களழிய மோதி, சர்வ க்ஷத்திரியரையுந் திசைதிசையிற் சிந்துவித்து, துரியோதனனை யெப்பக்கமு மோடத் துரத்தி, சல்லியன் தாக்கினானை வன்மத்திற் பிரகரித்து, சயத்திரதன் வந்தானைத் தேரோடு மெடுத்தெறிந்து, சகுனி வந்தானை யஞ்ச வுரப்பி, மான்கணங்களைப் புலி துரந்ததா மென்ன மான வேந்தரை யோடத் துரத்தித் தருமபுத்திரன் ஸ்ரீபாதங்களிலே நமஸ்கரித்து நின்றா னென்றவாறு. அப்பொழுது யாது செய்தான் பகதத்தன்:-*

744. தாடளர்ந்து தங்கள் படையிரியத் தானெதிரே
[4]யோட விறல்யானை யுந்தினான்-கூடா
ருரம்பொருத வெற்றிபுனை யும்பர்க்காய்த் [5]தேவா
சரம்பொருத வேந்தன் [6]சுளிந்து. (௯௪)

(பா-ம்.) 1. ஆர்வமேற். 2. தேராள ரானாரைத் தேரழித்துத்-தேராளர். 3. சென்னியிற் பூத்து. 4. ஓடை விறல். 5. தெவ்வர். 6. சுளித்து.

*எ-து.-* சுரர்பதிக்குத் தோழனாகி யசுரர் குலப்பகை தணித்துக்கொடுத்துத் தேவர்களோடு மமுதங் கடைந்தான் பகதத்தனென்னுமோ ரிராக்ஷதன், பதினாயிரம்யானை பலமுடையான், நூறாயிரம் யானையின் பலமுடைய தொரு சுப்பிரதீப மென்னு மதகரியை மேற்கொண்டு தாக்குமளவில், மற்றாங்கது யாங்ஙன மோடிற்றோ வெனில்:-

745. தேர்துகைத்து மாப்பிளந்து சேண்வரைபோ லாள்விலக்கிப்
பேரெழிற்கை யானைபின்னே போய்ப்பிறங்க-வீர
ரிரிந்தோட வோடி யிகற்களிறுந் தானுந்
திரிந்தானவ் வெம்முனைமேற் சென்று. (கூரு)

*எ-து.-* பகடுந்தேரும் பாய்மாவும் பாவடியிற் படவுழக்கித் தன் பெருங் கோடப் புண் சுமந்து, காலுடையதோர் மால்வரை நிலமிசைத் திரிவ தாமெனக் கடுங்காற்றின் வடிவுகொண்டதாமெனக் கொடுங்கூற்றங் கொதித்தெழுந்ததெனச் செல்லாநின்ற சுப்பிரதீபத்தை மேற்கொண்டு சரவருஷம் பொழிகின்ற பகதத்தனுக்கு நிலையாற்றா தெட்டுத் திசையு மிரிந்தோடுகின்ற தருமபுத்திரன் சேனையைக் கண்டு, அழிபடை தாங்கி வந் தேன் றுகொண்டு யாது செய்தான் வீமசேனன்:-

746. ஆலால வாசுகிதன் வாயிற் புறப்பட்ட
வாலாலம் போல வடுஞ்சினமாய்க்-காலாளா
யம்பொற்றண் டேந்தி யமராடப் போயினான்
செம்பொற்றோள் வீமன் செயிர்த்து. (கூசு)

*அன்றியும்,*

747. வாமவே லேந்தி வரைதடிந்த [1]வள்ளல்போல்
வீமனே சென்று விலக்கினான்-கோமான்
புனைவயிரக் கோட்டியானைப் பொன்னுதன்மேற் றன்கைச்
சினவயிரத் தண்டுவிழச் சென்று. (கூஎ)

இவ்வகை வெகுண்டு சென்று பகதத்தன் வாகனமாகிய சுப்பிரதீபத்தின் வதனத்திடைப் புடைத் தார்த்தான் வீமசேனன் அப்பொழுது,-

748. ஒருவ ரொருவர்க்கங் கொல்காது போரி
லிருவருமே சென்றங் கெதிர்ந்தார்-விரவினாற்
கார்முழக்கோ மாகடலோ காற்றோ [2]வெனவன்றிப்
போர்முழக்கோ வென்னப் புகுந்து (கூஅ)

*(பா-ம்.)* 1. வாசவன்போல்; வாயுப்போல். 2. எனலன்றிப்.

இவ்வகை பகதத்தனோடுஞ் சுப்பிரதீபத்தோடும் வீமசேனன் றலைப்பட்டுச் சிங்கநாதமுஞ் சங்கத்தொனியு மெழுப்பி யார்ப்பரித்து, எம்மருங்குந் திசை சிலும்பத் தன் மகாசேனைமேற் போகாமல் மற்றதனைத் தகைந்து நின்று மகாயுத்தஞ் செய்யாநின்றான். அப்பொழுது,-

749. பாண்டவர்கள் சேனையெனுங் காட்டைப் பகதத்தன்
றூண்டுசினத் தீயாற் சுடும்பொழுதிற்-காண்டீபப்
போர்வண்ண விற்கைப் புயல்கொண்டு வந்ததே
கார்வண்ண னென்பதோர் காற்று. (௬௯)

எ-து.- எத்தனையோ ராயிரம் யானையின் பலமுடையதோர் சுப்பிர தீபத்தை மேற்கொண்டு பகதத்தனென்னு மகாபல பராக்கிரமன் புகுந்து பாண்டவர் சேனையைக் கொல்கின்றானென்று ஸ்ரீ வாசுதேவன் றன் றிரு வுளத்தே நினைத்து, பதினாயிர நாராயண கோபாலரையும் பதினாயிரஞ் சஞ்சத்தகரையு மபசயப்படுத்துவித்து, அருச்சுனனைக் கொண்டுவந்து யுத்த பூமி புகுந்தா னென்றவாறு. அப்பொழுது,-

750. விசயன் வருதலுமே வீமன்க ணின்றும்
விசயன்மே லேதிரிய விட்டான்-றிசைசுழலும்
வாலுடைத்தாய் மூன்று மதமுடைத்தா யீரிரண்டு
காலுடைத்தா யோடுங் களிறு. (எ0)

எ-து.- மீவசேனனோடு யுத்தம் பண்ணி மற்றவனை வெல்லவொண்ணாமற் கைவிட்டு, அருச்சுனனுடனே தாக்கி யாதுசெய்தான் பகதத்தன்:-

751. மார்மேலுந் தோண்மேலு மால்வண்ணன் றன்மேலுந்
தேர்மேலும் பொற்பகழி சிந்தினான்-[1]போர்மேலு
மென்றான் சரமாரி யெண்ணா யிரங்கோடி
குன்றாம லெய்தான் கொதித்து. (எ௧)

இவ்வகை தேர்மேலும் வானரக் கொடியின்மேலும் ஸ்ரீவாசுதேவன்மே லும் யாவராலுந் தாங்கவொண்ணாவகை சரமாரி பொழிந்துநின்றான் பகதத்தன். அதுகண்டு யாதுசெய்தான் அருச்சுனன்:-

752. வில்லறுத்து நாணறுத்து வெற்றிக் கொடியறுத்து
மல்லறுத்தங் கானை மதமறுத்து-நில்லென்றான்
றேனாறு சோலைத் திருநாடர் [2]கோமானைப்
பூநாறு வேலான் புகன்று. (எ௨)

(பா-ம்.) 1. போரின்மே, லென்றான். 2. கோமானப், பூநா றுவேலாற்.

இவ்வகை பகதத்தன் வில்லுங் கொடியுங் கொல்யானையுங் குறைவுபட்டு, ஆற்றாம லபசயப்பட் டோடிப் பின்னு மதிகோபத்துடன் யாவராலுந் தாங்கற்கரியதோர் சத்தியினை யபிமந்திரித்து ஸ்ரீவாசுதேவன்மேல் வெகுண்டு விட்டான். அப்பொழுது விண்ணு மண்ணு மதிர வருகின்ற வதனைக் கண்டு வானவரு மதிபயங் கொண்டு துணுக்கமெய்து மளவில், மற்றதனை யருச்சுனனுக்குக் காட்டி யாதுசெய்வித்தான் ஸ்ரீவாசுதேவன்:-

753. மாக்கடல் வண்ணன்றன் மல்லார் வரைமார்பின்
மேற்கதுவ வந்ததோர் வெவ்வேலை-நோக்கி
யிரண்டினான் மூன்றாக வெய்தறுத்து வீழ்த்தான்
றிரண்டநாண் காலலைப்பச் சென்று. (சங)

இவ்வகை யமோகமாயின சத்தியுடைய வேலாயுதத்தை யறுத்து வீழ்த்தா னருச்சுனன். அப்பொழுது பின்னு மொருபால் வெகுண்டு யாது செய்தான் பகதத்தன்:-

754. மால்வரையே போன்றதன் மால்யானை [1]மால்வரையின்
மேல்வரையின் மாநாகம் வில்லிசையிற்-கோலிப்
பெருமாரி பெய்வதெனப் பெய்தான் சிலையாற்
சரமாரி பெய்கின்றான் றான். (சச)

இவ்வகை மழைவருஷம் வருஷித்தாற்போலத் தன் கடவுட் சிலை கால்வளைத்துச் சரமாரி சொரிகின்ற பகதத்தனைக் கண்டு மிகவும் வெகுண்டு பொங்கி யாதுசெய்தா னருச்சுனன்:-

755. கணைமாரி யெல்லாங் கலக்கிவிற் கோலி
யணைமார்பி னாண்புரள வார்த்தே-யிணையில்லாக்
காலன் கடும்படையை விட்டான் கருதலன்மேன்
மால்வண்ணன் றோழன் மதித்து. (சரு)

இவ்வகை வாருணமும் வாஸவமு முள்ளிட்ட திவ்வியாஸ்திரங்களையுஞ் சுடுகணைகளா லறுத்து மாற்றி மிகவும் வெகுளிபொங்கி நின்ற வருச்சுனனைக் கண்டு யாதுசெய்தான் பகதத்தன்:-

756. கூர்வாளி நூறு கொடியின்மேற் கோத்தெய்து
போர்வாளி முந்நூறு பொற்பரிமே-லீராறு
[2]வச்சிரம்போ லெய்தான் மலைந்தான் றடந்தோளிற்
[3]சிச்சிரம்போன் மன்னன் செயிர்த்து. (சசா)

(பா-ம்.) 1. மேல்வரையின், வேலரவின். 2. வச்சிரமேல். 3. சித்திரம்போல்.

இவ்வகையாற் பகதத்தன் விட்ட திவ்வியாஸ்திரங்களைத் தேவராசன் பிரசாதத்தினாற் கிடைத்த வாப்பிய மென்னு மஸ்திரத்தினா லறுத்து மாற்றி யபசயப்படுத்தக் கண்டு, பகதத்தன், அஸ்திரமெல்லாம் க்ஷயமாதலும் மத ஹஸ்தியி னங்குசத்தினை, வானவராலுந் தடுப்பதற் கரியதனை, வெகுவித ஸகஸ்ர வருஷ நிறைவுடையதனை, மணிபூஷண சால சோபிதமாகியவதனை வைஷ்ணவாஸ்திரமாக வபிமந்திரித் தாகாசத்தின்கட் டிரித்து முனையிரிய விட்டெறிதலும், அக்கினிச் சுவாலையா யரசர் குழாம் வெந்து விழ மாக்கடல் வலயந் தலைபனிப்பச் செல்லாநின்றதனைக் கண் டருச்சுனனும் வைஷ்ணவா ஸ்திரந் தொடுக்கலுற்றானைத் தகைந்து, மற்றதற்குத் தன் வக்ஷஸ்தலத்தைக் கொடுத்தான் ஸ்ரீவாசுதேவன். அப்பொழுது யாது நிகழ்ந்ததோவெனில்:-

757. மன்னன் வெகுண்டெறிந்த வன்கை வளையெஃகந்
தன்னை யுடையான் றடமார்பிற்-றுன்னிருளைக்
[1]காலைவாய்ச் சேந்த கடவுட் கதிர்மணிசேர்
மாலையாய்ப் பூண்டதே வந்து. (சுஎ)

இவ்வகை மற்றவனால் விடப்பட்ட திவ்வியாஸ்திரம் ஸ்ரீவாசுதேவன் றிருமார்புக்கு நவரத்தினங்களா லழுத்தப்பட்ட வயிரகண்டி யென்னுமதோர் மாலையாய்ப் பூண்டிலங்கிற் றென்றவாறு. அதுகண்டு தேவர்களு மதி சயப்பட்டுப் புஷ்ப விருஷ்டி பொழிந்தார். அவ்விடத் திரண்டு படைக்கு மாச்சரியமாயிற்று. அவ்விடத்து யாதுசெய்தா னருச்சுனன்:-

758. காற்று மெரியுங் கடுகி யெதிர் [2]மண்டுங்
கூற்ற மெனும்வாளி [3]கோத்தெறிய-மாற்றரிய
வம்பொற் கவச மறுக்க வறியாமற்
[4]றம்பொற்றேர் மீண்டவே தாம். (சுஅ)

எ-து.- யுகாந்த காலத் தக்கினியு மூழிக்காற்றும்போல, வன் கடுங் கணைகளை யருச்சுன னெய்ய, ஆங்கவையும் போய்ப் பகதத்தன் கவசம் பிளக்க மாட்டாமை மீண்டுவரக் கண்டு ஸ்ரீவாசுதேவன் றன் னாராயணாஸ்திரங் கொடுப்ப, ஆங்கதனைத் தொழுது வாங்கி யாகன்ன பூர்ணமாகத் தொடுத்து விட, அதுவும் போய் யாதுசெய்ததோ வெனில்:-

759. விரிகடல் வண்ணன்றன் வெவ்வாளி யேவப்
புரிகடல்சூழ் பூதலத்துப் பொங்கிக்-கரியுண்
மலைதுமிக்கு மால்யானை மன்னுபக தத்தன்
றலைதுமியப் போயிற்றே தான் (சுகூ)

அன்றியும்,

(பா-ம்.) 1. காலைவாய்ச் செங்கட் கடவுள். 2. மண்டக் 3. கொதித்தேறிய. 4. தன்பொற்றேர் மீண்டதே தான்.

760. திக்கு நடுங்கத் திகைப்போயாத் தேர்வேந்தர்
மிக்கவியச் சென்று விசையினாற்-றெக்க
பகதத்தன் றன்றைலையைப் பார்மேற் புரட்டிச்
சுகமுற்றுப் போயிற்றே தொக்கு. (ருo)

*இவ்வகை பகதத்தனை நாராயணாஸ்திரத்தாற் சொர்க்கலோகத்துக்குப் போக விடைகொடுத்துப் பின்னும் சுப்பிரதீபத்தை யாதுசெய்தா னருச்சுனன்:-*

761. வல்விறற் காண்டீப வார்சிலையி னாணுதைத்த
பல்பதி னாயிரமாம் பாய்கணையாற்-புல்லார்
தலைக்களிற்றை யம்புருவத் தன்னடிக்கீழ் வீழ்த்துக்
கொலைக்களிற்றைக் கொன்றான் கொதித்து. (ருக)

*இவ்வகை யமரேந்திரனாற் சிறகறுப்புண்டு வீழ்ந்ததோர் வியன்குன்று போல வருச்சுனன் றிவ்வியாஸ்திரங்க ளவயவத்திற்பட் டுருவச் சுப்பிர தீபமுஞ் சொர்க்கலோகம் புக்க தென்றவாறு. இவ்வகை பகதத்தன் பட்டு வீழ்தலும் அவனைப் பிரதக்ஷிணமாகத் தேர் கடாவி ஸ்ரீவாசுதேவனை நமஸ்காரஞ்செய்து சுதக்ஷண னென்பானைத் தலை துமித்துச் சயத்திரதனையும் ஸௌவீரரையும் பயத்தினோடு நடுக்குறுத்திக் கிருபனையுங் கிருதவர்மையும் பொருகணையாற் சிலையறுத்துப் போகா நின்ற வருச்சுன னெதிரே காந்தாரரெல்லா மெதிர் விலங்கி யாது செய்தார்:-*

762. எல்லாரும் வெஞ்சிலையா ரெல்லாருந் திண்டேரா
ரெல்லாரு மிட்ட கவசத்தா-ரெல்லாரும்
பூந்தார்க ளார்ப்பத்தம் போர்வலியான் [1]மூடினார்
காந்தார ரெல்லாங் கலந்து. (ருஉ)

*இவ்வகை சகுனி யுள்ளிட்ட காந்தார ரிருபதினாயிரவர் சென்று வளைத்துக்கொள்ளலும், யாதுசெய்தா னருச்சுனன்:-*

763. காந்தாரர் சேனைக் கடலைக் கணைமழையாற்
பூந்தார மார்பன் புரட்டினான்-காந்தாரர்
கல்லேறு தம்மிற் கடலே றனையாரை
மல்லேறு வென்றான் மதித்து. (ருங)

*இவ்வகை காந்தாரர் பலத்தைக் கட்டழித்துச் சகுனிமக்க ளெழுவரையுந் தரணிதலத்தின்கட் டலை புரட்டி நிஷதரையுங் காலிங்கரையு நிமிஷ மாத்திரத்திற் கொன்றுழக்கித் திரியாநின்ற தனஞ்சயனோடுந் தாக்கி யாது செய்தான் சகுனி:-*

---

(பா-ம்.) 1. *முட்டினார்.*

764. அம்பொற் சிலைமே லடுகணைக டானெய்து
வெம்பு சரமாரி வித்தினான்-முன்பொருவர்
செய்யாத வண்ணந்தன் சேனைநடு வட்புகுந்தங்
கெய்தார்த்தான் காந்தார ரேறு. (ருசு)

*இவ்வகை செய்த சகுனியைக் கண்டு யாதுசெய்தா னருச்சுனன்:-*

765. தாரறுத்து நாணறுத்துக் காந்தாரர் கோமானைப்
போரறுத்து [1]முன்னே புறங்கண்டான்-சீரறுத்துப்
பார்வேந்தர் கோமான் படநாக முன்னுயர்த்த
போர்வேந்தன் முன்னே புரிந்து. (ருரு)

*இவ்வகை சகுனி புறகிட்டோடக் கடற்படையைக் கலக்குறுத்திச் சிங்க நாதஞ்செய்தா னருச்சுன னென்றவாறு. ஒருபால்,-*

766. சேனை முதல்வனையிஞ் சென்றங்க [2]நாடர்தங்
கோனையுங் கொண்டு குலவேந்தன்-வானுலவு
மாமதியைச் சூழ்போன மண்டலம்போ லெண்டிசையும்
வீமனைச்சூழ் போனான் விரைந்து. (ருசா)

*எ-து.- துரோணாசாரியனையு மங்கராசனையுந் தன் பிராதாக்களையு முடன்கொண்டு துரியோதனன் போய் வீமசேனனைச் சூழ்ந்துகொள்ளலும், அதுகண்டு யாது செய்தான் வீமசேனன்:-*

767. ஒருகைச் [3]சிலையுகைத்தங் கோர்கைச் சரந்தேர்ந்
திருகையுஞ் சென்றங் கிசைந்தா-ரொருகையே
முன்றொடர்ந்து போன முனைவேந்த ரெல்லாரும்
பின்றொடர்ந்து சென்றார் பெயர்ந்து. (ருஎ)

*அதுகண்டு பின்னும் யாதுசெய்தான் வீமசேனன்:-*

768. அலையுழுவை யன்னா னடுசரங்கள் பாயச்
சிலையழிவார் தேரழிவா ராகி-நிலையழிந்து
மாவெந் துயரான் மடங்கிப் புறகிட்டா
ராவந் திகரோடு மாங்கு. (ருஅ)

*இவ்வகை யிரண்டாவதுஞ் சென்று தாக்கி வீமசேனனாற் றேருஞ் சிலையு மழிப்புண்டு தானுந் தன் பிராதாக்களு மகாசேனையு நிலையாற்றா துடைந்திட்டான் துரியோதனன். அப்பொழுது,-*

---

*(பா-ம்.) 1. முன்போற். 2. முன்போற். 3 சிலை குனித்தங்.*

769. ஓங்கி வரம்பிழந்தங் குள்வாங்கு மோதம்போற்
[1]பூங்கமழ்தார் மன்னர் பொருசேனை-யாங்கிரண்டும்
[2]பூண்டுபோர் செய்தழிந்து புண்ணீர் வழிசோர
மீண்டுபோய்ப் புக்கதம் வீடு. (௬௯)

*அன்றியும்,*

770. மன்னர் பொருதழிய மண்டலங்க ளெண்டிசையு
மன்ன [3]பரிசென் றறியாமுன்-மன்னு
புணரியின்மேல் வந்துதித்த பொற்கதிரோன் மேலைப்
புணரியின்மேற் புக்கானப் போது. (௭0)

*எ-து.- ஆதித்திய பகவா னஸ்தமனத்தாலும் வீமசேன னுக்கிரத்துக் காற்றாமையாலு மிரண்டு படையுங் கைவாங்கித் தம் பாடிவீடு புக்காராகக் கருதுவது.*

**பன்னிரண்டாநாட்போர் முற்றும்**

*****

## பதின்மூன்றாநாட் போர்

### கடவுள் வாழ்த்து

771. மூன்றுருவா யப்பான் முதலுருவே றில்லாத
சான்றுருவா யப்பாற் றருமுருவாய்த்-தோன்றி
யணையாக நாகத் தறிதுயில்வா னென்றுந்
துணையாக நெஞ்சே தொழு. (௧)

772. வெய்ய கதிரோன் விளங்க வுலகெங்குந்
துய்யபொற் குன்றின்மேற் றோன்றுதலுங்-கைவகுத்துப்
பாராளு மன்னர் படையிரண்டு மார்த்தெழுந்து
போராளப் [4]புக்காரப் போது. (௨)

*எ-து.- ஆதித்தியபகவா னுதயங்கண் டிரண்டு படையும் பதின்மூன்றா நாள் சமரபூமி புகுந்தபொழுது, அருச்சுனனைச் சஞ்சத்தக ரொழிந்தார் வந்தறைகூவிக்கொண்டு யுத்தமண்டலங் கழியக் கொண்டுபோயின பின்னை, யுதிஷ்டிரனைப் பிடிக்க வெண்ணிக் காலிங்கராசனையுங் கௌசலேசுரனையும் வணிகரையுஞ் சுரசேனரையும் பல பதினாயிர மரசர்களையுஞ் சுற்றுமுற்றும் விளிம்பாக நிறுத்தி, லக்ஷ்ணகுமாரனையும் எழுபத் தாறாயிரந்*

*(பா-ம்.) 1. பூங்கழறார். 2. பூண்டும் போர்ச் செய்கழிந்து புண்ணீ ருடல்சோர, மீண்டும். 3. பரிசொன்று. 4. புக்கவப் போழ்து.*

தேராட்களையுந் துரியோதனனையும் நடுவு னிறுத்தி, சயத்திரதனையும் பல பதினாயிரம் யுத்தவீரரையுந் தூசிமுகத்தின்க ணிற்பாராக்கிச் சகடமென்னும் வியூகம் வகுத்து வேதக்கொடி விசும்பணுவ ரதாசுவங்களை முடுகவேலி முப்பதினாயிரந் தேர்க்குழாத்தோடு மச் சகடயூக ரக்ஷகனாய் நின்றான் துரோணாசாரியன் என்றவாறு.

773. சல்லியனுங் [1]குண்டலனுஞ் சாளுவனு மாளுவனுங்
கொல்லவருங் கொங்கணருங் கோசலரும்-பல்லவருங்
[2]கங்கணருங் காந்தாரர் காலிங்கர் தம்மோடு
பொங்கணையாற் போர்புரிந்தார் புக்கு. (ரு)

இவ்வகை சல்லியன் துச்சாசன னுள்ளிட்ட மகாபல பராக்கிரமர் தம்மிற் றிரண்டு வீமசேனனை யறைகூவிக்கொண்டு போய்க் கொல்லவேண்டு மென்று மனத்தெழுந்த களிப்பினோடு மடஸதிர கோஷமென்னும் யெளவான பூமி புக்கா ரப்பொழுது. இப்பால், துரோணாசாரியன் திட்டத்துய்மனால் வகுக்கப்பட்ட மண்டல மென்னும் வியூகத்தைப் பிளந்து புக்கு மகாசேனை யோடு வந்து மூடிக்கொண்டு எதிர்மலைந்தாரைக் கொன்றுழக்கிச் சோம தத்தன் றலைதுமித்துத் துஷ்டகேதுவினைத் துண்டஞ்செய்து பாஷணரைப் படவுழக்கிப் பத்திரசாலரைப் பரிந்து கொன்று குண்டலரைக் குடல்சரி வித்துக் கோசலரைக் குருதியிற் பாய்ச்சிச் சிஞ்சயரைச் சிரந் துணித்துச் சித்திரசேனனையுந் திட்டத்துய்மனையுந் தேருஞ் சிலையு மழியவெய்து, களிற்றினங்களைக் களத்தவித்துச் சத்திய சாத்தகியைத் தளர்வித்துத் தருமபுத்திரனைக் காத்தவரை யெல்லாம் யமலோகத்துக் கேற்றித் தருமபுத்திரனை வளைத்துக்கொண்டான். அப்பொழுது, தங்கள் பெரும்படையி னழிவுகண்டு, தன்னருகு நின்ற அபிமன்னுவை நோக்கி யாது சொன்னான் தரும புத்திரன்:-

774. மாயன்றா னன்றேன் மகனன்றேல் வானவர்கோன்
சேயன்றே லல்வென்ற தேர்வேந்தே-நீயன்றி
யானைக்கட் டார்சிதைப்பா ராழ்கடல்போன் முன்னின்ற
சேனைக்கட் டார்சிதைப்பார் சென்று. (சு)

எ-து.- தேவராசன் ஸ்ரீவாசுதேவனாத லருச்சுனனாதல் பிரத்தியும்னனாத லன்றிச் சக்கரயூகம் பிளக்கவல்லா ரில்லையாதலால், அருச்சுனன் வருமளவு நம் படைக்கு நமக்கும் பிரமாதம் விளையும். யாது மின்று துரோணாசாரியன் கையிற் படுதல் பிடியுண்ணுத லிவ்விரண்டிலொன்று நிச்சயமா யிருந்தது. ஆதலால் நீ யிந்த யூகத்தைப் பிளந் துட்புகுவாயாகென்று தருமபுத்திரன் சொல்லக்கேட்டு யாதுசெய்தா னபிமன்னு:-

(பா-ம்.) 1. குந்தளனுஞ். 2. தங்கணருங்.

775. விற்புட்டி லிட்டு விறற்பட்டஞ் சாத்திமிகப்
[1]புக்க சரத்தூணி மேற்போக்கி-யுக்கிரமாய்
வெஞ்சிலையொன் றேந்தி விறற்கரிபோற் றோன்றினான்
வெஞ்சினவேன் மான்மருகன் மிக்கு. (ரு)

*அன்றியும்,*

776. மூரிச் சிலையு முரட்கோதை யுங்கட்டிப்
பூரித்த கண்டம் புனைந்துடனே-வீரக்
கொடிமேற் குரங்குயர்த்துக் கொண்டாங்கே சென்றா
னடிமேற் றெழுவா னமைந்து. (சு)

*இவ்வகை போர்க்கோலங்கொண்டு தன் றிண்டேரை வலம் வந்து நமஸ்காரம்பண்ணி மேல்கொண்டு கடுவிசையாற் சென்று தருமபுத்திரனைக் கண்டு யாதுசெய்தா னபிமன்னு:-*

777. விற்கையா லேதொழுதான் வேந்தனை வேந்தனுந்[2]தன்
பொற்கையா லேதழுவிப் போக்கினா-னற்குலத்து
மாமனையுந் தந்தையையும் போல வயவேந்த
ரேமுனையை யெய்தரிப்பா யென்று. (எ)

*இவ்வகை தனுசரகரனாய்ச் சென்று தருமபுத்திரனை நமஸ்கரித்து நிற்ப, அபிமன்னுவைத் தழுவிக்கொண்டு தந்தைக்கு நுந்தை யன்று தானவரைக் கொன்று கொடுத்தாற்போல நீயு மென்பகை தணித்துத்தருவாயா கென்று (அபிமன்னுவுக்கு) விடைகொடுப்ப, விடைகொண்டு யாது செய்தா னபிமன்னு:-*

778. மற்றொழிந்த தந்தையரைத் தாளிறைஞ்சி மாமணித்தே
ருற்றங்கே மேல்கொண் டுருமுப்போற்-[3]செற்றதிர்ந்து
சேனையின்முன் சென்று திறலழிக்கப் புக்கானே
[4]யானையின்மேற் சீயம்போ லன்று. (அ)

*இவ்வகை தருமபுத்திரனை விடைகொண்டு பின்பு நகுல சகாதேவரையுங் கடோற்கசனையு நமஸ்கரித்து மற்றவரையும் விடைகொண்டு வெம்முனையின் மேற் போன வீமசேனனைத் தேடிக் காணாது மற்றவனையு மருச்சுனனையும் ஸ்ரீ வாசுதேவனையு நினைந்து நமஸ்காரம் பண்ணிச் சீக்கிர வேகத்தாற் றேர்கடாவி முடுகச் சென்று சத்துருக்கள் சேனைமுகத்துத் தாக்கி யுக்கிரத்தோடும் யாதுசெய்தா னபிமன்னு:-*

---

*(பா-ம்.) 1. புக்குச் சரந்தூணி. 2. தான். 3. செற்றெரிந்து. 4. ஆனைமேற் சீயம்போ லார்த்து.*

779. அதிரதர்கள் சேனையெனு மாழ்கடலி னுள்ளே
முதிர முறைமுறைதே ரோட்டி-[1]யதிருமவண்
மாதவிதான் பெற்ற [2]மரக்கலந்தா னோடிற்றே
போதவிழ்தார் மன்னர்குழாம் புக்கு. (கூ)

அன்றியும்,

780. முன்னின்ற தூசிப் படைமுழுதுந் [3]தூசறுத்துப்
பின்னின் றரசர்களைப் பிற்படுத்தி-முன்னின்ற
சக்கரக்கை யூகங் கலங்கச் சரந்தொட்டான்
சக்கரத்தான் றங்கை மகன். (கo)

*எ-து.- ஸ்ரீ வாசுதேவன் பக்கற் பெற்றதோ ரஸ்திரத்தினை யுச்சரித் தெய்து, தூசிமுகத்து நின்ற யுத்தவீர ரனைவரையுங் கலக்குறுத்தி யெதிர் மலைந்தாரை மலங்க நூறித் துரோண கிருப கன்னரையும் அசுவத்தாமாவினையுஞ் சிலையறுத்துச் சலிலியன் சகுனி யுள்ளிட்டாரை யருநிறத்திடை யம்பு பாய்ச்சி மற்றவரைச் சூழ்ந்த யானை தேர் கருவிக்காலாட்களையுங் கட்டழித்துத் துரோணாசாரியனால் வகுக்கப்பட்ட சக்கரவீயூகத்தைப் பிளந் துள்புக்குச் சேனைமுகத்தை யிரிவித்துக் கச துரங்க பதாதிகளை நிலப்படுத்திப் பின்னும் யாது செய்தா னபிமன்னு:-*

781. எவ்விடத்த னென்னி லிமைப்பளவி லெங்கெங்கு
மவ்விடத்த னாகி யமர்புரிந்து-[4]தெவ்வுடையக்
கூறுகூ றாக்கிக் [5]கொடுஞ்சினவாய்க் கூற்றம்போல்
வேறுவே றாய்ப்பொருதான் வேந்து. (கக)

அன்றியும்,

782. [6]தார்த்தரட்டி சேனையெனுஞ் சாதுரங்கத் தாழ் [7]கடவிற்
றீத்திரட்டி யோட்டித் திசைதூவி-வீழ்த்துருட்டி
மாதவிதான் பெற்ற மதகயந்தா னோடிற்றே
போதவிழ்தார் மன்னர்குழாம் புக்கு. (கஉ)

*இவ்வகை சக்கரவியூகம் விளந் துள்புக்கு மகாயுத்தஞ் செய்யாநின்ற வபிமன்னுவுக்குத் துணைப்போவாரைப் பெறாது நின்றவளவில், வீமன் றன்னுடன் போர்மலைந்த சத்துருபக்ஷத்தாரை விநாசஞ்செய்து விரைவினால் வந்த தருமபுத்திரனைப் பணிந்து நின்றானை நோக்கித் தருமபுத்திரன் சொல்லுவான்: ஸ்ரீ*

*(பா-ம்.) 1. அதிருமவன். 2. மரக்கலத்தான். 3. தூரறுத்துப். 4. எவ்வுடலுங். 5. கொடுஞ்சினம்வாய்கூற். 6. தாத்திரட்டி. 7. கடலைத், தீர்த்திரட்டி*

வாசுதேவாருச்சுனரையு முன்னையும் பிரிவித்துத் துரோணா சாரியன் கிருபன் கன்னன் அசுத்தாமாவினோடுந் துரியோதன னென்னளவும் வந்தானைத் துரந்துகொண்டு சக்கரயூகம் பிளந் துட்புகுந்தா னபிமன்னு. நீயு மாங்கவனுக்குத் துணையாகக் கதுமெனப் போவாயாகென்று சொல்லக் கேட்டுச் சிந்தாகுல விருதயஸ்தனா யாது சொன்னான் வீமசேனன்:-

783. காலனே யன்ன கடற்படைஞர் தம்மேலே
பாலனே செல்லப் படைவிடுத்தா-யேலங்
குதலைவாய் நாறுங் குருநாடர் கோவே
மதலையாய் வாழுதியோ மற்று. (கங)

அதுவன்றியும், முன்னஞ் சகுனியது மாயச்சூதினா லிராச்சியமுந்தோற் றேந்திழையையுந் தோற்றுத் துச்சாசனனாற் கேசக்கிரகணஞ்செய்து பாரறியப் பரிபவப்படுவித்தாய். அதுவுமன்றியும், வனவாசமும் வழக்குமாக்கினை. இன்று வீஷ்மனை யுள்ளிட்ட மகாபல பராக்கிரமரைக் கொன் றிராச்சியம் பெறுவதாக விருந்தோமுக்குச் சோடசவருஷம் நிரம்பிற்றில்லாத பாலகனைப் படையின்மேலே விடுத்தாய். அவனுக்கொரு பிரமாதம் புகுதில் ஸ்ரீவாசுதேவனை மனமுங் கன்றும்; அவ்வளவி லொருமுகூர்த்தத்தில் யாங்களும் படுகின்றோம். எம்பெருமானே பிழைசெய்தாய் என்று எல்லையில் லாததோர் சந்தாபத்தோடும் யாங்ஙனம் போயினான் வீமசேனன்:-

784. தங்கோன் றிருவடியைக் கைதொழுது தண்டேந்திப்
பொங்கோதம் போற்கொதித்துப் போயினா-னங்கோத
மால்வண்ணன் றன்மருகன் றன்மதலை நின்றளவுங்
கால்வண்ண னாகக் கடிது. (கச)

இவ்வகை வீமசேனன் வெகுண்டெழுந்து காலாளாய்த் தண்டாயுதம் பிடித்தோடித் தூசிமுகத்தின்க ணின்ற துரியோதனன் சேனையோடு தாக்கி யாது செய்தானோ வெனில்:-

785. ஆனைகளுந் தேரு மடையப் பிடித்தடித்துச்
சேனைகளைத் தண்டாற் சிதைவித்துத்-தானை
[1]முடியரசைக் கொன்றுழக்கி மூரிநீர் சூழ்ந்த
[2]படியரசைக் கொன்றான் பரிந்து. (கரு)

எ-து.- யுகாந்தகாலத் துக்கிரத்தோ டெழுந்த வூழிக்காற்று முகாந்தாக் கினியும்போலக் கசதுரங்க பலத்தையுந் தரைப்படுத்தி மகாசேனையைத் திசாமுகந்தோறுஞ் சிதறுவித்துக் கூற்றமேபோலக்

(பா-ம்.) 1. முடியரசர்க். 2. படியரசர்க்.

கொதித்தெழுந்து சேனையைத் துரந்து சுருக்குவித்து அபிமன்னுவுக்குத் துணையாவதாக வீமசேனன் வருகின்ற வதிவேகமுந் தங்கள் பெரும்படையி னாற்றாமையுங் கண்டு சயத்தி ரதனைச் சென்றெய்தி யாதுசொன்னான் துரியோதனன்:-

786. நின்ற குலமதலை நம்படையை நேராகக்
கொன்று குவித்திடுவன் கூற்றம்போ-லின்றிவனை
விண்ணுலகுக் கேற்றாயேல் வீமன் றுணைபுகுந்து
மண்முழுதுந் தானாள்வான் மற்று. (கசா)

எ-து.- யாவராலும் பிளக்க வரிய சக்கர யூகத்தைப் பிளந் துட்புகுந் துருமேறென மகாசேனையைக் கொல்லாநின்ற வபிமன்னுவுக்குத் துணையாக வீமசேனன் கூடுமாகில், காற்று மெரியும் போல நம் மகாசேனையைப் பஸ்ம மாக்குங் கண்டாய்; மற்றவன் கூடுவதன் முன்னம் பரமேசுவரன் பக்கற் பெற்ற கொன்றை மாலையாற் றடுத் தபிமன்னுவினைத் தனியனாக்கிக் கொல்லிப்பாயாகெனக் கேட்டு மற்றவனும் வருத்தத்தா லுடன்பட்டு யாதுசெய்தான் சயத்திரதன்-

787. மன்சொன்ன சூழ்கழற்கான் மன்னவர்கண் மாமுனைமேன்
முன் [1]சென்ற மூரித்தேர் கால்காப்பப்-பின்சென்ற
கொற்றவன்றான் வந்தமரிற் கூடாமை யீசன்பாற்
பெற்றவரத் தாற்றடுத்தான் பின். (கள)

தான் முன்னம் வீமசேனனா லபசெயப்பட்ட வமமானந் தீரவேண்டிப் பரமேசுவரனை நோக்கித் தபசுபண்ண, ஆங்கவனும் பிரசன்னனா யுன்னபிப் பிராயமென் னென்றலும், பாண்டவரைச் சயஞ்செய்யுமா றெனக் கருளிச் செய்வாயாகென்றலும், சக்கரபாணிசகாயராகிய பாண்டவரை வெல்லவரிது; மற்றவரை யொருக்கால் மானபங்கப் படுத்தி என்று தன் சடாமகுடத்துக் கொன்றைமாலையைப் பிரசாதிப்ப, பெற்றுப்போந்த கொன்றைமாலையால் வீமசேனன் றுணைபுகுதாது விலக்கியிட்டான் சயத்திரத னென்றவாறு. இவ்வகைப்பட்ட கொன்றைமாலையைக் கண்டு யாதுசெய்தான் வீமசேனன்:-

788. [2]கன்றி யெயிறு கடித்தெழுந்து காலன்போல்
வென்றிசேர் வீமன் விரைந்தேகிக்-கொன்றைத்
தொடைமாலை கண்டளவிற் கைதொழுது வீழ்ந்தா
னடன்மாலை வேலார்முன் னாங்கு. (கஅ)

எ-து.- சயத்திரதன் விட்ட கொன்றைமாலையைக் கண்ட டதிவேகத் தோடுஞ் செல்கின்ற வீமசேனன் மகாசேனையோடுந்

(பா-ம்.) 1. சென்று. 2. கன்று மயரிற் கடிதெழுந்து.

தடுப்புண்டு குருவசனம் பிழையாம லகக்ஷி யெய்தி நமஸ்கரித்து நின்றா னென்றவா று. அப்பொழுது வீமசேனனோடும் போயின தேராட்களில் திட்டத்துய்மன் வீமசேனனை நோக்கி யாதுசொன்னானோ வெனில்:-

789. நின்ற குலமதலை நின்னுடைய மைந்தனிவ
னென்று கருதாதிங் கென்செய்தா-யின்றுதவி
மண்ணரசர் முன்னே மதலையைநீ காவாயேல்
விண்ணரச [1]னாமே விரைந்து. (கக௯)

எ-து.- உன்புத்திர னபிமன்னு தனியே நின்றுஞ் சத்துருபக்ஷத்தா ருடன் மகாயுத்தம் பண்ணி யதி கிலேசப்படக் கண்டும் நீசென் றுதவி மற்றவனைக்காத்து மலைந்ததார் சேனை குலைந்தோடக் கொல்லாது நின்றனையே யென் று பேசிக் கொன்றைமாலையைக் கடந் துட்புகாநின்ற திட்டத்துய்மன் சாத்தகி கடோற்கசத் தொடக்கத்தாரைத் தகைந்து மிகவெகுண்டு யாது சொன்னான் வீமசேனன்:-

790. எங்கள் குடிப்பிறந்தா ரெல்லா மிறந்தாலுஞ்
சங்கரன்றன் மாலை தனைக்கடவோ-மங்கவனும்
பட்டானே யாகிற் படுத்தான் றனைப் [2]படுத்தெங்
கட்டாவி யுங்களைவேங் காண். (உ௦)

என்றிவ்வகை சொல்லி நிற்ப, அப்பாற் றார்த்தராஷ்டிரர் சேனை யென்னு மகாப்பிரளயத்திற் புகுந்த வபிமன்னு யாதுசெய்தான்:-

791. தேர்மேலு மாமேலுந் திண்கருங்கை வெண்கோட்டுக்
கார்மேலுங் [3]காலாட் கடன்மேலும்-வீரர்
விலங்கினார் தம்மேலும் வெஞ்சரங்க டூவக்
கலங்கினார் மன்னர் களத்து. (உக)

எ-து.- நாற்பத்தெட்டியோசனை பரந்த கடற்சேனை வெள்ளத்தைப் படவுழக்கிச் சுருக்குவித்துப் புகவரியதோர். மகாவனத்தைப் பொங்கெரி பரந்து சுட்டாற்போல மதயானையையுங் கொடித்தேரையும் பரிமாவையுங் காலாள் நிபுடமாக நெருங்கக்கட்டிய பதாதி சங்கத்தையுங் கோலாகலமெனக் கலக்கிக் கொல்லாநின்ற வபிமன்னுவைத் துரோண கிருப கன்ன அசுவத் தாமா வுள்ளிட்ட பெருந்தேராட்கள் தார்த்தாஷ்டிரரோடுஞ் சென்று சரமாரி பொழிந்து தாக்கினார். அப்பொழுது யாதுசெய்தா னபிமன்னு:-

792. வார்கடா மால்யானை மன்னன் குலமதலை
போர்கடா வெம்முகத்த போர்வாளி-போர்புகா

(பா-ம்.) 1 ஆவான். 2. படுத்தென் கட்டாவி யுங்களைவன்.
3. காலாட்க டம்மேலும்.

முன்புக்கா ரெய்தார் முகங்கூர் நெடும்பகழி
[1]யொன்றுக்கா றெய்தா னுடன்று. (உஉ)

இவ்வகை யாங்கெதிர்ப்பட்டாரையு மஸ்திரசஸ்திரங்களறுத்து மாற்றி மற்று நின்ற க்ஷத்திரியர் கூட்டங்களையுங் கலங்கச்செய் தார்க்கின்ற வபிமன்னுவினை யஸ்திரிகராச னெதிர் விலங்கி யாது பட்டானோ வெனில்:-

793. வடிக்கணையான் வில்லுதைத்த வாயம்பு பாய
வடற்சிலையுந் தேரு மழிந்து-[2]பிடித்திருந்த
வாளுந்தன் கேடகமு மண்மேல் விழவிழுந்தான்
றோளுந் தலையுந் துணிந்து. (உந)

இவ்வகையினாற் றேருஞ் சிலையு மழிப்புண்டு மார்புந் தோளு மொலிப் புண்டு வாளுங் கேடகமும் பிடித் தோடித் தோளுந் தலையு மறுப்புண் டஸ் திரிகராசன் பட்டுவீழ்தலு மதுகண் டதிபயங்கர மெய்தி யிரிந்திட்டது துரி யோதனன் சேனை. அப்பொழுது;-

794. அங்கர்கோ னுள்ளிட்ட டரசர் குழாமெல்லா
மெங்கடா போவ தினியென்னப்-பொங்கிவருந்
தேரரசர் சூழத் தெரிசரமேற் றூவினார்
போரரச ரெல்லாம் புகுந்து. (உச)

இவ்வகை துரியோதனன் சேனை யுடைந்திட்டதெல்லா மொருமுகமாய் நின்று சரவருஷஞ் சொரிந்தார்ப்ப, அப்பொழுது யாதுசெய்தா னபிமன்னு:-

795. வந்தெதிர்ந்த பல்வேந்தர் மார்மேலுந் தோண்மேலும்
பந்தியாய் நின்ற படைமேலு-முந்தி
விடுத்தா னடுசரங்கள் மேல்வேந்தர் தம்மைக்
கெடுத்தான் [3]திறலாற் கிளர்ந்து. (உரு)

எ-து.- துரியோதனனைக் கலக்குறுத்தித் துச்சாசனனைத் தேரழித்துத் துரோணாசாரியனை வில்லறுத்துக் கன்னனைக் கட்டழித்துப் பூரி பூரிச்சிரவா வினையும் புறகிடுவித்துச் சல்லிய சகுனியரைச் சிதறுவித்து மற்றொழிந்த தேராட்களையுஞ் சர்வ க்ஷத்திரியரையுந் தேருஞ் சிலையு மழித்து வாகன மிழந்து பதாதியா யோடத் தாக்கி யூழிக்காலத் துருத்தெழுந்த கூற்றமே போலக் கொன்றுழக்கிக் குருதிப்புனல் பெருகிக் குமிழியிட யானை தேர் குதிரை கருவிக் காலாளும் பட்டவிந்து நிணமவிழப் பிணமிதப்பக் கரையின்றிப் பெருகாநின்ற சோரிப்புனலிடையிற் குளித் தெதிர்பொருவாரை யின்றிக்

(பா-ம்.) 1. ஒன்றுக்கொன்று. 2. பிடித்திழிந்த 3. திறத்தான் கிளர்ந்து.

களித்தெழுந்த மனத்தனாகித் திரிகின்ற விடலைக்கூற் றபிமன்னுவைக் கண்டு பயமும் பரித்திராசமு மெய்தி வாகனம் பலவிழந்து துரப்புண்டு போந்து நின்ற சருவ க்ஷத்திரியருந் துரியோதனனும் பிராதாக்களும் பெருந் தேராட்களும் பட்ட வபசயத்தினையும், அபிமானஞ் சினங்கனற்ற வார்த் தெழுந்து மிக்கெழுந்த வெகுளியுடன் கொல்லாநின்ற வபிமன்னுவையுங் கண்டு துரியோதனன் மகன் லக்ஷணகுமாரன் வந் தேன்றுகொள்ள, அவனை யாதுசெய்தா னபிமன்னு:-

796. கொற்றக் குரங்குயர்த்தான் கோமதலை கோளரவ
வெற்றிக் கொடிகொண்டான் [1]மெய்மகனை-யற்றுத்
தலைபுரண்டு வீழச் சரந்தொட்டா னாங்கோர்
மலைபுரண்டு வீழ்வதுபோன் மாண்டு. (உ௬)

இவ்வகையினா விராசராசன் துரியோதனன் மகன் லக்ஷணகுமாரனை யஸ்திர சஸ்திரத்தாற் றலைதுமித் தவனோடும் வந்த க்ஷத்திரிய குமார ரெண்ணிறந்தாரைத் தலையு மிடையுந் துணித்துச் சிங்கநாதஞ்செய் தெம் மருங்குந் தானேயாய்ப் பொருகணைமாரி பொழிகின்ற மாதேவி புத்திரன் மகாபலபராக்கிரமனை யெண்ணிறந்தார் சூழ்ந்துகொள்ளலு மத்திரேசுவரனைத் தேரழித்த மற்றவனைப் புறங்கண்டு, வந்தெதிர்ந்த வரசர்களை யெப்பக் கமு மோடத் துரத்தி, அநேகாயிர மதகரியும் அநேகாயிர மணிநெடுந்தேரும் அநேகாயிரம் பாய்மாவு மெண்ணிறந்த பதாதிவெள்ளமுந் தன்னடுசரங்களா லவிய நூறிக் கொடிப்படையை யிரிவிக்கின்ற வபிமன்னுவினுக்கு நிலையாற்றா திரிந்தோடுகின்ற மகாசேனையைக் கண்டு மகாவுக்கிரத்தினோடு மகனுக் கிரங்கித் துரோணா கிருப கன்ன அசுவத்தாமாவையு நோக்கி யாது சொன்னான் துரியோதனன்:-

797. இம்மகியு மிவ்வரசும் வேண்டே னிகலமரு
ணின்மகனு நின்கண்ணுங் காணவே-யென்மகனைக்
கொன்றுளனாய் நிற்கவோர் [2]கூனல்லில் வேள்போன்மா
லின்றுளனா யென்செய்கேன் யான். (உ௭)

அதுவன்றியு மெனக்குச் சிநேக பாந்தவத்தால் யுத்தஞ் செய்ய வந்த வபிஷேக க்ஷத்திரிய ரறுபதினாயிரவரு மிராசகுமாரர் நூறாயிரவரு மைம்பதுலக்ஷ மதகரியு நூறாயிரலக்ஷ மசுவங்களு மிரண்டு நூறுலக்ஷ மணிநெடுந்தேரு மெண்ணிறந்த பதாதிவெள்ளமு மென்மகன் லக்ஷணகுமாரனும் இதற்குமுன் பட்டார்கள்; இனிச் சயத்திரத னொருவனு மொழிய வென் மித்திர பாந்தவமு மொழிந்த மகாசேனையு

(பா-ம்.) 1. மேயமகன். 2. கூநல்வேள் போலுமால்; கூனவேள் போலுமால்; கூனற் குரங்குபோல்.

*மிவன்கண்ணிற் பயத்தினா லிரிந்தோடுகின்றன; யானு மிவன் கையிற் படுகின்றேன். இனிச் சிறிதுபொழுதி லருச்சுனன்வந் தபிமன்னுவுக்குத் துணைசெய்யுமாகில், பின்பு திரிமூர்த்திகளாலும் வெல்லவரிது; அதற்குமுன்னமே மலைந் திவனைக் கொன்மின் என்று துரியோதனன் வெகுண்டுரைப்பப் பல பதினாயிரம் யுத்த வீரருந் துரோண கிருப கன்ன அசுவத்தாமாவுஞ் சென்று சௌபத்திரனைச் சூழ்ந்து கொள்ளலும் அப்பொழுது யாதுசெய்தான் கன்னன்-*

798. மன்ன னுரைகேட்டு மாமறையோ னுள்ளிட்ட
மன்னர் பலரோடும் வந்தெதிர்ந்து-கன்னன்
சரமாரி தூவித் தடுத்தான் கதத்தாற்
பொருமால் களிற்றானைப் புக்கு. (௨௮)

*அதுகண்டு யாதுசெய்தான் சௌபத்திரன்:-*

799. அங்க வளநாட னெய்தானை யையைந்து
வெங்கணைகொண் டீரிருகால் வில்லறுத்தே-யங்கவன்றன்
கோலாளைக் கொன்று கொடித்தே ரழித்தவனைக்
காலாளாச் செய்தான் கறுத்து. (௨௯)

*இவ்வகையால் வில்லுந் தேரு மழிப்புண்டு சாரதியையும் படக்கொடுத்து வெறுநிலத்திடை யிழியப் பாய்ந்து விரைந்தோடித் துச்சாசனன் றேரேறி யுக்கிரவேகத்தோடு முடன்று பொங்கி யபிமன்னுவினுடன் வந்து தாக்கி யாதுசெய்தான் கன்னன்:-*

800. கொற்றச் சிலைத்தொழிலுங் கோலத்தேர்ச் சாரதியு
[1]மற்றப் படுமாற்ற மாறாதே-மற்றவனைத்
தான்பட்ட வெல்லாம் படுத்தினான் றார்[2]வேந்த
னூன்பட்ட வேலா னுடன்று. (௩௦)

*எ-து.- காளமேகம் வருஷித்தாற்போலவுங் கலந்தெழுந்த விடியேறு போலவும் பார்முழுதும் பரந்தெரியப் பாணசாலங்கள் திசை மறைப்ப அக்கினியஸ்திரத் தொன்றும் விஷ்ணுவஸ்திரத் தொன்றும் மாலிங்க வஸ்திரத்தொன்று மிப்படிப் பகுவிதங்களாற் சத்துருக்களுக்கு மறியலாகாது வகைவகையாகச் சரவருஷம் வருஷித்துச் சக்கர வலயமெனத் திரிந் தார்க்கின்ற சௌபத்திரன் கவசங்களைத் தக்க பாணங்களா லறுத்து மாற்றி யொரு நான்கு வாள்வாயம்புகொண் டவன் சுவேதாசுவங்களைத் துணித்து வீழ்த்தி, இருநான்கு சுடுகணையா லவன் சாரதியையும் வனாரத் துவசத்தினையும் அறுத்து மாற்றிச் சிங்கநாதஞ் செய்தான் கன்ன னென்றவாறு. இவ்வகை யங்கராசனாற் றேரழிப்புண்டு யாதுசெய்தா னபிமன்னு:-*

---

*(பா-ம்.)* 1. *அற்றுப் படுமாற்றம்; அற்றப் படச்செய்தது.* 2. *வேந்தர்.*

801. வாமத்தேர் [1]கட்டவிழ மானச் சிலையழியச்
சேமத்தேர் மற்றூரத் தேரின்றி-நாமக்
கொடுஞ்சுடர்வாள் கேடகங்கைக் கொண்டிழியப் பாய்ந்தா
னெடுஞ்சுடர்வாண் மன்ன னெக. (௬௧)

*எறிகட னடவு ளிளஞாயிறு வெளிப்பட்ட தென்னச் சௌதா கிண் கிணி கணகண வென்பதோர் சத்தமுடைய சால விசாலமாகிய தேரார்க்க, கேடக மிடஞ்சுழல, வச்சிராயுத சமானமாகியதோர் வெஞ்சுடர்வாள் வலஞ் சுழல வெழிற் றேர்மிசைநின் றிழியப் பாய்ந்த வரசிளங்குமர னபிமன்னுவினைக் கண்டு முன்னம் பரந்தகன்ற சருவ க்ஷத்திரிய ரெல்லாந்திசைதிசை தோறும் வந்துகூடி நிரைத்துநின்று நிசிதபாணங்களால் மறைத்தார்த்தார்; யாங்ஙனமோ வெனில்:-*

802. நம்பற்கு நேராக நாற்காலு முக்காலுந்
தம்பொற் படையழிந்த தார்வேந்தர்-செம்பொற்
கவியம்பால் வெம்முகத்துக் காய்பரித்தே ரோட்டிக்
குவியம்பா லெய்தார் குறித்து. (௬௨)

*அதுகண்டு யாதுசெய்தா னபிமன்னு:-*

803. வீழ்சுடர்வாண் மன்னர் விடுசரங்க ளெல்லாந்தன்
சூழ்சுடர்வாள் வட்டணையி லேதுணித்துச்-சூழு
மழிதந்து [2]வேந்திரிய வாளொடும்போ யானை
யுழிதந்து கொன்றா னொருங்கு. (௬௩)

*இவ்வகை யதிக சூட்சுமகாரியா யாங்கவர்க ளெய் தார்க்கின்ற வடுசரங்களை யேழு மெட்டுங் கண்டமாக வாள்வீசி யறுத்து மாற்றிக் கன்ன னோடு தலைப்பெய்து மற்றவன் றேர்ப்புரவியையுஞ் சாரதியையு மவிய நூறிக் காந்தருவ வித்தையாற் கடற்படையை யிரிய நூறி யார்க்கின்ற மாதவி புத்திரனைக் கண் டாகாசத் தமரர்கணங்கள் புரோக்ஷித்துப் புஷ்பவிருஷ்டி பொழிந்தார். அப்பொழுது தார்த்தராஷ்டிரசேனை யொன்றொருவரை முக நோக்கி யாது சொன்னார்:-*

*விருத்தம்*

804. [3]களிமா ணுலகுக்கோர் காலனோ சொல்லீர்
கடல்வண்ணன் றங்கை கருவுயிர்த்த தென்பார்
[4]தெளிமாண வாளேந்திச் செய்கின்ற போரிற்
சிலையேந்திச் செய்த செருவென்ன தென்பா
ரொரிமாலொ டன்றோ படைபயின்ற தென்பா
ரொள்ளிலைவேற் பார்த்தன்சே யல்லனோ வென்பார்

---

*(பா-ம்.) 1. கட்டவிய. 2. வெந்திரிய. 3. களிமானுலகுக்கோர். 4. தெளிமா ணவளேந்திச்.*

புளிமாவ தாகமோ தேமாங்கன் றென்பார்
புலிக்குப் பிறந்த தெலியாமோ வென்பார். (ரு௪)

என்றிவ்வகையினாற் றார்த்தராஷ்டிரர் சேனை வியப்ப வாங் கவர்களை யெப்பக்கமு மோடத் துரந்து துரோணாசாரியனோடே தலைப்பெய்து யாது செய்தா னபிமன்னு:-

805. போராளு மன்னர் பொருகளங்கைக் கொண்டப்போ
தோராண்மை சொல்லிச் [1]சுளிந்ததற்பின்-பாராளும்
வேந்தற்கா வந்தெதிர்த்த [2]வெம்மறையோன் வெஞ்சிலையைச்
சேந்திருகால் வீழ்த்தான் சிதைத்து. (ரு௫)

இவ்வகை துரோணாசாரியனைத் தேருஞ் சிலையு மழித்து நிராயுதனாக் கினா னபிமன்னு. அதுகண்டு மிகவு மிலச்சித் தபிமானஞ் சினங்கனற்ற மற்றொரு சேமத்தேரேறிச் சேமச்சிலை யொன்று வாங்கிப் பார்வேந்தர் பல ருங்கண்டு நிற்க வபிமன்னுவின்மேற் சென்று யாது செய்தான் துரோணாசாரியன்:-

806. கொடுஞ்[3]சினந்தீப் பொங்கவோர் கூர்வாளி கோத்துக்
கடுஞ்சிலைநாண் காலலைப்பச் சென்றங்-கடுஞ்சரமாத்
தாளடும்போர் மாமறையோன் வீட்டினா னற்றொருகை
வாளொடும்போய் வீழ மலைந்து. (ரு௬)

இவ்வகை துரோணாசாரியனாற் றோளறுப்புண்டு மற்றதற்குத் துளங்காது மானத்தேரின் மணியாழியை மற்றைக் கையாற் பறித்துக்கொண்டு சக்கரபாணியிடைத் தான் பயின்ற அபியோகத்தினா லாங்கதனை யபிமந்திரித் தங்குலிப்படுத்தி யந்தரத்திடைத் திரித்திடுதலும், அதுகண்டு க்ஷத்திரிய ரெல்லா மொன்றொருவரை முகநோக்கி யாது சொன்னார்:-

807. பாண்டவர்க ளின்றே படையொழிந்து பாராள்வர்
மூண்டசெரு வின்றே முடிந்ததா-வீண்டனிவன்
கைவிடா முன்னமினிக் காலசக்க ரந்தன்னை
[4]யெய்திடுமி னெல்லீரு மின்று. (ரு௭)

இவ்வகை தார்த்தராஷ்டிரர் சேனை யொன்றொருவரை முகநோக்கிச் சொல்லுமளவி லபிமன்னுவினால் விடப்பட்ட காலசக்கரம் யாங்ஙன மோ டிற்றோ வெனில்:-

808. காலன் கடும்பாசங் கைக்கொள்ள வெண்டிசையும்
போல நடுங்கிப் பொலிவழிந்து-வேலையெனக்

(பா-ம்.) 1. சுளித்ததற்பின். 2. வென்மறையோன். 3. சினத்தீப் 4. எய்திடீர்.

காலைசூழ் மாசேனை நோக்கிக் [1]கழிந்ததே
வேலைசூழ் மன்னரெலா மிக்கு. (௫அ)

இவ்வகை காலசக்கரத்தை யபிமந்திரித்து விடுதலு நாராயண பகவான் காலசக்கரம்போல லோகாலோகங்களைத் தகித்திடுவதோ ருக்கிரத்தோடும் வருகின்ற தென்று பலபதினாயிரம் படைவேந்தரும் பருதி மண்டலத்தை மழைமறைத்தாற்போலச் சரவருஷம் வருஷித்து அஸ்திர சஸ்திரங்களாற் பின்னமாக்கினார். அப்பொழுது அபிமன்னு யாது செய்தான்:-

809. [2]சுற்றுந்தான் பார்க்குந்த துணைகாணான் றேர்காணான்
[3]பற்றத்தான் பார்க்கும் படைகாணான்-முற்றுந்தான்
றன்படையே யாயினான் றாமரைப்பூப் போன் [4]மலர்ந்தான்
முன்படையும் பின்படையாய் மொய்த்து. (௫௯)

இவ்வகை யெண்ணிறந்த வரசகர்களோ டேழக்குரோணிப் படையுடை யானாகிலும் மண்மீதில் வாசுதேவனை மாமனாக வுடையானாகிலுந் தேவேந்திரன் மகன் காண்டாவன தகன னருச்சுனனையும் வீமசேனனையும் பிதாவாக வுடையானாகிலுங் காற்றுந் தீயும் போல்வார்கள் சத்தியசாத்தகி திட்டத்துய்மன் கடோற்கச னென்பவரையும் உத்தமோசாவையும் உதார்மனையுந் தனக்குத் துணையாக வுடையானாகிலு மேலைக் கரும வசத்தினாற் றுணையின்றித் தனியனாகித் தேருஞ் சிலையுந் தோளும் வாளு மிழந்து காலசக்கரமும் பழுதாகிக் கவசமுங் கிழிந்து போரிழந்து பசும்புண்ணி னிணங்குழம்பின கொழுங்குருதியிற் புறங்கூரவுந் தளர்ந்திலாத மகாதயிரியத்தினோடுங் கடற்படையைக் கலக்குறுத்தித் திரிகின்ற வபிமன்னு யாது போன்றானோ வெனில்:-

810. ஒற்றைத் தடக்கையா லொண்குருதிச் செவ்வொளியாற்
செற்றத்தொ டாளிரியச் சீறினா-னற்றைக்கோர்
கல்லாடு கொல்லுங் [5]கடாயானை போன்றானே
மல்லார்தோட் பார்த்தன் மகன். (௬0)

இத்தன்மையினால் விரைந்தோடி யாங்கொரு பெருமுனை வயிரத்தண்டு வீழ்ந்து கிடந்ததனை யெடுத்துக்கொண் டசுவத்தாமாவின் மான்றேர்ப் புரவிகளை மடிய மோதி, ஆங்கவனைப் பதாதியாக்கிச் சீறுமளவில், அது கண்டு துச்சாசனன்மகன் செயசேனன் திண்சிலையேற்றித் தெரிகணை தெரிந்து தேரேறி யார்த்து வந்து

(பா-ம்.) 1. கழிந்தனரே. 2. சுற்றித்தான். 3. பற்றித்தான். 4. மலங்கும். 5. கடயானை.

அபிமன்னுவினுடன் தாக்குதலும் அதுகண்டு தேவகணம் யாது சொன்னார்:-

811. கையிழந்து வில்லிழந்து காலாளாய்ப் புண்கூர்ந்து
மெய்தளர்ந்து நின்றானை வெற்றிகொளப்-பையரவ
மேந்தினான் மைந்த னிகலமருள் வில்லேந்திப்
போந்தவா றென்னோ புகல். (சுகு)

இவ்வகை தேவர்களு மதிசயப்படத் துச்சாசனன் மகன் வந்து தாக்கினான். அது யாங்ஙனமோ வெனில்:-

812. துச்சா சனன்புதல்வன் றோன்றினான் றோன்றலுந்தே
ரச்சா சுவங்களையு மாங்கடித்து-மற்றவன்றன்
சாரதியை வீழ்ப்பத் தனுவொழிந்து [1]தண்டேந்திப்
போர்மலைந்து நின்றான் புகன்று. (சுஉ)

இவ்வகை துச்சாசனன் மகன் தாக்கினானை ரதாசுவங்களையுஞ் சாரதியையும் படவடிக்க, மற்றவனுஞ் சாரதி படப் பதாதியா யொரு தண்டுகொண் டெதிர்க்க, மகா யுத்தஞ் செய்யத்தொடங்கினா ரப்பொழுது. அது யாங்ஙனமோ வெனில்:-

813. தண்டொடு தண்டு தடுமாறத் தாமலைந்தார்
மண்டு செருவில் வழக்கழிவு-கொண்ட
குலவேந்தன் றம்பி குமரன்விழ வீழ்ந்தான்
சிலைவேந்தன் வாழ்விசயன் சேய். (சுங)

இவ்வகை துச்சாசனன் மகன் தண்டாயுதங்கொண்டு தாக்கினானை மகாயுத்தஞ்செய்து மரணமாக்கி, சாரிகைகளி னதிவேகத்தினாலுஞ் சுரோணிதத்தின் குறைபாட்டாலும் கிஞ்சுகவிருக்ஷ மலர்ந்தாற்போல வெண்ணிறந்த புண்களினாலு மடிதளர்ந்து சத்திகெட்டுத் தளர்வெய்திப் பூதலத்திடை வீழ்ந்திட்டா னபிமன்னு வென்றவாறு. அப்பொழு தாகாயத்தில் அமரகணங்க ளாச்சரியமெய்தி ஸதிருசபதங்கொடுத்துப் புகழ்ந்துரைத்துப் புஷ்ப விருஷ்டி பொழிந்து, திவ்விய விமான மேற்றிக்கொண்டு செல்ல, மிருதங்க வீணையோடும், மதன சம்பத்தோடும் அப்சரசுக்களி னிருத்த கீத சமேதனாய்ப் பிரத்தியக்ஷத்தோடும் வீரசுவர்க்கம் புக்கானாகக் கருதுவது. (அபிமன்னுவின் பாடு).

814. மேதக்கா ராமாறிங் காருரைப்பார் மேவலரால்
வாதைப் படாநின்ற மன்னவர்க-ளாதிக்கண்

(பா-ம்.) 1. வாள்வாங்கிப்.

**மாக்கருணை யான்மருகன் வல்லாண்மை செய்ததற்கு**
**மாக்கருணை தோன்றிற்றே வந்து (சச)**

*இவ்வகை அபிமன்னு பட்டு வீழ்தலும் ஆர்த்தெழுந்தது தார்த்தராஷ்டிரர் சேனை; அதிர்ந்தியம்பின சங்கு பேரிகை; செங்கதிர்ச் செல்வனு மஸ்தமன பருவதத்துக் கண்ணியனாயினான்; துரோண கிருப கன்ன அசுவத்தாமாவும், பூரி பூரிச்சிரவாவும், பரராஷ்டிரத்து க்ஷத்திரியரும், எண்ணிறந்த சேனையுந் தந்தம் மக்களை யிழந்தாற்போல மகா துயரத்தினோடுங் கைவாங்கித் தம் பாடிவீடு புக்காராகக் கருதுவது. இப்பால், பாண்டவர் சேனையும் அபிமன்னுவின் பாடுகேட்டுக் கைதளர்ந்து மெய்சோர்ந்து கருத்தழிய, பூதலத்துமிசை வீழ்ந்து கிடந்து யாது சொல்லிப் பிரலாபித்தான் தருமபுத்திரன்:-*

## சோகம் - விருத்தம்

**815. வெம்பிமத யானையின்மேல் மீளாயங் கேட்டு**
**விராடன் குலமதலை மெய்பூரித் தாங்கே**
**நம்பிவரு கின்றானென் றென்றிருக்குங் கொல்லோ**
**நாரா யணன்றங்கைக் கென்னுரைப்பே னந்தோ**
**தும்பிமலர்த் தார்விசயன் சூழெரியிற் பாயத்**
**துணைசெற்றே னென்றனுடைத் தொல்வினையா லந்தோ**
**வெம்பியரும் யானுமுனை யெறிபடைஞர் முகத்தே**
**யேகவிட்டுப் பின்பிருந்தோ மெம்முயிரைக் காத்தே. (சரு)**

*அன்றியும்,*

**816. செறிகடகத் தோள்விசயன் சீர்மதலாய்**
**செங்கண்மால் தெய்வ மார்பிற்**
**பொறியிடையே யாய்வளர்ந்த போதகமே**
**மாதவிதன் புதல்வா போரி**
**லெறிபடைஞர் புடைசூழப் போகின்றேற்**
**கென்முன்னே யேற்றாய் பின்னை**
**மறுபடையி லென்பின்பு வந்திலையே**
**யெங்கொளித்தாய் மன்ன ரேறே. (சகா)**

*என்றிவ்வகை பிரலாபிக்கின்றானை ஸ்ரீ வேத வியாசன் வந்து கண்டு ஷோடச வாக்கியமும் பிறவிச்சக்கரம் வருகின்றவாறுஞ் சொல்லிப் புண்ணிய பாவமிருக்குங் கிரமமு முரைத்துத் தன் கமண்டலத்து வாசநீராற் கண்கழுவி மற்றவனைத் தேற்றிச் சிறிதுபொழு திருந்து அந்தர்த்தியானஞ் செய்தா னென்றவாறு. அவ்விடத்துப் பாண்டவர்சேனையு மகா துக்கத்தினோடுங் கைவாங்கித் தம் பாடிவீடு புக்காராகக் கருதுவது. இப்பால், அருச்சுனன் நிலைமை யாதாயிற்றோ வெனில்:-*

817. ஏற்ற படையனைத்து மீடழியப் போர்பொருது
மாற்றலர்க ளுள்ளார் மனநடுங்கச்-சீற்றக்
கருடன்றன் பாகனக் கார்வண்ண னின்று
வரும்வழியிற் றுன்னிமித்தம் வந்து. (௬எ)

*எ-து.-* சஞ்சத்தகரை விநாசஞ் செய்து சங்கத் துவாரத்தின்கண் முகம்வைத்து வாராநின்ற தேவராச னுற்பாதங் கண்டு கருத்தடக்கித் தேர்க் கோலங்கொண்டு வருகின்றவிடத் தருச்சுனனும் வியாகுலமெய்தி வாரா நின்றா னென்றவாறு. அவ்வளவில், தேவதேவன் ஸ்ரீவாசுதேவன் அமரேந்திரனை யழைத்தருளி யிரகசியமாக நின்று யாது பணித்தருளினான் ஸ்ரீ வாசுதேவன்-

818. மாயவனு மாங்கே நினைந்தருளி மற்றங்குக்
காயு மழலைக் கடிதெழுப்பி-மாயத்தா
லிந்திரனே நீயு மிதில்விழுமாப் போலின்றிங்
கந்தணனாய் நில்லா யமர்ந்து. (௬அ)

*எ-து.-* அருச்சுனன் புத்திரனாகிய வபிமன்னு பட்டா னாதலால், மற்றந்த விசேஷம் அருச்சுனன் கேட்பதன் முன்ன மவன் போம்வழியி லொரு விருத்தப் பிராமணனாய் நின்று அக்கினிப் பிரவேசம் பண்ணுமாப் போல நின்றால், மற் றதுகண்ட அருச்சுன னுன்னை விலக்குவதாக வருவன்; வந்தால், அவனை யெவ்வழியாலுந் தேற்றிப் போவாயாக என்று ஸ்ரீவாசுதேவ னருளிச்செய்யக் கேட்டு யாதுசெய்தான் தேவேந்திரன்:-

819. வானவர்கோன் பார்த்தன் வரும்வழியில் வேதியனாய்க்
கானமதி லங்கிதனைக் கைதொழுது-வானவர்கோன்
வீழ்வே னிதிலென்று விஞ்சவலம் வந்தானே
தாழ்வேது மில்லான் றனித்து. (௬௯)

இவ்வகை தேவேந்திர னொரு விருத்தப் பிராமண வேஷங் கொண்டு, அருச்சுனனும் ஸ்ரீவாசுதேவனும் போகின்ற வழியில் அக்கினிப் பிரவேசஞ் செய்வதாக அக்கினி மூட்டி மற்றதனில் வீழ்வதாகப் பிரதக்ஷிணம் பண்ணி வாராநின்றானாகக் கருதுவது. அக்காலத்து ஸ்ரீ வாசுதேவனும், மற்றந்த விந்திர சாலத்தை யருச்சுனனுக்குக் காட்டி யாதருளிச்செய்தான்:-

820. மைத்துனனே பாராயோர் மாமறையோன் சென்றந்த
வக்கினியில் வீழ வகைகருதி-மற்றதனைக்
கைதொழுது நின்றான்பா லேகிக் கடுகியவன்
மெய்தொழுது காவாய் விரைந்து. (௫0)

*என்றிவ்வகை ஸ்ரீவாசுதேவ னருளிச்செய்யக் கேட்டு, வியாகுலத்தோடும் வருகின்ற அருச்சுனன் கதுமெனத் தேரினின் றிழியப்பாய்ந்து யாது செய்தான்:-*

**821. ஆய்தற் கரியானோ ரந்தணனாய் வெஞ்சுடரிற்**
**சாய்வாக வாங்கோர் தனியிடத்துப்-பாய்வா**
**னெருப்பெரியா நின்றானைக் கண்ணுற்றா னாங்கே**
**திருப்பிரியாத் தோட்பெரியான் சென்று. (ருக)**

*இவ்வகை கண்ணுற்ற யாருமில்லாததோர் பிரதேசத்தின்க ணக்கினிப் பிரவேசஞ் செய்கின்ற தென்கொலோ பிராமணா வென் றருச்சுனன் விலக்க, அவனைநோக்கி யாதுசொன்னான் பிராமணன்:-*

**822. என்மகனை யானிழந் திங்கிரே னென்றிசைந்தே**
**னென்மகனோ டியானு மெரிமூழ்கி-நன்மை**
**யுடலிழப்பே னென்றுரைத்தா னந்தணனும் வெற்றிக்**
**[1]கடலுழக்கு மற்றவனைக் கண்டு. (ருஉ)**

*எ-து.- என்புத்திரனை யிழந்து புத்திரசோகத்தினா லாற்ற வொண்ணா தக்கினிப் பிரவேசஞ் செய்வேனை, அருச்சுனா! விலக்குவ துனக்குத் தரும மன்று கண்டாய் என்று பிராமண னுரைப்பக் கேட்டு யாதுசொன்னான் அருச்சுனன்:-*

**823. தக்க மகன்கீர்த்தி தந்தையை மாக்கதிக்கே**
**யுய்க்கும் படியுள்ள தாதலான்-மக்களைத்தான்**
**றோற்றுவித்து வைத்துத் துறவாதான் றுஞ்சினா**
**லேற்றுவிக்குந் தன்மை [2]யிலன். (ருங)**

*எ-து.- மக்களுக்குப் புத்திரனென்னு நாம மாயிற்றுப் பிதாவை நரகம் புகாமற் காப்பதன் பொருட்டுக் கண்டாய்; ஆதலாற் புத்திரசந்தானந் தோற்றுவியா தான்மத்தியாகஞ் செய்யுமது பிராமணா வுனக்குத் தருமமன்று என் றருச்சுனன் விலக்கக் கேட்டு, அவனை நோக்கி யாது சொன்னான் பிராமணன்:-*

**824. நீவிலக்க வென்னுயிரை மீட்டே னெறிவிசையா**
**யான்விலக்க நின்னுயிரை நீமீள்வாய்-வான்விலக்கி**
**நின்றான்றன் முன்னே நிறையந்த ணன்றானும்**
**வென்றானப் போதே விரைந்து. (ருச)**

*எ-து.- என் புத்திர சோகத்தினா லெரிபுகுகின்றேனை நீவிலக்க விலங்கினேன், நீ சத்தியவாக்கிய னாதலாலுந் தரணித்தலத்து க்ஷத்திரிய னாகையாலுங் கண்டாய்; இது யாவர்க்கும் விலங்கேன்; இதுநிற்க,*

*(பா-ம்.) 1. கடலினுக்கு மைத்துனனைக். 2. இயல்பு.*

உனக்கு மொருகாலத் தவ்வகை வந்துற்றால் யான் விலக்க விலங்குவாயாக என் றருச்சுனனை வரங்கேட்க, அவனு முடன்பட்டு வரங்கொடுப்ப, வரம்பெற்றுத் தானு மவனால் விலக்குண்டு ஸ்ரீவாசுதேவனை யிதற்குச் சாட்சியாக்கிப் போகின்றான் தேவேந்திர னாகின்ற பிராமண னென்றவாறு. அப்பொழுது மற்றாங்கதுவெல்லாந் தன் றிருவுள்ளத்தே கொண்டு திருப் புன்முறுவ லரும்பிப் பிராமணவதைக் காணாது ரக்ஷித்தா யருச்சுனா உனக்கு ரக்ஷை பரங் கண்டாய் என் றருளிச்செய்து தே ரேறிக் கதுமெனச் சென்று பாடிவீடு குறுகுதலும், அந்த நகர மெத்தன்மையதா யிருந்ததோ வெனில்:-

825. பாட லொலியவிந்து பல்லியங்கள் பாட்டின்றி
யாடன் முழவ மதுவடங்கி-நீடரவ
மோவிக் கிடந்த வொலிகடலே போன்றதே
மேவிப் புகழ்பயில்வான் வீடு. (௫௫)

இவ்வகை யாரவார மின்றி யட்டில் புகையாது சோகமெய்திக் கிடந்த படைவீட்டையும் வருகின்ற துன்னிமித்தத்தினையுங் கண்டு தருமபுத்திர னுக்குத் தீங்கு புகுந்த துண்டுகொல்லோ வென்று மயங்காநின்ற மனத்தனாய் மணிநெடுங்கோயிற் புகாநின்றபொழுது, அருச்சுன னெதிரே யந்தப்புரப் பரிசனங்க ளழுது விழுதலும் ஸ்ரீவாசுதேவ னதனை யறிந்தருளி யாயுதங்களை யெல்லாம் வாங்கிக்கொண்டு மணிநெடுந்தே ரிழிந் தருச்சுனனைத் தழுவிக்கொள்ள, எம்பெருமானே யுரையா யென்னத் தன் செந்தா மரைக்கண் ணருவிசோர நின் றபிமன்னு வதை யென்னும் வெஞ்சொல் மாற்றச் சுடுநுனையதனை யண்ணல்யானை யருச்சுனன் கன்னபாரிசத்தாற் கடாவி யாதருளிச்செய்தான் ஸ்ரீவாசுதேவன்:-

826. எங்கை பயந்த விளவே றுனக்குரிய
சிங்கமுன் செல்வத் திருமதலை-துங்கச்
சினக்களிறு போலச் செருமுனையில் வைகி
வனக்கரிசூழ் வானடைந்தான் மற்று. (௫௬)

எனக்கேட்டு யாதுசெய்தான் அருச்சுனன்:-

827. தேவர்க் கிறைபணித்த தீச்சொற் செவிப்புலத்தே
மேவிப் புகாமுன்னம் வெய்துயிரா-வாய்விட்
டலறா வறிவழியா வவ்வாயுங் கண்ணு
முலராப்போய் வீழ்ந்தா னுடன்று. (௫௭)

இவ்வகை புத்திரசோகமெய்தி யாற்றாமல் மயங்கி வீழ்ந்து பூதலத்தின் மிசை மூர்ச்சித்துக் கிடந்தானை யெடுத்துக் குருகுலக் கூட்டத்தார் தேற்றி யுலகவியற்கை பலபேசி வாசநீரான் முகந்துடைத்துக் கண்கழுவி யிருந்த விடத்துத் தருமபுத்திரனையும்

*வீமசேனனையுங் கண்டு பின்னும் புத்திரசோகமெய்தி ஸ்ரீவாசுதேவனை நோக்கி யாதுசொல்லிப் பிரலாபித்தான் அருச்சுனன்:-*

### அகவல்

828. கனைகடல் வண்ணா கனைகடல் வண்ணா
கழிய வாழி கனைகடல் வண்ணா
வென்மக னிறந்த வின்னா மாற்றமென்
முன்னின் றெனக்கு மொழிந்திலை நீதா
னுய்ந்தனை யென்று மொழிந்தனை யென்னுமென்
மைந்தா வென்னு மதலா யென்னு
மந்தோ வாழி யபிமா வென்னும்
வானம ருழந்து வந்தே னென்னுடன்
போனகம் பற்றப் போதா யென்னு
நேரொத்து விளங்கிய நேமியான் றன்னுடை
மார்பத்து வளர்ந்த மைந்தா வென்னும்
யாதவர் குலத்துக் கெழில்விளக் கென்ன
மாதவி பெற்ற மகனே யென்னு
மொருபது மூன்று மொருங்குநல் லாண்டு
பெருமக நின்னைப் பிரிந்தே னென்னும்
பிரிந்ததற் பின்னையென்
னினைதரு வேட்கை நெஞ்சுறு நோயின்
வளரிளஞ் செல்வி பொழுதொரு நோக்கி
விராடன் பெருமகண் மென்சொலுத் தரையைப்
புதுமணக் கோலம் புல்காது வைத்துய
ரவரோ டெங்கட் கமர்விளைந் திவ்வுழி
யெந்தையர் துணையில ரென்றுகரு தாது
பொன்வா னுலகுபுகப் போயினை யோவென்
னப்பா வென்னு மழகா வென்னும்
வாளா ரமரின் மதலையை யிழந்து
மாளா தென்னுயி ரிருப்பதோ வென்னு
நீயே விசும்பிற் றனிபோ காதே
யானும் வந்தே னரசே யென்னு
மரசி னாசை யற்றே னென்னுஞ்
செருவி னாசை தீர்ந்தே னென்னுந்
தடமுகில் வண்ணனுந் தருமனும் வீமனு
மிடந்தனி னூல்க ளெடுத்துட னோதி

யாற்றவு மாறான் றேற்றவுந் தேறா
னறிவோர்க் கடங்கா னெறிமொழி கேளா

ந.ரு. னறிவழிந் தரற்றி யப்பனே யென்று
சிறிதுபடுங் காதற் சிறுவனை யிழந்தே. (ருஅ)

*இவ்வகைய னாகிய வருச்சுனன் புத்திரசோகமெய்தித் தருமபுத்திரனை நோக்கி யபிமன்னு வெவ்வகை போயினான்; அங் காராற் கொல்லப்பட்டான் எனக் கேட்டுச் சிந்திக்கு மளவில் யாதுசொன்னான் தருமபுத்திரன்:-*

829. என்னுடைய மைந்த னெனக்குத் துணையாகி
மின்னிடையின் மன்னரெலாம் வீழ்வித்துப்-பின்னுமொரு
வெங்களத்துப் புக்கு வியந்தார்த்தான் பின்னரவ
னெங்கொளித்தா னென்றறியேன் யான். (ருகூ)

*இவ்வகை கேட்ட வருச்சுனனை நோக்கி யாது சொல்லிப் பிரலாபித்தான் கடோற்கசன்:-*

830. மாற்றரிய மாமதலை மன்னவர்க ளைவருக்குந்
தேற்ற வரிய செழுமணியா-னூற்றுவர்க்குக்
காலனாய்த் தோன்றிக் கறைமிடற்றான் கொன்றையினான்
மேலவனாய் வீழ்ந்தான் விரைந்து. (கூ0)

*இவ்வகைப்பட்ட பலவிசேஷமுங் கேட்டுப் புத்திரசோக மிகவெய்தி, யாவருந் தேற்றத் தேறா தக்கினிப்பிரவேசஞ் செய்வே னெனத் துணிந்து நிற்கின்ற வருச்சுனனைக் கண்டு, இவனைத்தேற்றுவதரிது; இவனின் முன்னம் யானே மாண்டுபோவேன் என்று தருமபுத்திர னொருப்படுதலும், ஆங்கவனை நோக்கி ஸ்ரீவாசுதேவன் விலக்கி யருச்சுனனுக்குத் தீக்கொடுப்ப, சந்தனமரமென்னுங் காஷ்ட மடுக்கிச் செந்தீமூட்டி யக்கினிப் பிரவேசஞ் செய்ய வருச்சுனன் போக யாது நிகழ்ந்ததோ வெனில்:-*

831. செந்... ... ... ... ... ...

*****

| | | வெண்பா. | | அகவல். | | விருத்தம். | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | உத்தியோக பருவம் | 479 | + | 4 | + | 0 | = | 483 |
| 2. | வீடும பருவம் | 191 | + | 0 | + | 3 | = | 194 |
| 3. | துரோண பருவம் | 148 | + | 2 | + | 3 | = | 153 |
| | பருவம் 3-க்கு | 818 | + | 6 | + | 6 | = | 830 |

# பாட்டு முதற்குறிப் பகராதி

*** இவ்வடையாளம் அரவலையும், x இவ்வடையாளம் விருத்தத்தையுங் குறிக்கும்**

**[எண் - பாட்டெண்]**

குறிப்பு:- 374-ஆம் பாட்டு, அடி தெரியாமையாலே அகராதியிற் சேர்க்கப்படவில்லை.

☆☆☆☆☆

**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை – 600 113.**

**அண்மை வெளியீடுகள்**

| | |
|---|---|
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி - 1 | 80.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி - 2 | 85.00 |
| இக்கால உலகிற்குத் திருக்குறள் தொகுதி - 3 | 95.00 |
| திராவிட மொழி இலக்கியங்கள் | 180.00 |
| நாவல் கலையியல் | 50.00 |
| சங்கரநமச்சிவாயர் | 60.00 |
| பண்டைத் தமிழ் எழுத்துக்கள் | 40.00 |
| Agreement in Dravidian Languages | 100.00 |
| நாடகவியல் | 70.00 |
| அறிவியல் தமிழ் அறிஞர் பெ.நா. அப்புசுவாமி | 60.00 |
| சங்கப் பெண்பாற் புலவர்களின் மொழியும் கருத்தும் | 30.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் - இலக்கியம் | 100.00 |
| தமிழக வரலாறு மக்களும் பண்பாடும் | 125.00 |
| தெசிணி-யின் தமிழாக்கப் பாடல் திரட்டு | 50.00 |
| தனிநாயகம் அடிகளாரின் சொற்பொழிவுகள் | 40.00 |
| தமிழ்ச் சமூகவியல் ஒரு கருத்தாடல் | 25.00 |
| பெரியாரின் பண்பாட்டுப் புரட்சி | 25.00 |
| வ.உ.சி. வளர்த்த தமிழ் | 20.00 |
| குறுந்தொகை - ஒரு நுண்ணாய்வு | 80.00 |
| தமிழ் நாட்டுப்புறவியல் ஆய்வின் வரலாறு | 50.00 |
| தமிழ் நாடகம் - நேற்றும் இன்றும் | 30.00 |
| நாடகமும் நாடகக் கம்பெனி அனுபவங்களும் | 60.00 |
| தொல்காப்பியப் பாவியல் கோட்பாடுகள் | 40.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் நாடகங்கள் | 75.00 |
| தமிழர் கட்டிடக்கலை | 30.00 |
| தமிழ் மேடை நாடக வரலாறு | 55.00 |
| பரதநாட்டிய சாஸ்திரம் | 150.00 |
| இந்திய விடுதலைக்குப் பின் தமிழிலக்கியச் செல்நெறிகள் | 55.00 |
| தொல்காப்பிய இலக்கண மொழியியல் கோட்பாடுகள் | 70.00 |
| கருவூரார் பல திரட்டு | 70.00 |
| தமிழ் மொழியின் வரலாறு | 30.00 |
| சங்ககாலக் காசு இயல் | 30.00 |
| பாரதி இந்தியா | 40.00 |
| தமிழில் மருத்துவ இதழ்கள் | 50.00 |
| தமிழ்ச் சுருக்கெழுத்து நூல் | 50.00 |
| தமிழர் நாட்டு விளையாட்டுகள் | 75.00 |
| தட்சிணாமூர்த்தி குருமுகம் - 100 | 50.00 |

எண். 488 பாரத வெண்பா ரூ. 80.00